## முகவுரை

வடமொழியில் எழுதப்பட்டுள்ள நூல்கள் எல்லாவற்றையும் பன்முறை படித்து, ஆய்ந்து, தன்மயத்துவம் அடைந்தவரே வடமொழி நூல்வரலாற்றினை எழுதத் தகுதியுடையவர் ஆவர். மிகச் சில நூல்களையே அவ்வாறு யான் படித்தேனேயன்றி எல்லாவற்றையும் அவ்வாறு படித்திலேன். பலவற்றையும் ஒருமுறையே படித்துளேன். ஆகலின் இந்நூலை எழுதுதற்கு எனக்குச் சிறந்த தகுதி இல்லை என்பது திண்ணம். அவ்வாறு இருப்பினும் இந்நூலை எழுதியதற்குக் காரணம் மாணவர் ஒவ்வொரு நூலையும் முழுதும் படித்த பின்னரே சிறுபகுதியின் கருத்துக்கள் அவர்க்கு நன்கு புலப்படும் என அறிதற்கும், நூல்களை அவர் அடிக்கடி படிக்கவேண்டும் என அறிதற்கும், அக்கருத்துக்களைத் தம் அநுபவத்தோடு ஒட்டி ஆராயவேண்டும் என நினைத்தற்கும், இந்நூல் சிறந்த ஸாதனம் ஆகக் கூடும் என்பதே. ஒவ்வொரு நூலையும் ஆய்ந்து படிப்போர் இந்நூலுட் கூறப்பட்ட சில கருத்துக்களோடு மாறுபடவுங் கூடும். தக்க காரணங்களைக் கொண்டு அவர் அவற்றை மாற்றிக்கொள்ளின், அஃது எனக்குப் பெருமகிழ்ச்சியைத் தரும்.

கூறப்பட்ட கருத்துகளுக்குப் பெரும்பான்மையும் மேற்கோள்கள் கீழ்க்குறிப்பிற் கூறப்பட்டன.

அச்சில் ஏறிய இன்னும் பல நூல்கள் எனக்குக் கிடைக்காமையாலும், கைப்பிரதியிலேயே இருக்கும் பல நூல்களை எனக்குப் பார்க்க இயலாமையாலும், இந்நூல் அவற்றைப் பற்றிக் கூறுதல் இதற்கு ஒரு குறையே ஆகும். அக்குறையைப் பின்வரும் அறிஞர் நீக்குவது அவருடைய கடமை ஆகும்.

வடமொழியில் வேதங்கள் முதல் காவ்யங்கள் இறுதியாக உள்ள நூல்களும், அவற்றைப்பற்றி மாக்டானல், கீத், விண்டர் நீட்ஸ், வைதயா, கிருஷ்ணமாசார்யர் முதலியோர் இயற்றிய

# முகவுரை

வரலாற்று நூல்களும், ஆங்காங்குள்ள நூல்களில் மஹாமஹோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரிகள், V. A ராமஸ்வாமி சாஸ்திரிகள் முதலியோர் எழுதிய முகவுரைகளும், இந்நூலிற்கு இயைபுபட்ட இன்னும் மற்ற நூல்களும் ஈண்டு உபயோகப் படுத்தப்பட்டன. குறியீடுகள் எவற்றைக் குறிக்கின்றன என்பது தெளிவாய் அறியப்படுமாகலின், அவற்றைத் தனியே குறிப்பிடவில்லை. சில தமிழ் நூல்களும் இங்குப் பயன்படுத்தப் பட்டன. அவற்றைக் கொண்டு சில நூல்களின் காலம் நிர்ணயிக்கப்பட்டது.

வடமொழியில் எழுதப்பட்ட நூலைத் தமிழில் எழுதினால் பலர்க்கும் பயன்படும் எனக் கூறி, என்னைத் தமிழில் இந்நூலை எழுதச் செய்து, அதனை யூனிவர்ஸிடிப் பதிப்பாக அச்சிடச் செய்தவரும், அண்ணாமலை யூனிவர்ஸிடி வைஸ்சான்ஸெல்லரு மான ஸ்ரீமான் M. ரத்னஸ்வாமிக்கு எனது நன்றியைச் செலுத்துகின்றேன்.

இந்நூலைச் சிவகாமஸுந்தரியம்மை நடராஜராஜப் பெருமான் இவ்விருவர்தம் திருவடிகளில் ஸமர்ப்பிக்கின்றேன்.

அண்ணாமலைநகர்<br>20—12—1946

P. S. சுப்பிரமணியசாஸ்திரி.

# பொருளடக்கம்

## வடமொழிநூலவரலாறு

பொருளடக்கம்

## பொருளடக்கம்





2

## பிற்பகுதி

| அத்தியாயம் | பொருள் | பக்கம் |
| --- | --- | --- |
| | இராமாயணத்திலுள்ள ரஸங்கள் .... | 317—319 |
| | இராமாயணத்தின் காலம் .... | 321—323 |
| | இராமாயணத்தைப்பற்றிய மேனாட்டறிஞரது கொள்கைகள்.... | 323—325 |
| 49. | மஹாபாரதம் .... | 326—339 |
| | பாரதம் மஹாபாரதம் என்ற சொற்களின் இருக்கம் .... | 330—331 |
| | மஹாபாரதத்துள்ள ரஸங்கள் .... | 331—334 |
| | மஹாபாரதத்தின் காலம் .... | 334—336 |
| | மஹாபாரதத்தைப்பற்றிய மேனாட்டாரது கொள்கைகள் .... | 337—339 |
| 50. | இராமாயணம் மஹாபாரதம் இவற்றிலிருந்து அறியப்பட்ட சில செய்திகள் .... | 340—341 |
| 51 | கி. பி. முதல் ஐந்து நூற்றாண்டில் வடமொழி நிலை .... | 342—344 |
| 52. | ஒரே கவியின் நூல்களின் பௌர்வாபர்ய விவேசனம் .... | 345—356 |
| 53. | பத்யகாவ்யங்கள் .... | 357—513 |
| | காளிதாஸன் .... | 359—394 |
| | காலம் .... | 359—361 |
| | இருப்பிடம் .... | 362—363 |
| | காளிதாஸனைப்பற்றிய செய்திகள் .... | 363—371 |
| | குமாரஸம்பவம் .... | 371—375 |
| | குமாரஸம்பவமும் மஹாபாரதமும்.. | 376 |
| | குமாரஸம்பவமும் பத்மபுராணமும் | 376—377 |
| | மேகஸந்தேசம் .... | 377—379 |
| | ரகுவம்சம் .... | 379—385 |
| | ரகுவம்சமும் பத்மபுராணமும் .... | 385—387 |
| | ருதுஸம்ஹாரம் .... | 388—394 |

பொருளடக்கம்

3

---

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 23 | இந்திரா— | இந்திர— |
| 22 | 6 | குறிக்கின்றனா | குறிக்கின்றன |
| 25 | 10 | षाड्विंशदक्षरा | षट्त्रिंशदक्षरा |
| 37 | 13 | தேவதைவளுள் | தேவதைகளுள் |
| 63 | 20 | -रिप्रेथि- | -रिप्रेभि- |
| 77 | 7 | ஸுகரகாலம் | ஸுதரகாலம் |
| 150 | 16 | பரபாடகங்கள் | பரபாடகங்கள் |
| ,, | 21 | பரபாடஙகள் | பரபாடகங்கள் |
| 179 | 13 | ஸோமேந்திரின் | க்ஷேமேந்திரின் |
| 204 | 10 | ஸுதாசஞ்சாரயா | ஸூதாசஞ்சாரயா |
| 253 | 12 | ஶைசவரமீமாமஸா | ஶைசவரமீமாம்ஸா |
| 258 | 15 | ஸூதஸாரம் | ஸூதாஸாரம் |
| 270 | 7 | அவைதஸித்தி— | அத்வைதஸித்தி— |
| 329 | 4 | ஸம்ருதி | ஸம்ருதி |
| 333 | 3 | அஹங்காரமின்யை | அஹங்காரமின்மையை |
| 358 | 2 | ஸௌந்தராநந்தம் | ஸௌந்தரநந்தம் |
| , | 22 | सौन्दरानन्दम् | सौन्दरनन्दम् |
| 408 | 14 | வளிதில | எளிதில |
| ,, | 16 | यया | यथा |
| 439 | 2 | பின்னர் | ——— |
| 549 | 8 | ரூபகஙகன | ரூபகங்கள் |
| 621 | 17 | அவனது | அவனது |
| 682 | 9 | அதிகாரசஸம்பத | அதிகாரஸம்பத |

# வடமொழிநூல்வரலாறு

## ॥ गैर्वाणीग्रन्थानुचरितम् ॥

---

### அத்தியாயம் 1

### வேதத்தின் இலக்கணமும், வகையும், சூத்திரவகையும்

வடமொழிநூல்வரலாறு இருபகுதியை உடையது: வைதிகப்பகுதி ஒன்று, பிறபகுதி மற்றொன்று. வைதிகப் பகுதியில் வேதங்கள் சூத்திரங்கள் இவற்றைப்பற்றிய வரலாறு கூறப்படும். எஞ்சியவை பிற்பகுதியிற் கூறப்படும்.

வேதம் என்பது மந்திரத்தையும் பிராம்மணத்தையுங் குறிக்கும்[1] மந்திரங்கள் தேவதைகளை விளித்தற்கு உதவுகின்றன. அவை பெரும்பாலும் ருக்குக்களாக[2] இருக்கின்றன. மந்திரத்தின் இலக்கணம் சொல்லால் எளிதிற் கூற முடியாமையால், இது மந்திரம், இது மந்திரமன்று என்பது வேள்வியறிவு கொண்ட ருத்துவிக்குகளிடமே[3] அறிதல் வேண்டும். ஆயினும் வேள்வியில்[4] நிகழும் செய்தியை நினைப்பூட்டுவது மந்திரம் எனப் பிறகாரவத்தார் அதற்கு இலக்கணங் கூறுவர்.

மந்திரங்கள் மெய்ம்மறந்து ரிஷிகளால் பாடப்பட்டமையாலும், அவை பெரும்பாலும் செய்யுள்வடிவங் கொண்டமையாலும், அவற்றை மனக்கண்ணாற் கண்ட ரிஷிகளைக் கவிகட்கு ஒப்பிடலாம்.

1. मन्त्रब्राह्मणयोर्वेदनामधेयम्; तच्चोदकेषु मन्त्राख्या (जै. 2, 1, 32); शेषे ब्राह्मणशब्दः (*ibid* 2, 1, 33)
2. ருக்கு = ऋक्; तेषामृग्यत्रार्थवशेन पादव्यवस्था (जै. 2, 1, 35)
3. ருத்துவிக்கு = ऋत्विक्
4. मन्त्राणां प्रयोगसमवेतार्थस्मारकतया अर्थवत्त्वम् (मी. न्या. 111)

பிராம்மணங்களோ மந்திரங்கட்கு உரைபோன்றவை. அவை பெரும்பாலும் வசனநடையில் உள்ளன. அவை மந்திரங்களின் பொருளையும் பயனையும் சிறப்பு முதலியவற்றை யுங் கூற வந்தனவேயன்றி, தேவதைகளை வருணித்தற்கு வந்தன வல்ல. ஆகலின் மந்திரங்களின் பொருளும், அவை எவ்விடத்து எவ்வாறு வழங்கவேண்டும் என்பதும் தெளிவாய் அறியப்பட்ட காலத்தில் பிராம்மணங்கட்கு அவசியம் இல்லை. அவற்றைப் பற்றி எப்போது ஐயம் நிகழ்ந்ததோ, அப்போது ரிஷிகளால் மனக்கண்ணால் பிராம்மணங்களுங் காணப்பட்டன எனக் கொள்ளுதல் தகும்.

பிராம்மணங்களின் முதற்பகுதி மந்திரங்களின் பொருள் முதலியவற்றைக் கூறும்; இரண்டாம்பகுதி வானப்பிரஸ்தா களின் தருமத்தைக் கூறும். ஆதலின் அது ஆரணியகம் எனவுங் கூறப்படும். மூன்றாம் பகுதி ஒருவன் ஆசிரியனை யடைந்து ஆன்மாவின் தன்மை யறிந்து வீடுபெறும் உபாயத்தைக் கூறும். அதற்கு உபநிடதம் எனவும் பெயருண்டு. பிராம்மணகாலம் மந்திரகாலத்திற்குப் பிற்பட்டதாயினும், மந்திரமும் பிராம்மண மும் சேர்ந்தது வேதம் எனக் கூறுதல் தவறாகாது.

மந்திரங்கள் ருக்வேதஸம்ஹிதையிலும், யஜுர்வேத ஸம்ஹிதையிலும், ஸாமவேதஸம்ஹிதையிலும், அதர்வவேதஸம் ஹிதையிலும் காணப்படுகின்றன. ருக்வேதஸம்ஹிதையிலும் அதர்வவேதஸம்ஹிதையிலும் அவை பெரும்பாலும் ருக்ரூப மாகவும், யஜுர்வேதஸம்ஹிதையில் அவை வசனரூபமாகவும், ஸாமவேதஸம்ஹிதையில் அவை ஸாமரூபமாகவும்[1] இருக் கின்றன. மந்திரங்களின் முறை யஜுர்வேதத்திலும் ஸாம வேதத்திலும் யாகங்களில் வழங்கப்படும் மந்திரமுறையை ஒட்டியது; ருக்குவேதம் அதர்வவேதம் இவற்றிலோ அவ்வா

1. गीतिषु सामाख्या (जै. २, १, 36); ருக்கு இசை யோடுகூடின் ஸாம படிவ [illegible]

றின்று. அதர்வவேதமந்திரங்களுள் பெரும்பகுதி ருக்வேத மந்திரங்களைப்போன்று பழையன ஆயினும், அதர்வ ஸம்ஹிதையை வேதம் எனப் பெயர்கொடுத்து வழங்கியது பிற்காலத்ததே.

ஒவ்வொரு வேதத்தின் பிராம்மணங்களும் வெவ்வேறு பொருளைக் கூறும். ருக்வேதபிராம்மணங்கள் ஹோதாவின்[1] தருமத்தையும், யஜுர்வேதபிராம்மணங்கள் அத்வர்யுவின்[2] தருமத்தையும், ஸாமவேதபிராம்மணங்கள் உத்காதாவின்[3] தருமத்தையும் கூறும். இங்குள்ள முறை யாகங்களின் நிகழும் செய்திகளின் முறையையே ஒட்டியது. இவையே பாரத வர்ஷத்தில் வசனநடையில் எழுதப்பட்ட நூல்களுள் பண்டையன வாகும். அவற்றிலிருந்து மக்களின் வருணப்பிரிவு[4] நன்கு அறியப்படுகின்றது.

மந்திரங்களும் பிராம்மணங்களும் இருப்பினும், பல்வகைப் பட்ட யாகங்களில் தொடக்கம்முதல் இறுதிவரை செய்ய வேண்டியவற்றைக் குறிப்பாகக் காட்ட ஸூத்திரரூபமான சிற்சிறு வாக்கியங்கள் கொண்ட நூல்கள் எழுதப்பட்டன; அவற்றிற்குச் ஸ்ரௌதஸூத்திரம்[5] எனப் பெயர். அவ்வாறே ஔபாஸநாக்னியில் செய்யுஞ் சடங்குகளைப் பற்றிய நூல்கள் எழுதப்பட்டன; அவற்றிற்குக் கிருஹ்யஸூத்திரம்[6] எனப் பெயர். இவற்றைத் தவிர்த்து மக்களின் பொதுதர்மங்களைப் பற்றிய நூல்கள் எழுதப்பட்டன; அவற்றிற்குத் தர்மஸூத்திரம்[7] எனப் பெயர்.

---

1. ஹோதா = होता ; யாகத்தில் தேவதைகளை அழைக்க மந்திரங் கூறுபவர்.
2. அத்வர்யு = अध्वर्युः ; யாகத்தில் ஹோமம் முதலியன செய்பவர்.
3. உத்காதா = उद्गाता ; யாகத்தில் தேவதைகளைப் புகழ் ஸாமங்களைப் பாடுபவர்.
4 வருணப்பிரிவு = वर्णविभागः
5. श्रौतसूत्रम्  6. गृह्यसूत्रम्  7. धर्मसूत्रम्

## அத்தியாயம் 2

### ருக்வேதஸம்ஹிதை — அதன் பகுப்பு

ருக்வேதஸம்ஹிதை எட்டு அஷ்டகங்களாகப் பிரிக்கப்பட்டுளது. ஒவ்வொரு அஷ்டகத்திலும் எட்டு அத்தியாயங்கள் உள. ஒவ்வொரு அத்தியாயமும் பல வர்க்கங்களாகப் பிரிக்கப்பட்டுளது. ஒவ்வொரு வர்க்கத்திலும் பெரும்பாலும் ஐந்து ருக்குக்கள் உள்ளன; ஆயினும் சிலவற்றுள் மூன்றுமுதல் எட்டு ருக்குக்கள் வரை இருக்கின்றன. முதல் அஷ்டகம் முதல் எட்டு அஷ்டகம் முடிய முறையே 1337, 1137, 1209, 1286, 1263, 1640, 1262, 1281 ருக்குககளைக் கொண்டன. இதனை நோக்கின் ருக்வேதஸம்ஹிதை எட்டு ஆண்டுகளில் அத்தியயனஞ் செய்யப்பட்டிருத்தல் கூடும் எனறும், ஒவ்வொரு ஆண்டில் கற்கப்பட்ட பகுதியை ஒவ்வொரு அஷ்டகமாகக் கொண்டனர் என்றும் ஊகிக்க இடன் இருக்கிறது. ஸம்ஹிதையும் பிராம்மணமும் பன்னிரண்டு ஆண்டுகளிற் பொதுவாக அத்தியயனம் செய்யப்பட்டன என்பது ஆச்வலாயனக்ருஹ்யஸூத்திரத்தால் அறியப்படுகின்றது.

அதே ஸம்ஹிதை வேறுவகையாய்ப் பத்து மண்டலங்களாகவும் பிரிக்கப்பட்டுளது. ஒவ்வொரு மண்டலமும் பல ஸூக்தங்களாகவும், ஒவ்வொரு ஸூக்தமும் பல ருக்குக்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. மண்டலப்பிரிவே வரலாற்று முறைக்கு ஒட்டியது எனவும், அம்மண்டலங்களுள் பல ஒரு காலத்துத் தனித்தனியாகக் குடும்பங்களால் அத்தியயனம் செய்யப்பட்டன என்றும், பின்னர் அவை தொகுக்கப்பட்டன என்று கூறுவர் ஆராய்ச்சியாளர். இவ்வாறே மாதவபட்டா

1. द्वादशवर्षाणि वेदब्रह्मचर्यम् (आ. गृ. 1, 19, 2 )

ருக்குவேதானுக்கிரமணிகையில் கூறியது நோக்கத்தக்கது.[1] ஆராய்ச்சியாளர் கூறுவது பின் வருமாறு:—

இரண்டாவது மண்டலம் முதல் ஏழாவது மண்டலம் முடிய, ஒவ்வொரு மண்டலத்துள்ள மந்திரங்களும் ஒரே ரிஷியாலோ, ஒரே குடும்பத்துள்ள ரிஷிகளாலோ காணப்பட்டன. அவை பெரும்பான்மையும் அக்கினி, இந்திரன், விச்வேதேவர், அச்வினிதேவதைகள், வருணன் முதலிய தேவதைகளை முறையே துதிக்கின்றன. அவ்வத்தேவதையைத் துதிக்கும்போது அனேகமாய் ஒரே சந்தஸ்[2] வழங்கப்பட்டுளது. இக்காரணங்களால் அவை தனித்தனியாக அந்தந்த குடும்பத்தில் பலநாள் அத்தியயனஞ் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். பின்னர் ரிஷிகளால் அவை ஒன்றாகத் தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஒன்றன்பின் மற்றொன்றை வைத்ததற்குக் காரணம் இரண்டாவதில் குறைந்த ஸூக்தங்களிருத்தலும் மேன்மேலுள்ள மண்டலங்களில் முறையே ஸூக்தங்கள் மிகுதியாக இருத்தலும் ஆகும் என்பர்.

அக்காரணம் பெரும்பான்மையும் பொருத்தமுடைத்து என்பதும், முற்றிலும் பொருத்தமுடைத்து எனக் கூறத் தகாது

1. पश्यन्ति तांस्तानुद्दिश्य कामानिह महर्षयः ।
ये ये सूक्तेषु दृश्यन्ते ते च भेदस्य हेतवः ॥ (5, 6, 29)
तथा दर्शनकालस्य भेदश्चैषां विभेदकः ।
स च भेदो ब्राह्मणेषु मन्त्रेष्वपि च दृश्यते ॥ (5, 6, 30)
मण्डलान्यृषयो दृष्ट्वा सर्व एव समागताः ।
विन्यासं ददृशुः पश्चादिति वृद्धेभ्य आगमः ॥ (5 8, 21)

2. छन्दस्

## அத்தியாயம் 2

என்பதும் கீழ்க்காட்டிய அட்டவணையால் அறியப்படும்.[1]
அதன்பின்னர் முதன்மண்டலத்தின் பிற்பகுதியாகிய 51–191

| மண்டலம் | ஸூக்த எண் | ரிஷி |
|---|---|---|
| I. முதற்பகுதி | 50 | काण्वायनमेधातिथिः |
| இரண்டாம்பகுதி | 141 | |
| | 51—57 | सव्य |
| | 58—64 | नोधा. (गौतम·) |
| | 65—73 | पराशरः (शक्तेः पुत्रः) |
| | 74—93 | गौतमः (रहूगणस्य पुत्र·) |
| | 94—99 } 101—115 } | कुत्स (अङ्गिरस· पुत्रः) |
| | 100 | ऋज्राश्वादयः राजर्षयः |
| | 116—126 | कक्षीवान् |
| | 127—139 | परुच्छेप |
| | 140—164 | दीर्घतमस |
| | 165—191 | अगस्त्य· |
| II. | 43 | गृत्समदः, गार्त्समदाश्च |
| III. | 63 | विश्वामित्र, वैश्वामित्राश्च |
| IV. | 58 | वामदेवः |
| V. | 87 | बुधग. विष्ठिरश्च |
| VI. | 75 | भरद्वाज· |
| VII. | 104 | वसिष्ठ |
| VIII. | 103 | मेधातिथि, अन्ये काण्वायनाश्च |

ஸூக்தங்கள் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும், அப்பகுதியில் ஒரு ரிஷியாலோ ஒரே குலத்துள்ள ரிஷிகளாலோ காணப்பட்ட ஸூக்தங்கள் ஒருங்கு இருக்கின்றமையான. அதன்பின்னர் முதல் மண்டலத்தின் முற்பகுதி தொடக்கத்திலும், எட்டாம மண்டலம் இறுதியிலும், சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும், இவற்றுள் எது முன்னாச் சேர்க்கப்பட்டது என்றும், தொடக்கத்திலும் இறுதியிலும், என் அவ்விரண்டுஞ் சேர்க்கப்பட்டன என்றுங் கூற இயலாது. அவ்விரண்டற்கும் ஒற்றுமை பல உள்ளன —(1) இரண்டற்கும் ரிஷி காண்வாயனர்: (2) இரண்டிடத்தும் பிரகாதை[1] என்ற சந்தஸ் வழங்கப்பட்டுளது: (3) இரண்டிடத்தும் ஒரே வாக்கியமோ,[2] ஒரு பொருட்கொண்ட

| மண்டலம் | ஸூக்த எண் | ரிஷி |
|---|---|---|
| IX | 114 | मधुच्छन्दः, वैश्वामित्राश्च |
| X | 191 | त्रित', देवश्रवाः (यमपुत्रः), कवपः, नाभानेदिष्ठः, सुमित्र., सूर्या, आरुणः, दुव., वैरूप' परमेष्ठी, श्रद्धा, शास. (भार-द्वाजः) |
| மொத்தம் | 1029 | |

இவற்றுள் எட்டாம மண்டலத்திலுள்ள 11 ஸூக்தங்கள் வாலகில்யங்கள். எஞ்சிய 1018 ஸூக்தங்களுள் பெரும்பகுதி தேவதாஸ்துதியே ஆகும். சிற்சில தானஸ்துதிகளும், யமயமீ ஸம்வாதம், இந்திர-இந்திராணீ-ஸம்வாதம் முதலியனவும், உலகஸ்ருஷ்டியைப்பற்றியனவும் ஆகும்.

1. प्रगाथा ; அதன் இலக்கணம் :
चत्वारिंशदक्षरा पङ्क्ति । यदि मध्ये द्वादशाक्षरौ अभित अष्टाक्षरौ सा विष्टारपङ्क्ति । सा बृहत्या वा ककुभो वा उत्तरा चेत् ता प्रगाथामाचक्षते ।

2 इन्द्रं सोमस्य पीतये (I 16, 3, VIII 17, 15 · 92, 5 : 97, 1.)

வாக்கியங்களோ[1] காணப்படுகின்றன; (4) இரண்டிடத்தும் ஒரே தொடர் அடுத்தடுத்து கூறப்படுதல் காணப்படும்.[2]

பின்னர் ஸோமதேவதையைப்பற்றிய ஸூக்தங்களை ஒன்றுசேர்த்து ஒன்பதாவது மண்டலம் ஆக்கப்பட்டது. ஈண்டு முன்னாக் காயத்திரிசந்தஸ்ஸில்[3] உள்ள மந்திரங்களும், பின்னர் அநுஷ்டுப்சந்தஸ்ஸில்[4] உள்ள மந்திரங்களும் பின்னர் அதிக எழுத்தைக்கொண்ட சந்தஸ்ஸில் உள்ள மந்திரங்களும் இருக்கின்றன. ஒன்பதாம் மண்டலத்திலுள்ள மந்திரங்கள் முன் மண்டலங்களைக் கண்டவராலே காணப்பட்டன. ஆகலின் ஒன்பதாம் மண்டலம் இறுதியில் இருப்பினும், அதனில் உள்ள மந்திரங்கள் பிற்காலத்திற் காணப்பட்டன எனக் கொள்ளல் தகாது. ஒருகாலத்து முதன் மண்டலம் தொடங்கி, ஒன்பதாம் மண்டலம் முடிய ஸம்ஹிதை இருந்திருத்தல் வேண்டும். சில காலத்திற்குப் பின்னாப் பத்தாம மண்டலம சேர்த்திருத்தல் வேண்டும்; அவ்வாறு கொள்ளுதற்குக் காரணங்கள் பின் வருமாறு :—(1) இங்குள்ள மந்திரங்களைக் கண்டவா முன்னருள்ள மந்திரங்களை அறிந்திருத்தல். (2) ஒரே தேவதையைப் பற்றிய ஸூக்தங்களைக் கொண்ட ஒன்பதாம் மண்டலத்தின் பின்னா பல தேவதைகளைப்பற்றிய ஸூக்தங்களைக் கொண்டிருத்தல். (3) முதன் மண்டலத்தில் எவ்வளவு ஸூக்தங்கள் இருக்கின்றனவோ அவ்வளவே ஈண்டும் இருக்கை. (4) உஷஸ் முதலிய தேவதைகளைப்பற்றி ஸ்துதியின்மையும், குரோதம், சிரத்தை இவற்றைப்பற்றியுண்மையும். (5) முன் மண்டலங்களிற

1 अपामीवा बाधते (I 35, 9)
अपसेधन्रक्षसः (I 35, 10) } अपामीवामपस्त्रियमपसेधत दुर्मतिम् (VIII 15, 10)

2 VIII 34-38 ஸூக்தங்கள்

3. गायत्री छन्दः

4. अनुष्टुप् छन्दः

கூறப்படாத யமயமீஸம்வாதம், சூதாடியின் நிலை, புரூரவஸைப் பற்றிய கதை, புருஷஸூக்தம் முதலியன இங்கு இருத்தல். (6) சொல்வழக்கில் சிலவற்றின் கெடுதலும் சிலவற்றின் புகுதலும் :—(a) திதஉ,[1] தேவாஸ:,[2] ஸீம்[3] இதுபோன்ற சொற்களின் வழக்குக் குறைவுபடுகை (b) ரகரத்தின இடத்தில் லகரம் வழங்குகை (c) லக்ஷ்மீ,[4] காலம்[5] முதலிய சொற்களின் தோன்றுகை

இந்த ஸம்ஹிதை, ருக்வேதப்ராம்மணத்திற்குப் பின்னரும் ஆரண்யகம் உபநிஷத் இவற்றிற்கு முன்னரும் தொகுக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்பது மாக்டானல் என்ற மேனாட் டறிஞரின் கொள்கை. அதற்குக் காரணம் ஸம்ஹிதையிலுள்ள பதங்களின் எண் ப்ராம்மணத்திற் குறிக்கப்பட்ட எண்ணி லிருந்து மாறுபடுகையே யாம்.

இந்த ஸம்ஹிதை அக்காலம் முதல் இன்றுவரை மாறாது ஒரே விதமாய் இருத்தற்குக் காரணம் பதபாடம்,[6] கிரமபாடம்,[7] ஜடைபாடம்,[8] கனபாடம்,[9] ப்ராதிசாக்யம்,[10] அநுக்ரமணிகை[11] முதலியன தோன்றியிருத்தலே ஆகும்.

1. तितउ 2. देवासः

3. सीम् என்பது எங்கும், எப்போதும், ஏ, இவன், இவள், இது என்ற பொருளிலும், பாதபூரணத்திற்கும் முன் ஒன்பது மண்டலங்களில் ஐம்பது இடத்தில் வழங்கப்பட, பத்தாவது மண்டலத்தில் ஒரே முறை வழங்கப்பட்டுளது.

4. लक्ष्मीः (X 71, 2) சிறப்பு என்ற பொருளில் வழங்கப்பட்டுளது.

5. कालः 6. पदपाठः 7. क्रमपाठः 8. जटापाठः 9. घनपाठः

10. प्रातिशाख्यम् 11. अनुक्रमणिका

---

## அத்தியாயம் 3

---

### மந்திரகாலத்துச்செய்திகள்

மண்டலங்கள் ஸம்ஹிதையாக தொகுக்கப்படுதற்கு முன்னமேயே ஆங்காங்குள்ள மந்திரங்களால் பல செய்திகள் அறியப்படுகின்றன.

ஒவ்வொரு நாளும் அக்கினிஹோத்திரம் செய்யப்பட்டது என்பதும்,[1] யாகங்கள் பலவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன என்பதும்,[2] யாகங்களில் ஹோதா, அத்வர்யு, உத்காதா, பிரம்மா முதலிய ருத்விக்குகள் பலர் இருந்தனர் என்பதும்,[3]

1. उषो यदग्निं समिधे चकर्थ (ऋ. वे. I 113, 9)
   गृहंगृहमुपतिष्ठाते अग्निः (I 124, 11)
2. त्रिः सप्त यद्गुह्यानि (I 72, 6)
   यज्ञस्यज्ञस्य केतुम् (X 1, 5)
   (गृहंगृहं, यज्ञस्यज्ञस्य இவை பதபாடத்தில் ஒரு பதமாகக் கூறப்பட்டது காண்க.)
   प्रातःसावे माध्यन्दिने सवने, तृतीये सवने (III 29)
3. त्वमध्वर्युरुत होतासि पूर्व्यः प्रशास्ता पोता जनुषा पुरोहितः
   (ऋ. वे. I 94, 6) [पुरोहितः = ब्रह्मा]
   तवाग्ने होत्रं तव पोत्रमृत्वियं तव नेष्ट्रं त्वमग्निदृतायतः ।
   तव प्रशास्त्रं त्वमध्वरीयसि ...... (II 1, 2)
   अध्वर्युभिः पञ्चभिः सप्त विप्राः प्रियं रक्षन्ते (III 7, 7)
   अहं होता ... आर्ष्येयं वा ब्रह्मा ... (X 52, 2)
   उद्गातेव शकुने साम गायसि (II 43, 2)

உத்காதா ஸாமங்களை இந்திரன் முதலியோரைத் துதிக்க வழங்கினர் என்பதும்,[1] ஸாமங்கள் பல்வகையாகப் பகுக்கப்பட்டன என்பதும்,[2] அதர்வா என்ற ரிஷி பல்லிடங்களில் கூறப்பட்டனர் என்பதும்,[3] யாகத்தில் வழங்கப்பட்ட அக்கினி அரணி கடைந்து எடுக்கப்பட்டது என்பதும்,[4] மற்றுமுள்ள யாகச்செய்திகள் பிறகாலத்தில் உள்ளவாறு மந்திரகாலத்தே இருந்தன என்பதும் நன்கு அறியப்படுகின்றன.

அக்கினியைக் கடைவதில் அதர்வா சிறந்தவர் எனக் கூறப்பட்டது.[5] தேவர்களுக்கு இருவகைப்பட்ட பகைவர்

1. ... सामभिः स्तूयमानाः । इन्द्रं इन्द्रियैमरुतो मरुद्भिः ...
[ऋ. वे. I 107, 2]
इन्द्राय साम गायत [VIII 87, 1]
प्रमंहिष्ठाय गायत ... अग्नये [VIII 92, 8]
2. सामगा इव गायत्रं च त्रैष्टुभं चानुराजति [II 43, 1]
ता गायत्रेषु गायत [I 21, 2] रथन्तरे [I 164, 25]
गायत्रं गीयमानम् [VIII 2, 14]
3. [ऋ. वे. I 80, 6; I 83, 5]
4. अरण्योर्निहितो जातवेदा [III 29, 2]
दशाक्षिपं पूर्व्यंसीमजीजनत् [III 23, 3]
अग्निं मथ्नन्ति [VI 15, 17]
5. इममुत्यमथर्ववदग्निं मन्थन्ति वेधसः [VI 15, 17]
अग्निर्जातो अथर्वणा विदद्विश्वानि काव्या [X 21, 5]
यज्ञैरथर्वा प्रथमः पथस्तते [I 83, 5]

இருந்தனர் — ஒருவகையினர் வேதத்திற் கூறப்பட்ட கொள்கைப்படி நடப்பவர்; மற்றொருவகையினர் அக்கொள்கைகளில் நம்பிக்கையற்றவர்[1] முதல் வகையினர் விருத்திரர்[2] எனப்பவர், அவர் பதினுபிரவர்[3] எனக் கூறப்பட்டது. பதினுபிரவர் என்பது எண்ணிக்கையற்றனர் என்ற பொருளிற் கூறப்பட்டதாக உரையாளர் கூறுவர் மற்றொரு வகையினர் தாஸர் எனப்பவர் அவரைத் தஸ்யுக்கள் எனவுங் கூறுவர். அவர் அக்கினியை வளர்க்காதவர் என்றும், யாகஞ் செய்யாதவர் என்றும் அக்கொள்கைகளில் நம்பிக்கையற்றனர் என்றும், சொல்லாற் பிறரைத் துன்புறுத்துகின்றவர் என்றும், அவர்களுக்குப் பணி என்ப் பெயரும் உண்டு என்றும் கூறப்படுகின்றது.[4]

1 त्वं ताँ इन्द्रोभयाँ अमित्रान्दासा वृत्राण्यार्या च शूर वधीः ...
[ऋ वे. VI 33, 3]
यया दासान्यार्याणि वृत्राकरोवज्रिन्त्सुतुका नाहुषाणि [VI 23, 10]

2 वृत्राणि — விருத்திரர்

3 दश वृत्राण्यप्रतिवर्हिष्मते नि सहस्राणिनर्हये [I 53, 6]

4 न्यक्रतून्ग्रथिनो मृध्रवाच पणीँरश्रद्धाँ अवृधाँ अयज्ञान् ।
प्रप्रतान्दस्यूँरग्निर्विवाय पूर्वश्चकारापराँ अयज्यून् ॥ [VII 6, 3]

அத்ரியர் என்பதற்கு உரையாசிரியர் அப்பெயர் கொண்ட ஒரு சிலர் எனக் கூறினார். ஆனால் ஆத்ரவன் என்பவன் இரவில் விழித்துக்கொண்டு கடவுளைத் தியானஞ் செய்பவனும், பிறரின் துன்பத்தைத் தீர்ப்பவனும், தாராளமான சிந்தையுடையவனும், இனிமேல் மோட்சத்தை அடைபவனும் ஆவான் என வெண்டிடாட்டில் கூறப்பட்டுள்ளது (Sacred Books of the East Vol IV, p 194) அதனை கொண்டே அத்ரியர் என்பது வேதத்திற் கூறப்பட்ட பலவசுவினைக் குறிக்குமோ வென்ற ஐயம் உண்டாகின்றது

ஒருபோது இந்திரன் தன் வலியால் 30000 தாஸர்களை கொன்றான் என்றும், ஒருபோது ஐந்து லக்ஷம் அநுசரர்களை யுடைய வர்சினை என்பவனை கொன்றான் என்றும் கூறப்பட்டது[1] இந்திரன் ததீசியின் 810 எலும்புகளால் விருத்திரர்களை வென்றான்.[2]

இம்மையில் மனித வாழ்க்கையைப்பற்றிக் கூறப்பட்ட செய்திகள் நோக்கற்பாலன —

கிராமணி, நிருபதி என்ற சொற்கள் அக்காலத்தில் நாட்டை அரசன் ஆண்டான் என்பதையும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு தலைவன் இருந்தான் என்பதையும் அறிவிக்கும்[3] ஒற்றர் உடல்வலியுள்ளோராயும், துரோஹமற்றோராயும், பிறர் செயலை நன்கு அறிய வல்லோராயும் இருத்தல் வேண்டும்[4] எனக் கூறப்படுதலால் இராசசிய தந்திரம் எவ்வாறு இருந்தது என்பது அறியப்படும். மனம், வாக்கு, செய்கை இவற்றால் மக்கள் ஒத்து வாழவேண்டும்[5] வேண்டும்போது

1 अन्वापयद्दभीतये सहस्रात्रिंशत हयैः । दासानामिन्द्रो मायया [ऋ वे IV 30, 21]
उत दासस्य वर्चिनः सहस्राणि शतावधीः ।
अधि पञ्च प्रधीँरिव ॥ [IV 30, 15]

2 इन्द्रो दधीचो अस्थभिर्वृत्राण्यप्रतिष्कुतः ।
जघान नवतीर्नव ॥ [I 84, 13]

3 दक्षिणावान्ग्रामणीरग्रमेति । तमेव मन्ये नृपतिम् [X 107, 5]

4 इषिरासो अद्रुहः स्पशस्वस्य सुदृशो नृचक्षसः [IX 73 7]

5 संगच्छध्वं संवदध्वं सं वो मनांसि जानताम् [X 191, 2]

உதவாதவன் நேசனல்லன்.[1] செல்வம் சக்கரநேமிக்கிரமமாக ஒருவனிடமிருந்து மற்றொருவனிடஞ் செல்லுந் தன்மையான், செல்வமுள்ளபோதே ஒருவன் வேண்டுவோர்க்கு அதனை உதவ வேண்டும்.[2] தேவர்க்கும், விருந்தினர்க்கும் உணவு அளிக்காது தானே உண்ணுபவன் பாவி ஆவான்.[3] உழவன் உழவுத்தொழிலானும், பிராமணன் ஆசிரியத்தொழிலானும் பொருளை அடைந்தனர்.[4] பொருள், பிறப்பு முதலியவற்றில் ஒற்றுமைப்பட்டோர் செய்கையினும் ஒற்றுமைப்படுவர் என நினைத்தல் தகாது.[5] பொய் கூறுதல் பிறர்க்குத் துரோகஞ் செய்தல், பிறரைச் சபித்தல் முதலியன பாவச்செயலாகக் கருதப்பட்டன.[6] பிராமணன், க்ஷத்திரியன் என்ற பிரிவு முன்னரே உளது.[7]

1 न स सखा यो न ददाति सख्ये [ऋ. वे. X 117, 4]

2. पृणीयादिन्नाधमानाय तव्यान्द्राघीयांसमनुपश्येत पन्थाम् ।
ओ हि वर्तन्ते रथ्येव चक्रान्यमन्यमुपतिष्ठन्त रायः [X 117, 5]

3 मोघमन्नं विन्दते अप्रचेताः सत्यं ब्रवीमि वध इत्स तस्य ।
नार्यमणं पुष्यति नो सखायं केवलाघो भवति केवलादी ॥ [X 117, 6]

4. कृषन्नित्फाल आशितं कृणोति ।
वदन्ब्रह्मा वदतो वनीयान् ॥ [X 117, 7]

5. समौ चिद्धस्तौ न समं विविष्टः सम्मातरा चिन्न समं दुहाते ।
यमयोश्चिन्न समा वीर्याणि ज्ञाती चित्सन्तौ न समं पृणीतः ॥ [X 117, 9]

6 इदमापः प्रवहत यत्किंच दुरितं मयि ।
यद्वाहमभिदुद्रोह यद्वा शेपे उतानृतम् ॥ [I 23, 22]

7. ब्रह्मद्विषे [VIII 53, 1] क्षत्रियान् [VIII 56,1]

விவாஹச்சடங்கு அனேகமாய் இப்போது நடக்குமாறே அப்போதும் நடந்தது. கணவன் மனைவியிடம் அன்புடன் இருப்பின், அவள், குறைவற்று விளங்குவாள்[1] இருவரும் மனமொத்து இருத்தல் வேண்டும்[2] அவ்வாறு இருப்பின் மனைவியர் உடலை அலங்கரித்துக்கொண்டும், மனக்களிப்புடனும் இருப்பர்.[3] இருவரும் பிறரது செயலை நன்கு அறிய ஞானமுடையவர் ஆவர்.[4] பல மனைவியரை ஆண்மக்கள் மணப்பினும், அவரால் துன்புற்று வாழ்ந்தனர்.[5] அம்மனைவியர் ஒருவருக்கொருவர் துன்பம் விளைவித்துக் கணவனைத் தம் வசமாக்க முயன்றனர்.[6] ஒருவரது பெயரை மற்றொருவர் கூறவும் விரும்பார்.[7] கணவன் பிறரை நேசியாமல் தன்னையே நேசிக்கு

1. अनवद्या पतिजुष्टेव नारी [ऋ. वे. I 73, 3]
2. दम्पती समनसा कृणोपि [V 3, 2]
   समञ्जन्तु विश्वेदेवा. समापो हृदयानि नौ ।
   संमातरिश्वा संधातासमुदेष्ट्री दधातु नौ ॥ [X 85, 47]
   இதனையே பிற்காலத்திலே கவிஞர்கள் தம்முடைய ஒவ்வொரு நூலிலும் வற்புறுத்தலைக் காண்க.
3. समनेव योषाः कल्याण्य: स्मयमानासः [IV 58, 8]
4. शुम्भमाने दम्पतीव क्रतुविदा जनेषु [II 39, 2]
5. संमातपन्त्यभितः सपत्नीरिव [I 105, 8]
6 यया सपत्नीं बाधते यया संविन्दते पतिम् [X 145, 1]
   सपत्नीमिपराधम पतिं मे केवलंकुरु [X 145, 2]
7 नह्यस्या नाम गृभ्णामि (X 145, 4)

மாறு மூலிகாப்பிரயோகங்களை வழங்கினா.[1] கணவன் சூதாட்டத்தில் ஈடுபட்டு சொத்துக்களை இழப்பினும், அவனிடம் கோபிக்காது அவனுக்குத் தொண்டு செய்வதிலும், அவன் நண்பரைக் கூட்டி வரின் அவர்க்கு மனவேறுபாடின்றி உண வளித்தலிலும் மனைவி ஈடுபட்டனள் என்றும், சொத்தை இழந்த பிறகு கணவன் அவற்றையெல்லாம் நினைத்து நினைத்து வருந்தினன் என்றும் அறியப்படுகின்றது.[2] சூதாட்டத்தில் தோல்வியுற்றவனது மனைவியையும் வெற்றிபெற்றவன் துன்புறுத்தினன்.[3]

தம்பதிகட்கு ஆண்மகன் பிறந்த பிறகு கணவன் இறப்பின் அவனுடைய மனைவி, விரும்பின் உடன்கட்டை ஏறினள்.[4] உடன் கட்டை ஏறாது விதவையாக இருந்தவரும் உண்டு.[5] ஆண்மகன் பிறவாது கணவன் இறப்பின், கணவனோடு உடன்கட்டை ஏறு வதினின்றும் தடுக்கப்பட்டு தேவரால் ஒரு ஆண்மகவைப் பெற்றவரும் உண்டு. அப்போது அவர் விதவையின

1. अहमस्मि सहमानाथत्वमसि सासहिः ।
उभे सहस्वती भूत्वी सपत्नीं मे सहावहै ॥ (ऋ. वे. X 145, 5)
2. न मामिमेथ नजिहीळएषाशिवा सखिभ्य उत मह्यमासीत् ।
अक्षस्याहमेकपरस्यहेतोरनुव्रतामपजायामरोधम् ॥ (X 34, 2)
3. अन्ये जाया परिमृशन्त्यस्य यस्यागृधद्वेदने वाज्यक्षः ॥
(X 34, 4)
இவ்வாறன்ன செயலை வியாசர் மகாபாரதத்தில் வருணித்ததை நோக்குக.
4. आ नः प्रजा जनयतु प्रजापतिराजरसाय समनक्त्वर्यमा ।
अदुर्मङ्गलीः पतिलोकमाविश ...... (X 85, 43)
5. आ पुत्रासो न मातरं विभृत्राः (VIII 43, 3)
कस्ते मातरं विधवामचक्रत् (IV 18, 12)

விரதத்தையே கைக்கொண்டனர். நல்ல ஆண்மகன் பிறத்தற்காக தேவருடன் சேரும்போது உல்லாஸத்துடன் இருந்தனர்.[1] ஆகலின் விதவைவிவாஹம் மந்திரகாலத்து இருந்தது எனக் கொள்ளுதல் பொருந்துமா என ஆய்தற்குரியது. அன்றியும் பெண்டிரை மணத்தல் யாகம் முதலியன செய்தற்கும் மக்களைப் பெறுதற்குமே எனக் கருதப்பட்டது.[2] உடன்பிறந்தாள் உடன் பிறந்தானோடு புணர்தல் பாவச்செயல் எனக் கருதப்பட்டது.[3] ஆண்மக்கள் பெண்மக்கள் இருவருங் காதலி அலித்திருந்தனர்.[4]

1. विधवेव देवरं मर्यं न योषा कृणुते सधस्थ आ (ऋ. वे. X 40, 2)

இதனை इयं नारी पतिलोकं वृणाना नि पद्यत उप त्वा मर्त्य प्रेतम् ।
धर्मं पुराणमनुपालयन्ती तस्यै प्रजां द्रविणं चेह धेहि ॥

(अ. वे. 543, 1)

என்ற அதர்வவேதமந்திரத்திலும், மநுஸ்மிருதியிலும் காண்க. இதன் உட்கருத்து யாதெனின், மக்களின்றி உலகம் நிலைகாணமையாலும், ஒவ்வொரு குடியும் ஆண்மக்களால் வாழையடிவாழையாய் வளர்ந்துவந்ததாலும், ஒவ்வொரு பெண்மகளும் ஒரு ஆண்மகவையேனும் பெறவேண்டும் என்பது ஆபஸ்தம்பவிதி என்பதே.

उदीर्ष्व नार्यभि जीवलोकं गतासुमेतमुप शेष एहि ।
हस्तग्राभस्य दिधिषोस्तवेदम्पत्युर्जनित्वमभिसम्बभूथ ॥

(ऋ. वे. X 18, 8)

2. इमा नारीरविधवाः सुपत्नीराञ्जनेन सर्पिषा संविशन्तु ।
अनश्रवोऽनमीवाः सुरत्ना आरोहन्तु जनयो योनिमग्रे (X 18, 7)

3 पापमाहुर्यः स्वसारं निगच्छात् (X 10, 12)

4. उत नः कर्णशोभना पुरूणि धृष्णवाभर (VIII 67, 3)

தகப்பனார் தேடின சொத்து ஆண்பிள்ளைக்கே உரியது. பெண் பிள்ளையும் இருப்பின், அவளை மணஞ்செய்துகொடுக்கும் பொறுப்பு அவனைச் சார்ந்ததாகும்[1] ஒருவனுக்குப் பெண் பிள்ளை மாத்திரம் இருப்பின், அவளை மணஞ்செய்விக்கும்போது அவளுக்குப் பிறக்கும் முதற்பிள்ளை தனது என மணமகனைக் கேட்டுக்கொண்டு அவனைத் தன் மகனாகக் கொண்டு தன் சொத்தை அவனுக்குக் கொடுப்பதும் உண்டு[2]

தேவர்களுக்குள் குழந்தையோ சிறுபிள்ளையோ இல்லை.[3] இந்திராணியின் கணவனாகிய இந்திரன் பிறர்போல கிழத் தன்மை அடைந்து சாவதில்லை.[4] சூரியகிரகணத்தைப்பற்றியும்,[5]

1 न जामये तान्वो रिक्थमारैक् चकार गर्भं सनितुर्निधानम्

(ऋ. वे. III 31, 2)

स नं पितेव सूनवेऽग्ने सूपायनो भव (I 1, 9)

भुजे वयो न पित्र्य सहे (VIII 20, 13)

2 शासद्वह्निर्दुहितुर्नप्त्यं गाद्विद्वाँ ऋतस्य दीधितिं सपर्यन् ।

पिता यत्र दुहितु सेकमृञ्जन्त्संशग्म्येन मनसा दधन्वे ॥ (III 31, 1)

3 न हि वो अस्त्यर्भको देवासो न कुमारक ।

विश्वे सतो महान्त इत् (VIII 30, 1)

4 इन्द्राणीमासु नारिषु सुभगामहमश्रवम् ।

नह्यस्या अपर चन जरसा मरते पतिर्विश्वस्मादिन्द्र उत्तर ॥

(X 86, 11)

अजर प्रहोतारम् (VIII 88 7)

5 यत्त्वा सूर्य स्वर्भानुस्तमसाविध्यदासुर (V 40 5)

எண்ணிக்கை பத்துப்பத்தாய்[1] எண்ணப்பட்டதைப்பற்றியும் கூறப்பட்டது காண்க.

இராமாயணம் மஹாபாரதம் இவற்றில் வழங்கப்பட்ட வஸிஷ்டர்,[2] விச்வாமித்திரர்,[3] அகஸ்தியர்,[4] இக்ஷ்வாகு,[5] இராமன்,[6] வேநன்,[6] யயாதி,[7] கண்வர்,[8] பராசரர்,[2] பரதன்,[3] இவர்களின் பெயர் கண்டுக் காணப்படுகின்றன.

ஸுதாஸன் என்றோர் அரசன் இருந்தான். அவனுடைய தகப்பன் பிஜவனன்;[9] அவர்க்குச் சிலகால் விச்வாமித்திரர் புரோஹிதராய் இருந்தார்.[10] பின்னர் அவர் பரதர்களுக்குப்

1. आ विंशत्या त्रिंशता ..... (ऋ. वे. II 18, 5-6)
2 प्र ये गृहादममदुस्त्वाया पराशरः शतयातुर्वसिष्ठः (VII 18, 21)
3. विश्वामित्रस्य रक्षति ब्रह्मेदं भारतं जनम् (III 53, 12)
विश्वामित्रो यदवहत्सुदासम् .... (III 53, 9)
4. अगस्त्यस्य नद्भ्यः सप्ती युनक्षि रोहिता (X 60, 6)
5. यस्येक्ष्वाकुरुप व्रते रेवान्मराय्येधते (X 60, 4)
6. प्र तद्दुःशीमे पृथवाने वेने प्र रामे वोचमसुरे मघवत्सु (X 94, 14)
7. ययातेर्ये नहुष्यस्य बर्हिषि देवा आसते (X 63, 1)
8. अभिरत्रिं भरद्वाजं गविष्ठिरं प्रावन्नः कण्वं त्रसदस्युमाहवे (X 150, 5)
9. सुदासः । अर्हन्नग्ने पैजवनस्य (VII 18, 22)
10. महाँ ऋषिर्देवजा देवजूतोऽस्तभ्नात्सिन्धुमर्णवं नृचक्षाः ।
विश्वामित्रो यदवहत्सुदासमप्रियायत कुशिकेभिरिन्द्रः ॥ (III 53, 9)

புரோஹிதர் ஆனார்.[1] பரதர் ஸுதாஸருக்குப் பகைவர். ஸுதாஸர் அப்போது வஸிஷ்டரைப் புரோஹிதராகக் கொண்டவர். ஸுதாஸன் பரதரை வென்றனன்.[2] பருஷ்ணிநதிக் கரையில் ஸுதாஸன் வஸிஷ்டர் வஸிஷ்டபுத்திரர்கள் இவருடைய உதவியால் பத்து அரசர்களை வென்று அவர் பருஷ்ணிநதியைத் தாண்டாதவாறு செய்தனன்.[3] அப்போது அவனுக்கு த்ருத்ஸுக்கள் உதவியாயிருந்தனர்.[4] அப்பத்து அரசர்களும் யாகஞ் செய்யாதவர்.[5] ஆகலின் பரதர் அப்பத்து அரசர்களுள் ஒருவர்

1. कुशिकस्य सूनु. (ऋ. वे. III 33, 5)
यद्ङ्ग त्वा भरताः सन्तरेयुः (III 33, 11)

2. दण्डा इवेद्गो अजनास आसन्परिच्छिन्ना भरता अर्भकासः.
(VII 33, 6)

3. दुराध्यो ३ अदितिं स्रेवयन्तोऽचेतसो विजगृभ्रे परुष्णीम् [VII 18, 8]
एवेन्नुकं सिन्धुमेभिस्ततारेवेन्नुकं भेदमेभिर्जघान ।
एवेन्नुकं दाशराज्ञे सुदासं प्रावदिन्द्रो ब्रह्मणा वो वसिष्ठाः ॥
(VII 33, 3)

4. यत्र राजभिर्दशभिर्निबाधितं प्रसुदासमावतं तृत्सुभिः सह
(VII 83, 6)

5. दश राजानः समिता अयज्यवः सुदासमिन्द्रावरुणा न युयुधुः
(VII 83, 7)

எனக் கூற இயலாது. அப்பதினமரும் ச்ருதன், கவஷன், விருத்தன், அநு, த்ருஹ்யு, பூரு, சம்பரன், துர்வசன், யது, கோ ஆவர்.[1]

பஞ்சஜநா:, பஞ்சக்ஷிதய:, பஞ்சக்ருஷ்டய:, பஞ்சஜாதா: என்ற பிரயோகங்கள் பல இடங்களில் வந்துள்ளன.[2] இவை

1. सुदास इन्द्रः सुतुकाँ अमित्रानरन्धयन् ... [ऋ. वे. VII 18, 9]
श्रुतं कवषं वृद्धमप्स्वनुद्रुह्युं निवृणग्वज्रबाहुः (VII 18, 12)
जेष्म पूरुं विदथे मृध्रवाचम् (VII 18, 13)
पुरः सद्य इत्थाधिये दिवोदासाय शम्बरम् ।
अध त्यं तुर्वशं यदुम् ॥ (IX 61, 2)
निगव्यवोनवोद्रुह्यवः ... (VII 18, 14)
गव्यवः என்பதற்கு गोकामाः என சாயணாசிரியர் பொருள் கூறியுள்ளார். अनवः, द्रुह्यवः என்பவற்றிற்கு அநுவைச் சேர்ந்தார், த்ருஹ்யுவைச் சேர்ந்தார் என அவரே கூறியிருத்தலின், அதனையொட்டியே गव्यवः என்பதற்கு கோவைச் சேர்ந்தார் எனப் பொருள் கூறலாம் என்பது என் கொள்கை.

2. अदितिः पञ्च जनाः (I 89, 10)
इन्द्रः पञ्च क्षितीनाम् (I 7, 9)
यस्य विश्वानि हस्तयोः पञ्च क्षितीनां वसु (I 176, 3)
एषा स्या युजाना पराकात्पञ्च क्षितीः परि सद्यो जिगाति । (VII 75, 4)
अस्माकं द्युम्नमधि पञ्च कृष्टिषु ... (II 2, 10)
त्रिषधस्था सप्तधातुः पञ्च जाता वर्धयन्ती (VI 61, 12)

நாலு வாணததா, நிஷாதா இவவைவரையுமேனும், கந்தர்வா, பிதிரா, தேவா, அஸுரா, ராக்ஷஸா இவவைவரையேனும் குறிக்கும் எனத தன முன்னோா கூறியதாக யாஸ்கா நிருக்தத்தின் கூறுகின்றா. இதிலிருநது அவருடைய காலத்திலே அவை எவரைக குறிக்கினறனா எனபது தெளிவாய் அறியப்படவில்லை யெனத் தோன்றுகின்றது. நிஷாதா என்ற ஜாதி ருக்வேதமந்திர காலத்து இருந்ததா என நிச்சயமாகத் தெரியவில்லை. அஸுரர் என்பது ருக்வேதத்தில் தேவரலலாதவரைக குறிக்காமையான், அவவைவருள ஒருவா அஸுரா எனக் கூறுதல் பொருந்துமா என ஆராய்தறகு உரியது. அச்சொற்கள் பூருக்கள், துாவசா, யதுக்கள், அனுககள், த்ருஹ்யுக்கள் இவரைக் குறிக்கலாம் என மாக்டானல் கூறுகின்றனா.[1] அதுவும் பொருநதும் எனத் தோன்றவில்லை; ஏனெனில் இந்திரனுக்குப் பாஞ்சஜன்ய[2] என்ற ஒரு விசேடணம் இருககின்றமையான், அச்சொற்கள் இந்திர னால் ஆதரிககப்படும் ஐவகை மக்களைக் குறித்தல்வேண்டும் என்பது திண்ணம். மலைப்பிரதேசம் (குறிஞ்சி), கடற்பிரதேசம (நெய்தல்), காடு (முல்லை), வயல்கொண்ட பிரதேசம் (மருதம்), பாலைவனம் (பாலை) இவ்வைந்திணையும் ஆங்குள்ள மக்களையும் குறிக்கும் என்பா தமிழருள் சிலா. இவ்வாறுள்ள இடங்கள் ருக்வேதியா வசித்த இடத்தில் உள்ளன. ஆயினும் அப்பகுப் பைத தான் அவை குறிக்கும என்பதற்கு மறறொரு சான்று இருப்பின் நலம்.

மனுவிற்கு உசனராகிய காவயா புரோஹிதராகக் கூறப் பட்டனா.[3] பிற்காலத்தில் அவரை அஸுரகுருவாகக கூறுவா.

1. A History of Sanskrit Literature by A A. Mac. Donell p 153
2. चर्षीपो न शवसा पाञ्चजन्यो मरुत्वांनो भवत्विन्द्र ऊती ।
[ऋ. वे. I 100, 12]
3 उशना काव्यस्त्वा निहोतारमसादयत्
आयजिं त्वा मनवे जातवेदसम् ॥ (VIII 23, 17)

ஸரஸ்வதிநதிக்கரையில் சித்திரன் என்ற அரசன், மேகம் நீரைப் பொழிவதுபோன்று, பொருளை எல்லோர்க்கு வழங்கினன்.[1]

ருக்வேதகாலத்தில் உழவு, ஆடு மாடு இவற்றை வளர்க்கை, தச்சு, கொல்லு, மருத்துவம், வேட்டை முதலிய தொழில்கள் ஆளப்பட்டன என்பது இந்திரன், ஸவிதா, ருத்திரன், அச்வின் தேவதைகள் முதலியோரைப் பற்றிய ஸூக்தங்களால் நன்கு அறியப்படும்.

நிஷ்கம்[2] முதலிய சொற்களால் நாணயங்கள் வழங்கப் பட்டன என்பதும், ஹிரண்யகர்ணம், மணிக்ரீவம்,[3] அஞ்சி[4] முதலிய சொற்களால் பல்வகை அணிகள் செய்யப்பட்டன என்பதும், சூதாட்டம், ஸங்கீதம், நிருத்தம் முதலியன மகிழ்ச்சி யூட்டும் ஸாதனங்களாக இருந்தன என்பதும் அறியப்படும்.

போர்க்களத்தில் சண்டை செய்யும்போது இறப்பவர் நல்லுலகை அடைவர் எனக் கருதப்பட்டது.[5]

1. चित्र इद्राजा राजका इदन्यके यके सरस्वतीमनु ।
पर्जन्य इव ततनद्धि वृष्ट्या सहस्रमयुता ददत् ॥
[ऋ. वे. VIII 22, 18]

2 निष्कं वा घा कृणवते (VIII 47, 15)

3. हिरण्यकर्णं मणिग्रीवम् (I 122, 14)

4 गोमातरो यच्छुभयन्ते अञ्जिभिः (I 85, 3)

5 ये युध्यन्ते प्रधनेषु शूरासो ये तनूत्यजः ।
ये वा सहस्रदक्षिणास्ताँश्चिदेवापि गच्छतात् ॥ (X .154, 3)

## அத்தியாயம் 4

---

### ருக்வேதசாகைகளும், ஆங்குள்ள சந்தஸ்ஸுக்களும், மந்திரப்பொருளறியும் வழியும்.

ருக்வேதத்துள் 21 சாகைகள் உள என தாமஸூத்திரங்களிலும் மஹாபாஷ்யத்திலும் கூறப்பட்டுளது. சரணவ்யூஹத்தில் சாகலம், வாஷ்கலம், ஆச்வலாயனம், சாங்காயனம், மாண்டூகேயம் என ஐந்து சாகைகளே குறிக்கப்பட்டன. அவற்றுள் ஆச்வலாயனம், சாங்காயனம், சாகலம் இம்மூன்றற்கும் உள்ள பேதம் சிறிதே. சாகலத்தில் இல்லாத பதினொரு ருக்குக்கள் ஆச்வலாயனத்திலும், பத்து ருக்குக்கள் சாங்காயனத்திலும் இருக்கின்றன. புராணங்களில் சாகலம், வாஷ்கலம், மாண்டூகம் இம்மூன்றுமே குறிக்கப்பட்டன. மாண்டூகத்திலுள்ள விசேஷம் யாது என அறிய சாதனம் இல்லை. வாஷ்கலத்திற்கும் சாகலத்திற்கும் இரண்டே பேதம் உள:—(1) வாஷ்கலத்தில் எட்டு ருக்குக்கள் மிகுதியாய் இருக்கின்றன (2) முதல மண்டலத்தில் சில மந்திரங்களின் முறை பிறழ்ந்திருக்கின்றது. ஆகலின் தற்போது அத்தியயனஞ் செய்யப்படுவது சாகலம் ஒன்றே.

ருக்வேதத்துள வழங்கப்பட்ட சந்தஸ்ஸுக்குள் காயத்ரீ,[1]

1. गायत्री —(1) चतुर्विंशत्यक्षरा—त्रिपादा—अष्टाक्षरपादा च
(2) क्वचित् चतु पादा षडक्षरपादा च ।

உஷ்ணிக்,[1] அநுஷ்டுப்,[2] ப்ருஹதீ,[3] பங்க்தி,[4]

1. उष्णिक् — अष्टाविंशत्यक्षरा—त्रिपादा—पूर्वौ अष्टाक्षरौ, उत्तमो द्वादशाक्षरः। यत्र मध्ये द्वादशाक्षरः सा ककुप्। यत्र प्रथमः द्वादशाक्षरः सा पुर उष्णिक्। क्वचित् चतुःपादा सप्ताक्षरा च।

2. अनुष्टुप् — द्वात्रिंशदक्षरा – चतुःपादा – अष्टाक्षरा च, क्वचित् त्रिपादा, मध्ये अष्टाक्षरा, अभितो द्वादशाक्षरा च – इयं च पिपीलिकामध्या इति आख्यायते।

3. बृहती — षड्त्रिंशदक्षरा – चतुःपादा; त्रयः अष्टाक्षराः द्वादशश्च उपोत्तमः। यत्र प्रथमः द्वादशाक्षरः सा पुरस्ताद्बृहती। यत्र द्वितीयः सा उरोबृहती। यत्र उत्तमः सा उपरिष्टाद्बृहती। क्वचित् चतुःपादा नवाक्षरपादा च। क्वचिच्च त्रिपादा द्वादशाक्षरपादा च।

4. पङ्क्ति — चत्वारिंशदक्षरा पञ्चपादा अष्टाक्षरपादा च अथवा चतुःपादा – (a) यत्र पूर्वौ अष्टाक्षरौ उत्तरौ द्वादशाक्षरौ सा आस्तारपङ्क्ती (b) यत्र पूर्वौ द्वादशाक्षरौ उत्तरौ अष्टाक्षरौ सा प्रस्तारपङ्क्ती (c) यत्र मध्ये अष्टाक्षरौ अभितः द्वादशाक्षरौ सा संस्तारपङ्क्ती (d) यत्र मध्ये द्वादशाक्षरौ अभितः अष्टाक्षरौ सा विष्टारपङ्क्ती। यत्र विष्टारपङ्क्ती बृहत्या वा ककुभो वा उत्तरा भवति ता प्रगाथामाचक्षते॥

த்ரிஷ்டுப்,[1] ஜகதி[2] முதலியன ஜகதிக்குமேல், ஐம்பத்திரண்டு ஐம்பத்தாறு அக்ஷரங்கள் கொண்ட அதிச்சந்தஸ்ஸுக்களும் உள

இந்த சந்தஸ்ஸுக்கள் முதலில் உயிர்களின் எண்ணிக்கையை மாத்திரம் கொண்டு வகுக்கப்பட்டனவே யன்றி அவற்றின் குருலகுத்தன்மையையும்[3] கொண்டு வகுக்கப் பட்டனவல்ல என்னில் ப ளிகதேசத்து ஏனைட அவெஸ்தா நூலில் குருலகுத்தன்மை கருதப்படவில்லை அவ்வாறே ருக் வேதத்து முற்பகுதியிலும் இருக்கிறது ஆயினும் ருக்வேதத்தின் பிற்பகுதியில் குருலகுத்தன்மையும் கருதப்பட்டது எனத் தோன்றுகின்றது அவற்றிலிருந்து பிற்காலத்து நூல்களில் வழங்கப்பட்ட விருத்தங்கள் வந்திருத்தல் கூடும்

ருக்வேதத்தில் திருஷ்டுப் சந்தஸ்ஸில் சுமார் 3920 ருக்குக் களும், காயத்திரி சந்தஸ்ஸில் சுமார் 2450 ருக்குக்களும், அநுஷ்டுப் சந்தஸ்ஸில் சுமார் 820 ருக்குக்களும் இருக்கின்றன இவ்வாறிருந்தும் பிற்காலத்தில் அநுஷ்டுப் சந்தஸ்ஸுக்குத் தான் வழக்கு இருக்கின்றது

மந்திரப்பொருளறியும்வழி —கி பி 14-வது நூற்றாண்டில் ஸாயணாசாரியரால் எழுதப்பட்ட பாஷ்யத்திலிருந்தே ருக்வேத மந்திரப்பொருளை அறியலாம் என்பது வில்ஸன்[1] என்ற மேனாட

1 त्रिष्टुप् — चतुश्चत्वारिंशदक्षरा – चतु पादा – एका
दशाक्षरपादा च पञ्चपादापि भवति चत्वार
अष्टाक्षरा एक द्वादशाक्षर ॥

2 जगती — अष्टाचत्वारिंशदक्षरा – चतु पादा – द्वादशाक्षर
पादा च । पञ्चपादापि भवति, त्रय अष्टाक्षरा
द्वौ द्वादशाक्षरा ॥

3 நெட்டெழுத்தும் ஸம்யுக்தாக்ஷரத்திற்கு முன்னுள்ள குற் றெழுத்தும் குரு மற்ற குற்றெழுத்து லகு

1 H H Wilson

டறிஞரின் கொள்கை. ஆனல் கமார கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் யாஸ்கா எழுதிய நிருக்தத்தில் பல ருக்குக்களின் பொருள்கள் கூறப்பட்டன. ஒவ்வொரு சொல்லிற்கும் ப்ரவிருத்தி-நிமித்தம் பல்வகையாகக் கூறப்பட்டிருத்தலின், ஒரே ருக்கைப் பலவகையாக அவ்வாகாலத்தே பொருள் கொண்டனர் என அறியப்படுகின்றது. பலவிடங்களில் நிருக்தத்தில் கூறப்பட்ட பொருளும் ஸாயணபாஷ்யத்தில் கூறப்பட்ட பொருளும் ஒன்றாக இல்லை. ஸாயணருடைய காலத்திற்கு முன்னர் இருந்த மாதவபட்டர்[1] (வேங்கடாரியரது புதல்வர்) எழுதிய ருகர்த்ததீபிகையும்[2] அவருக்கு முன்னர் இருந்த ஸ்கந்தஸ்வாமி[3] இயற்றிய பாஷ்யத்தின் ஒரு பகுதியும் அச்சில் வந்திருக்கின்றன. ருக்வேதத்திற்கு ஒற்றுமைப்பட்ட நூல் பாரஸீகரின் ஜெண்ட் அவெஸ்தா ஆகும். அந்நூற்பயிற்சியால் ருக்குக்களின் பொருள் அறிதலுங் கூடும். மேற்கண்ட நூல்களின் பயிற்சி மாத்திரம் மந்திரப்பொருளை அறியப் போதாது. ருக்வேத ஸம்ஹிதையை அடிக்கடி படித்தல் வேண்டும்; அங்குள்ள சொற்களின் அகராதி இயற்றவேண்டும். ஒரு சொல் எத்தனைப் பொருளில் வழங்கப்பட்டிருக்கின்றது என்று கவனித்தல் வேண்டும். எப்பொருள் எங்குப் பொருந்தும் என ஆராய்தல் வேண்டும். இண்டோயூரோபியன்பாஷாசாஸ்திரத்தின் அறிவும் உண்மைப்பொருளை அறியப் பயன்படும். ருக்வேத மந்திரங்களைக் கண்ட ரிஷிகள் பெரிய கவிகள் போன்றிருத்தலான, காவியங்களின் நுண்ணிய கருத்தை அறியப் படிப்போன், எவ்வாறு சுவையில் ஈடுபட்டு இருக்கவேண்டுமோ, அவ்வாறே

1. माधवभट्टः கி. பி. 11-ஆவது நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 12-ஆவது நூற்றாண்டின் முற்பகுதியிலும் இருந்தவர்.
2. ऋगर्थदीपिका
3. स्कन्दस्वामी கி. பி. ஆறாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலும், ஏழாவது நூற்றாண்டின் முற்பகுதியிலும் இருந்தவர்.

மந்திரங்களின் உட்கருத்தை அறிய முயலுகிறவன் அவற்றோடு ஈடுபடுதல் வேண்டும். தற்போதுள்ள பழக்கவழக்கங்கள் அக்காலத்துப் பழக்கவழக்கங்களினின்று மாறுபட்டிருத்தல் கூடுமாதலின், இக்காலத்து வழக்கத்தைக்கொண்டு அம்மந்திரப் பொருள்களை அறிய முயலுதல் தகாது. அவை எந்நாட்டிற் காணப்பட்டனவோ அந்நாடு அப்போது எவ்வாறு இருந்தது என அறிதல் வேண்டும். அம்மந்திரங்களைப் போற்றல் வேண்டும் என்ற எண்ணத்தாலோ, அவற்றை இகழவேண்டும் என்ற எண்ணத்தாலோ, அவற்றைப் படிக்கத் தொடங்காது, அவற்றின் உண்மைப்பொருளை அறியவேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் பலர் ஈடுபட்டு ஸம்ஹிதையைப் படித்து அவர் தங்கருத்தை ஒத்துநோக்கிப் பொதுநோக்கத்துடன் ஆராயின், பல மந்திரங்களின் உண்மைப்பொருள் புலப்படும் என்பதில் ஐயமில்லை.

மித்திரரும், வருணரும் ஒரு வேள்வியில் இருக்கும்போது வானத்திற் செல்லும் ஊர்வசியைப் பார்த்தனர்; அப்போது அவ்விருவரின் ரேதஸ் கீழே விழ, அதன் ஒரு பகுதி கும்பத்திலும் விழ, அவற்றிலிருந்து வஸிஷ்டரும் அகஸ்தியரும் பிறந்தனர்.[1] இதனால் அகஸ்தியர் மைத்ராவருணி என்றும், கும்பஸம்பவர் என்றும் கூறப்படுகின்றனர் என்பது விளங்கும்.

1. उतासिमैत्रावरुणो वसिष्ठोर्वश्या ब्रह्मन्मनसोधिजात ।
द्रप्सं स्कन्नं ब्रह्मणा दैव्येन ...... ॥ [ऋ. वे. VII 33, 11]
सत्रेह जाताविषिता नमोभिः कुम्भे रेतः सिषिचतु. समानम् ।
ततो ह मान उदियाय मध्यात्ततो जातमृषिमाहुर्वसिष्ठम् ॥
(VII 33, 13)
विद्युतो ज्योतिः परिसञ्जिहानं मित्रावरुणा यदपश्यतां त्वा ।
तत्ते जन्मोतैकं वसिष्ठागस्त्यो यत्त्वाविश आजभार ॥ (VII 33, 10)

பஞ்சஜனர்[1] பஞ்சக்ஷிதியர்[2] எனப் பல்லிடத்து வழங்கப் பட்டுளது. அதற்கு யாஸ்கர் நிருக்தத்தில் இருவகையாகப் பொருள் கூறுகின்றனர். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், நிஷாதர் என ஒருவகை; கந்தர்வர், பித்ரர், தேவர், அஸுரர், ராக்ஷஸர் என மற்றொரு வகை. இப்பொருள்கள் பொருந்தா என முன்னரே கூறப்பட்டது. அஸுரர் என்பதற்குப் பிரயோக விருத்திரா என யாஸ்கர் கூறியிருப்பின் இரண்டாம் பொருள் பொருந்துமோ வெனின், 'பஞ்சஜனங்கள் எனது விளித்தற்கு அருளட்டும்',[3] 'இந்திரன் பஞ்சக்ஷிதிகட்கும் அருள்புரிகிறான்',[4] 'எந்த இந்திரன் கையில் பஞ்சக்ஷிதிகளின் செல்வம் இருக்கின்றதோ',[5] 'மனிதர்களாகிய பஞ்சக்ஷிதிகளை போதிப்பிக்கும்'[6] முதலிய பிரயோகங்களை ஊன்றி நோக்கின் அஃதும் பொருந்துமெனத் தோன்றவில்லை. எனெனில் விருத்திரர், ராக்ஷஸர் இவர்களின் நன்மைக்குப் பகைவனாகவே இந்திரன் பல்விடங்களிலும் கூறப்பட்டனனேயன்றி அவர்களுக்கு நண்பனாகக் கூறப்படவில்லை; அன்றியும் கந்தர்வர் முதலியோர் மானிடர் ஆகார். பிறப்புப்பற்றி பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்ற பகுப்பு ருக்வேதத்தில் முதல் ஒன்பது மண்டலங்களிற் கூறப் படாததால் அப்பகுப்பு அப்போது இல்லை என்று கொள்ளக்கைய

1 पञ्च जनाः (I 90, 10, VIII 32, 22; X 53, 4-5

2 पञ्च क्षितय. (I 7, 9; I 176, 3, VII 79, 1)
पञ्चकृष्टयः (II 2, 10)

3. पञ्च जना मर्म होत्रं जुषन्ताम् (X 53, 5)
पञ्च जना मर्म होत्रं जुषध्वम् (X 53, 4)

4 इरज्यति । इन्द्र. पञ्च क्षितीनाम् (I 7, 9)

5. यस्य विश्वानि हस्तयोः पञ्च क्षितीनाम् (I 176, 3)

6. पञ्च क्षितीर्मानुषीर्बोधयन्ती (VII 79, 1)

மேனாட்டு ஆராய்ச்சியாளர் கொண்டு பஞ்சஜனர் என்று சொல் பூருவர், துர்வசர், யதுவர், அனுக்கள், த்ருஹ்யுக்கள் என்ற ஐவரைக் குறிக்கும் என்பர். ஆனால் ஒரு மந்திரத்தில் நர்யனையும், துர்வசனையும், யதுவையும், துர்வீதியையும், ரதம் என்பவனையும், எதசம் என்பவனையும் இந்திரன் காப்பாற்றியதாக உள்ளது[1] மற்றோர் மந்திரத்தில் துர்வசனையும், யதுவையும், உக்கிர தேவனையும், நவவாஸ்தவனையும், பிரகத்ரதனையும், துர்வீதியையும் அக்னி கொண்டுவரட்டும் என உளது[2] மற்றோர் மந்திரத்தில் இந்திரன் திவோதாஸரைக் காப்பாற்றியதாகக் கூறப்பட்டுள்ளது.[3] மற்றோர் மந்திரத்தில் பூரு தன்னைக் காப்பாற்ற அக்கினியை வேண்டியதாக உளது[4] மற்றோரிடத்தில் இந்திரன் திவோதாஸனைக் காப்பாற்ற துர்வசனிடம் யதுவையும் அடக்கியதாகக் கூறப்பட்டுள்ளது.[5] இவற்றை நோக்கின் மேனாட்டார் கொள்கையும் பொருந்தும் எனத் தோன்றவில்லை விசுவாமித்திரின் ஸ்தோத்திரம் பாரதஜனத்தைக் காப்பாற்றுகிறது எனக் கூறியிருக்கின்றமையால், அம்மந்திரங்கள் பாரத நாட்டில் காணப்பட்டன என்பது வெளிப்படை. வஸிஷ்டர்,[6]

1. त्वमाविथ नर्यंतुर्वशं यदुं त्वं तुर्वीतिं वय्यं शतक्रतो ।
त्वं रथमेतशम् ..... (ऋ. वे I 54, 6)

2 अग्निना तुर्वशं यदुं परावत उग्रादेवं हवामहे ।
अग्निर्नयन्नववास्त्वं बृहद्रथं तुर्वीतिं दस्यवे सहः (I 36, 18)

3 त्वं तदुक्थमिन्द्र .... प्रावो दिवोदास चित्राभिरूती (VI 26, 5)

4 पूरुर्गीर्तावसे (V 17, 1)

5 पुरं मघ इत्थाधियेदिवोदासाय शम्बरम् ।
अपत्य तुर्वशं यदुम् ॥ (IX 61, 2)

6 वसिष्ठं ह वरुणो नाव्याधात् [ऋ वे VII 88, 4]

விசவாமிததிரா,[1] சயவனா,[2] பாதவாஜா,[3] மாநதாதா,[3] நஹுஷன,[4] ஆயு,[4] யயாதி,[5] ஜமதகநி,[6] புருரவஸ,[7] வேநன,[8] ராமன,[9] இகஷவாகு,[10] முதலிய பெயாகள வழஙகபபடடமையால அநதநத மணடலததில அபபெயா கொணட மநதிரஙகள அவரவாகாலததிறகுப பிறகு சேரககபபடடிருததல கூடும இககொளகையை ஸாயணாககு முனனா ருககவேததிறகு உரை செயத மாதவபடடா கைககொணடது நோககததககது ஆகலின அசசொறகள அவறறுற குறிககபபடட மககளைக கூறவிலலை எனற கொளகை ஆராயததறபாலது

1 विश्वामित्रस्य रक्षति ब्रह्मेदं भारतं जनम् (ऋ वे III 53, 12)

2 युवं च्यवानमश्विना जरन्तं पुनर्युवानं चक्रथुः शचीभिः (I 117, 113)

3 याभिः सूर्यं परियाथः परावति मन्धातारं क्षैत्रपत्येष्वावतम् ।
याभिर्विप्रं प्र भरद्वाजमावतम् ॥ (I 112, 13)
मन्धातु (VIII 39 8)

4 त्वामग्ने प्रथममायुमायवे देवा अकृण्वन्नहुषस्य विश्पतिम् (I 31, 10)

5 मनुष्वदग्ने अङ्गिरस्वदङ्गिरो ययातिवत् (I 31, 17)
ययातेर्ये नहुष्यस्य बर्हिषि देवा आसते (X 63, 1)

6 गृणानो जमदग्निना (IX 62 24)

7 महे यत्त्वा पुरूरवो रणायावर्धयन् (X 95 7)

8 & 9 प्र तद्दुःशीमे पृथवाने वेने प्र रामे वोचम् (X 93 14)

10 यस्येक्ष्वाकुरुप व्रते रेवान्मराय्येधते ।
दिवीव पञ्च कृष्टयः ॥ (X 60 4)

## அத்தியாயம் 5

### ருக்வேததேவதைகள்

உலகங்கள் பூலோகம், அந்தரிக்ஷலோகம், த்யுலோகம், என மூவகையாகப் பிரிக்கப்பட்டன[1] ஒவ்வொன்றிலும் சிற்சில தேவதைகள் உள. சிலர் மூன்று உலகங்களிலும் உள்ளவர். அவர் அக்கினி, இந்திரன் முதலியோர்.[2] ஒவ்வொரு உலகத்திலும் பதினொரு தேவதைகள் இருந்தனர் என ஒரு மந்திரம் கூறும்.[3] மூன்று உலகங்களிலும் 3339 தேவதைகள் இருந்தனர் என்று மற்றொரு மந்திரம் கூறும்.[4] நிருக்தகாரர்கள் பூலோகத்தில் அக்கினியும், அந்தரிக்ஷலோகத்தில் வாயுவோ இந்திரனோ, த்யுலோகத்தில் சூரியனுமே தேவதைகள்:

1. परो दिवा पर एना पृथिव्या परो देवेभिरसुरैर्यदस्ति (ऋ. वे. X 82, 5)

2 यदिन्द्राग्नी अवमस्यां पृथिव्यां मध्यमस्यां परमस्यामुत स्थः (I 108, 9)

3 ये देवासो दिव्येकादश स्थ पृथिव्यामध्येकादश स्थ ।
अप्सुक्षितो महिनैकादश स्थ (I 140, 11)
... त्रयश्च त्रिंशच्च मनोर्देवा यज्ञियासः (VIII 30, 2)

4 त्रीणि शता त्री सहस्राण्यग्निं त्रिंशच्च देवा नव चासपर्यन् (III 9, 9)

ஏனைய தேவதைகளெல்லாம் அவற்றின் பிரிவே ஆகும்[1] எனக் கூறினர் தேவர்களுள் குழந்தையோ, இளைஞர்களோ இலை.[2]

தேவர்கள் பித்ருதேவர்கள் என்றும், கர்மதேவர்கள் என்றும், தேவர்கள் என்றும் பலவகையாகப் பிரிக்கப்பட்டனர் என அறியப்படுகின்றது. பித்ருதேவர்கள் வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்யர்கள் என மூவகைப்பட்டனர் என்பதும் அவர் தேவர்களைக் காட்டிலும் குறைந்த பதவியில் இருந்தனர் என்பதும் அறியப்படுகின்றது.[3] ரிபுக்கள் ஸுதன்வரிஷியின் பிள்ளைகளாய்ப் பிறந்து தங்களின் செயல்களால் இந்திரனின்

1. तिस्र एव देवता इति नैरुक्ताः, अग्निः पृथिवीस्थानः, वायुर्वेन्द्रो वा अन्तरिक्षस्थानः, सूर्यो द्युस्थानः। तासा महाभाग्यादेकैकस्या अपि बहूनि नामधेयानि भवन्ति, कर्मपृथक्त्वाद् वा।
(निरु. 7, 5)

2. नहि वो अस्त्यर्भको देवासो न कुमारकः।
विश्वे सतो महान्त इत् (ऋ. वे. VIII 30, 1)

3. त्वमग्ने वसूँरिह रुद्राँ आदित्याँ उत।
यजास्वध्वरं जनं .... ॥ [I 45, 1]
आदित्या रुद्रा वसवः .... यज्ञमवन्तु देवाः (III 8, 8)
इन्द्रं नो अग्ने वसुभिः सजोषा रुद्रं रुद्रेभिरावहा बृहन्तम्।
आदित्येभिरदितिम् .... (VII 10, 4)
இம்மந்திரத்தில் மூன்றும் வேற்றுமை அப்பொருளில் கூறப்பட்டது காண்க.

கடமை அடைந்து தேவர்கள் ஆயினர்.[1] அவர்கள் கர்ம தேவர்களைச் சார்ந்தவர் ஆவர் இந்திரன் முதலியோர் தேவர்கள்ஆவர் இவர்களின் தாரதம்மியத்தைத்தைத்திரீயோபநிஷத்தில் கூறியது காண்க பித்ருக்களின் ஆநந்தத்தில் 10000 மடங்கு உடையது கர்மதேவர்களின் ஆநந்தம், அவர்களின் ஆநந்தத்தில் 100 மடங்கு உடையது தேவர்களின் ஆநந்தம் இந்திரன், வருணன், அக்கினி, அச்வினிதேவதை இவர்கட்கு இந்திராணி, வருணானி, அக்கினாயி, அச்வினி என மனைவிகள் இருந்தனர்.[2]

பூலோகதேவதைகள் அக்கினி, ப்ருதிவி, தவஷ்டா, வநஸ்பதி முதலானோர்

அந்தரிக்ஷலோகதேவதைகள் வாயு, வருணன், ருத்திரன், இந்திரன், மருத, ஸவிதா, யமன், உஷா, அபாம்நபாத், ப்ருகஸ்பதி முதலானோர்

தயுலோகதேவதைகள் சூரியன, விசவேதேவ , அச்விநா தேவதைகள் முதலானோர்

1 इन्द्रस सख्यमृभव समानशुमनोर्नपातो अपसो दधन्विरे ।
सौधन्वनासो अमृतत्वमेरिरे विष्ट्वी शमीभि सुकृत सुकृत्यया ॥
(ऋ वे III 60, 3)

यत्सवत्समृभवो गामरक्षन्यत्सवत्समृभवोमा अपिंशन् ।
यत्सवत्समभरन्भासो अस्यास्ताभि शमीभिरमृतत्वमाशु ॥
(VI 33 4)

2 उत ग्राव्यन्तु देवपत्नीरिन्द्राण्य १ ग्राय्यश्विनीराट् ।
आ रोदसी वरुणानी . . ॥ (V 46 8)

ருக்வேதத்தில் வருணிக்கப்பட்ட சிறந்த தேவதைகள் அக்கினி, ஸவிதா, இந்திரன், வருணன் முதலானோர் ஆகும். அவரெல்லாம் மனிதர்களைப்போல் வருணிக்கப்பட்டனர். ஒரே பண்பு பலரிடத்தும் காணப்படுகின்றது. இருளைப் போக்கும் பண்பு அக்னியிடத்தும், ஸவிதாவிடத்தும், உஷஸிடத்தும் உளது. சிலவிடத்து இரண்டு அல்லது பல தேவதைகள் ஒருங்கு விளிக்கப்படுதலின், ஒன்றன் பண்பே இருவரின் அல்லது பலரின் பண்பாகக் கூறப்பட்டுளது. உதாரணமாக, அக்கினியும் இந்திரனும் ஒருங்கு விளிக்கப்பட, அக்கினியை வஜ்ரமுடையவனாக வருணிக்கப்பட்டுளது.[1]

- இத்தேவதைகளெல்லாம் பெரும்பாலும் தனித்தனியாக விளிக்கப்படுதலின், ஸ்வதந்திரமான பல தேவதைகளிடம் உலகியல் உளதாகச் சிலர் நினைத்தனர். அக்கொள்கையைப் பாலிதீயிஸம்[2] என்ற சொல்லால் வழங்கினர். தேவதைகள் பலராயிருப்பினும், அந்தந்த காலத்தில் விளிக்கப்பட்ட தேவதையே சிறப்புற்றது என மோக்ஷமூலர்[3] நினைத்தனர். அக்கொள்கையை ஹீனோதீயிஸம்[4] என்ற சொல்லாற் குறித்தனர். 'ஒன்றையே பலவாகக் கூறுகின்றனர்.[5]' என்றும் 'தொடக்கத்தில் பூதங்களின் பதியாகிய ஹிரண்யகர்ப்பர் ஒருவரே இருந்தார்'[6] என்றும் பொருள்கொண்ட தொடர்கள் ருக்வேதஸம்ஹிதையில் இருத்தலின், கடவுள் ஒருவரே, அவ

1. वज्रवाहूअस्माँइन्द्राग्नी अवतं शचीभिः (ऋ. वे. I 109, 7)
2. Polytheism.
3. Maxmuller.
4. Henotheism.
5. एकं सद्विप्रा बहुधा वदन्ति (I 164, 46)
6. हिरण्यगर्भ. समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् (X 121, 1)

ராணியில் தேவதைகள் அவரவரது கடமையைச் செலுத்துகின்றனர் என அறியக்கிடக்கின்றது என்றனர் மாக்டானெல்[1]; இதனை மானோதியிஸம்[2] என்ற சொல்லால் வழங்கினர்.

பூலோகத்தில் வேள்வி முதலியவற்றில் அக்கினியில் ஹோமம் செய்யப்படும் பொருளே தேவதைகளுக்கு உணவு ஆகும் எனவும், ஆங்குச் செய்யப்படும் ஸ்தோத்திரங்கள் அவர்களுக்குப் பலத்தையும் உற்சாகத்தையும் உண்டுபண்ணும் எனவும் கூறப்பட்டுளது. ஆகலின் இப்புவியில் வேள்வி முதலியன அவசியம் நடைபெறல் வேண்டும். வேள்வி செய்தற்கு மனிதர்க்குப் பொருளும் வேகாத்தியயனமும், உடல்வலியும் மனவலியும் வேண்டும்.[3] அவை தேவதைகளின் அனுக்கிரகம் இன்றி வாரா. ஆகலின் மனிதர்க்குத் தேவதைகளின் உதவியும் தேவதைகளுக்கு மனிதரின் உதவியும் வேண்டும். இதனைப் பின்வரும் ருக்குகளில் ருக்வேதம் கூறும்:—

यदङ्ग दाशुषे त्वमग्ने भद्रं करिष्यसि । तवेत्तत्सत्यमङ्गिरः
(I 1, 6)

निश्वं तद्भद्रं यदवन्ति देवा बृहद्वदेम विदथे सुवीराः
(II 35, 15)

यः सुन्वते पचते दुध्र आचिद्वाजं दर्दर्षि स किलासि सत्यः ।
वयं त इन्द्र विश्वह प्रियासः सुवीरासो विदथमावदेम ॥
(II 12, 15)

1. Mac-Donell.
2. Monotheism.
3. *Cf.* अर्थी विद्वान् समर्थो यजेत

மனிதர்க்குப் பொருள் வேண்டுமாயின் நிலம் நன்கு விளைதல் வேண்டும்; அதற்கு மழை வேண்டும்; மழை பெய்ய அதனைத் தடுப்பதை நீக்கல் வேண்டும். அவ்வாற்றல் இந்திரனிடம் இருக்கிறது. மழையை உண்டாக்குவதற்கும், மழை பெய்யின் பயிர்களிலிருந்து தானியத்தை உண்டாக்குவதற்கும், அத்தானியத்தைச் சமைப்பதற்கும், உண்ட தானியத்தைச் சீரணஞ் செய்வதற்கும் அக்கினியின் அனுக்கிரகம் வேண்டும். அறிவு முதலியவற்றிற்கு வருணன், பிரகஸ்பதி இவர்களின் அனுக்கிரகம் வேண்டும். ஆகலின் தேவர்களும் மனிதர்களும் ஒருவர்க்கொருவர் உதவிபுரிகின்றனர் என்பது வேதக்கொள்கை ஆகும்.

தேவதைகளுள் மிகுதியாக வருணிக்கப்படுகின்றவர் வருணன், இந்திரன், அக்கினி, ஸவிதா, ஸோமன், ருத்திரன் விஷ்ணு, மருத்துக்கள், அச்வின்தேவதைகள், ரிபுக்கள் முதலியோர். அவற்றைப்பற்றித் தனித்தனியாகப் பின்னர் கூறப்படும் :—

வருணன் — ருக்வேதத்தில் வருணனுக்குப் பலவகையான ஆற்றல்கள் இருந்ததாகக் கூறப்பட்டுளது. அவரே பேரரசன்,[1] அவரது ஆணைப்படியே சூரியன் தன் வழியிற்சென்று பிரகாசிப்பான்;[2] சந்திரனும், நக்ஷத்திரங்களும் இரவிற் பிரகாசிக்கும்;[3] நதிகள் ஒரே வகையாக ஓடும்;[4] ஜலத்திற்கு அரசன் அவரே,[5]

1. सम्राट्
2. उरुं हि राजा वरुणश्चकार सूर्याय पन्थाम् [ऋ. वे. I 24, 8]
3. अमी य ऋक्षा निहितास उच्चा नक्तं ददृशे कुहचिद्दिवेयु. ।
अदब्धानि वरुणस्य व्रतानि विचाकशच्चन्द्रमा नक्तमेति ॥ (I 24, 10)
4. ऋतं सिन्धवो वरुणस्य यन्ति (II 28, 4)
5. यासा राजा वरुणो ... ता आपे (VII 49, 3)

பறவைகள், கப்பல்கள் இவற்றின் கதியை அவரே அறிவர்;[1] பிறர் செய்த செயலையுஞ் செய்யப்போகுஞ் செயலையும் அறிவர்;[2] பூமியையும், ஸ்வர்லோகத்தையும் இடம் பிறழாதபடி செய்தனர்;[3] வேள்வி செய்வோனையும், அவன முன்னோரையும் செய்யப்பட்ட பாவத்தை நீக்குவர்;[4] அறியாது பாவஞ் செய்தேன் எனக் கூறுவோரை மன்னிப்பர்.[5] தற்போது பிரஜாபதிக்கு எக்கெக்க ஆற்றல் இருப்பதாக நினைக்கிறோமோ அவை எல்லாம் வருணனுக்கும் இருந்தது எனவும்[6] ஆரிய கிரேக்கர் முதலியோர் ஒருங்கிருந்த காலம் முதல் வணங்கி வந்த தேவதைகளுள் வருணன் ஒருவர் எனவும்[7] மாக்டானல் கூறுவர். ஜெண்ட் அவெஸ்தா என்ற பாரஸீகநூலில் வழங்கப்

1. वेदा यो वीनां पदमन्तरिक्षेण पतताम् ।
वेदं नावः समुद्रियः ॥ (ऋ. वे. I 25, 7)

2. अतो ... अभिपश्यति । कृतानि या च कर्त्वा (I 25, 11)

3 यस्तस्तम्भ रोदसी चिदुर्वी (VII 86, 1)

4 अवद्रुग्धानि पित्र्या सृजानो वया वयं चकृमा तनूभिः (VII 86, 5)

5. यत्किञ्चेदं वरुण दैव्ये जनेऽभिद्रोहं मनुष्याश्चरामसि ।
अचित्ती यत्तव धर्मा युयोपिम मानस्तस्मादेनसो देवरीरिष. ॥
[ऋ. वे. VII 89, 11]

6 A History of Sanskrit Literature by A. A. Mac. Donell p 77.

7. ibid p. 75.

பிற்காலத்தில் வருணன் தண்ணீர்க்கு மாத்திரம் அதிபதியாகக் கொண்டாடப்படுகின்றனர்.

இந்திரன — அந்தரிக்ஷலோகத்து தேவதைகளுள் இந்திரன் சிறந்தவர். அவர் விருத்திரனைக் கொன்றதாகவும், விருத்திரர்களைக் கொன்றதாகவும் பலவிடத்துங் கூறப்படுவர். விருத்திரர்கள் என்பதற்குப் பகைவர் எனப் பொருள் என்பர் ஸாயணர். ஆகலின் விருத்ரஹா, விருத்ரஹந்தா, விருத்திரக்கின: என அவர்க்குப் பெயர் வழங்கும். வெரெத்ரக்ன என்ற ஒரு தேவதை பாரஸீகத்து ஸெண்ட்அவெஸ்தாவில் கூறப்பட்டிருக்கிறது. அவர் பகைவரை வெல்லுகிறவர் என்பதும், ஸ்வர்க்கத்து தேவதைகளுள் நற்படைகளோடு கூடியவர் என்பதும் அஹுரமஸ்தாவால் சிருஷ்டிக்கப்பட்டவர் என்பதும் கூறப்பட்டன.[1] ஆனால் இந்திரன் என்ற ஒரு தேவதையை அஹுரமஸ்தா வெருட்டினன் என அந்நூல் கூறும்.[2] ஆங்குத் தேவர் என்ற சொல் அஹுரமஸ்தாவின் கொள்கைக்கு மாறுபட்டவரைக் குறிக்கின்றது.

அவ்விருத்திரனை தேவர்களுக்குப் பகைவனாகப் புராணங்கள் கூறினும், அவன் மேகங்களை மழைபெய்யாமல் தடுத்த ஒரு பொருள் ஆகும் என்பதே ருக்வேதத்திற் கூறப்பட்டதாக ருக்வேத மந்திரங்களின் பொருளைக் கூறும் யாஸ்கரின் நிருக்தம் கூறும்,[3] விருகதிரன், த்ருபீசன், உரணன், அச்வன்,

1. Sacred Books of the East Vol. XXIII pp. 230-248, 327 etc.
2. Sacred Books of the East Vol. IV, p. 139.
3. वृत्रं नेदीयसम् (VII 12, 28) = अपवर्जनीलं मेघम् (ஸாயணர் உரை)

சுஷ்ணன், பிப்ரு, நமுசி[1] ஆகிய ஏழு தானவரையும், விருபிசுதன், அநாசனி, அஹீசுவன் முதலிய தாஸரையும்[2] இந்திரன் கொன்றனர் சம்பரனின் 81 அல்லது 100 கோட்டைகளை அழித்தது நாற்பது ஆண்டின் பின்னர் அவனைக் கண்டு கொன்று, திவோதாஸனைத் துன்பத்திலிருந்து விடுவித்தனர்[3] வர்சியின் அநுசரர் லக்ஷம் அல்லது ஐந்து லக்ஷம் தாஸர்களை அழித்தனர்.[4]

1 आ दर्षते शवसा सप्त दानून् [ऋ वे X 120, 6]
अध्वर्यवो यो वृत्रं जघान (II 14, 2)
अध्वर्यवो यो दृभीकं जघान . (II 14 3)
अध्वर्यवो य उरणं जघान (II 14, 4)
अध्वर्यवो य स्वश्नं जघान य शुष्णमशुषं यो व्यंसम् ।
य पिप्रुं नमुचिं यो रुधिक्रां तस्मा इन्द्रायान्धसो जुहोत ॥
(II 14 5)

2 य सर्विन्दमनर्शनिं पिप्रुं दासमहीशुवम् ।
वधीदुग्रो रिणन्नप । (VIII 32, 2)

3 नव यो नवतिं पुरो बिभेद बाह्वोजसा ।
अहिं च वृत्रहावधीत् ॥ (VIII 93, 2)
अध्वर्यवो य शतं शम्बरस्य पुरो बिभेद . (II 14 6)

4 उत दासस्य वर्चिनः सहस्राणि शतावधीः ।
अधि पञ्च प्रधीँरिव ॥ (IV 30, 15)
यो वर्चिनं शतमिन्द्रः सहस्रमपावपत् (II 14 6)

குத்ஸர், ஆயு, திவோதாஸர் இவர்கள் மூவரின் பகைவரைக்
கொன்றனர்[1] மக்களைத் துன்புறுத்திய பதினாயிரம் விருத்திரர்
களைக் கொன்று அவர்களை மகிழ்வித்தனர்[2] இச்செயல்களைப்
புரிய அவர்க்கு எழு மருத்கணங்கள் உதவி செய்யும் ஆகவே
அவர்க்கு மருத்வான்[3] என்ப பெயர் வழங்கும் அவர்க்கு
ஆற்றலை ஊட்டுதற்கு சோமயாகங்களில் சோமம் அளிக்கப்படும்,
சாமங்கள் கானஞ்செய்யப்படும்[4] அடிக்கடி யாகங்களில்
விளிக்கப்படுவதால் அவர்க்குப் புருஹூதன்[5] என்ப பெயர்
வழங்கும் கோட்டைகள் போன்ற மேகங்களை உடைத்தலால்
புரந்தரன்[6] என்ற பெயர் உண்டு சசிபதி என்ற பெயரும்
உண்டு[7] மலைகள் போன்ற மழைபெய்யா மேகங்களை அவர்
உடைத்ததாகக் கூறப்படும்[8] மழை பெய்தபிறகு மேகத்தால்
மறைவுபட்ட விடியற்காலம் சூரியன் இவை மக்களின் கண்

1 अध्वर्यवो य शतमासहस्र भूम्या उपस्थेर्वपज्जघन्वान् ।
कुत्सस्यायोरतिथिग्वस्य वीरान्यावृणग्भरतासोममस्मे ॥
(ऋ वे II 14 7)

2 यत्कारवे दश वृत्राण्यप्रति नहिष्मते नि सहस्राणि नर्हय
(I 53 6)

3 मरुत्वाँ इन्द्र वृषभो रणाय पिबा सोमम् (III 47 1)

4 इन्द्राय साम गायत (VIII 87 1)

5 नि शुष्ममिन्दवेषा पुरुहूत जनानाम् ।
यो अस्माँ आदिदेशति (IX 52 4)

6 पुरन्दर पपिवाँइन्द्रो अस्य (V 30 11)

7 शचीपते (VIII 14 2)

8 य पर्वतान्व्यकुपिताँअरम्णात् (II 12 2)

களுக்குப் புலப்படுதலால், அவற்றை அவர் சிருஷ்டித்ததாகக் கூறப்படும்.[1] அப்பொழுது ஆகாயம் தெளிவாய்ப் பார்க்கப் படுதலால், அந்தரிக்ஷத்தை அவர் அளந்ததாகக் கூறப்படும்.[2] அவர் வலனுடைய குகைகளிலிருந்து கோக்களை விடுவித்ததாகவும்,[3] தாஸவர்ணத்தைக் கீழ்ப்படுத்தியதாகவும்,[4] அவருடைய ஆணையில் குதிரை, மாடு, ரதம், கிராமம் இருந்தன[5] ஆகவும், அவர் அபாலையின் தோல்வியாதியைப் போக்கினர்[6] ஆகவும் கூறப்பட்டன.

ருக்வேதகாலத்தில் இந்திரன் வருணனுக்குச் சிறந்தானாகக் கூறுதற்கு இடமின்று. பிற்காலத்தில் வருணனுக்குச் சிறப்பு குன்ற, இந்திரனுக்குச் சிறப்பு மிகுந்ததாகக் கருதப்படுகின்றது என்னலாம்.

ஸெண்ட்அவெஸ்தாவில் கடவுள் அஹுரமஸ்தா, மஸ்தா, அஹுர என்ற சொற்களால் வழங்கப்படுகின்றனர். ஆங்குள்ள மஸ்தா என்ற சொல்லும் வடமொழி மஹித என்ற சொல்லும் ஒருபொருட்கிளவியாயிருத்தல்[7] கூடும்; அவ்வாறே அஹுர, அஸுர என்ற சொற்களும் ஆகும். ஆங்கு அஹுர என்பது விசேஷணச்சொல்லாகவும் மஸ்தா என்பது விசேஷியச்சொல்லாகவும் இருக்கலாம். ருக்வேதத்திலும் அஸுர என்ற சொல்

1. यः सूर्यं य उषसं जजान (ऋ. वे. II 12, 7)
2. यो अन्तरिक्षं विममे (II 12, 2)
8 यो गा उदाजदपधा वलस्य (II 12, 3)
9. यो दासं वर्णमधरं गुहाकः (II 12, 4)
5. यस्याश्वासः प्रदिशि यस्य गावो यस्य ग्रामा यस्य विश्वे रथासः (II 12, 7)
6. अपालामिन्द्रत्रिष्पूत्व्यकृणोः सूर्यत्वचम् (VIII 80, 7)
7. ஒருபொருட்கிளவிகள் — एकार्थकशब्दाः

விசேஷணமாகவே வழங்கப்பட்டுள்ளது. அன்றியும் கடவுளர்க்குப் பகைவர்களாகத் தேவர் எனப்பட்டவென்றாவிற் கூறப்பட்டனர். ஆகலின் அஸுரர் தேவர் என்ற சொற்களுடைய பொருளின் வரலாறு நன்கு ஆராய்தற்குரியது.

அஸுர என்ற சொல் பலமுள்ளவன் என்ற பொருளோடு அக்கினி[1], இந்திரன்[2], வருணன்[3], ஸோமன்[4], வஸுக்கள்[5], மித்திராவருணர்[6], வாயு[7], ருத்திரன்[8],

1. घृतप्रसत्तो असुरः .... अग्निः (ऋ. वे. V 15, 1)

2. तमु त्वा नूनमसुरप्रचेतसं राधो भागमिवेमहे
महीव कृत्तिः शरणा त इन्द्र प्रते सुम्ना नो अश्नवन् (VIII 79, 6)

3. त्वं विश्वेषां वरुणासि राजा ये च देवा असुर ये च मर्ताः (II 27, 10)

4. सोमो मीढ्वाँ असुरो वेद भूमनः (IX 74, 7)

5. यद्वाभिपित्वे असुरा ऋतं यते छर्दिर्येम विदाशुषे ।
वयं तद्वो वसवो विश्ववेदस उपस्थेयाममध्य आ ॥ (VIII 27, 20)

6. इमा वा मित्रावरुणा सुवृक्तिमिषं न कृण्वे असुरा नवीयः (VII 36, 2)

7. पृषद्योनिः पञ्चहोता शृणोत्वतूर्तपन्था असुरो मयोभुः (V 42 1)

8. रुद्रं नमोभिर्देवमसुरं दुवस्य (V 42, 11)

उत वो दिवो असुराय (V 41, 3) என்றவிடத்து சாயணாசாரியர் असुराय என்ற சொற்கு प्राणापहर्त्रे रुद्राय यद्वा द्युलोकसम्बन्धिने असुराय प्राणदात्रे सूर्याय वायवे वा எனப் பொருள் கூறியுள்ளார். प्राणापहर्त्रे रुद्राय என்பதற்குப் பிரதியாக प्राणदात्रे रुद्राय எனப் பொருள் கூறலாம் என்பது (V 42, 11) என்றவிடத்து असुरम् என்பதற்கு அவர் கூறும் பொருளாலே விளங்கும்.

பர்ஜந்யன்[1], ஸவிதா[2], மருத்துக்கள்[3] முதலியோருக்கு அடைமொழியாய் வழங்கப்பட்டது. சிலவிடத்து அச்சொல்லே பலத்தைக் கொடுப்பவன் என்ற பொருளையுங் கொண்டது. அஸுரரான தேவர்களுக்கும் மேலானவன் என்ற வழக்கும் உளது.[4] தேவரல்லாதார்க்கும் அஃது அடைமொழியாய் வழங்கப்பட்டுளது;[5] தேவரல்லாதார் என்பது தேவரைப் போன்றவரும் தேவரிடத்தினின்று வேறுபட்டவருமான விருத்திரா முதலியோரைக்குறிக்கும். சிலவிடத்து விசேஷியச் சொல்லின்றி விசேஷணச்சொல்லாகிய அஸுர என்பது மாத்திரம் ருக்வேதத்திலும்[6] அஹுர என்பது மாத்திரம் ஜெண்ட் அவெஸ்தாவிலும்[7] வழங்கப்பட்டன. ருக்வேதத்தின் பிற்பகுதியில் அஸுர: என்ற சொல் விசேஷியமின்றி வழங்கப்படின், அஃது அதேவரையுங் குறிக்கும் என்றும், பத்தாம் மண்டலம் 124 ஸூக்தத்திலுள்ள அஸுர: என்ற சொற்கு அவ்வாறே பொருள்கொள்ள இடன் இருக்கின்றது என்றும் மாக்டானல் கூறுகின்றார்.[8] அந்த ஸூக்தத்தில் 'அஸுரரான

1. अर्वाङेतेन स्तनयित्नुनेह्यपो निषिञ्चन्नसुरः पिता नः (ऋ.वे. V 83, 6)
2. हिरण्यहस्तो असुरः सुनीथः (I 35, 10)
3. ते जज्ञिरे दिव ऋष्वास उक्षणो रुद्रस्य मर्या असुरा अरेपसः (I 64, 2)
4. परो देवेभिरसुरैर्यदस्ति (X 82, 5)
5. अनायुधासो असुरा अदेवाः (VIII 85, 9)
6. या इन्द्र भुज आभरः स्वर्वाँ असुरेभ्यः (VIII 86, 1)
7. Sacred Books of the East Vol. XXIII pp. 6, 10, 17 etc.
8. A History of Sanskrit Literature by Mac Donell pp. 112, 113.

தேரர்க்கு' என்றும், 'அவர் மாயையின்றி அஸுரர் ஆயினர்' என்றும் பொருட்கொண்ட இருதொடர்களில்[1] அச்சொல் காணப்படுகின்றது. இரண்டாவது தொடரில் அவர் என்பது அக்கினி, ஸோமன், வருணன் இவரைக் குறிக்கின்றமையால், அச்சொற்குப் பலமுள்ளவன் என்றே அங்கு பொருளாகக் கொள்ளலாம் எனத் தோற்றுகின்றது. ஆகலின் ருக்வேதஸம்ஹிதை முழுமையிலும் அஸுர என்ற சொற்குப் பலமுள்ளவன், பலத்தையளிப்பவன், உயிருள்ளவன், உயிரையளிப்பவன் முதலிய பொருளில் ஒன்றைக் கொளல் தகும். அச்சொல் அக்கினி முதலிய தேவதைகட்கு அடைமொழியே எனக் கொளலுந் தகும். ஒருகாலத்து இந்திரன் முதலியோரைக்காட்டினும் விருத்திரர் பலமுள்ளவராயிருக்க, அஸுரர் என்ற சொல் விசேஷியமின்றிப் பரிகாசமாய்த் தேவர்களான விருத்திரர் முதலியோரைக் குறிக்க வழங்கப்பட, பின்னர் அச்சொல்லே விசேஷியச்சொல்லாய்த் தேவதைகளின் பகைவரைக் குறித்தலாயிற்று எனக் கூறல் தகும்.

அஸுர' என்ற சொல் எவ்வாறு விசேஷணமாக ருக்வேதம் முதலிய நூல்களில் வழங்கப்பட்டதோ அவ்வாறே பிரகாசிக்கின்ற என்ற பொருளில் தேவ: என்ற சொல்லும் விசேஷணமாக வழங்கப்பட்டது.[2] அது விருத்திரர் முதலியோர்க்கும் அக்கினி முதலியோர்க்கும் முன்னாய்ப் பொதுவாய் வழங்கப்பட, பின்னர் விசேஷியச்சொல்லாய்ப் பரிகாசத்துடன் தம் பகைவரைக் குறிக்க அக்கினி இந்திரன் முதலியோரால் வழங்கப்பட, அச்

1. शंसामि पित्रे असुराय (ऋ. वे. X 124, 3)
निर्माया उ त्ये असुरा अभूवन् (X 124, 5)
2. अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् (I 1, 1)
रुद्रं नमोभिर्देवमसुरं दुवस्य (V 42, 11)

சொல் அவர்களது பகைவரை ஸெண்ட்அவெஸ்தாவில் குறிக்கின்றது. ஆகலின் ஸம்ஸ்கிருதமொழியில் பலமுள்ளவன் போன்ற பொருளைக்கொண்ட அஸுரன் என்ற சொல் தேவர்கட்குப் பகைவனைக் குறிப்பதாகப் பிற்காலத்து எவ்வாறு ஆயிற்றோ, அவ்வாறே பிரகாசிக்கின்றவன் என்ற பொருளைக் கொண்ட தேவன் என்ற சொல் அக்கினி முதலியோரின் பகைவனைக் குறிப்பதாக ஸெண்ட்அவெஸ்தாவில் ஆயிற்று.[1]

தானு என்ற சொல் ருக்வேதத்திலும் ஸெண்ட்அவெஸ்தாவிலும் வழங்கப்பட்டுளது. ஸெண்ட்அவெஸ்தாவில் தானுக்கள் அஹுரமஸ்தாவை வழிபடுவோர்க்கு விரோதிகளாகக் கூறப்பட்டனர்.[2] ருக்வேதத்தில் தானு என்பது நபும்ஸகலிங்கத்திலும் புல்லிங்கத்திலும் வழங்கப்பட்டுளது. நபும்ஸகலிங்கமாயிருக்கும்போது[3] அதற்குப் பணம் என்றும் மழை என்றும் ஸாயணாசாரியர் பொருள் கூறினர். அதனை நோக்கின் அச்சொல் கொடைப்பொருளைக் கொண்ட தாதுவிலிருந்து[4]

1. One who hates the Daevas and obeys the laws of Ahura (Sacred Books of the East Vol. IV, pp. 249).

2. Grant us this, O good most beneficent Ardvi Sūra Anāhita, that we may overcome the assemblers of the Turanian Dānus (Sacred Books of the East Vol. XXIII, pp. 71).

   There you destroy the victorious strength of the Turanian Dānus (*ibid* pp. 189.)

3. सं या दानूनि येमथुः (ऋ. वे. VIII 25, 6)

   आदित्या दानुनस्पती (II 14, 6 & I 136, 3)

   पृथिर्दिव्येन दानुना (X 43, 7)

4. दा = கொடுத்தல்

வநதிருததல கூடும புலலிஙகததில ஒருமையில அசசொல விருததிரனுககு விசேஷணமாகவும, பனமையில விசேஷியமாய விருததிரன முதலிய எழுவரைக குறிததும வழஙகபபடடது[1] இதனை நோககின அசசொல வெடடுதல எனற பொருளைக கொணட தாதுவிலிருநது வநதிருததல கூடும[2] ஆனால ஓரிடதது[3] தானு எனற சொல விருததிரனின தாயைக குறபபதாக ஸாயணாசாரியா கொளகினறனா அதனை அவனின இயறபெயராகக கொளளாது அவடகு அடைமொழியாகக கொளளின பொருநதும அவவாறாயின தானு எனபதறகுத துனபுறுததுகினறவன எனபது பொருளாகும அசசொலலிலிருநதே ஸவாாததததிதபரததியததைக கூடடி தானவ[4] எனற சொலலை வருவிததல கூடும அசசொறகும

1 येन वृत्रमवाभिनद्दानुमौर्णवाभम् (ऋ वे II 11, 18)
यो अहिं जघान दानुम् (II 12, 11)
किमादुतासि वृत्रहन्मघवन्मन्युमत्तम ।
अत्राह दानुमातिर ॥ (IV 30, 7)
आर्दयते शवसा सप्त दानून् (X 120, 6)

2 दान् — வெட்டுதல

3 उच्चैरासूरधर पुत्र आसीद्दानु शये सहवत्सा न धेनु (I 32 9)

4 निमायिनो दानवस्य माया (II 11 10)
निर्गतिमिन्द्रो अपजर्गुराण प्रतिश्वसन्तमव दानव हन् (V 29, 4)
என்ற दानवम् என்பதற்கு दनो पुत्रम् என ஸாயணாசாரியர் கூறிய பொருள் பொருந்தவில்லை, அவரே விருத்திரனின் [illegible]

துன்புறுத்துகின்றவன் என்பதே பொருளாகும். மருத்துக்களை வருணிக்குமிடத்து வரும் ஸுதானவ:[1] என்பது சுபங்களிக்கத்து தானு என்ற சொல்லோடு வந்த அன்மொழித் தொகையாகும். துன்புறுத்துகின்றவன் என்ற பொருளில் வரும் தானு என்ற சொல்லும் ஜெண்ட்அவெஸ்தாவில் வழங்கப்பட்ட த்ராஹு என்ற சொல்லும் ஒன்றே என அறிதல் கூடும்.

அக்கினி[2] — பூலோகத்து தேவதைகளுள் அக்கினி பிரதானமானவர். அனேகமாய் ஒவ்வொரு மண்டலத்திலும் முதன் முதலில் அக்கினியே வருணிக்கப்படுவர். அவ்வக்கினி ஒவ்வொரு உலகத்திலும் ஒவ்வொரு உருவத்துடன் தோன்றுவர்:— தயு லோகத்தில் சூரியனாகவும், அந்தரிக்ஷலோகத்தில் மின்னலாகவும், புவியில் அக்கினியாகவும் இருப்பர்.[3] வேள்விகளிலும் காருஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்ற மூன்று உருவங் கொள்ளுவர். அவ்வக்கினி வேள்விகளில் அரணிக் கட்டையைக் கடைந்து எடுக்கப்படும்.[4] கைவல்லமையாலன்றி அரணியிலிருந்து அவர் எடுக்கப்படாமையால், அக்கினி-

1. धमन्तो वाणं मरुतः सुदानवो मदे सोमस्य रण्यानि चक्रिरे
(ऋ. वे. I 85, 10)

सुदानवः = शोभनानि दानूनि येषां ते

2. अग्निः என்ற சொல் தமிழ் மொழியில் அக்கி என வழங்கப்படும்.

3. अग्ने यत्ते दिवि वर्चः पृथिव्यां यदोषधीष्वप्स्वा यजत्र ।
येनान्तरिक्षमुर्वा ततन्थ त्वेषः स भानुरर्णवो नृचक्षाः ॥ (III 22, 2)

4. अरण्योर्निहितो जातवेदाः (III 29, 2)
उत स्म यं शिशुं यथा नवं जनिष्टारणी (V 9, 3)



Skt—7

தேவதைக்கு ஸஹஸஸ்புத்திரன்[1] என்ற பெயரும், முதன் முதலில் வருணிக்கப்பட்ட தேவதையாதலின் ஸநச்ருதன்[1] என்ற பெயரும், ஹோமம் செய்யும்போது புகை கிளம்புகின்றமையால் தூமகேது[2] (புகைக்கொடியோன்) என்ற பெயரும், செல்வத்திற்குக் காரணமாதலின் ரயீணாம்பதி[3] என்ற பெயரும், இல்லறத்தை நடத்துதற்குச் சிறந்த தலைவராதலின் க்ருஹபதி[4] என்ற பெயரும், ராக்ஷஸர்களை அழிக்கச் சிறந்த துணையாதலின் ரக்ஷோஹா[5] என்ற பெயரும் அடிக்கடி வழங்கும். ஸோமயாகத்தில் இந்திரனுடன் சேர்ந்து விளிக்கப் படுவதுமுண்டு. தேவதைகளுக்குக் கொடுக்கப்படும் ஹவிஸ் எல்லாம் அக்கினியிலே ஹோமம் செய்யப்படும். அக்கினியே அவற்றை அவ்வத்தேவதைக்குக் கொண்டுபோவர். ஆதலின் அவர் தேவதைகளின் தூதன்[6] எனக் கூறப்பட்டனர். வேள்விகளில் தேவதைகளை அவரே கூட்டி வருகின்றார்.[7] தேவர்கள்

1 अग्नि सूनु सनश्रुत सहस (ऋ वे III 11, 4)

2 धूमस्ते केतुरभवत् (V 11 3)

3 आ॰ अग्निर्भुवद्रयिपती रयीणाम् (I 60 4)

4 दमूना गृहपतिर्दमे (I 60, 4), दम என்ற சொல் பிற்காலத்தில் दम्पती என்ற தொகைச்சொல்லிலே வழங்கப்பட்டுள்ளது

5 पाहि नो अग्ने रक्षसः पाहि धूर्तेरराव्णः (I 36 15)

6. प्र त्वां दूतं वृणीमहे होतारं विश्ववेदसम् (I 36 3)

7 इन्द्रं नो अग्ने वसुभिः सजोषा रुद्रं रुद्रेभिरा वहा बृहन्तम् ।
आदित्येभिरदितिं विश्वजन्यां बृहस्पतिमृक्वभिर्विश्ववारम् ॥
(VII 10, 4

செய்த வேள்வியில் அவர் ஹோதா ஆக இருந்தனர். இறந்த ஜீவாகளை நல்லுலகிற்குக் கூட்டிச் செல்வர்.[1] சிவப்பு முதலிய வர்ணங்கொண்ட இருகுதிரைகள் அவரது ரதத்தை இழுக்கின்றன.[2] ஜவாலை அவர்க்கு மயிர்முடியாகக் கூறப்பட்டது. அக்னயீ என்பவள் அவருடைய மனைவி.[3] பகைவரை அழித்தறகும், உணவுப்பொருள்களை வளாத்தற்கும், நீண்ட ஆயுளை அளித்தற்கும் நல்ல புத்திரர்களைப் பெறுதறகும் அக்கினியின் அனுக்கிரகம் வேண்டும். ஒரே அககினி மூவுலகததில் மூன்று உருவத்துடனும, வேள்விச்சாலையில் மூன்று உருவததுடனும் இருத்தலை வருணிப்பதன் நோக்கம் கடவுளும் அவ்வாறே ஒருவரே என உணர்ததற்கு என்பர் சிலர். ஸெண்ட் அவெஸ்தாவிலும் அக்கினி தேவதையாக வருணிக்கப்பட்டுளது.

ஸவிதா — புவியில் உஷஸ் தோன்றியபின்னர் ஸவிதா பிரகாசிக்கின்றனர்.[4] அததேவதையின் கை, கண், நாக்கு, ரதம் முதலியன எல்லாம் தங்கமயமாய் இருக்கும். நல்ல பிரகாசத்துடன் வானததின் அடியிலிருந்து உச்சிக்கு வருதலும், உச்சியிலிருந்து கீழ் வருதலும் நன்கு வருணிக்கப்பட்டன. ஸவிதா வானததில் தோன்றுவதால் இருளைப் போக்குவா; நிசாசரரின் செயலை நீக்குவா; பாவஞ்செய்தற்கு இடனைக் குறைப்பர்; நோயை நீக்குவர்; மக்கள் முதலியோர்க்குப் பிராணனை அளிப்பர்; அவரவரது வேலையைச் செய்யத தூண்டுவர்; அவ்வாறு தூண்டுவதால் அவரவரை மகிழ்ச்சியடையச் செய்வர்; அரிவை வளர்த்து, பொருளை

1. ऋ. वे. X 16, 4
2. श्यावा रथं वहतो रोहिता वोतारुषा ह चक्रे विभृतः (II 10, 2)
3. ऋ. वे. V 46, 8
4. अनु प्रयाणमुषसो विराजति (V 81, 2)

மிருவித்து, மக்களைத் தாது, செ ட ளைப் ருசஜைப் போக்கி மக்கள் ஈன்னிலையில் இருக்குமாறு செய்வா[1] ஸவிதாவைப் போன்ற தேவதைகள் மித்ரன், ஸூர்யன், பூஷா ஆகும் ஸெண்ட அவெஸ்தாவில் மித்திரன் அஹுரமஸ்தாவிற்கு அடுத்த சிறந்த தேவதையாய்க் கூறப்பட்டனர், சிறந்த ஆயுதங்களோடு கூடியவராய் நிலங்கட்கு அதிதேவதையாயும், கூறப்பட்டனர்[2]

ஸோமன்[3] — ருக்வேதத்தின் பிரதானதேவதைகளுள் ஸோமனும் ஒருவர் ஒன்பதாம் மண்டலம் முழுவதுமுள்ள ருக்குகளுக்குத் தேவதை அவரே அவர் ஸோமயாகத்தில் ஹோமஞ் செய்யப்படும் ஸோமரஸத்திற்கு அபிமானி தேவதை மலையிலிருந்து ஸோமக்கொடி எவ்வாறு பருந்தால் கொண்டுவரப்பட்டது என்பதும், பத்து விரல்களால் எவ்வாறு

1 तत्सवितुर्वृणीमहे वयं देवस्य भोजनम् ।
श्रेष्ठं सर्वधातमं तुरं भगस्य धीमहि ॥ (ऋ वे V 82, 1)
स हि रत्नानि दाशुषे सुवाति (V 82, 3)
अद्या नो देव सवितः प्रजावत्सावीः सौभगम् ।
परा दुःष्वप्न्यं सुव (V 82, 4)

2 I invoke Mithra the lord of the rolling country side, a god armed with beautiful weapons (Sacred Books of the East Vol IV p 214) Mithra the lord of wide pastures (Sacred Books of the East Vol XXIII p 120)

3 ஸோம என்ற சொல் ஸெண்ட அவெஸ்தாவில் ஹோமா என வழங்கப்படுகின்றது

/

அக்கொடி பிழியப்பட்டது[1] என்பதும், அந்த ஸோம ரஸம் நீண்ட ஆயுளையும்[2] பிறவாமையையும்[3] தரும் என்பதும் ருக்வேதத்தில் வருணிக்கப்பட்டுள்ளன. அவ்வாறே ஜெண்ட் அவெஸ்தாவிலும் வருணிக்கப்பட்டுளது.[4] ஸோமயாகத்தில் ஹோமப் செய்யப்படும் பொருள்களுள் ஸோமமே சிறந்தது. விருத்திரனை அழிக்க இந்திரனுக்கு ஆற்றல் கொடுப்பது அதுவே. அக்காரணம் பற்றியே கௌணவிருத்தியால்[5] ஸோமனே விருத்திரஹந்தாவாகப் பலவிடங்களிலும் கூறப்படுவர்.[6] அவரின் சிறப்பு வெகுநாளாகக் கொண்டாடப்பட்டது.[7] ஸோமனைக் குறிக்க இந்து என்ற சொல் வழங்கப்பட்டமையாலும், அச்சொல்லுக்குச் சந்திரன் என்ற மற்றொரு பொருள் இருந்தமையாலும், காலக்கிரமத்தில் ஸோமன் என்ற

1. तमीमण्वीः समर्य आगृभ्णन्ति योषणो दश । स्वसारः पार्ये दिवि (ऋ. वे. IX 2, 7)
2. रयिं नश्चित्रमश्विनमिन्दो विश्वायुमाभर (IX 4, 10)
3. श्रियं वसाना अमृतत्वमायन् (IX. 94, 4)
4. We sacrifice unto the enlivening Haoma, who makes the world grow; we sacrifice unto Haoma who keeps death far away. (Sacred Books of the East Vol. XXIII p. 20.)
5. गौणी वृत्तिः
6. वृत्रहा देववीतमः (IX 25, 3 & IX 28, 3)
   स वृत्रहा वृषा सुतो वरिवोविददाभ्यः । सोमो वाजमिवासरत् (IX 37, 5)
7. तं गाथया पुराण्या पुनानमभ्यनूषत (IX 99, 4)

சொற்குச் சந்திரன் என்ற பொருளும் வந்தது.[1] அதர்வ வேதத்தில் சில இடங்களில் சந்திரனைக் குறிக்க ஸோம: என்ற சொல்லே வழங்கப்பட்டுளது.[2] கிருஷ்ணயஜுஸ்ஸில் சந்திரனின் கலைக்குறைவிற்குக் காரணம் தேவர்களும் பிதிரர்களும் ஸோமனின் அமிருதத்தைக் குடித்தலே எனப் பிராம்மணங்கள் கூறும். சந்திரனை ஸோமராஜன் என உபநிஷதங்கள் கூறும். பிற்காலத்தில் சந்திரனும் ஸோமனும் ஒருபொருட்கிளவி ஆகும்.

ருத்திரன் — ருத்திரன், ருத்திரர்கள் எனக் கூறப்படும் பெருந்தேவதைகளைக் காட்டினும், வேறுபட்டவர். ருத்திரர்களோடு ருத்திரன் வருக என விளிக்கப்படுகின்றனர்.[3] மூன்று ஸூக்தங்களும்[4] ஆங்காங்குள்ள சிற்சில ருக்குக்களும ருத்திரனைப்பற்றிக் கூறும். அவர் ஜடை, கூர்படை, வல்வில், விரைவிற்செல்லும் அம்பு, துன்பத்தைப் பொறுக்கும் உடல்வலி மனவலி இவற்றை உடையவர்.[5] அவர் வராஹர்[6] எனக

1. अथो नक्षत्राणामेषामुपस्थे सोम आहितः (ऋ. वे. X 85, 2)

   என்றவிடத்து नक्षत्र என்ற சொல் ग्रहचमसங்களைக் குறிக்குமாயினும், அவை நக்ஷத்திரங்களைக் குறிக்கின்றன என மயங்கி, सोम என்ற சொற்குச் சந்திரன் எனப் பொருள் கொண்டிருத்தல் கூடும்.
2. सोमो मा देवा मुञ्चतु यमाहुश्चन्द्रमा इति (अ. वे. XI 8, 7)
3. शं नो रुद्रो रुद्रेभिर्जलाषः .... शृणोतु (ऋ. वे. VII 35, 6)
4. I 114; II 33; VII 46.
5. इमा रुद्राय स्थिरधन्वने गिरः क्षिप्रेषवे देवाय स्वधाव्ने ।

   अषाळ्हाय सहमानाय वेधसे तिग्मायुधाय भरता शृणोतु नः ॥

   (VII 46, 1)
6. வராஹர் என்ற சொற்குச் சிறந்த உருவு கொண்டவர் அல்லது பன்றிபோன்ற உடல்வலியுடையார் என்பது பொருளென்பர் ஸாயணாசாரியர்.

கூறப்படுகின்றனர். பிரம்மத்வேஷியான சருவைக் கொல்ல அவர்க்கு வில்லை அம்பிருணமஹர்ஷியின் புதல்வி நாணேற்றியதாகக் கூறப்பட்டாள்.[1] மருத்துக்கள் அவரது புதல்வர்.[2] அவர் சிறந்த வைத்தியர்.[3] அவர் தம் குளிர்ந்த கையால் தொட்டாலே நோயெல்லாம் தீரும்.[4] ஆகலின் அவர்க்கு ஜலாஷபேஷஜன் எனப் பெயர் உண்டு.[5] மக்கள் விலங்கு எல்லோரின் பிணியையும் தீர்ப்பர்.[6] அவர் கொடுக்கும் இனிய மருந்தால் நூறாண்டு ஜீவிக்கலாம், நன்மக்களையும் பெறலாம். ஜ்வரத்தையும் கிருமிகளால் உண்டாகும் வியாதிகளையும், பாபங்களையும், சத்ருக்களையும் போக்க அவர்க்கு ஆற்றலுண்டு.[7] அவ்வாறே ஒருவர்க்கு வியாதி வாராமல் தடுப்பதற்கும், ஒருவர் பாபம் செய்யாதிருக்குமாறு செய்வதற்கும் அவர்க்கு ஆற்றல் உண்டு.[8] அவர் கோபித்து பெற்றோரையும் மக்களையும் கொல்லா

1. अहं रुद्राय धनुरा तनोमि ब्रह्मद्विषे शरवे हन्तवा उ (ऋ. वे. X 125, 6)
2. आ ते पितर्मरुतां सुम्नमेतु (II 33, 1)
3. भिषक्तमं त्वा भिषजां शृणोमि (II 33, 4)
4. क्व स्य ते रुद्र मृळयाकुर्हस्तो यो अस्ति भेषजो जलाषः (II 33, 7)
5. शुचिरुग्रो जलाषभेषजः (VIII 29, 5)
6. यथा शमसद् द्विपदे चतुष्पदे विश्वं पुष्टं ग्रामे अस्मिन्ननातुरम् । (I 141, 1)
7. त्वादत्तेभी रुद्र शंतमेभिः शतं हिमा अशीय भेषजेभिः ।
व्यस्मद् द्वेषो वितरं व्यंहो व्यमीवाश्चातयस्वा विषूचीः ॥ (II 33, 2)
8. पर्षिणः पारमंहसः स्वस्ति विश्वा अभीती रपसो युयोधि (II 33, 3)

நீக்கும்படி வேண்டப்படுகின்றனர்[1] பரந்த இவ்வுலகத்தை அவர் ஆள்கின்றனர் எனக் கூறப்படும்[2] மனிதர்க்கு இருக்க இடத்தையும் தேவதைகட்கு சாம்ராஜ்யத்தையும் அளிக்கின்றனர் பொன்போல் விளங்குகின்றனர் தேவர்களுக்குச் சிறந்த இருப்பிடம் அளிக்கின்றனர்[4] ஸோமதேவதையோடு சேர்த்து விளிக்கப்படுகின்றனர் ஆங்கு வழிபடுவோரை வருணபாசத்திலிருந்து விடுவிக்குமாறு வேண்டப்படுகின்றனர்.[5] சிவ என்ற சொல் ருத்திரனுக்கும்,[6] இந்திரனுக்கும்,[7] அக்னிக்கும்[8] விசேஷணமாக வழங்கப்பட்டது காலக்கிரமத்தில்

1 मा नो महान्तमुत मा नो अर्भकं मा न उक्षन्तमुत मा न उक्षितम् ।
मा नो वधी पितरं मोत मातरं मा न प्रियास्तन्वो रुद्र रीरिष ॥
(ऋ. वे. I 114, 7)
एवा बभ्रो वृषभ चेकितान यथा देव न हृणीषे न हंसि ।
हवनश्रुन्नो रुद्रेह बोधि बृहद्वदेम विदथे सुवीरा ॥ (II 33, 15)

2 तिग्ममेको बिभर्ति हस्त आयुध .... (VII 29, 5)

3 स हि क्षयेण क्षम्यस्य जन्मन साम्राज्येन दिव्यस्य चेतति । (VII 46, 2)

4 य शुक्र इव सूर्यो हिरण्यमिव रोचते । श्रेष्ठो देवाना वसु (I 43, 5)

5. प्र नो मुञ्चत वरुणस्य पाशात् .. (VI 74, 4)

6 स्तोमं वो अद्य रुद्राय शिक्वसे क्षयद्वीराय नमसा दिदिष्टन ।
येभि शिव .... (X 92, 9)

7 स न इन्द्र शिव सखा ... (VIII 82, 3)

8 ओं .. शिवो दूतो विवस्वत (VIII 30, 3)

அவ்விசேஷணச்சொல்லே ருத்திரனைக் குறிக்க விசேஷியச் சொல்லாய் மாறிற்று. அவ்வாறே ஈசாந: என்ற சொல் வாயுவிற்கும்[1] விசேஷணமாய் வழங்கப்படினும், பிற் காலத்தில் ருத்திரனைக் குறிக்கும் விசேஷ்யச்சொல் ஆயிற்று. பிற்காலத்தில் ருத்திரனுக்கு ஸம்ஹாரத்தொழில் மாத்திரம் உண்டு எனக் கருதுகின்றனர். த்ரியம்பகர் என்பது ருத்திரனைக் குறித்தல் கூடும். அவ்வாறாயின் அவர் புஷ்டியைக் கொடுத்த லோடு மோக்ஷத்தையும் கொடுக்கின்றனர்.[2]

**மருத்துக்கள்** — மருத்துக்கள் கணதேவதைகள் ஆவர். அவர் இருபத்தொருவர் என்றும், நூற்றெண்பதின்மர் என்றுங் கூறப்படுவர். அவர்களின் தகப்பன் ருத்திரர்;[3] தாய் ப்ருச்னி;[4] இந்திரன் விருத்திரர்களைக் கொல்லச் செல்லும்போதெல்லாம் மருத்துக்கள் உடன் செல்வர். ஆகலின் ஸோமயாகத்தில் இந்திரனோடு அவர்க்கும் ஹவிஸ் கொடுப்பது உண்டு.[5] சில வேளை அக்கினியுடனும் அவர்கள் வருவது உண்டு.[6] அவர்கள்

1. त्वष्टुर्जामातरं वयमीशानं राय ईमहे ।
सुतावन्तो वायुं द्युम्ना जनासः ॥ (ऋ. वे. VIII 26, 22)
2. त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् ।
उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय मामृतात् ॥ (VII 59, 12)
3. रुद्रस्य सूनवः सुदंससः (I 85, 1)
4. दधिरे पृश्निमातरः (I 85, 2)
5. वृष्णे मरुत्वते तुभ्यं राता हवींषि (III 35, 7)
6. मरुद्भिरग्न आ गहि (I, 19)

தங்களுடைய பேராற்றலால் ஸ்வர்க்கத்தில் இடப் பெற்றனர்.[1] மேகங்களை உடைக்குந் தன்மையும், அவற்றிலிருந்து நீரை வெளிப்படுத்துந் தன்மையும், அதனால் உலகிற்கு நன்மையுண்டாக்குந் தன்மையும் இந்திரனிடம் போன்று இவர்களிடமுங் கூறப்பட்டன.[2] உலகமெல்லாம் அவரிடமிருந்து பயப்படும்.[3] கோதமரின் தாகத்தைத் தணிக்க நீரூற்றினை ஓரிடமிருந்து வேற்றிடத்திற்கு மாற்றினர்.[4] விருத்திரர்களைக் கொல்ல இந்திரன் செல்லுகையில் அவர் அணிகளைப் பூண்டு,[5] படைகளை யேந்தி,[6] ஸோமத்தைப் பருகி, வாத்தியத்தை அடித்துக்கொண்டு ஒப்பற்ற செயல்களைச் செய்வர்.[7]

1. तेऽवर्धन्त स्वतवसो महित्वना नाकं तस्थुरुरु चक्रिरे सदः
(ऋ. वे. I 85, 7)

2. बाधन्ते विश्वमभिमातिनमप वर्त्मान्येषामनु रीयते घृतम् (I 85, 3)
वि ये भ्राजन्ते सुमखास ऋष्टिभिः, प्रच्यावयन्तो अच्युता चिदोजसा (I 85, 4)

3. भयन्ते विश्वा भुवना मरुद्भ्यः (I 85, 8)

4. जिह्मं नुनुद्रेऽवतं तया दिशासिञ्चन्नुत्सं गोतमाय तृष्णजे
(I 85, 11)

5. प्र ये शुम्भन्ते जनयो न सप्तयो यामन्रुद्रस्य सूनवः सुदंससः
(I 85, 1)

6. वि ये भ्राजन्ते सुमखास ऋष्टिभिः (I 85, 4)

7. धमन्तो वाणं मरुतः सुदानवो मदे सोमस्य रण्यानि चक्रिरे
(I 85, 10)

விஷ்ணு — விஷ்ணு மூன்று அடிகளால் பூலோகம் அந்தரிக்ஷலோகம் ஸுவர்லோகம் மூன்றையும் அளந்து,[1] மூன்று உலகங்களின் எல்லையைத் தெளிவாக வகுத்து, மூன்று உலகிலுள்ளோரையுந் தாங்கி நிற்பர்.[2] இந்திரன் விருத்திரனைக் கொல்ல ஆற்றல் உண்டாம்படித் தன் பலத்தில் ஒரு அம்சத்தைக் கொடுத்தனர்.[3] தேவத்தன்மையடைய விரும்பும் மக்கள் அவர் இருக்குமிடத்துச் சென்று சுகமாக வாழ்வர்.[4] விஷ்ணு இந்திரனுடன் சேர்ந்து விளிக்கப்பட்டு ஸோமத்தைப் பருகவும் ஸ்தோத்திரங்களைக் கேட்கவும் யாகஞ்செய்வோர்க்குப் பணத்தைக் கொடுக்கவும் வேண்டப்படுகின்றார்.[5] அவரது இருஅடிகளை மாத்திரம் பொதுமக்கள் அறிவர். மூன்றும் அடி

1. य इदं दीर्घं प्रयतं सधस्थमेको विममे त्रिभिरित्पदेभिः
(ऋ. वे. I 154, 3)

2. य उ त्रिधातु पृथिवीमुत द्यामेको दाधार भुवनानि विश्वा
(I 154, 4)

3. तमस्य विष्णुर्महिमानमोजसांशुं दधन्वान्मधुनो विरप्शते ।
देवेभिरिन्द्रो मघवा सयावभिर्वृत्रं जघन्वाँ अभवद्वरेण्यः ॥ (X 113, 2)
सखे विष्णो .... हनाव वृत्रम् (VIII 89, 12)

4. तदस्य प्रियमभि पाथो अश्यां नरो यत्र देवयवो मदन्ति ।
उरुक्रमस्य स हि बन्धुरित्था विष्णोः पदे परमे मध्व उत्सः ॥
(I 154, 5)

5. इन्द्राविष्णू हविषा वावृधानाग्राद्वाना नमसा रातहव्या ।
घृतासुती द्रविणं धत्तमस्मे .... (VI 69, 6)

அவரது கண்ணிற்குப் புலப்படாது.[1] அத்திருவடியை ஸூரிகள் மாத்திரம் ஞானக்கண்ணுற்று பார்க்கின்றனர்.[2] அவர் முற்காலத்தவர் என்றும், புதிதுபுதிதாகத் தோன்றுகின்றவர் என்றும் ஸுமஞ்ஜானி என்றும்,[3] யுவா என்றும், குமாரர் என்றும், சக்கிரத்தைப்போல் ஸம்வத்ஸரத்தை 360 நாட்களாகச் சுழற்றுகின்றவர் என்றும்[4] கூறப்படுகிறார். அவர் பருத்தவர் என்றும் பேருடலன் என்றும் கூறப்படுதலால் மஹாவிஷ்ணு என்ற பெயர் அக்காலத்தொட்டே வழங்கப்பட்டிருத்தல் கூடும்.[5] விஷ்ணு என்ற சொல் அக்கினிக்கு விசேஷணமாகப் பலவிடத்தில் வழங்கப்பட்டது.[6] அஃதே அக்காலத்தே விசேஷியமாய் வழங்கப்பட்டு மஹாவிஷ்ணுவைக் குறித்தது என்னலாம்.

1 द्वे इदस्य क्रमणे स्वर्दृशोभिख्याय मर्त्यो भुरण्यति ।
तृतीयमस्य नकिरा दधर्षति वयश्च न पतयन्तः पतत्रिणः ॥
(ऋ. वे. I 155, 5)

2. तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः ।
दिवीव चक्षुराततम् ॥ (I 22, 20)

3. यः पूर्व्याय वेधसे नवीयसे सुमज्जानये विष्णवे ददाशति
(I 156, 2)

4. चतुर्भिः साकं नवतिं च नामभिश्चक्रं न वृत्तं व्यतीँरवीविपत् ।
बृहच्छरीरो विमिमान ऋक्वभिर्युवाकुमारः प्रत्येत्याहवम् ॥
(I 155, 6)

5. बृहच्छरीरः (I 155, 6); महस्ते विष्णो (I 156, 3)

6. विष्णुर्गोपाः .... ।
अग्निष्टा विश्वा भुवनानि वेद (III 55, 29)

கூடும். இவர்களுக்குத் தாய் ஸிந்து[1] என்றுங் கூறப்பட்டுளது. தம்மை வழிபட்ட விச்வகனின் இறந்த மகனைப் பிழைப்பித்தனர். நோயால் பீடிக்கப்பட்டுத் தகப்பனது வீட்டில் கிழத்தனத்தை அடைந்த கோஷைக்கு நோயைப் போக்கி, யௌவனத்தை ஆக்கி, அவள் மணஞ்செய்து கொள்ளுமாறு செய்தனர்.[2] வயது முதிர்ந்த சயவனரைக் குமாரர் ஆக்கினர்.[3] குருடரான கண்வர்க்கும், செவிடரான நார்ஷதர்க்கும் கண்ணையுங் காதையும் அளித்தனர்.[4] புஜ்யு கடலில் மூழ்காது படிக் காத்தனர்.[5] கால் ஒடிந்த விச்பலைக்கு இரும்புக்கால் செய்வித்தனர்.[6] இது போன்ற பல செயல்களை அவ்விரு

1 या दस्रा सिन्धुमातरा (ऋ. वे. I 46, 2)

2. युवं नरा स्तुवते कृष्णियाय विष्णाप्वं ददथुर्विश्वकाय ।
घोषायै चित्पितृषदे दुरोणे पतिं जूर्यन्त्या अश्विनावदत्तम् ॥
(I 117, 7)

3. युवं च्यवानं जरसोऽमुमुक्तम् (VII 71, 5)
युवं च्यवानं सनयं यथा रथं पुनर्युवानं चरथाय तक्षथुः
(X 39, 4)
युवं च्यवानमश्विना जरन्तं पुनर्युवानं चक्रथुः शचीभिः
(I 117, 13)

4 युवं श्यावाय रुशतीमदत्तं महः क्षोणस्याश्विना कण्वाय ।
प्रवाच्यं तद्वृषणाकृतं वां यन्नार्षदाय श्रवो अध्यधत्तम् (I 117, 8)

5. युवं भुज्युमर्णसो निः समुद्राद्विभिरूहथुर्ऋज्रेभिरश्वैः (I 117, 14)

6. सद्यो जङ्घामायसीं विश्पलायै धने हिते सर्तवे प्रत्यधत्तम्
(I 116, 15)

வருஞ் செய்தனர். அவற்றை ரிக்வேத முதல் மண்டலம் 112, 116, 119 ஸூக்தங்களில் காணலாம். தீங்கு வாராமல் இருப்பதற்கும், வந்த தீங்கு நீங்குவதற்கும், மக்கட்கு நன்மை பயப்பதற்கும் அவ்விருவரையும் வேண்டுவது வழக்கம்.[1] அக்கினி தோன்றுவதற்கு அரணிகளைக் கடையும்போதும் அவர் விளிக்கப்படுகின்றனர்.[2] அக்கினி இந்திரன் முதலிய தேவர் களுடன் ஸோமம் பருகுதற்கும் இவ்விருவரும் வேண்டப் படுகின்றனர்.[3] பல்லிடங்களிலும் ஸோமத்தைப் பருக விளிக்கப்படுகின்றனர்.[4] ஆயினும் இவ்விருவர்க்கும் ஸோம யாகத்தில் பாகம் இல்லாமல் இருக்க, ச்யவனரை அவா இளைஞர் ஆக்கியபின்னர் அவருடைய தபோபலத்தால் அவ்விருவர்க்கும் ஸோமத்தில் பாகம் கிடைக்குமாறு அவர் இந்திரனை வற்புறுத்தியதாக மஹாபாரதம் அநுசாஸனபர்வம் அச்வமேதபர்வம் இவ்விரண்டிலும் கூறப்பட்டுளது.[5]

இக்காலத்தில் அச்விநௌ, நாஸத்யௌ, தஸ்ரௌ என்ற சொற்கள் பரியாயபதங்களாகக் கருதப்படுகின்றன. ஆனால் அச்வின்தேவர் இருவருள் ஒருவர்க்கு நாஸத்யன் எனப் பெயர் என்றும் மற்றொருவர்க்கு தஸ்ரன் எனப் பெயர் என்றும்

1. पातमस्मानरिष्टेभिरश्विना सौभगेभिः (ऋ. वे. I 112, 25)
2. विमदेन यदीळिता नासत्या निरमन्थम (X 24, 4)
3. अग्निनेन्द्रेण वरुणेन विष्णुनादित्यै रुद्रैर्वसुभिः सचा भुवा ।
   सजोषसा उषसा सूर्येण च सोमं पिबतमश्विना ॥ (VIII 35, 1)
4. अयं वां मधुमत्तमः सुतः सोम ऋतावृधा ।
   तमश्विना पिबतं तिरो अह्न्यं धत्तं रत्नानि दाशुषे ॥ (I 47, 1)
5. म. भा. अनु. 261 अश्व. पर्वणि. 9.

பிருகத்தேவதாநுக்ரமணியாசிரியர் கூறினர் என ஸாயணாசாரியர் கூறுகின்றனர். வேதங்களில் இரண்டு தேவதைகளை ஒருங்கு விளிக்கும்போது ஒவ்வொரு தேவதையைக் குறிக்குஞ் சொல்லையும் இருமைவிகுதியோடு வழங்குதலும், வேறு சொற்களை இடையிட்டு வழங்குதலும், ஒன்றையே இரண்டையுங் குறிக்க வழங்குதலுங் காணலாம். இம்முறை பற்றாது மயங்கி அச்சொற்களெல்லாம் பரியாயச் சொற்களாகப் பின்னர் வழங்கியிருத்தல் கூடும்.[2] இவ்வாறிருக்க, ஸாயணாசாரியரே பலவிடங்களில் தஸ்ரௌ, நாஸத்யௌ என இச்சொற்களை விசேடணச்சொற்களாகக் கொண்டு, அழகுவாய்ந்தவர், உண்மையின்மையற்றவர் எனக் கூறுதல் வியப்பிற்கு இடந்தருகின்றது.

பிருகஸ்பதி — பிருகஸ்பதி இந்திரனுடனும், தனிமையாகவும் விளிக்கப்படுகின்றனர்.[3] இந்திரனின் செயல்க

1 नासत्यौ चैव दस्रौ यौ तु तावश्विनाविति

[ऋ वे 541, 03, भाष्यम्]

2 दस्रा युवाकवः सुता नासत्या वृक्तबर्हिषः (ऋ वे I 3 3)

युवां गोतमः पुरुमीळ्हो अत्रिर्दस्रा हवतेऽवसे हविष्मान् ।

दिशं न दिष्टामृजूयेव यन्ता मे हवं नासत्योप यातम् ॥ (I 183 5)

दस्रा हि विश्वमानुषङ्मक्षूभिः परिदीयथः (VIII 26, 6)

नासत्या कुह चित्सन्तौ (I 184 1)

3 बृहस्पत इन्द्र वर्धतं नः (IV 50 11)

னெல்லாம் அவரிடம் ஏற்றிக் கூறப்படுகின்றன.[1] பிரம்மணஸ்பதியும் பிருகஸ்பதியும் ஒருவரே என்பர். அவர் ஆங்கிரஸ: எனவுங் கூறப்படுவர். ராக்ஷஸர்களையும் அவர்களது சேனைகளையும் போரில் கொன்று தம்மைக் காக்க அவர் வேண்டப்படுகின்றனர்.[2]

அபாம்நபாத் — அந்தரிக்ஷதேவர்களுள் அபாம்நபாத் ஒருவர். அவர் கோட்டைக்குள் யுவாவாயப பெண்டிராலும் ஜலத்தாலும் சூழப்பட்டு வசிக்கின்றனர்.[3] அவர்க்கு மூன்று பெண்டிர் உணவு அளிக்கின்றனர்.[4] அவர் அவ்வாறே ஸெண்ட்அவெஸ்தாவிலும் வருணிக்கப்படுகின்றனர்.[5] மேகத்

1. यो अद्रिभिद्प्रथमजा ऋतावा बृहस्पतिराङ्गिरसो हविष्मान्
(ऋ. वे. VI 73, 1)

मन्वृत्राणिविपुरो दर्दरीति (VI 73, 2)

बृहस्पतिः समजयद्वसूनि महो व्रजान्गोमतो देव एषः (VI 73, 3)

2. बृहस्पते परिदीया रथेन रक्षोहामित्राँ अपबाधमानः ।
प्रभञ्जन्त्सेनाः प्रमृणो युधाजयन्नस्माकमेध्यविता रथानाम् ॥
(X 103, 4)

3. आमासु पूर्षु परो अप्रमृष्यं नारातयो विनशन्नानृतानि (II 35, 6)
तमस्मेरा युवतयो युवानं मर्मृज्यमानाः परि यन्त्यापः (II 35, 4)

4. अस्मै तिस्रो अव्यथ्याय नारीर्देवाय देवीर्दिधिषन्त्यन्नम् (II 35, 5)

5. Apām Napāt, the tall lord, the lord of the females, the bright and swift-horsed. (Sacred Books of the East Vol. XXIII p. 71); to Apām Napat, the tall lord and to the water made by Mazda (*ibid* p. 6)

தன் இருக்கும் பின்னர் அபாம்நபாத்தாகக் கூறியிருக்கலாம் என்பர்.[1] ஆகலின் அவர் இந்தோ இரானியன்தேவதை ஆவர்.

தரிதன் — இவர் அபாம்நபாத்தைப்போன்று இந்தோ இரானியன்தேவதைகளுள் ஒருவர். நோய் முதலியவற்றை முதன்முதலில் போக்கியவர் இவர் என ஸெண்ட் அவெஸ்தாவில் கூறப்பட்டுளது.[2] ருக்வேதத்தில் சிற்சில ருக்குக்களில் இவர் ஆப்த்யா எனக் கூறப்பட்டுளது.[3]

உஷஸ் — உஷஸ் என்பவர் பெண்தேவதை. சூரியோதயத்திற்கு முன்னருள்ள நிலை; உஷஸ்ஸைப்பற்றிக் கூறும் ஸூக்தங்களில் நன்கு வர்ணிக்கப்படுகின்றது. அத்தேவதை பறவைகளையும் நாற்காற்பிராணிகளையும் எழுப்பும்.[4] ஸோமயாகத்தில்

1. A History of Sanskrit Literature by Mac Donell p 92, Sacred Books of the East Vol. XXIII p 6, foot-note 1.

2. Thrita it was who first of the healers, of the wise, the happy, the wealthy, the glorious, the strong, the Paradhātas drove back sickness to sickness, drove back death to death, and first turned away the point of the sword and the fire of fever from the bodies of mortals. (Sacred Books of the East Vol. IV p. 227.)

3. त्रिताय तद्विभावर्याप्त्याय परावहानेहसः. (ऋ. वे. VIII 47, 14)

4. यच्च गोषु दुष्वप्न्यं यच्चास्मे दुहितर्दिवः ।

त्रिताय तद्विभावर्याप्त्याय परावहानेहसः ॥ (VIII 47, 14)

அகதேவரைககு இடன இல்லை. கீய சொப்பனததால் உண்டாா துயரைப போகக அததேவதை வேண்டப் படுகின்றது [1]

ரிபுககள — ரிபுக்கள் எனபவா வாஜன, விப்வா, ரிபு' என்ற மூவா ஆவா [2] அவா ஸுதனவாவின புததிரா, ப்ல முளளவா.[3] வியககததசச பல செயல்களைச செயது இநதிரனை மகிழ்விதது தேவததனமையை அடைநது [4] ஸோமததைப பருகத தகுதி அடைநதனா [5] அசசெயலகளாவன — வயது முதிரநத தாய தநதையரை இளைஞா ஆககினா.[6] தவஷடா, சமஸததை நானகாகச செய எனக கூற, அவவாறே செய தனா.[7] இறநத தேனுவை உயிரபபிததனா.[8] பனனிரணடு

1 प्रबोधयन्तीरुषस: ससन्तं द्विपाच्चतुष्पाच्चरथाय जीवम्
(ऋ. वे. IV 51, 5)

2. ते वाजो विभ्वाँ ऋभु (IV 33, 3)
ऋभुर्विभ्वा वाज इन्द्रो नो अच्छेमं यज्ञं रत्नधेयोप यात (IV 34, 1)

3 इहोप यात शवसो नपात सौधन्वना ऋभवो माप भूत (IV 35, 1)
ऋभवो रयिं न स्ववस स्वपस सुहस्ता (IV 33, 8)

4 ताभि: शमीभिरमृतत्वमाशु (IV 33, 4)

5. ते वाजो विभ्वाँ ऋभुरिन्द्रवन्तो मधुप्सरसो नोऽवन्तु यज्ञम्
(IV 33, 3)

6. पुनर्ये चक्रु पितरा युवाना (IV 33, 3)

7. विभ्राजमानाँश्चमसाँ अहेवावेनत्त्वष्टा चतुरो ददृश्वान् (IV 33, 6)

8. यत्संवत्समृभवो गामरक्षन् (IV 33, 4)

நாள் அகோஹ்யருக்கு அதிதியாக இருந்தனர்[1] அசுவினி தேவதைகட்குத் தேரைச் செய்தனர்[2] இந்திரனுக்கு இரண்டு குதிரைகளை மேதையாற் படைத்தனர்[3] தேவர்க்குக் கவசத்தைச் செய்தனர்[4] த்யாவாபிருதிவியை நன்கு பிரித்தனர்.[5]

அதிதி — அதிதி என்பவள் ஒரு பெண் தேவதை அவட்கு மித்திரன், வருணன் முதலிய எட்டு பிள்ளைகள் உளர்[6] அவள் உலகத்திற்கெல்லாம் நன்மை அளிக்கின்றாள் என்ற காரணத்தால் விசுவஜந்யா எனக் கூறப்படுகிறாள்[7] சுகத்தை அளிக்கவும்

1 द्वादश द्यून्यदगोह्यस्यातिथ्ये रणन्नृभवः ससन्तः (ऋ वे IV 33 7)

2 रथं ये चक्रुः सुवृतम् (IV 33 8)

3 ये हरी मेधयोक्था मदन्त इन्द्राय चक्रुः (IV 33 10)

4 ये अश्विना (IV, 34, 9)

5 य ऋधग्रोदसी, (IV 34 9)

6 अष्टौ पुत्रासो अदितेर्ये जातास्तन्वस्परि ।
देवाँ उप प्रैत्सप्तभिः परा मार्ताण्डमास्यत् ॥ (X 72, 8)
इमे चेतारो अनृतस्य भूरेर्मित्रो अर्यमा वरुणो हि सन्ति ।
इम ऋतस्य वावृधुर्दुरोणे शग्मासः पुत्रा अदितेरदब्धाः ॥
(VII 60 5)

7. अदितिं विश्वजन्याम् (VII 10, 4)
विश्वमान्नो अदितिः पात्वंहसः (X 36, 3)

பாபத்தைப் போக்கவும் வேண்டப்படுகின்றாள்.[1] ஆதித்திய ராய்க் கூறப்பட்ட வருணன் முதலியோர் இண்டோ யூரோ பியன் தேவதைகளாய் இருந்ததலாலும், அதிதிக்கு ஒத்த தேவதை வேறு நாட்டில் இல்லாமையாலும், ஆதித்யர் என்ற சொல் அதிதி என்ற சொல்லினின்று வந்ததாக நினைக்கப்பட ஆதித்தியர் அதிதியின் பிள்ளைகள் எனக் கூறப்பட்டிருத்தல் கூடும் என மாக்டானல் கூறுகின்றனர்.[2] அவ்வாறு கூறுதற்குத் தக்க பிரமாணம் அவர் கூறவில்லை. ருக்வேதத்தில் ஆதித்தியர்கள் என்ற சொல் பிறதேவதைகளைக் குறிப்பதாகத் தோன்றுகின்றது. ஆகவின்றே வருணன் ஆதித்தியர்களுடன் வருக என விளிக்கப்படுகின்றான்.[3]

திதி — திதி என்பவளும் ஒரு பெண்தேவதை. ஓரிடத்து அதிதி, வருணன், மித்திரன் முதலியோருடனும், மற்றோரிடத்து ஸவிதா, பகன் முதலியோருடனும் விளிக்கப்படுகின்றாள்.[4]

உஷஸ், அதிதி, திதி, இவரைப்போன்ற பல பெண் தேவதைகள் விளிக்கப்படுகின்றனர். அவருள் சிறந்தவர் தயௌ:, ப்ருதிவீ, ராத்ரி, இளா, ஸரஸ்வதீ, பாரதீ முதலியோர். தயௌ:, ப்ருதிவீ என்ற இருவரும் ஒருங்கே

1. शं नो अदितिर्भवतु (VII 35, 9)
2. A History of Sanskrit Literature by A. A. Mac Donell pp. 102, 103.
3. आदित्येभिर्वरुणः (VII 35, 6)
4. आरोहथो वरुण मित्र गर्तमतश्चक्षाथे अदितिं दितिं च (V 62, 8)
त्वमग्ने वीरवद्यशो देवश्च सविता भगः ।
दितिश्च दाति वार्यम् ॥

விளிக்கப்படுகின்றனர்¹ அவ்வாறே இளா, ஸரஸ்வதி, பாரதி என்ற மூவரும்² இம்மூவரும் ஸோமயாகத்தில் விளிக்கப் படுகின்றனர்³ அம்மூவரையும் கூர்ந்து நோக்கின், இளா பூலோகதேவதையாகவும், ஸரஸ்வதி அந்தரிக்ஷலோக தேவதையாகவும், பாரதி ஸ்வர்லோகதேவதையாகவும் தோன்றுகின்றது அவ்வாறாயின் இந்த ஸரஸ்வதியும் வேதத்தில்⁴ கூறப்படும் ஸரஸ்வதி நதியும் வேறாதல் வேண்டும்

சிலவிடத்து தேவதைகள் இரட்டையாக விளிக்கப் படுகின்றனர் அவர் மித்ராவருணௌ, இந்திராக்னீ, இந்திரா-வருணௌ, ஸோமாருத்ரௌ, த்யாவாப்ருதிவீ முதலானோர் ஈண்டு இருவர்க்கும் ஒத்த சிறப்பே உளது சிலவிடத்து சில

1 ते हि द्यावापृथिवी विश्वशंभुवा . (ऋ. वे I 160 1)

2 इळा सरस्वती मही तिस्रो देवीर्मयोभुवः ।
बर्हिः सीदन्त्वस्रिधः ॥ (I 13, 9)
आ भारती भारतीभिः सजोषा इळा देवैर्मनुष्येभिरग्निः ।
सरस्वती सारस्वतेभिरर्वाक् तिस्रो देवीर्बर्हिरेदं सदन्तु ॥
(VII 2, 8)
सरस्वती साधयन्ती धियं (II 3, 8)

3 भारती पवमानस्य सरस्वतीळा मही ।
इमं नो यज्ञमा गमन्तिस्रो देवीः सुपेशसः ॥ (IX 5, 9)

4 पावका नः सरस्वती वाजेभिर्वाजिनीवती (I 3 10)

தேவதைகட்கு அதிக சிறப்பும் அவருடன் வரும் தேவதைகட்குக் குறைந்த சிறப்பும் உளது; அப்போது அவ்விருவரையும் தவந்தவமாகத்தானோ, உம்மைப்பொருள்கொண்ட விபாததோடு சேர்க்கப்பட்ட, தனிச்சொற்களாலோ குறிக்காது, சிறப்பில் தேவதைகளை மூன்றும் வேற்றுமையால்[1] விளித்தல் வழக்கம். சிலர் கணமாகவே விளிக்கப்படுகின்றனர். அவர் மருத்துக்கள், ருபுக்கள், விச்வேதேவர்கள், வஸுக்கள், ருத்திரர்கள் ஆதித்தியர்கள் முதலியோர் ஆவர்.

பத்தாவது மண்டலத்தில் ப்ரஜாபதி ஒரு தனிதேவதை ஆகக் கூறப்பட்டனர். முன்னருள்ள மண்டலங்களில் ஸவிதா, ளோபன் முதலிய தேவதைகட்கு அச்சொல் விசேஷணமாக வழங்கப்பட்டுளது. அன்றியும் சிரத்தை, குரோதம் முதலியனவும் தேவதைகளாக வழங்கப்பட்டன.

யமன் விவஸ்வானின் மகன் என்பதும், பிதருக்கள் இருக்கும் உலகத்திற்கு அரசன் என்பதும், அவர் வீட்டை இரண்டு நாய்கள் காக்கின்றன என்பதும், அவரும் யமியும் இரட்டையாகப் பிறந்தனர் என்பதும், யமி அவரை மணக்க விரும்ப, அது தகாது என்று அவர் மறுத்தனர் என்பதும் பத்தாம் மண்டலம் 10, 14 ஸூக்தங்களிற் கூறப்பட்டன. ஸெண்ட் அவெஸ்தாவிலும்[2] உலகதர்மத்தைக் காக்கும்படி அஹுரமஸ்தாவினால் முதன்முதலில் ஏவப்பட்டவர் யிம என்றும், அவர் விவங்கத என்பவரின் மகன் என்றும் உளது. ஆகலின் யமன் இண்டோஇரானியன்தேவதை ஆகும்.

1. मरुद्भिरग्न आ गहि (ऋ. वे. I 19, 1)

शं नो रुद्रो रुद्रेभिः .... (VII 35 6)

2. Sacred Books of the East Vol. pp. 11-21.

அக்கினி, இந்திரன், ஸவிதா முதலிய தேவதைகளின் வர்ணனையை நன்கு நோக்கின், மக்கட்கு வேண்டிய பொருள்கள் அவர்களுடைய உதவியாலே கிடைக்கவேண்டியிருந்ததலின், எவ்வெப்போது எவ்வாறு அவர்களது உதவியை வேண்டினரோ, அவ்வாறே அவர் அவரை வருணித்தனர் என்பது அறியப்படும். அவ்வாறு வருணித்தவர் இல்லறத்தாரே என்பதும், அவர் முதலில் செல்வம், உடல்நலனை, மக்கட்பேறு இவற்றை வேண்டினர் என்பதும், பின்னர் பகைவரால் தமக்குக் கேடு நிகழாதவாறு காப்பாற்றவேண்டுமென வேண்டினர் என்பதும், நோயால் வருந்தியபோது நோயை நீக்கவேண்டுமென வேண்டினர் என்பதும் நன்கு புலப்படும். அப்போது அவரை மக்கள் போன்று உடலுடையார் என்றும், ரதத்தில் வருகின்றார் என்றும், ஸ்தோத்திரத்தால் மகிழ்ச்சி அடைகின்றார் என்றும் வருணித்தல் பொருத்தமே ஆகும்.

## அத்தியாயம் 6

### ருக்வேதியின் மதக்கொள்கைகள்

*பிராணிகள், உடல் ஜீவன்[1] இரண்டையும் உடையவர். உடல் அழியும். ஜீவனுக்கு அழிவு இல்லை. மக்களின் உடல் அழிந்தபின்னர் ஜீவனை அக்கினியும் யமனும் வேற்றுலகிற்குக் கூட்டிச் செல்வர்.[2] அவர் மக்கள் அளிக்கும் உணவால் அங்கு இருப்பர்.[3] அவர் பித்ருயாணம்[4] தேவயானம் என்ற இரண்டு வழியால் நல்லுலகிற்குச் செல்வர். பித்ருயாணத்தின் எல்லை பித்ருலோகம். அங்கு அரசன் யமன்.[5] தேவலோகத்தின் எல்லை ஸ்வர்லோகம். அங்கு ஸூரிகள் விஷ்ணு*

1. जीवाज्योतिरशीमहि (ऋ. वे. VII 32, 26)
   इमे जीवाविमृतैराववृत्रन्नभूत् (X 18, 3)
2. जातवेदस्ताभिर्वहेनं सुकृतामु लोकम् (X 16, 4)
   परेयिवांसं .... वैवस्वतम् .... (X 14, 1)
3. जीवो मृतस्य चरति स्वधाभिः (I 164, 30)
4. पन्थामनु प्रविद्वान्पितृयाणं द्युमदग्ने मामधा नो विभाहि (X 2, 7)
   परं मृत्यो अनु परेहि पन्थां यस्ते स्व इतरो देवयानात् (X 18, 1)
5. उभा राजाना स्वधया मदन्ता यमं पश्यामि वरुणं च देवम् (X 14, 7)

வின பரமபதததையே நோககியிருபபா[1] பாபிகள அவவிரு வழியிலுஞ செலலார[2] இதனல அவா நரகததிறகுச செலவா எனக குறககபபடடிருததல கூடும

ஜீவாதமா கரமபலனை அனுபவிககும, பரமாதமா அதனைப பாாததுககொணடிருககும[3] உலகமெலலாம தானே எனற அறவு ஒருவா பெருதவரையில ஸமஸாரபநததில இருநது விடுதலை அடையாா அதைப பெறறவுடன கடவுளின திருவடியை அடைவா[4] அவவாறு மோகூம அடைய விருமபியவா அககாலததே உளா[5] கடவுள ஒருவரே அவரை இநதிரன எனறும, ருததிரன எனறும பலவகையாக பககள கூறுவா[6] இவறறை நோககின அததுவைதமககொளகை அககாலததே கொளளபபடடது எனபது விளஙகும

1 तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः (ऋ वे I 22, 20)

2 ऋतस्य पन्था न तरन्ति दुष्कृतः (IX 73 6)

3 द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।
तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति ॥
(I 164, 20)

4 न वि जानामि यदिवेदमस्मि निण्यः संनद्धो मनसा चरामि ।
यदा मागन्प्रथमजा ऋतस्यादिद्वाचो अश्नुवे भागमस्याः ॥
(I 164 37)

5 मुमुक्ष्व (I 140 4)

6 इन्द्रं मित्रं वरुणमग्निमाहुरथो दिव्यः स सुपर्णो गरुत्मान्
एकं सद्विप्रा बहुधा वदन्ति (I 164 46)
अहमिन्द्रो वरुणस्ते (IV 42 3)
सुपर्णं विप्राः कवयो वचोभिरेकं सन्तं बहुधा कल्पयन्ति
(X 114 5)

கடவுள் ஆதியற்றவர்.[1] முதன்முதல் அவ்யாகிருதத்தினின்று ஜகத்து உண்டாயிற்று.[2] வியாகிருதாவஸ்தையில் பரம்பொருள் ஹிரண்யகர்ப்பராய் உலகிற்கு அரசராய் இருந்தவர்.[3]

இந்திரன் தன் தாய்தகப்பனரைக் கொட்டித்தான் என்றும்,[4] தக்ஷன் அதிதியையும் அதிதிதேவர்களையும் படைத்தார் என்றும், தக்ஷன் அதிதியினிடம் உண்டானான் என்றும்[5] கூறப்பட்டுள்ளது. ஒவ்வொருவரும் தாமே மகனாகப் பிறக்கின்றனர் என்ற கொள்கையைக் கொள்ளின் தக்ஷன் அதிதியைப் படைத்தான் என்பதும், அதிதி தக்ஷனைப் படைத்தாள் என்பதும் ஒன்றுக்கொன்று முரண் ஆகா.

---

1. को ददर्श प्रथमं जायमानम् .... (ऋ. वे. I 164, 4)
2. देवानां पूर्व्ये युगे सतः सदजायत (X 72, 1)
3. हिरण्यगर्भः समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् (X 121, 1)
   यः प्राणतो निमिषतो महित्वैक इद्राजा जगतो बभूव (X 121, 3)
4. यन्मातरं च पितरं च साकमजनयथ .... (X 54, 3)
5. अदितिर्ह्यजनिष्ट दक्ष या दुहिता तव ।
   तां देवा अन्वजायन्त भद्रा अमृतबन्धवः ॥ (X 72, 5)
   अदितेर्दक्षो अजायत दक्षाद्वदितिः परि (X 72, 4)

## அத்தியாயம் 7

## ருக்வேதகாலம்

ருக்வேதஸம்ஹிதையின் காலத்தைப்பற்றி மோக்ஷமூலர்,[1] லோகமான்யதிலகர், யாகோபி,[2] விண்டர்நிட்ஸ்,[3] ஸி. வி. வைத்யர் முதலியோர் தத்தம் கொள்கையைக் கூறியுள்ளார்.

மோக்ஷமூலர்கொள்கை —

பௌத்தமதம் கௌதமபுத்தரால் நிறுவப்பட்டது. அம்மத நூல்களை நோக்கின் அவர்காலத்திற்கு முன்னரே ருக்வேதத்தின் மந்திரபாகம், பிராமணபாகம், உபநிஷத்பாகம் இவை இருந்திருத்தல் வேண்டும். வேதாங்கங்களின் காலமும் கௌதமபுத்தரின் காலமும் ஒன்றே. ஆகலின் ஸூத்திரகாலம் 600 கி.மு.-200 கி.மு., பிராமணகாலம் 800 கி.மு. 600 கி.மு., ஸம்ஹிதாகாலம் 1000 கி.மு.-800 கி.மு., மந்திரகாலம் 1200 கி.மு.-1000 கி.மு. ஒவ்வொன்றுக்கும் இடையீடுள்ள காலம் 200 ஆண்டுகள். அவ்வாறு அவர் கொள்ளுதற்குக் காரணம் யாதென அறியக்கூடவில்லை.

விண்டர்நிட்ஸ்கொள்கை —

அக்காலத்தை 500 ஆண்டுகளாக்கி, மந்திரகாலம் 2500 கி.மு.-2000 கி.மு., ஸம்ஹிதாகாலம் 2000 கி.மு.-1500 கி.மு., பிராமணகாலம் 1500 கி.மு. 1000 கி.மு., ஸூத்திரகாலம் 750 கி.மு.-500 கி.மு. என விண்டர்நிட்ஸ் [illegible] அவர்.

1 Max muller
2 Jacobi
3 Winternitz
4 C V Vaidya

அவ்வாறே பிராம்மணகாலத்திற்குப் பின்னரே ஸூத்ர காலம் என்பதும் ஆராய்தற்கு உரியது. ஸ்ரௌதஸூத்ரங்கள் பிராம்மணகாலத்தை ஒட்டியே இருப்பினும் இருக்கலாம்.

**லோகமான்யதிலகர், யாகோபி இவ்விருவரின் கோள்கை :—**

ருக்வேதத்திற் கூறப்பட்ட கிருத்திகை நட்சத்திரத்தின் நிலையிலிருந்து மந்திரகாலம் 6000 கி.மு. எனக் கூறுகின்றனர் லோகமான்யதிலகர். அக்காரணத்தை ஒத்துக்கொண்டு வேறொரு காரணமுங் கூறி மந்திரகாலம் 4500 கி.மு.–3000 கி.மு., ஸம்ஹிதாகாலம் 3500 கி.மு.–2500 கி.மு. எனக் கூறினர் யாகோபி. மற்றொரு காரணம் ஆவது :—கலியாணகாலத்தில் வதூவரர்களால் செய்யப்படும் அருந்ததிதர்சனம் ருக்வேத ஸம்ஹிதையில் கூறப்படாமையான், அருந்ததி துருவநட்சத்திரத்தின் அருகில் காணப்பட்டிருத்தல் வேண்டும். அக்காலம் 2500 கி.மு. ஆகும். ஸூத்திரத்தில் அது கூறப்பட்டமையான் அக்காலத்தில் அருந்ததி கண்ணிற்குப் புலப்படாதிருத்தல் வேண்டும். திலகரும் யாகோபியும் இப்பொருளைச் சொல்லும் வாக்கியத்திற்கே ஏனையோர் வேறுபொருள் கூறுவர். எப்பொருள் சிறந்தது என அறிய தக்க சான்று காணப்படினே, நாம் திண்ணமாய் ஒருபொருளை கொள்ளல் தகும்.

ஆசியாமைனர்தேசத்தில் 1400 கி. மு.-இல் நிகழ்ந்த போரின்பின்னர்ச் செய்யப்பட்ட மன்சமாதானப்பத்திரத்தில் மித்திரன், வருணன், இந்திரன், நாஸத்யர் இவர்தம் பெயர் காணப்படுகின்றமையான், இதற்கு முன்னர் வைதிகர் ஆங்குச் சென்றிருத்தல் வேண்டும். ருக்வேதமந்திரங்கள் ஸம்ஹிதையாகச் சேர்க்கப்படுதற்கு முன்னரே பல்வகைப் பட்ட ஸாமங்கள் இருந்தன என்பதும், பல்வகை யாகங்கள் செய்யப்பட்டன என்பதும் வெளிப்படை.

ஆரியப் பாரதநாட்டில் தென்புறத்தில் வைதிகமார்க்கம் கி.மு. 300க்கு முன் நிலைத்திருக்கவேண்டும் என்பது சாஸனங்க

# அத்தியாயம் 7

ளாலும், தமிழிலக்கியவிலக்கண நூல்களாலும்,[1] சூத்திரகாரர்களான போதாயனர் ஆபஸ்தம்பர் முதலியோர் தென்னாட்டினர் என்ற கொள்கையாலும் அறியப்படும்

---

1 எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே (தொல் எழுத் 102)

மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் (தொல் பொருள் 89)

அந்தி யந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் (புறநா 2)

தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும் (புறநா 9)

நற்பனுவல் நால்வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட, வியன்களம் பலகொல் (புறநா 15)

## அத்தியாயம் 8

### ருக்வேதியரான ஆரியரின் இருப்பிடம்

ருக்வேதத்திற் கூறப்பட்ட ஆரியரின் இருப்பிடத்தை இரண்டு ஏதுக்களால் அனுமானிக்கலாம் — ஆங்கு வருணிக்கப் பட்ட நாட்டு நிலை ஒன்று, பொருள்கள் மற்றொன்று.

ஓரிடத்து 21 நதிகளும்,[1] ஓரிடத்து ஸரஸ்வதி, ஸரயு, ஸிந்து இம்மூன்றும்,[2] ஓரிடத்து கங்கை, யமுனை, ஸரஸ்வதி, சுதுத்ரி, பருஷ்ணி, அஸிக்னி, மருத்விருதா,[3] விதஸ்தா, ஆர்ஜிகீயா, ஸோமா என்ற பத்தும்,[4] ஓரிடத்து ஸிந்து, கோமதி இரண்டும்,[5] கூறப்பட்டன. பருஷ்ணிக்கரையில் அச்வமேதம் நடந்ததாகக் கூறப்பட்டது.[6] த்ருஷத்வதி, ஸ்ரஸ்வதி, ஆபயா இந்நதிக்

1. त्रिः सप्त सस्रा नद्यो महीरपः .... (ऋ. वे. X 64, 8)
2. सरस्वतीसरयुः सिन्धुः .... (X 64, 9)
3. மருத்விதா என்பதும் விபாசா என்பதும் ஒரே நதியாக இருத்தல் வேண்டும் என்பர் ஸி. வி. வைத்யா. (History of Sanskrit Literature by C. V. Vaidya Vol. I, p 90)
4. इमं मे गङ्गे यमुने सरस्वति शुतुद्रिस्तोमं सचता परुष्ण्या ।
   असिक्न्या मरुद्वृधे वितस्तयार्जीकीये शृणुह्या सुषोमया ॥
   (X 75, 5)
5. त्वं सिन्धो कुभया गोमतीम् (X 75, 6)
6. सत्यमित्त्वा महेनदि परुष्ण्यव देदिशम् ।
   नेमापो अश्वदातरः शविष्ठादस्तिमर्त्यः ॥ (VIII 64, 15)

கரைகளில் அக்கினி பிரகாசிக்கும்படி வேண்டப்படுகின்றது.[1] ஸப்தஸிந்துக்கரையில் ஆரியர்க்கு நன்மை உண்டாக்க இந்திரன் வேண்டப்படுகின்றான்.[2] ஸெண்ட்அவெஸ்தாவில் அஹுரமஸ்தாவினால் இயற்றப்பட்ட பதினாறு சிறந்த தேவதைகளுள் ஹப்தஹிந்தவ என்பது ஒன்றாகக் கூறப்பட்டுளது.[3] இவற்றை நோக்கின் ஸெண்ட்அவெஸ்தாவினைச் சிறந்த நூலாகக் கொண்டவரும் ருக்வேதத்தைச் சிறந்த நூலாகக் கொண்டவரும் ஒருகாலத்தில் ஸிந்துநதிப்பிரதேசத்தில் இருந்து முன்னோர் மேற்கிலும் பின்னோர் தென்கிழக்கிலும் சென்றனர் என்னலாம்.

ஹிமயமலையின் சிகரங்களுள் மூஜாவானே வர்ணிக்கப்படுதலாலும், விந்தியமலை வருணிக்கப்படாமையாலும், மரங்களுள் அச்வத்தம் வருணிக்கப்படுகிறதேயன்றி வடம் வருணிக்கப்படாமையாலும், விலங்குகளுள் சிங்கம், விருகம், அச்வம், பசு இவை வருணிக்கப்பட்டனவேயன்றி, புலி வருணிக்கப்படாமையாலும், தானியங்களுள் யவையும், பறவைகளுள் ஹம்ஸமும் கூறப்பட்டமையாலும், உலோகங்களில் தங்கம், அயஸ் இரண்டுமே கூறப்பட்டமையாலும், மிகுதியாக வருணிக்கப்பட்ட ஸோமம் இமயமலையிலே காணப்படுகின்றமையாலும், ருக்வேதத்தியரான ஆரியர் ஸிந்துநதிப் பிரதேசத்திலிருந்து கங்கை யமுனை சேர்கின்ற இடம்வரை வசித்தனர் எனக் கொள்ளுதல் தவறாகாது.

---

1. दृषद्वत्या मानुष आपयाया सरस्वत्या रेवदग्ने दिदीहि (ऋ. वे. III 23, 4)
2. योवार्यांत्सप्तसिन्धुषु (VIII 24, 27)
3. Sacred Book of the East Vol. IV, p. 9.

## அத்தியாயம் 9

### அதர்வவேதஸம்ஹிதையின் பெயர்கள்

அதர்வவேதம் என்ற பெயர் பின்னர் வந்ததாகும். அதற்கு முதன்முதலில் வழங்கப்பட்ட பெயர் அதர்வாங்கிரஸ் என்பது அஃது அதர்வவேதத்துள்ள ஒரு மந்திரத்தாலும்[1] ஆசுவலாயனகிருஹ்யஸூத்திரத்தாலும்[2] அறியப்படும். அதர்வா என் ஒரு ரிஷி புஷ்கரத்தில் அக்கினிமதனம் செய்தார் என்பதும்,[3] அதர்வாக்கள் இந்திரனுக்கு ஸோமத்தைத் தயாரித்தனர் என்பதும்[4] ருக்வேதத்தில் கூறப்பட்டுள்ளன. இருளில் விழித்து கடவுளை நினைத்து மோக்ஷத்தை அடைய விரும்புபவனை ஆதர்வன் எனக் கூறு என ஜெண்ட்அவெஸ்தாவில் கூறப்பட்டுள்ளது[5] அங்கிரஸ் என்பவர் அக்கினிக்குப் பிரீதிபாத்திரம் எனவும்,[6] இந்திரனே ஆங்கிரஸர்களைக் காப்பாற்று[7] எனவும்

1 यस्मादृचो अपातक्षन्यजुर्यस्मादपाकषन् ।
सामानि यस्य लोमान्यथर्वाङ्गिरसो मुखं स्कम्भं तं ब्रूहि कतमः स्विदेव सः ॥ (अ वे X 7, 20)

2 ऋचो यजूंषि सामानि अथर्वाङ्गिरसो ब्राह्मणानि कल्पान् गाथानाराशंसीरितिहासपुराणानि (III 2, 6)

3 त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत (ऋ. वे VI 16, 13)

4 अभितो मधुना पयोऽथर्वाणो अशिश्रयुः (ibid XI 11, 2)

5 Cf Sacred Books of the East Vol IV, Vendidad XVIII 6.

6 प्रियमेधवदत्रिवज्जातवेदो विरूपवत् ।
अङ्गिरस्वन्महिव्रत प्रस्कण्वस्य श्रुधी हवम् ॥ (ibid I 45, 3)

7 आङ्गिरसान् ब्रह्मणा विप्र जिन्व (ibid VI 36, 5)

ருக்வேதம் கூறும். அதர்வா, ஆதர்வணர், அங்கிரஸ், ஆங்கிரஸர் இவர்களை ருஷியாகக் கொண்ட மந்திரங்கள் ருக்வேதத்திலும் அதர்வவேதத்திலும் காணப்படுகின்றமையால், ஆதர்வணர் ஆங்கிரஸர் இவர்களாற் காணப்பட்ட மந்திரக்கூட்டத்திற்கு அதர்வாங்கிரஸ: என்ற பெயர் வழங்கியது என்னலாம்.[1] வழங்குவோனுக்கு நன்மை பயக்கும் மந்திரத்திற்கு அதர்வன் எனப் பெயர் என்றும் எதிரியோர்க்குத் தீமை பயக்கும் மந்திரத்திற்கு அங்கிரஸ் எனப் பெயர் என்றும் ப்ளூம்பீல்ட் என்ற பேராசிரியர் கூறுவர்.[2]

ஆதர்வணவேதம் என மற்றொரு பெயர் உண்டு என்பது சாந்தோக்யஉபநிஷத்தினின்றும்[3] ஆபஸ்தம்பதர்மஸூத்திரத்தினின்றும்[4] மஹாபாஷ்யத்தினின்றும்[5] அறியப்படும். ப்ருகுவிஸ்தா: ப்ருக்வங்கிரஸ: என்ற பெயர்களும் உண்டு என்பது கேனோபநிஷத்தினின்றும் ருக்வேதஸம்ஹிதை அதர்வவேதஸம்ஹிதை இவற்றினின்றும்[6] அறியப்படும்.

1. ऋ. वे. X 120, 1-9; X 173, 1-5
   अ. वे. VI 87, 1-5; V 2, 1-9
2. A History of Sanskrit Literature by A. A. Mac Donell p. 189.
3. ऋग्वेदं भगवोऽध्येमि यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थम् (7, 1)
4. आर्थवणस्य वेदस्य (II 11, 12)
5. नवधा आथर्वणः (म. भा. I 1, 1)
6. अङ्गिरसो नः पितरो नवग्वा अथर्वाणो भृगवः सोम्यासः
   (ऋ. वे X 14, 6; अ. वे. XVIII 1, 58)

முண்டகோபநிஷத், மஹாபாரதம், கௌடல்யரின் அர்த்த சாஸ்திரம் முதலியவற்றில் அதர்வவேதம் என்ற பெயர் வழங்கும்.

பிரம்மவேதம் என்ற பெயர் கோபதப்ராஹ்மணத்திலும், அதர்வவேதத்திய கிருஹ்யஸூத்ரத்திலும் காணப்படும்.



1 ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्ववेदः (मुण्डक I 1 5)
ऋग्वेदं सामवेदश्च यजुर्वेदश्च पाण्डव ।
अथर्ववेदश्च तथा सर्वशास्त्राणि चैव ह ॥ (म भार सभा 11 32)
अथर्ववेदेतिहासवेदौ च (कौ अर्थ 1 3)

## அத்தியாயம் 10

### அதர்வவேதஸம்ஹிதையிற் கூறப்பட்ட செய்திகள்

வெகுகாலமாக யாகங்களில் வழங்கப்படும் அக்கினியை அரணிகடைந்து எடுத்தனர் என்பதும், உபநயனம் விவாகம் முதலியவற்றில் வழங்கும் அக்கினியை அவ்வாறு எடுக்கவில்லை என்பதும் அறியப்படும். ருக்வேதத்தில் கூறப்பட்ட மந்திரங்களிலிருந்து இருகன்தனே யாகங்கள் செய்ய உரிமைப்பட்டவன் என்பதும், அவன் விவாகம் செய்துகொள்வதற்கு வேதாத்தியயனம் செய்திருக்கவேண்டும் என்பதும், வேதாத்தியயனம் செய்வித்தற்கு முன்னர் உபநயனம் செய்வித்திருக்க வேண்டும் என்பதும் அறியப்படும். யாகங்களில் வழங்கும் அக்கினிக்குச் சிரௌதாக்கினி எனவும், விவாகம் முதலியவற்றில் வழங்கும் அக்கினிக்குக் கிருஹ்யாக்கினி எனவும் பெயரெனத் தோன்றுகின்றது. சிரௌதாக்கினியில் யாகங்கள் செய்யப்படும்போது வழங்கவேண்டிய ருக், யஜுஸ், ஸாம இவைகளெல்லாம் ருக் வேதத்திலும், யஜுர்வேதத்திலும், ஸாமவேதத்திலும் கூறப்பட்டன. கிருஹ்யாக்கினியில் உபநயனம் முதலியன செய்யப்படும்போது வழங்கப்படவேண்டிய ஹோமமந்திரங்கள், உபஸ்தானமந்திரங்கள், ஜபமந்திரங்கள் முதலியன அதர்வ வேதத்தள் கூறப்பட்டன.

ஒருவனுக்கு மக்கள் பிறதற்கு முன்னர் அவன் உடலின் வலிமையுடனும், நீண்ட ஆயுளுடனும், தக்க ஐச்வரியத்துடனும், ரோகமின்றியும் இருத்தல் வேண்டும். அன்றியும் ஒருவர் நன்னிலையில் இருப்பதைப் பிறர் பொறுது அவர்க்கு வேண்டிய நிமையை விளைவிப்பது மக்களாயிருப்பவர்க்கு இயற்கை. ஆகலின் பிறர் தமக்குச் செய்யுந் தீமையைத் தடுக்கவேண்டிய உபாயங்களை அறிந்து அவற்றைச் செய்யவேண்டும். மனக் கவலையின்றிச் சுகமாக இருக்க நாட்டில் அமைதி வேண்டும்.

நாட்டைப் பகைஞர் அழிக்காமல் இருக்க அரசன் முயல வேண்டும் அரசனுக்குத் தக்க உதவியை மக்கள் புரிய வேண்டும் நாட்டின் அமைதியும் மக்களின் தேகவலிமையும் மாத்திரம் ஒரு குடும்பத்திற்குப் போதா குடும்பத்தில் கணவனும் மனைவியும் மனமொத்திருக்கவேண்டும் இருவரும் மனமொத்திருப்பின், அவ்விருவர்க்கும் பிறக்கும் மக்கள் மேன்மையுற்ற தன்மையோடு இருப்பர் அம்மக்கட்கு ஜாதகர்மம், உபநயநம் முதலியன செய்யவேண்டும், பிறகு அம்மக்கட்கு விவாகம் நிகழ, பின்னர் தாய்தந்தையர் இறந்தால் நிகழலாம் அவர் பிரேதமாய் இருக்கும்போது செய்ய வேண்டிய சடங்குகளை மகன் செய்து அவர் பிதிர்லோகஞ் செல்லுமாறு செய்யவேண்டும் பின்னர் அவர்க்குச் சிராத்தம் செய்யவேண்டும் சிலர் இவ்வுலகத்திலேயே மோட்சத்தை அடைதல் கூடும் அவர்க்கு ஜீவன்முக்தர் என்பு பெயர் அவர் பித்தர்போல் திரிவர் அவர் செல்லும் இடமெல்லாம் செழிக்கும்

உடல்வலிமை, நீண்ட ஆயுள், ஐசுவரியம் இவற்றைப் பற்றிச் சுமார் 55 ஸூக்தங்களும்,[1] ரோகங்களைப்பற்றியும்

1 इन्द्रो युनक्तु बहुधा वीर्याण्यस्मिन् यज्ञे सुयुज स्वाहा

(अ वे V 26, 11)

नर्ये प्रणानभि समीमीते दीर्घायुत्वाय शतशारदाय

(ऋ वे V 28, 11)

बृहस्पते सवितर्वर्धयैन ज्योतयैन महते सौभगाय (VII 17 1)

भद्रादधि श्रेय प्रेहि बृहस्पतिं पुर एता ते अस्तु (VII 9, 1)

प्र चेष्यग्ने प्र च वर्धयेममुच्चै तिष्ठ महते सौभगाय (II 6, 2)

அவற்றைப் போக்கக்கூடிய மந்திரம், ஔஷதி, மணி இம் மூன்றையும் பற்றிய 60 சூக்தங்களும்[1] உள்ளன. மனிதரிடையில் இருக்கும் ஒருவன் இறந்ததாகப் பிறர் சடங்கு செய்வது உண்டு, அதற்கு அபிசாரம் என்ப பெயர்[2] அபிசாரச்சடங்கால

1 सप्त च या सप्ततिश्च सयन्ति ग्रैव्या अभि ।
इतस्ता सर्वा नश्यन्तु वाका अपचितामिव ॥ (अ वे VI 25, 2)
(ग्रैव्या = गण्डमाला )
अश्वत्थो देवसदनस्तृतीयस्यामितो दिवि ।
तत्रामृतस्य चक्षण देवा कुष्ठमवन्वत ॥ (VI 95 1)
दर्भवृक्ष मुञ्चेम रक्षसो ग्राह्या अधि येनं जग्राह पर्वसु ।
अथो एन वनस्पते जीवाना लोकमुन्नय ॥ (II 9, 1)
रोहण्यसि रोहण्यस्थ्नश्छिन्नस्य रोहणी ।
रोहयेदमरुन्धति ॥ (IV 12 1)
मज्जा मज्ज्ञा सधीयता चर्मणा चर्म रोहतु ।
असृक् ते अस्थि रोहतु मास मासेन रोहतु ॥ (IV 12, 4)

2 अभिचारा मारणार्थ शत्रुभि क्रियमाणानि कर्माणि ,
अभिचारकर्मभिरुत्पादिता पिशाच्य कृत्या
(अ वे XIX 9 9 भाष्यम्)
मरण व्यसन चैव बन्धन च विशेषत ।
प्रणिपातोन्मत्तता वा दैवोपहतिरेव च ।
पुत्रादिधननाशश्च गृहे दोषान् बहूनपि ॥
एतानि सर्वाणि कानिचिद्वा तेषा मध्ये यथा शत्रोर्भवन्ति तथोद्देशेन
यद् अभिचारकर्म ... (अ वे XVI, 2 भाष्यम्)

எழுப்பப்பட்ட பிசாசத்திற்கு க்ருத்யா எனப் பெயர். இவற்றைப்பற்றியும், இவற்றால் உண்டாம் தீமையைப் போக்கும் விதத்தைப்பற்றியும் 30 ஸூக்தம் கூறும்.[1] சுமார் 730 ஸூக்தம் கொண்ட அதர்வஸம்ஹிதையில் சுமார் முப்பது ஸூக்தமே அபிசாரத்தைப்பற்றிக் கூறினும், அவ்வேதம் அபிசாரத்தைப் பற்றியது எனப் பாரதவர்ஷத்தில் தென்னாட்டார் கருதியது வியக்கத்தக்கது. அதற்குக் காரணம் அவ்வேதம் படித்தவர் தென்னாட்டிற்கு வாராமையே ஆகலாம். நாட்டின் மக்கள் ஒருமனத்தராய் இருக்கவேண்டும் எனச் சில ஸூக்தங்கள் கூறும்.[2] பகைவரின் ஸேனையை அழிக்கவேண்டும் என்றும்,[3]

1. इदमिन्द्र शृणुहि सोमप यत् त्वा हृदा शोचता जोहवीमि ।
वृश्चामि तं कुलिशेनेव वृक्षं यो अस्माकं मन इदं हिनस्ति ॥
(अ. वे. II 12, 3)
दूष्या दूषिरसि हेत्या हेतिरसि मेन्या मेनिरसि ।
आप्नुहि श्रेयांसमति समं क्राम ॥ (II 11, 1)

2. सं वो मनांसि सं व्रता समाकूतीर्नमामसि ।
अमी ये विव्रता स्थन तान् वः सं नमयामसि ॥ (VI 94, 1)
अहं गृभ्णामि मनसा मनांसि मम चित्तमनु चित्तेभिरेत ।
मम वशेषु हृदयानि वः कृणोमि मम यातमनुवर्त्मान एत ॥
(VI 94, 2)

3. अमी ये युधमायन्ति केतून् कृत्वानीकशः ।
इन्द्रस्तान् पर्यहार्दाम्ना तानग्ने सं द्या त्वम् ॥ (VI 104, 3)
इन्द्रो मन्थतु मन्थिता शक्रः शूरः पुरंदरः ।
यथा हनाम सेना अमित्राणां सहस्रशः ॥ (VIII 8, 1)

பகைவரின் அம்புகள் தம்மிடத்தில் விழாது காத்தல் வேண்டும் என்றும்,[1] பகைவர் பயங்கிப் படைகளை வழங்க ஆற்றலற்றவர்களாய் இருக்கவேண்டும் என்றும்[2] சில சூக்தங்கள் கூறும். வெற்றி யடைந்த அரசன் தன் நாட்டை அடையும்போது செய்யவேண்டிய சடங்கைச் சில கூறும்[3]. ஆக அரசனைப் பற்றிய சூக்தங்கள் சுமார் 55 ஆகும்.

நாட்டுமக்கள் சுகமாய் வாழத் தானியங்கள் மிகுதியாய் உண்டாதற்கும்,[4] நாட்டில் சுகம் பெரும்பான்மையும் பசு, விருஷபம் இவற்றால் உண்டாகலின் அவற்றின் பெருமையைக்

1 मा नो विदन् विव्याधिनो मो अभिव्याधिनो विदन् ।
आराच्छरव्या अस्मद्विषूचीरिन्द्र पातय ॥ (I 19, 1)

2 अग्निर्नः शत्रून् प्रत्येतु विद्वान् प्रतिदहन्नभिशस्तिमरातिम् ।
स सेनां मोहयतु परेषां निर्हस्तांश्च कृणवज्जातवेदाः ॥ (III 1, 1)
इन्द्र चित्तानि मोहयन्नर्वाङाकूत्या चर । (III 2, 3)

3 आ त्वा गन् राष्ट्रं सह वर्चसोदिहि प्राङ् विशां पतिरेकराट्
त्वं वि राज (III 4 1)

4 वेदाहं पयस्वन्तं चकार धान्यं बहु ।
सम्भृत्वा नाम यो देवस्तं वयं हवामहे यो यो अयज्वनो गृहे ॥
(III 24, 2)
उदुत्सं शतधारं सहस्रधारमक्षितम् ।
एवास्माकेदं धान्यं सहस्रधारमक्षितम् ॥ (III 24 4)

கூறுதற்கும்,[1] வியாபாரம் செழித்தற்கும்,[2] தேவதைகளை வேண்டும் ஸூக்தங்கள் உள. குடும்பத்தில் எல்லோரும் மனமொத்திருத்தலையும்[3] கணவனும் மனைவியும் மனமொத்திருத்தலையும்[4] கணவன் மனைவியிடம் வெறுப்புற்றிருக்க அவனது எண்ணத்தை மாற்றி அவன் அவளிடம் அன்புற்றிருக்கச்செய்தலையும், மனைவி கணவனிடம் வெறுப்புற்றிருக்க

1 अनड्वान् दाधार पृथिवीमुत द्यामनड्वान् दाधारोर्वं१ न्तरिक्षम्

(IV 11, 1)

यूय गावो मेदयथा कृश चिदश्रीर चित् कृणुथा सुप्रतीकम् ।
भद्र गृहं कृणुथ भद्रवाचो बृहद् वो वय उच्यते सभासु ॥

(IV 22, 6)

2. ये पन्थानो बहवो देवयाना अन्तरा द्यावापृथिवी सञ्चरन्ति ।
ते मा जुषन्ता पयसा घृतेन यथा क्रीत्वा धनमाहराणि ॥

(III 15, 2)

3 सहृदय सामनस्यमविद्वेष कृणोमि व ।
अन्यो अन्यमभि हर्यत वत्स जातमिवाघ्न्या ॥ (III 30, 1)
अनुव्रत पितु पुत्रो मात्रा भवतु संमना ।
जाया पत्ये मधुमतीं वाचं वदतु शन्तिवाम् ॥ (III 30, 2)
समानी प्रपा सह वोऽन्नभाग समाने योक्त्रे सह वो युनज्मि

(III 30 9)

4 सवंननी समुष्पला बभ्रु कल्याणि सं नुद ।
अमुं च मां च सं नुद समानं हृदयं कृधि ॥ (VI 139, 3)

அவள் அவனை நேசிக்கச்செய்வதற்கும்[1] விரும்பிய செல்வங்களை வேண்டியும் வாக்குகள் உள. பிள்ளைக் காப்பாற்றுவதற்காகவும் கூறும் மந்திரமும்,[2] கர்ப்பம் கலையாது முதிர்ச்சியடைய மந்திரமும், கர்ப்பம் ஆண் ஆகப் பிறக்க மந்திரமும்,[3] சுகப் பிரசவத்திற்கு மந்திரமும்,[4] குழந்தை பிறந்தவுடன் செய்யும் ஜாதகர்மத்தின் மந்திரமும்[5] காணப்படும்.

உபநயனத்தில் ஜபிக்கவேண்டிய மந்திரங்கள் 11, 16, 17 ஆவது காண்டங்களில் கிரிவாயும், மக்கள் நீண்ட ஆயுளுடன் நோயின்றி வாழவேண்டியும் அநேக தேவதைகளை வேண்டும் மந்திரங்கள் ஆங்காங்கு கூறப்பட்டன. விவா

1. शोचयामसि ते हार्दिं शोचयामसि ते मनः ।
वातं धूम इव सध्र्यङ् मामेवान्वेतु ते मनः. (VI 90, 2)
मह्यं त्वा मित्रावरुणौ मह्यं देवी सरस्वती ।
मह्यं त्वा मध्यं भूम्या उभावन्तौ समस्यताम् (VI 90, 3)
सं चेन्नयाथो अश्विना कामिना सं च वक्षथः ।
सं वां भगासो अग्मत सं चित्तानि समु व्रता (II 30, 2)

2. पर्वताद् दिवो योनेरङ्गादङ्गात् समाभृतम् ...... (V, 25)

3 यथेयं पृथिवी मही भूतानां गर्भमादधे ।
एवा ते ध्रियतां गर्भो अनु सूतुं सवितवे ॥ (VI, 18)

4 वषट् ते पूषन्नस्मिन्त्सूतावर्यमा होता कृणोतु वेधाः ।
सिस्रतां नार्यृतप्रजाता वि पर्वाणि जिहतां सूतवा उ ॥ (I, 11)

5. अहं रुद्रेभिर्वसुभिश्चराम्यहमादित्यैरुत विश्वदेवैः (IV, 30)

ஓத்தில் வழங்கும் மந்திரங்கள் 14 ஆவது காண்டத்திற் கூறப்பட்டன. பெண்ணிற்குத் தக்க கணவன் வரவேண்டும் என வேண்டும் மந்திரம் உளது.[1] திருஷ்டிதோஷத்தால்[2] வருந் துன்பத்தைப் போக்கப் பல மந்திரங்கள் உள.[3] தாய்தந்தையர் இறக்க அவர்க்குச் செய்யவேண்டிய பிரேதகிருத்தியங்கட்குள்ள மந்திரங்களும், அவர் பிதிரரானபின்னர் அவர்க்குச் செய்யும் சிராத்தத்தில் வழங்கும் மந்திரங்களும் விரிவாய் 18 ஆவது காண்டத்திற் கூறப்பட்டன. விராத்யன் என்ற சொல்லால் வழங்கப்படும் ஜீவன்முக்தனின் நிலை 14 ஆவது காண்டத்திற் கூறப்பட்டது. அவ்வாறு சில பெரியார் நாட்டில் இருந்தால்தான் கிருகஸ்தர்கள், பிரமசாரிகள் நன்னிலையில் இருப்பர் எனக் குறித்தற்கு விராத்யமஹிமை விவாஹகாண்டத்திற்குப் பின்னரும் உபநயநகாண்டங்கட்கு முன்னரும் வைக்கப்பட்டது எனத் தோன்றுகின்றது.

யாகங்களில் பிருமமாவும் அவரைச் சேர்ந்த மூவரும் கூறவேண்டிய மந்திரங்கள் 20 ஆவது காண்டத்தில் உள்ளன. அவை பெரும்பாலும் ருக்வேதத்திற் காணப்படுகின்றன. தக்ஷிணையைப்பற்றிச் சிறப்பித்துக் கூறுவனவும் யாகங்களில் பிராமணாச்சம்ஸியால் உரைக்கப்படுவனவுமான குந்தாப ஸூக்தங்கள்[4] ருக்வேதத்திற் காணப்படவில்லை.

---

1 आ नो अग्ने सुमतिं संभलो गमेदिमां कुमारीं सह नो भगेन .
(II 36)

2. அதிருஷ்டி என்பது இக்காலத்தில் திருஷ்டி என வழங்குகின்றது.
Cf. अदृष्टि स्यात् असौम्येऽक्षिण (अमरकोश) -

3 ये बध्यमानमनु दीध्याना अन्वैक्षन्त मनसा चक्षुषा च ।
अग्निष्टानग्रे प्र मुमोक्तु देवो विश्वकर्मा प्रजया संरराण . . ॥
(II 34 3)

4. Translation of Aitarīya brāhmaṇa by Dr Martin Haug, p 430 foot note

# அத்தியாயம் 11

## அதர்வவேதஸம்ஹிதையின பகுப்பு

அதர்வவேதஸம்ஹிதையினது சௌனகசாகையில் இருபது காண்டங்கள் உள. ஸம்ஹிதை என்ற சொற்கு ஒருங்கு சேர்க்கை எனப் பொருளாதலின், ஆங்குக் காணப்படும் மந்திரங்கள் ஸம்ஹிதையாகச் செய்யப்பட்ட காலத்திற்கு முன்னரே இருத்தல் வேண்டும். அவையெல்லாம் ஒரே காலத்திற் காணப்பட்டிருக்கவேண்டும் என்ற நியதி இல்லை. முதல் பதின்மூன்று காண்டங்களிற் பெரும்பான்மையும் ரோகநிவிர்த்தி, புஷ்டி, அரசன்வெற்றி, நாட்டினமைதி இவற்றைப்பற்றிய மந்திரங்கள் இருத்தலால் அவை முதலில் ஸம்ஹிதையாகச் செய்யப்பட்டிருத்தல் கூடும்; உபநயனத்தைப் பற்றிக் கூறும் பதினேழாங் காண்டமும், விவாஹத்தைப் பற்றிக் கூறும் பதினான்காங் காண்டமும், வ்ராத்யமஹிமையைக் கூறும் பதினைந்தாங் காண்டமும், பிதருமேதத்தைக் கூறும் பதினெட்டாங் காண்டமும், சாந்தியைக் கூறும் யஜுஸ்ஸை உடைய பதினாறாங் காண்டமும் தனித்தனியாக இருந்திருத்தல் கூடும். அவை முன் பதின்மூன்று காண்டங்களோடு பின்னர்ச் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும். ஆனால் உபநயனத்தைப்பற்றிய காண்டம் பதினான்காங் காண்டமாக வைக்கப்படாது பதினேழாங் காண்டமாக வைக்கப்பட்டிருத்தற்குக் காரணம் தெரியவில்லை. கிருஹயாகங்களிற் செய்யுங் கர்மாக்களைக் கொண்ட இப்பதினெட்டு காண்டங்கொண்ட நூலுக்கு வேதம் எனப் பெயர் கொடுக்கப்படாமையால், புருஷஸூக்தத்தைக் கொண்ட பத்தொன்பதாங் காண்டமும் ஸோமயாகத்தில் பிரும்மாவின் வருக்கத்தினர் கூறும் மந்திரங்களைக் கொண்ட இருபதாங் காண்டமும் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும் என ஆராய்ச்சியாளர் கூறுவர்.

முதல் பதின்மூன்று காண்டங்களும் ஒரே காலத்தில் தொகுக்கப்பட்டன எனக் கொள்ளவேண்டுமா என்ற ஐயம் வருகின்றது. முதற்காண்டம், இரண்டாங்காண்டம், மூன்றாங்காண்டம், நான்காங்காண்டம் இவற்றில் முறையே ஒவ்வொரு ஸூக்தத்திற்கும் நான்கு, ஐந்து, ஆறு, ஏழு ருக்குகள் உள்ளன. ஐந்தாங்காண்டத்தில் அவ்வாறு முறையின்றி, ஸூக்தங்கள் எட்டுமுதல் பதினெட்டு ருக்குகளையுடையன.[1] அன்றியும் ருக்குகளின் எண்ணிக்கை மேன்மேல் அதிகரித்து வருகின்றது. ஆகலின் இவை ஐந்து காண்டங்களாக முதலில் தொகுக்கப்பட்டிருத்தல் கூடும்.

1 காண்டம் I (168 ருக்குகள்) — 37 ஸூக்தங்கள் – அவற்றுள் 30, 4 ருக்குகளையும் 1 ஐந்து ருக்குகளையும் 2 ஆறு ருக்குகளையும் 1 ஏழு ருக்குகளையும் 3 எட்டு ருக்குகளையுங் கொண்டன.

காண்டம் II (207 ருக்குகள்) — 36 ஸூக்தங்கள். — அவற்றுள் 22, 5 ருக்குகளையும் 5 ஆறு ருக்குகளையும் 5 ஏழு ருக்குகளையும் 4 எட்டு ருக்குகளையுங் கொண்டன.

காண்டம் III (227 ருக்குகள்) — 31 ஸூக்தங்கள் — அவற்றுள் 13, ஆறு ருக்குகளையும் 6 ஏழு ருக்குகளையும் 6 எட்டு ருக்குகளையும், 2 ஒன்பது ருக்குகளையும் 3 பத்து ருக்குகளையும், 1 பதினொரு ருக்குகளையுங் கொண்டன.

காண்டம் IV (325 ருக்குகள்) — 40 ஸூக்தங்கள் — அவற்றுள் 20 ஏழு ருக்குகளையும் 11 எட்டு ருக்குகளையும், 3 ஒன்பது ருக்குகளையும் 3 பத்து ருக்குகளையும், 2 பன்னிரண்டு ருக்குகளையும் 1 பதினாறு ருக்குகளையுங் கொண்டன.

காண்டம் V (375 ருக்குகள்) — 31 ஸூக்தங்கள் — அவற்றுள் 7 பதினொரு ருக்குகளையும் [illegible] 9 12 ருக்குகளையும், மும்மூன்று 13, 14 15 ருக்குகளையும், இவ்விரண்டு 8, 17 ருக்குகளையும், ஒன்று 18 ருக்குகளையுங் கொண்டன.

பின்னர் அவ்விரண்டும் ஒருங்கு சேர்க்கப்பட்டு, உபநயனம் விவாஹம் இவற்றிற்குப் பயன்படும் மந்திரங்கொண்ட 11, 12, 13, 14 காண்டங்களும் ஜீவன்முகத்தரைப் பற்றிய 15 ஆம் காண்டமும் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும்.[1] தீய சொப்பனம் முதலியவற்றுக்குள்ள சாந்தியைப் பற்றியும் உபநயனத்தில் பாலனது நீண்ட ஆயுளைப் பற்றியும் கூறும் மந்திரங்களை

பாண்டுரங்க பண்டிட் அவர்கள் ஸூக்தங்களைப் பின்ன முறையில் ஸாயணாசாரியரிடமிருந்து வேறுபட்டனர். ஒரு ஸூக்தத்திலுள்ள ருக்குக்களின் ஒரு பகுதிக்கு ஒரு விநியோகமும் மற்றொரு பகுதிக்கு வேறு விநியோகமும் இருப்பின், அவை வெவ்வேறு ஸூக்தங்களாகக் குறிக்கப்பட்டன. இரண்டு ஸூக்தங்கட்கு ஒரே விநியோகம் இருப்பின் அவை ஒரே ஸூக்தமாகக் கூறப்பட்டன. உதாரணமாக ஆறாங்காண்டத்து முதல் ஸூக்தத்தில் முதல் மூன்று ருக்குக்கள் ஒரு ஸூக்தமாகவும், ஏனைய மூன்று ருக்குக்கள் ஒரு ஸூக்தமாகவும் பதினேழாங் காண்டத்தில் மூன்று ஸூக்தம் ஒரு ஸூக்தமாகக் குறிக்கப்பட்டது. காண மாக்டானல் முதலியோர் பதிப்பாளரின் ஸூக்தக்குறிப்பைக் கொண்டு தங்கருத்தைக் கூறுவர் (A History of Sanskrit Literature p 189)

1. காண்டம் XI — 30 ஸூக்தங்கள் — அவற்றுள் 17 பதினோர் ருக்குக்களையும் 4 ஏழு ருக்குக்களையும் 3 ஆறு ருக்குக்களையும், 2 பதினோர் ருக்குக்களையும் ஒவ்வொன்று 13, 14, 18, 31 ருக்குக்களையும் கொண்டன
(314 ருக்குக்கள்)

காண்டம் XII — 11 ஸூக்தங்கள் — ஒவ்வொன்று 5 6, 8 11 14, 15, 16 53, 55, 60, 63, 73 ருக்குக்களைக் கொண்டன.
(304 ருக்குக்கள்)

காண்டம் XIII — 9 ஸூக்தங்கள் — ஒவ்வொன்று 5 6, 7, 8, 13 17, 26, 46, 56, 60 ருக்குக்களைக் கொண்டன
(188 ருக்குக்கள்)

காண்டம் XIV — 2 ஸூக்தங்கள் — ஒன்று 64 ருக்குக்களையும், மற்றொன்று 75 ருக்குக்களையும் கொண்டன
(139 ருக்குக்கள்)

காண்டம் XV 18 ஸூக்தங்கள் — 219 ருக்குக்கள்

கொண்ட 16, 17-ஆம் காண்டங்களும், பிரேதகாமா, பித்ருகாமா இவற்றைப்பற்றிக் கூறும் மந்திரம் கொண்ட 18-ஆம் காண்டமும் பின்னர்ச் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும். பிரேதகாமாவும் பித்ருகாமாவும் கிருஹ்யாக்கினியிலே செய்யப்படுவதால், அவை இவ்வேதத்தில் இருத்தல் பொருந்தும். 14-ஆம் காண்டமும் 18-ஆம் காண்டமும் அதர்வவேதத்தில் இருத்தல் ஒருவாறு பொருந்தாது என மாக்டானல் கூறுதல் ஆராய்தற்குரியது.[1]

முதல் பதின்மூன்று காண்டங்கள் முதலிலும், பின்னருள்ள ஐந்து காண்டங்கள் அதன் பின்னரும், பத்தொன்பது இருபதாம் காண்டங்கள் இறுதியிலும் தொகுக்கப்பட்டன என்பர் மாக்டானெல்.[2] ஒன்றுமுதல் ஏழு காண்டம் முடிய முதற்பகுதி யெனவும், எட்டு முதல் பன்னிரண்டு வரை இரண்டாம் பகுதி யெனவும், பதின்மூன்று முதல் பதினெட்டு வரை மூன்றாம் பகுதி யெனவும், இறுதியில் பத்தொன்பது இருபது காண்டங்கள் இணைக்கப்பட்டன எனவும் விண்டர்நிட்ஸ் கூறுவர்.[3] இக்கூற்றுக்களெல்லாம் சௌனக-சாகைக்கே பொருந்தும். பைப்பலாதசாகைக்குப் பொருந்தாதென்பது தற்போது டாக்டர் ரகுவீரரால் பதிப்பிக்கப்பெற்ற நூலால் விளங்கும். தற்போது வெளிவந்துள்ள 18 காண்டங்களிலும் சௌனகசாகையில் 15, 16, 17 காண்டங்களிலுள்ள ஒரு மந்திரமும் காணப்படவில்லை; 18-ஆம் காண்டத்தில் உள்ள ஒரு ருக்கு எட்டாம் காண்டத்தில் காணப்படுகின்றது;[4]

1. A History of Sanskrit Literature by A. A. Mac-Donell p. 188.
2. A History of Sanskrit Literature pp. 187-8.
3. A History of Indian Literature by M. Winternitz p. 122.
4. ये ते पूर्वे परागता अपरे पितरश्च ये ।
तेभ्यो घृतस्य कुल्यैतु शतधारा व्युन्दती ।

20-ஆம் காண்டத்திலுள்ள இரண்டு ஸூக்தங்களும்,[1] ஏழாம் காண்டத்திலுள்ள ஒரு ஸூக்தமும், ஓர் ருக்கும்,[2] பத்தொன்பதாம் காண்டத்துள்ள 29 ஸூக்தங்களும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. அன்றியும் பைப்பலாத-சாகையின் 2, 3-ஆம் காண்டங்களில் மாத்திரம் சௌனகசாகையின் 2, 3-ஆம் காண்டங்களில் உள்ள மந்திரங்கள் பெரும்பான்மையுங் காணப்படுகின்றனவேயன்றி, ஏனைய காண்டங்களில் சௌனகசாகையின் பல காண்டங்களிலுள்ள மந்திரங்கள் கலந்தே காணப்படுகின்றன. சௌனக-சாகையின் ஒவ்வொரு மந்திரங்களும் ஆங்கு உள்ளன.



1. XX 107, 14.
2. VII 33 and VII 51, 1 (Bombay Edition)

## அத்தியாயம் 12

### அதர்வவேதம் — நான்காம் வேதம் — காலம்

த்ரயீ என்ற சொல் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இம்மூன்றையுமே குறித்தலால், ஒரு காலத்தில் அதர்வ வேதத்தை வேதமாகக் கருதாதிருந்தனர் எனக் கூறல் தகும். ச்ரௌதாக்னியிற் செய்யும் யாகங்களைப் பற்றிய ருக்குக்களையும் யஜுஸ்ஸுக்களையும் ஸாமாக்களையும் கொண்டவையே வேதம் எனக் கொள்கை இருந்திருப்பின், அதர்வவேதத்தை வேதமாகக் கூறாதது பொருந்தும். அவ்வாறே கொண்டனர் என்பது ருக்ஸம்ஹிதையாலும்[1] யஜுர்வேதஸம்ஹிதையாலும்,[2] ஐதரேய ப்ராம்மணத்தாலும்[3] விளங்கும். சில ஸ்மிருதிகளிலும் ஹோதா ருக்வேதத்தாலும், உத்காதா ஸாமவேதத்தாலும் அத்வர்யு யஜுர்வேதத்தாலும், பிரும்மா மூன்றாலும் யாகங்களைச்

1. ருக்வேதத்தில்,
ऋचस्सामानि जज्ञिरे । छन्दांसि जज्ञिरे तस्माद्यजुस्तस्मादजायत
(ऋ. वे. X 10, 9)
என்றவிடத்து அதர்வவேதம் குறிக்கப்பட்டிலது.

2. தைத்திரீயஸம்ஹிதையில் यद्वै यज्ञस्य साम्ना यजुषा क्रियते शिथिलं तत्, यदृचा तद् दृढम् என்றவிடத்தும் அதர்வவேதம் குறிக்கப்பட்டிலது.

3. ஐதரேயப்ராம்மணத்தில் त्रयो वेदा अजायन्त, ऋग्वेद एवाग्नेरजायत, यजुर्वेदो वायोः, सामवेद आदित्यात् ..... अथ केन ब्रह्मत्वं इति! त्रय्या विद्यया इति ब्रूयात् என்றவிடத்தும் அதர்வவேதம் குறிக்கப்பட்டிலது.

செய்விக்கின்றனர் என்று உளது. யாகங்களைக் குற்றமறச் செய்விக்கும் பொறுப்பு பிரும்மாவினிடம் இருத்தலின் யாகங்களை வெளியிலிருந்து பிறர் கெடுக்காதவாறு செய்தலும், யாகத்தில் யாருக்கேனும் நோய் வரின் அவற்றைப் போக்குதலும், காலக்கிரமத்தில் பிரும்மாவின் பொறுப்பாக ஆயிருத்தல் கூடும். அவற்றைக் கவனிக்க அவர்க்கு அதர்வ மந்திரங்களில் அறிவு வேண்டியிருத்தல் கூடும். ஆகலின் ஒரு காலத்திற்குப் பின்னர் பிரும்மா அதர்வவேதமும் அறிந்திருத்தல் வேண்டும். நான்கு வேதங்களையுஞ் செவ்வனே அறிதல் பலர்க்கு இயலாமையாலும் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் அவ்வவற்றில் தனிப்புலமை வாய்ந்தவராக ஹோதா, அத்வர்யு, உத்காதா இவர் இருந்திருத்தலால், பிரும்மாவிற்கு அதர்வ வேதத்தில் தனிப்புலமை இருத்தல் வேண்டும் என்ற நியதி வந்திருத்தல் கூடும். அப்போது பிரும்மாவாற் கூறவேண்டிய மந்திரங்கள் ருக்வேதயஜுர்வேதங்களிலிருந்து தொகுத்து அதர்வமந்திரங்களோடு சேர்க்கப்பட்டிருத்தல் கூடும். அதர்வ வேதத்துச் சௌநகசாகையிலுள்ள 20 ஆம் காண்டம் இதனைத் தெளிவாய் அறிவிக்கின்றது. ஆனால் அக்காண்டத்தில் உள்ள குந்தாபஸூக்தங்கள் ருக்வேதத்தில் இல்லை. அதன் பின்னர் வேதங்களைக் கணக்கிடும்போது அவற்றை நான்கு ஆகவே கணக்கிடுதல் தகும். அதர்வவேதத்துள்ளும் தைத்திரீயாரண்யகத்துள்ளும் சதபதப்பிராமணத்

1 यस्मादृचो अपातक्षन्यजुर्यस्मादपाकषन् ।
सामानि यस्य लोमान्यथर्वाङ्गिरसो मुखम् ॥ (अ वे X 7 20)
तमृचश्च सामानि च यजूंषि च ब्रह्म चानुव्यचलन् । (XV 6 8)
ऋचा कुम्भ्यधिहितार्त्विज्येन प्रेषिता ।
ब्रह्मणा परिगृहीता साम्ना पर्यूढा ॥ (XI 3 14 16)

துள்ளும்,[1] உபநிஷத்துக்களிலும்[2] அதனை நான்காவதாகக் கணக்கிடப்பட்டுளது.

பெரும்பான்மையும் அதர்வமந்திரங்கட்கு உபயோகம் கிருஹ்யகாமாக்களிலேயாதலால் கிருஹ்யஸூத்திரங்களிலெல்லாம் அதனை நான்காம் வேதமாகக் கூறப்படும். ச்ரௌதஸூத்திரங்களில் அதனைக் கூற அவச்யம் இல்லாமையால் காத்தியாயன-லாட்டியாயன-ச்ரௌதஸூத்திரங்களில் அதர்வாவின் பெயர் கூட கூறப்படவில்லை. சாங்காயனம் ஆச்வலாயனம் இவற்றன் ஒருமுறை கூறப்பட்டது. தாமஸூத்திரங்களில் அது குறிக்கப்பட்டுளது. அதர்வமந்திரங்களை வழங்குதல் சிறந்ததன்று என ஆபஸ்தம்பர் கூறுவர். அதர்வமந்திரங்கள் என்றதனால் அபிசாரமந்திரங்களையே அவர் கருதியிருத்தல் கூடும்; ஏனெனில் புஷ்டிகாமாக்களில் இன்றும் ஆபஸ்தம்பிகள் அதர்வமந்திரங்களை வழங்குதல் வெளிப்படை. மஹாபாரதத்திலும் புராணங்களிலும் அதனை நான்காம் வேதமாகவே கூறப்பட்டுளது.

கோபதப்பிராம்மணத்தில் அதனைப் பிரும்மவேதம் என்றும், நான்கனுள் அஃதே சிறந்தது எனவும் கூறப்பட்டது காண்க. நான்கு வேதங்களைக் குறிக்க வந்த பதஞ்சலிபகவான் அதர்வவேதவாக்கியத்தை மஹாபாஷ்யத்தின் தொடக்கத்திற் கூறுதலால், அதர்வவேதமே நால்கனுள்ளும் சிறந்தது என அவர் கொண்டனர் எனக் கூறல் தகாது, அவரும் அவருடைய முன்னோரும் அதர்வவேதத்தை முன்னரும் அதன் பின்னர் ஏனைய வேதங்களையும் படித்தனர் எனக் கூறுதலே தகும்.

1. ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्वाङ्गिरसः
2. ऋग्वेदं भगवोऽध्येमि यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थम् (छान्दोग्य. VII)
ऋग्यजुस्सामाथर्वाणश्चत्वारो वेदाः (नृसिंह.)
तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्ववेदः (मुण्डकम्)

அதர்வவேதத்தை வேதமாகக் கருத 20-ஆங் காண்டத்தில் ருக்வேதத்திலிருந்து ஸோமயாகங்களில் பிரும்மவர்க்கம் கூறும் மந்திரங்கள் தொகுத்துக் கூறப்பட்டன என்பர். ஏனைய காண்டங்களிலும் ருக்வேதமந்திரங்கள் உள்ளன. அவற்றுள் சுமார் மூன்றிலொன்று ருக்வேதம் பத்தாம் மண்டலத்திலும், ஐந்திலொன்று முதல் மண்டலத்திலும், ஆறிலொன்று எட்டாம் மண்டலத்திலும் ஏனைய எஞ்சிய ஏழு மண்டலங்களிலும் உள்ளன.

அதர்வவேதத்தின் 18-ஆங் காண்டத்திலும் ருக்வேதத்தின் 10-ஆம் மண்டலத்திலும் யமயமீஸம்வாதம், பிரேதகிருத்ய மந்திரங்கள் இவை இருக்கின்றன. பிதிர்லோகத்தில் அரசனாகிய யமன் மிகவும் தூய்மையுடையவன் என்பதைக் குறித்ததே யமயமீஸம்வாதத்தின் உட்கருத்து. அவ்வாறுள்ளவன் ஜீவன்களைப் பிதருலோகத்திற்குக் கூட்டிச் செல்லுகின்றான் எனக் கூறுதல் பொருந்தும். யாகஞ் செய்தோரைத் தவிர்த்து ஏனையோர் இறப்பின், அவருடைய உடல் கிருஹ்யாக்கினியால் ஸம்ஸ்காரஞ் செய்யப்படுவதால் பிரேதகிருத்திய மந்திரங்கள் முதலில் அதர்வமந்திரங்களாகவே இருந்திருத்தல் கூடும். பின்னர் ருக்வேதஸம்ஹிதை தொகுக்கப்படும்போது அவை பத்தாம் மண்டலத்துள் சேர்க்கப்பட்டிருக்கலாம். அவ்வாறே உபநயனஞ் செய்விக்கப்பட்ட மாணவனுக்கு நீண்ட ஆயுள் வேண்டும் மந்திரமும்[1], யாகத்தினிடையில் நோயுண்ட யஜமானனைச் சுகப்படுத்தக் கூறும் மந்திரமும்[2] புஷ்டி வேண்டிக் கூறப்படும் மந்திரமும்[3], ஸேனையின் ஐயத்தை

1. ऋ. वे. X 137 1-7.
2. ऋ. वे. X 60, 12
3. ऋ. वे. X 128, 1-9

வேண்டியும்,[1] அரசனைப் போருக்குத் தகுதியுடையவன் ஆக்க வேண்டியும்[2] கூறும் மந்திரங்களும் அதர்வ மந்திரங்களாயிருந்து ருக்வேதத்தில் பத்தாம் மண்டலத்தில் தொகுக்கப்பட்டிருத்தல் கூடும். அவ்வாறே ஸூர்யாவின் மணத்தைக் கூறும் மந்திரமும்[3] ஆகும்.

அதர்வவேதத்தின் ஆறாம் காண்டத்தில், மூன்று ஸவனத்தைப் பற்றிய மந்திரமும்[4] யாகத்தில் தவறினால் செய்யவேண்டிய ப்ராயச்சித்தமந்திரமும்[5] முதலியனவும் உள்ளன. அவ்வாறே ஏனைய காண்டங்களிலும் சிறிது உளது.

ஆகவே அதர்வமந்திரங்கள் ருக்வேதஸம்ஹிதையில் பத்தாம் மண்டலம் சேர்க்கப்படுவதற்கு முன்னரே இருத்தல் வேண்டும் என்பதும், சிற்சில மந்திரங்கள் சிற்சில கூட்டத்தினிடம் இருந்தன என்பதும் அறிதல் கூடும். சில மந்திரங்களில் வ்யாக்கிரம்,[6] சங்கு,[7] ஜங்கிடம்,[8] த்ரிககுத[9] முதலிய

1 ऋ. वे. X 84, 1-7

2. „ X 17, 31-5

3. „ X 85

4. अ. वे. VI 47-48

5. अ. वे. VI 114

6. एना व्याघ्रं परिषस्वजानाः सिंहं हिन्वन्ति महते सौभगाय ।
(अ. वे. IV 8, 7)

7. शङ्खेनामीवाममतिम . . . . . (अ. वे. IV 10, 3)

8. दीर्घायुत्वाय...जङ्गिडं बिभृमो वयम् (अ. वे. II 4, 1)
जङ्गिडः वृक्षविशेषो वाराणस्यां प्रसिद्धः (सायणभाष्यम्)

9. यद्वैत्रिककुदं नाम ते पिता (अ वे. IV 9, 8)

சொற்கள் வழங்கப்பட்டமையாலும், அச்சொற்கள் ருக்வேத ஸம்ஹிதையில் காணப்படாமையாலும், அதாவது வேதஸம்ஹிதை ஆரியர்கள் பாரதவர்ஷத்தின் கிழத்திசையிலுள்ள வங்கத்தின் அருகில் வந்தபோது தொகுக்கப்பட்டிருத்தல் கூடும். இமய மலையில் உற்பத்தியாகிச் சமுத்திரத்தில் சேர்கின்றன என்பது கங்கை முதலிய நதிகளுக்கே பொருந்தும்.[1]

சில மந்திரங்கள் மிகப் பழமையனவாகவும் சில மந்திரங்கள் பிற்காலத்தனவாகவும் இருந்திருத்தல் கூடும். உதாரணமாக நோய்களைத் தீர்க்கும் மந்திரங்களில் பல பொருளிலும் உருவத்திலும் ஜெர்மனி, ருஷியா முதலிய நாட்டுக்களில் உள்ளவாறே இருக்கின்றன என்பர்.[2] ஆகலின் அவையெல்லாம் இன்டோ-யூரோபீயன்-காலத்தன எனக் கூறல் தகும். நீண்ட ஆயுளை அடைய ஜங்கிடமணியை அணிவோம்[3] போன்ற மந்திரங்கள் பிற்காலத்தன என்னலாம். அவ்வாறே சிற்சில தேவதைகளைப் பற்றிக் கூறும் மந்திரங்களும் இருக்கின்றன. உதாரணமாக வருணன் பெரியவர், எல்லோருடைய செய்கையை அறிவர், பகைவரைப் போக்குவர், இப்பூமி வருணனது வசத்தில் இருக்கிறது முதலியவற்றைக் கூறும்

1. हिमवतः प्र स्रवन्ति सिन्धौ समह सङ्गमः (अ. वे. VI 24, 1)

2. A History of Sanskrit Literature by A. A. Mac-Donell p. 186.

मज्जा मज्जा सन्धीयता चर्मणा चर्म रोहतु ।

असृक् तेअस्थि रोहतु मांसं मांसेन रोहतु (अ. वे. IV, 12, 4)

Bone to bone
Blood to blood
Limb to limbs
As if they are glued

} Merseberg magic incantation
A History of Indian Literature by M. Winternitz p. 128.

3. अ. वे. II 4, 1.

ஸூக்தம்[1] பொருளில் ருக்வேதஸூக்தங்களை ஒட்டி இருக்கின்றது, ஆகலின் அது பழையது. ஜலத்திற்கு அதிபதி[2] எனக் கூறும் ஸூக்தம் பிற்காலத்தது. ருத்திரர் ஜலரோகத்தைப் போக்குவர் என்பது ருக்வேதத்திற் கூறப்பட்டதை ஒத்திருக்கிறது,[3] ஆகலின் அது பழையது. அவர் மகாதேவர்,[4] அவர் பசுபதி[5] எனக் கூறுவன பிற்காலத்தன ஆகும். அஸுர என்ற சொல் ருக்வேதஸம்ஹிதையில் பலமுடையன, உயிர்கொடுப்போன் என்ற பொருளில் வழங்கப்பட்டது, தேவர்களுக்குப் பகைவன் என்ற பொருளில் அங்குக் கூறப்படவில்லை. ஈண்டுச் சிலவிடத்துப் பலமுடையன உயிர்கொடுப்போன் என்ற பொருளிலும், சிலவிடத்துத் தேவர்க்குப் பகைவினான் என்ற பொருளிலும் அச்சொல் வழங்கப்பட்டுள்ளது. முற்கூறிய பொருளைக்கொண்ட அஸுர என்ற சொல்லைக் கொண்ட மந்திரங்கள் பழையன[6] எனவும், பிற்கூறிய பொருளைக் கொண்ட அச்சொல்லைக் கொண்ட

1 अ वे IV 16, V 11 etc

2 वरुणोपामधिपति स मावतु (अ वे V 24 4)

3 या ते रुद्र इषुमास्यदङ्गेभ्यो हृदयाय च ।
इद तामद्य त्वद् वय निर्षूचीं वि वृहामसि॥ (VI 90, 1)
इद रुद्रस्य भेषजम् (VI 57, 1)

4. स रुद्र स महादेव (XIII 105 4)

5 सुखाय ते पशुपते (XI 2, 5)

6 महत् तद् वृष्णो असुरस्य नाम (IV 8, 3)
अपो निषिञ्चन्नसुर पिता न (IV 15 12)

மந்திரங்கள் பிற்காலத்தன[1] எனவுங் கொள்ளல் தகும். பிற கூறிய பொருளிலேயே அச்சொல் அதர்வவேதத்தில் வழங்கப் பட்டது என மாகடனெல் கூறுவது ஆராய்தற்குரியது.[2] ருக்வேதத்தில் அச்சொல் பலமுடையோன், உயிர்கொடுப் போன் என்ற பொருளிலே பத்து மண்டலத்துள்ளும் வழங்கப் பட்டதாகக் கொள்ளல் கூடும் என முன்னரே கூறப்பட்டது மூன்று வேதத்தை மாத்திரங் கூறும் மந்திரம் பழையது[3] எனவும், நான்கு வேதத்தைக் கூறும் மந்திரம் பிற்காலத்தது எனவுங் கூறலாம்.

---

1. यथा चक्रुर्देवासुरा. (अ. वे. VI 141, 3)
अनेनेन्द्रो मणिना वृत्रमहन्ननेनासुरान् पराभावयन्मनीषी ।
(VIII 5, 3)
2. A History of Literature by A. A Mac Donell p. 112
3 ऋचं साम यदप्राक्षं हविरोजो यजुर्बलम् ।
एष मा तस्मान्मा हिंसीद् वेदः पृष्टः शचीपते ॥ (अ. वे. VII 57, 1)
यस्मादृचो अपातक्षन् यजुर्यस्मादपाकषन् ।
सामानि यस्य लोमान्यथर्वाङ्गिरसो मुखम् ॥ (X 7, 20)

## அத்தியாயம் 13

அதர்வணஸம்ஹிதையிலிருந்து அறியப்பட்ட செய்திகள்

அஸுரர்கள் திதியின் புத்திரர்கள்; அவர்கள் இருக்குமிடம் அந்தரிக்ஷலோகம்; அவர்கட்கு யாகத்தில் பாகம் இல்லை; ஸ்வர்க்கலோகத்தில் மூன்று பாகம் அவருடையன;[3] அவற்றிற்கு உதன்வதீ, பீலுமதீ, பிரதயௌ எனப் பெயர்.[3] அஸுரர்களுக்கு இந்திரனே ஸம்ராட்.[4] ஸப்தரிஷிகள் என்ற வழக்கு அக்காலத்து உண்டு.[5] மக்கட்குப் பிராமணனே பதி என்றும்,[6] அவனை ஹிம்ஸிக்கக்கூடாது என்றும் கூறப்

1. दितेः पुत्राणामदितेरकारिषमवं देवानां बृहतामनर्मणाम् ।
तेषा हि धाम गभिषक् समुद्रियं नैनान्नमसा परो अस्ति कश्चन ॥
(अ. वे. VII 8, 1)

2. तीर्त्वा तमांसि बहुधा महान्त्यजो नाकमाक्रमता तृतीयम् ।
(IX 5, 1)

3. उदन्वती द्यौरवमा पीलुमतीति मध्यमा ।
तृतीया ह प्रद्यौरिति यस्यां पितर आसते ॥ (XVIII. 2. 48)

4. सम्राडस्यसुराणाम् (VI 87, 3)

5. अभयं नोस्त्वृवंन्तरिक्षं सप्त ऋषीणां च हविषाभयं नो अस्तु ।
(VI 40, 1)

6. ब्राह्मण एव पतिर्न राजन्यो न वैश्यं ।
तत् सूर्यः प्रब्रुवन्नेति पञ्चभ्यो मानवेभ्यः । (V 17, 9)

பட்டுளது.[1] எழுவாரதனை ஒருவாக்கொருவர் பேசின் அவர் நண்பர் ஆவர் என்ற கொள்கையும், ஒருவரோடொருவர் எழுடி பின் சென்ருல் அவர் நண்பராவர் என்ற கொள்கையும் இருந்தன.[2] மக்கட்கு 101 வகைப்பட்ட லக்ஷ்மி உண்டு எனவும், அவருள் சிலர் நன்மையைப் பயக்குவர் எனவும், சிலர் தீமையை விளைவிப்பர் எனவும், தீமையை விளைவிப்பவர் தம்மைவிட்டு நீங்கவேண்டும் என வேண்டப்பட்டனர்[3] எனவும் கூறப்பட்டது.

பிரேதங்கட்கு புதுத்துணி போர்த்தினர்;[4] அவற்றை மயானத்திற்கு இரட்டைமாட்டுவண்டியில் எடுத்துச் சென்றனர்;[5] அக்கினியால் சுடுதல், மண்ணிற் புதைத்தல், வெளிப்புறத்தில் எறிதல் இவற்றுள் ஒருவகையால் பிரேதங்களை அடக்கஞ்செய்தனர்.[6] முதலிரண்டு வகைகள் பாரதவர்ஷத்தில் இப்போதும் ஆரியர்களிடத்தில் உள. மூன்றும் வகை பார்ஸிய

1. न ब्राह्मणो हिंसितव्यो३ग्निः प्रियतनोरिव ॥ (अ. वे. V 18, 6)
2. सप्तपदः सखासि (V 11, 10)
3. एकशतं लक्ष्म्यो३ मर्त्यस्य साकं तन्वाऽजनुषोधि जाताः ।
   तासां पापिष्ठा निरितः प्रहिण्मः शिवा अस्मभ्यं जातवेदो नि यच्छ ।
   (VII 120, 3)
   प्र पतेतः पापि लक्ष्मि .... (VII 120, 1)
4. एतत् त्वा वासः प्रथमं न्वागन्नपैतदूह यदिहाबिभः पुरा ।
   (VIII 2, 57)
5. आ प्र च्यवेथामप तन्मृजेथाम् ...... (XVIII 4, 49)
6. ये निखाता ये परोप्ता ये दग्धा ये चोद्धिताः । (VIII 2, 34)

சீடத்தில் உளது. இறந்த மறுநாள் அப்பம், பொரி இவை எள்ளுடன் கலந்து பிரேதம் முதலியவற்றுக்கு அளிக்கும் வழக்கம் அப்போதே இருந்தது[1]. மனைவி உடன்கட்டை யேறுதல் பண்டைய வழக்கம் எனப்பட்டது[2]. பிரேத ஜீவர்களை மாதலீ, யமன், பிருகஸ்பதி இவர் பித்ருலோகத்திற்குக் கூட்டிப் போகின்றனர்[3].

இதிஹாஸம், புராணம், காதை முதலியன அக்காலத்தே இருந்தன[4]. பேச்சை ரஸமுள்ளதாகவும் ரஸமில்லாததாகவும் வகுத்திருந்தனர்[5]. பகிஸ மூன்றுப மாகா உணவுடன்

1 अपूपपिंहितान् कुम्भान् यास्तें देवा अधारयन् ।
ते तें सन्तु स्वधावन्तो मधुमन्तो घृतश्चुत ॥ (अ वे XVIII 3 8)
यास्तें धाना अनुकिरामि तिलमिश्रा स्वधावती ।
तास्तें सन्तु विभ्वी प्रभ्वीस्तास्तें यमो राजानुमन्यताम्
(XVIII 3 9)

2 इयं नारीं पतिलोकं वृणाना नि पद्यत उप त्वा मर्त्य प्रेतम् ।
धर्मं पुराणमनुपालयन्ती (XVIII 3 1)

3 मातली कव्यैर्यमो अङ्गिरोभिर्बृहस्पतिर्ऋक्वभिर्वावृधान ।
याश्च देवा वावृधुर्ये च देवास्ते नोवन्तु पितरो हवेषु ॥
(XVIII 1, 47)

4 तमितिहासश्च पुराण च गाथाश्च नाराशसीश्चानुव्यचलन् ।
(XVIII 3, 11)

5 प्राश प्रतिप्राशो जह्यरसान् कृण्वोषधे (II 27 1)

கண்டிருந்தனர்.[1] வருஷத்தை ஆறு ருதுக்களாகப் பிரித்திருந்தனர்.[2] சிலவிடத்து கிழக்குதிக்கின் அதிபதி அக்கினி என்றும், தெற்குதிக்கின் அதிபதி இந்திரன் என்றுங் கூறப்பட்டுளது.[3] மற்றோரிடத்தில் தெற்கின் அதிபதி யமன் என்றுங் கூறப்பட்டுளது.[4] பசு, எருது இவற்றின் பயனை அறிந்து அவற்றைப் போற்றக் கூறுதல் மிகவும் போற்றத் தக்கது. எந்த கோசத்திலிருந்து வேதத்தை எடுத்தோமோ அங்கேயே அதை வைப்போம் என்ற பொருள்பட ஒரு மந்திரம் உளது. அதனால் அக்காலத்தே வேதம் எழுதப்பட்டிருந்தது எனக் கொளல் தகும்.[5] வேதத்தைத் தாயாகவும் அதனைத் துதிப்பின், ஆயுள், கீர்த்தி, ஐசுவரியம் முதலியன மிகும் எனக் கருதப்பட்டது.[6] மக்கள் ஒத்துவாழவேண்டும் என்றும், அவ்வாறு வாழ்ந்தால் பகைஞரை அழித்து சுகமாக வாழலாம்

1. अहोरात्रैर्विमितं त्रिंशदङ्गं त्रयोदशं मासं योनिर्मिमीते
(अ. वे. XIII 3, 8)

2. XII 1, 36

3. प्राची दिगग्निरधिपति. ...... (III 27, 1)
दक्षिणा दिगिन्द्रोऽधिपति. ....... (III 27 2)

4. ये दक्षिणतो जुह्वति ...... ।
यममृत्वा ते पराञ्चो व्यथन्ताम् ...... ॥ (IV 40, 2)

5 यस्मात् कोशादुदभराम वेदं तस्मिन्नन्तरव दध्म एनम्
(XIX 72, 1)

6 स्तुता मया वरदा वेदमाता प्र चोदयन्ता पावमानी द्विजानाम् ।
आयुं प्राणं प्रजां पशुं कीर्तिं द्रविणं ब्रह्मवर्चसम् ॥ (XIX 71, 1

என்றும் பலவிடங்களிற் கூறுதல் நோக்கத்தக்கது.[1] நக்ஷத்திர தேவதைகள் இருபத்தேழும் கிருத்திகை தொடங்கி பரணி இறுதியாகக் கூறப்பட்டுள்ளன.[2] சூரியன், சந்திரன், ராகு முதலியன கிரஹங்களாகக் கருதப்பட்டு, சுகத்தைக் கொடுக்குமாறு வேண்டப்பட்டன.[3] ஆர்யன் என்ற சொல் பிராமணன், க்ஷத்திரியன், வைச்யன் இம்மூவரையே குறித்ததாகத் தோன்றுகின்றது.[4] பிராமணன், க்ஷத்திரியன் இவற்றோடு வழங்கும் ஆர்யன் என்ற சொல் வைசியனையே குறிக்கும்.[5]

1. सं ज्ञानीध्वं सं पृच्यध्वं सं वो मनांसि जानताम् ।
......... ॥ (अ. वे. VI, 64)

2. सुहवमग्ने कृत्तिका रोहिणी चास्तु भद्रं मृगशिरः शमार्द्रा ।
पुनर्वसू सूनृता चारु पुष्यो भानुराश्लेषा अयनं मघा मे ॥
पुण्यं पूर्वा फल्गुन्यौ चात्र हस्तश्चित्रा शिवा स्वाति सुखो मे अस्तु ।
राधे विशाखे सुहवानुराधा ज्येष्ठा सुनक्षत्रमरिष्ट मूलम् ॥
अन्नं पूर्वा रासतां मे अषाढा ऊर्जं देव्युत्तरा आ वहन्तु ।
अभिजिन्मे रासतां पुण्यमेव श्रवणः श्रविष्ठाः कुर्वतां सुपुष्टिम् ॥
आ मे महच्छतभिषग् वरीय आ मे द्वया प्रोष्ठपदा सुशर्म ।
आ रेवती चाश्वयुजौ भगं म आ मे रयिं भरण्य आ वहन्तु ॥

(XIX 7, 2-5)

3 शं नो ग्रहाश्चान्द्रमसाः शमादित्यश्च राहुणा (XIX 9, 10)

4. तयाहं सर्वं पश्यामि यश्च शूद्र उतार्यः । (IV 20, 4)

5 प्रियं मा दर्भ कृणु ब्रह्मराजन्याभ्यां शूद्राय चार्याय च ।

(XIX 32, 8)

குஷ்டம் எல்லா நோய்களுக்கும் மருந்தாகும் என முதன் முதலில் இக்ஷ்வாகு அறிந்தனர். பிரஹ்லாதன் மகனாகிய விரோசனன்,[2] வேனன் மகனாகிய ப்ருது[3] இவர்களின் பெயர் குறிக்கப்பட்டன. அவ்வாறே வைசிரவணனான குபேரனது பெயரும் காணப்படும்.[4]

பிரும்மத்தைக் குறிக்கக் கேனோபநிஷத்தில் காணப்படும் யக்ஷ என்ற சொல் ஈண்டு வழங்கப்பட்டுள்ளது.[5] விருந்தினன் சுரோத்ரியனாய் இருப்பின், அவர்க்கு முன்னர் யஜமானன் உண்ணக்கூடாதென விதிக்கப்பட்டுள்ளது.[6] ஒருவன் இறந்தபின் ஸ்வர்க்கத்தில் தன் மனைவி மக்களோடு சேர்வதாகக் கருதப்பட்டது.[7] இப்போது வழங்கும் ய:பதி. என்பதற்குப் பிரதியாக அங்கு யஸ்பதி என வழங்கப்பட்டது.[8] மெய் இடையிடாமல் இரண்டு உயிர்கள் மிகுதியாய் வழங்கப்பட்டன.

1 यं त्वा वेद पूर्व इक्ष्वाको यं वा त्वा कुष्ठ काम्यः (अ वे XIX 39, 9)

2 तस्या विरोचनः प्राह्लादिर्वत्स (VIII 13 1)

3 तां पृथी वैन्योऽधोक् तां कृषिं च सस्यं चाधोक् (VIII 13, 11)

4 तस्याः कुबेरो वैश्रवणो वत्स आसीत् (VIII 14, 10)

5. महद् यक्षं भुवनस्य मध्ये तपसि क्रान्तं सलिलस्य पृष्ठे ।
तस्मिन् छ्रयन्ते य उ के च देवा वृक्षस्य स्कन्धः परित इव शाखाः ॥
(X 7, 38)

6 एष वा अतिथिर्यच्छ्रोत्रियस्तस्मात् पूर्वो नाश्नीयात् (IX 8, 7)

7 स्वर्गं लोकमभि नो नयासि सं जायया सह पुत्रैः स्याम (XII 3, 17)

8 अ वे II 2, 1

## யஜுர்வேதஸம்ஹிதை — அதன் வரலாறு

வசனநடையிலுள்ள வேதவாக்கியங்கட்கு யஜுஸ் எனப் பெயர். அவற்றை ஸம்ஹிதையிற் கொண்ட வேதத்திற்கு யஜுர்வேதஸம்ஹிதை எனப் பெயர். அவ்வேதத்திற்கு 101 சாகைகள் இருந்தன என்பர் மஹாபாஷ்யகாரர்.[1] அவற்றுள் சில சாகைகளே இப்போது அத்தியயனஞ் செய்யப்படுகின்றன. அவை இரண்டு வகையாகக் காணப்படுகின்றன. சிலவற்றுள் ஸம்ஹிதையில் மந்திரங்கள் மாத்திரமும், பிராம்மணங்களில் பிராம்மணங்கள் மாத்திரமும் காணப்படுகின்றன. சிலவற்றுள் ஸம்ஹிதையில் மந்திரங்களும் பிராம்மணங்களும், பிராம்மணங்களிலும் அவ்வாறே மந்திரங்களும் பிராம்மணங்களும் காணப்படுகின்றன. முற்பகுதியைச் சேர்ந்தவற்றைச் சுக்லயஜுர்வேதம் என்றும், பிற்பகுதியைச் சேர்ந்தவற்றைக் கிருஷ்ணயஜுர்வேதம் என்றும் வழங்குவர்.

அவ்வாறு இருத்தற்கு வாயுபுராணமும் விஷ்ணுபுராணமும் பின் வருங் காரணங் கூறுகின்றன :— "பாதராயணவியாஸர் யஜுர்வேதத்தை வைசம்பாயனருக்கும்,[2]

1. एकशतमध्वर्युशाखाः (महाभाष्ये 1, 1, 1)
2. अस्मिन्युगे कृतो व्यासः पाराशर्यः परन्तपः ।

... ... ... ...

ऋग्वेदश्रावकं पैलं जग्राह विधिवद्द्विजम् ।
यजुर्वेदप्रवक्तारं वैशम्पायनमेव च ॥ (वा. पु. 60, 11, 14),
(वि. पु. 3, 5)

विव्यास वेदान्यस्मात्स तस्माद् व्यास इति स्मृतः ।
वेदानध्यापयामास महाभारतपञ्चमान् ।
सुमन्तुं जैमिनिं पैलं शुकं चैव स्वमात्मजम् ।
प्रभुर्वरिष्ठो वरदो वैशम्पायनमेव च ॥ (म. भा. आदि. 64, 130–132)

அவர் தன் சிஷ்யர்களுக்கும் உபதேசஞ் செய்தனர். ஒருகாலத்தில் வைசம்பாயனர்க்கு பிரும்மஹத்திதோஷம் வர, அதனைப் பாகித்துக்கொள்ள அவர் தன் சிஷ்யர்களை வேண்டினர். அவர்களுள் ஒருவரான யாஜ்ஞவல்க்யர் தானே அதனை ஏற்றுக்கொள்வதாகக் கூற, அதனைக் கேட்டு வைசம்பாயனர் கோபங்கொண்டு, யாஜ்ஞவல்க்யர் தன்னிடம் கற்றுக்கொண்டதைக் கக்கிவிடும்படி அவர்க்குக் கூற, அவர் அதனைக் கக்க, ஏனைய சிஷ்யர்கள் தித்திரி உருவங் கொண்டு கக்கப்பட்ட பொருளை உட்கொண்டனர்.[1] ஆகலின்

1 शिष्यानथ समानीय स वैशम्पायनोऽब्रवीत् ।
ब्रह्मवध्या चरध्वं वै मत्कृते द्विजसत्तमा ॥
याज्ञवल्क्य उवाच—
अहमेव चरिष्यामि तिष्ठन्तु मुनयस्त्विमे ।

... ...

एवमुक्तस्तत क्रुद्धो याज्ञवल्क्यमथाब्रवीत् ।
उवाच यत्त्वयाधीत सर्वं प्रत्यर्पयस्व मे ।
एवमुक्त स रूपाणि यजूंषि प्रददौ गुरो ।
रुधिरेण तथाक्तानि छर्दित्वा ब्रह्मवित्तम ।
तत स ध्यानमास्थाय सूर्यमाराधयद्द्विजा ।

... ...

तानि तस्मै ददौ तुष्ट सूर्यो वै ब्रह्मरातये ।
अश्वरूपाय मार्ताण्डो याज्ञवल्क्याय धीमते ।
यजूंष्यधीयन्ते यानि ब्राह्मणा येन केन च ।
अश्वरूपाय दत्तानि ततस्ते वाजिनोऽभवन् ।
ब्रह्महत्या तु यैश्चीर्णा चरणाच्चरका स्मृता ।
वैशम्पायनशिष्यास्ते चरका समुदाहृता ॥ (वा पु 61 15-23)
यजूंष्यथ विसृष्टानि याज्ञवल्क्येन वै द्विज ।
जगृहुस्तित्तिरा भूत्वा तैत्तिरीयास्तु ते तत ॥ (वि पु 3, 5, 13)

அச்சிஷ்யர்களில் மூலமாய் வந்த சாகைகட்குத் தைத்திரீய சாகை எனப் பெயர் வந்தது. ப்ரும்மஹத்திதோஷத்தை ஏற்றுக் கொண்ட காரணம் பற்றி அவர்க்குச் சரகர் எனப் பெயர் வந்தது.

யாஞ்யவல்க்யர் சூரியனை உபாஸித்து அவருடைய அருளால் யஜுர்வேதத்தை அறிந்தனர். குதிரையின் உருவங் கொண்டு அவர் அதனை அறிந்துகொண்டமையால் அவர் சிஷ்யர் கட்கு வாஜினர் எனப் பெயர் வந்தது.

* பாணினி இயற்றிய அஷ்டாத்யாயியில் தித்திரி, வைசம்பாயனர், கலாபி முதலியோர் வேதவாசிரியர்களாகக் கூறப் பட்டனர்.[1] வைசம்பாயனரின் சிஷ்யராகக் கடரும், கலாபியும் மஹாபாஷ்யத்திற் கூறப்பட்டனர்.[2] வரதந்து, கண்டிகர் முதலியன ரிஷிகளின் பெயராயிருத்தலின், தித்திரி என்பதும் ஒரு ரிஷியின் பெயராயிருத்தல் கூடும். அவ்வாறாயின் தைத்திரீயசாகை என்பது வைசம்பாயனரின் சிஷ்யர்களுள் ஒருவரான தித்திரியால் உபதேசிக்கப்பட்ட சாகை எனக் கொள்ளலாம். அப்போது காடகஸம்ஹிதை என்பது கடரால் உபதேசிக்கப்பட்ட சாகையின் ஸம்ஹிதை எனக் கொள்ளல் தகும். தற்போது பதிப்பிக்கப்பட்ட காடகஸம்ஹிதையில் ஒவ்வொரு ஸ்தானத்தின் முடிவில் சரகசாகையைச் சேர்ந்த காடகத்தில்[3] என்ற வழக்கும் கிருஷ்ணயஜுர்வேதீய-தைத்திரீயஸம்ஹிதாபாஷ்யம் என்ற ஸாயணாசாரியர் வழக்

1. तेन प्रोक्तं (4, 3, 101), तित्तिरिवरतन्तुखण्डिकोखाच्छण् (4, 3, 102); कलापिवैशम्पायनान्तेवासिभ्यश्च (4. 3, 104)
2. वैशम्पायनान्तेवासी कठः, कठान्तेवासी खाडायनः, वैशम्पायनान्तेवासी कलापी (महाभाष्यम् 4, 3, 104)
3. इति श्रीयजुषि काठके चरकशाखाया .... प्रथमं स्थानकम् ।

இய சொல்லும்[1] அக்கொள்கையை வலியுறுத்தும். இக் கொள்கையைக் கொள்ளின் வைசம்பாயனரின் சிஷ்யர்கள் தித்திரிப்பறவை யுருவங் கொண்டனர் என்பதும, அவர்கள் அக்காரணம் பற்றித் தைத்திரீயர் எனக் கூறப்பட்டனர் என்பதும், கிருஷ்ணயஜுர்வேதமும் தைத்திரீயமும ஒன்று என்பதும், பிற்காலத்தில் தித்திரி என்ற சொல் ஒரு ரிஷியின் பெயர் என்பதை மறந்து பறவையின் பெயர் எனச் சிலர் நினைத்தமை யால் வந்த கொள்கை என்பதும புலப்படும்.

யாஞ்யவல்கியரால் உபதேசிக்கப்பட்டதைச் சுக்லயஜுர்வேதம் என்றும், வைசம்பாயனரால் உபதேசிக்கப்பட்டதைக் கிருஷ்ணயஜுர்வேதம் என்றும் வழங்குகின்றனர். இவ் வழக்கு ஸாயணாசாரியரது காலத்திற்கு முன்னரே வந்திருத்தல் கூடும் என்பது அவருடைய பாஷ்யத்தால் விளங்கும்.

முதலில் யஜுர்வேதம் என்ற பெயரே இருந்தது என்பதும யாஞ்யவல்கியரின் வேதம் சுக்லயஜுர்வேதம் எனப் பின்னர் பெயரிடப்பட்டது எனபதும், அதனபின்னரே கிருஷ்ணயஜுர்வேதம் என்ற பெயர் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும என்பதும் வெளிப்படை.

சுக்லயஜுர்வேதம் என்ற பெயர் எவ்வாறு வந்தது என ஆராய்தல் வேண்டும். சூரியனுடைய அருளால அறியப் பட்டமையின அப்பெயர் வந்தது என்பர் சிலர். அவ் வேதத்துள் ஸம்ஹிதைகளில் மந்திரபாகமும், பிராமணங் களில் பிராம்மணபாகமுமே இருக்கின்றமையால் அப்பெயர் வந்தது என்பர் மற்றோர். அதற்கு மாறுபட்டது கிருஷ்ணயஜுர் வேதம் ஆகும. இங்கு ஸம்ஹிதை, பிராம்மணம் இரண்டி லுள்ளும் மந்திரங்களும் பிராம்மணங்களும் காணப்படுகின்றன.

1. इति श्रीमत्सायणाचार्यविरचिते माधवीये वेदार्थप्रकाशे कृष्ण-यजुर्वेदीयतैत्तिरीयसंहिताभाष्ये ..... ।

யஜுர்வேதசாகைகளுள் காணப்படும் மந்திரங்கள் ருக்வேதம், அதர்வவேதம் இவற்றுள் காணப்படும் ருக்குக்களாகவும், அவற்றிற் காணப்படாத ருக்குக்களாகவும், யஜுஸ்களாகவும் உள்ளன.[1]

யஜுர்வேதத்தில் 101 சாகைகள் இருந்தன என்றும்,[2] அவற்றுள் 15 வாஜஸநேயிசாகை என்றும்[3] வாயுபுராணங் கூறும். வைசம்பாயனரின் சாகை 27[4] என விஷ்ணுபுராணங் கூறும். ஆயினும் தற்போது கிருஷ்ணயஜுர்வேதத்துள் கட-சாகை, மைத்ராயணீயசாகை, தைத்திரீயசாகை இம்மூன்றே பாரதவர்ஷத்தில் அத்தியயனஞ் செய்யப்படுகின்றன என்பர். மைத்ராயணீயசாகைக்குக் காலாபசாகை என மற்றொரு பெயரும் உண்டு. அவற்றுள் கடசாகை காச்மீரத்திலும், மைத்ரா-யணீயசாகை ஆர்யாவர்த்தத்தின் மத்திய பாகத்திலும், தைத்திரீயசாகை நர்மதைக்குத் தெற்கிலுள்ள நாட்டிலும் அத்தியயனஞ் செய்யப்படுகின்றன. சுக்லயஜுர்வேதத்துள்

1. पुनरूर्जा निवर्तस्व पुनरग्न इषायुषा ।
पुनर्नः पाहि विश्वतः ॥ (तै. सं. 1, 5, 3, 3)
सह रय्या निवर्तस्वाग्ने पिन्वस्व धारया ।
विश्वप्स्निया विश्वतस्परि तै. सं. [1, 5, 3, 3]
(இந்த ருக்குக்கள் ருக்வேதம் அதர்வவேதம் இவற்றுள் இருப்பதாகத் தெரியவில்லை.)

2. शतमेकाधिकं कृत्स्नं यजुषां वै विकल्पकाः [वा. पु 61, 26]

3. इत्येते वाजिनः प्रोक्ता दश पञ्च च स्मृताः [वा. पु. 61, 26]

4 यजुर्वेदतरोश्शाखाः सप्तविंशन्महामुनिः [वि. पु. 3, 5, 1]

காண்வசாகையும் மாத்தியந்தினசாகையுந்தான் வழக்கில் உள்ளன. அவற்றுள் காண்வசாகை தக்ஷிணதேசத்திலும், மாத்தியந்தினசாகை ஆரியாவர்த்தத்தின் கீழ்ப்பக்கம் நடுப்பக்கம் இவற்றிலும் அத்தியயனஞ் செய்யப்படுகின்றன. இம்மூன்று சாகைகளும் வால்மீகிராமாயணத்திற் குறிக்கப்பட்டது காண்க[1]



1 कौसल्या च य आशीर्भिर्भक्त पर्युपतिष्ठति ।
आचार्यस्तैत्तिरीयाणामभिरूपश्च वेदवित् ॥
... ... . . . .
ये चेमे कठकालापा बहवो दण्डमाणवा ।
नित्यस्वाध्यायशीलत्वान्नान्यात् कुर्वन्ति किञ्चन ॥
[रा. अयो. 32, 15-8]

¹ காடகஸம்ஹிதையில் நான்கு காண்டங்களும், 53 ஸ்தானகங்களும் உள்ளன. இரண்டாம் காண்டத்திற்கு

## काठकसंहितायां विषयाः ॥

### इठिमिका नाम प्रथमो ग्रन्थः

| | |
|---|---|
| 1. पुरोडाश | 10. आग्नावैष्णवम् |
| 2. अध्वरम् | 11 मारुतम् |
| 3 ज्योतिरिकम् | 12. पयस्स्थानकम् |
| 4 ब्रह्म | 13 पशुबन्धम् |
| 5 यजमानम् | 14 वाजपेयम् |
| 6. अग्निहोत्रब्राह्मणम् | 15. श्रीराजसूयम् |
| 7. आलोभी | 16. अग्निवीशिका |
| 8 द्विशस्स्थानकम् | 17. ध्रुवक्षिति |
| 9 उत्सीदनम् | 18. चमाः |

### मध्यमिका नाम द्वितीयो ग्रन्थः

| | |
|---|---|
| 19. सावित्रा | 25. इषु |
| 20 अपेतवीतम् | 26 धिष्ण्यम् |
| 21 पञ्चचूडम् | 27. वाचस्पति |
| 22 स्वर्गम् | 28 आयुष्यम् |
| 23. दीक्षितम् | 29 दीर्घजिह्वी |
| 24 स्वार्गीति | 30 पार्थिवनम् |

மத்யமிகா என்ற பெயர் உள்ளமையால் 13 சூத்ரங்களைக் கொண்ட நான்காவது காண்டம் பின்னர் சேர்க்கப்பட்டது எனக் கூறல் தகும்.

## ओरिमिका नाम तृतीयो ग्रन्थः

| | |
|---|---|
| 31. पुरोडाशब्राह्मणम् | 36. चातुर्मास्यानि |
| 32. यजमानब्राह्मणम् | 37. सवाः |
| 33. सत्राणि | 38. सौत्रामणी |
| 34. एकादशिनी | 39. यदक्रन्दः |
| 35. प्रायश्चित्तिः | 40. हिरण्यगर्भः |

## अश्वमेधाद्यनुवचनानि नाम पञ्चमो ग्रन्थः

| | |
|---|---|
| 41. पन्थानुवचनम् | 48. पेत्वानुवचनम् |
| 42. गणानुवचनम् | 49. रोहितानुवचनम् |
| 43. अनुवचनम् | 50. सोमानुवचनम् |
| 44. मेपानुवचनम् | 51. नमस्कारवचनम् |
| 45. मितानुवचनम् | 52. अलिंबन्दानुवचनम् |
| 46. जीमूतानुवचनम् | 53. शादानुवचनम् |
| 47. इन्द्रानुवचनम् | |

सावित्रा (19), अपेतवीतम् (20) முதலிய சூத்ரங்களின் பெயர்கள் அவற்றைத் தொடங்கும் சொல்லால் வழங்கப்பட்டன என்பது நோக்கத்தக்கது.

* மைத்ராயணீயஸம்ஹிதையில் நான்கு காண்டங்களும், 54 ப்ரபாடகங்களும் உள்ளன. இரண்டு, மூன்று, நான்கு ஆம் காண்டங்கள் முறையே மத்யமகாண்டம், உபரிகாண்டம், கிலகாண்டம் எனப் பெயரிடப்பட்டன. இதை நோக்கின்

* प्रथमकाण्डः

1. दर्शपूर्णमासौ
2. अध्वरः
3. ग्रहाः
4. यजमानब्राह्मणम्
5. अग्न्युपस्थानम्
6. आधानम्
7. पुनराधानम्
8. अग्निहोत्रब्राह्मणम्
9. चतुर्होतारः
10. चातुर्मास्यानि
11. वाजपेयः

मध्यमकाण्डः

1-4. काम्या इष्टयः
5. काम्याः पशवः
6. राजसूयः
7-13. अग्निचितिः

उपरिकाण्डः

1-4. अग्निचितिब्राह्मणम्
5-10. अध्वरादीनां त्रयाणां विधिः
11. सौत्रामणी
12-16. अश्वमेधः

खिलकाण्डः

1. पुरोडाशनाम्रणम्
2. गोनामिक
3-4. राजसूयब्राह्मणम्
5-8. अध्वरादीनां त्रयाणां विधि.
9. प्रवर्ग्य
10-14. याज्यानुवाक्याः

நான்காம் காண்டம் பின்னர்ச் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும். இங்குள்ள காண்டம் ப்ரபாடகம் இவற்றின் முறை காடக ஸம்ஹிதையின் காண்டம் ஸ்தானகம் இவற்றின் முறையை ஒத்தது.

தைத்திரீயஸம்ஹிதையில் 7 காண்டங்களும் 44 ப்ரபாடகங்களும் உள. புனைப்பதிப்பில் வேதத்தின் மூலத்தைக் கூறுமிடத்து அஷ்டகம் எனவும், பாஷ்யத்தில் காண்டம் என்றும் வழங்கப்பட்டுளது. அன்றியும் வைதிகஸம்பிரதாயத்தில் அஷ்டகமென வழங்கப்படினும் பாஷ்யத்தில் கூறப்பட்ட காண்டம் என்ற வழக்கே தகுந்தது என்ற கீழ்க்குறிப்பும் உளது.*

* प्रथमकाण्ड :

1-5. सौम्यकाण्डम्

6-7. याजमानकाण्डम्

8. मन्त्रकाण्डम् (राजसूय., सौत्रामणी . . .)

द्वितीयकाण्डः

1-6. विकृतिबोधकं काण्डम्

तृतीयकाण्डः

1-5. औपानुवाक्यकाण्डम्

तुरीयकाण्डः

1-7. अग्निकाण्डम्

पञ्चमकाण्डः

1-7. अग्निकाण्डब्राह्मणम्

षष्ठकाण्डः

1-6 सोममन्त्रब्राह्मणम्

सप्तमकाण्ड

1-5. सोमयागविकृतिकाण्डम्

சுக்லயஜுர்வேதத்தைச் சேர்ந்த காண்வசாகை, மாத்தியந்தினசாகை இரண்டனுள்ளும் 40 அத்தியாயங்கள் உள.* இரண்டு சாகைகளுக்கும் உள்ள வேறுபாடு மிகச் சிறிதே என்பர். இந்த ஸம்ஹிதைகளில் முன்னர் முதல் பதினெட்டு அத்தியாயங்களே இருந்திருத்தல் கூடும். ஏனெனில் இப்பகுதியிலுள்ள மந்திரங்கள்தான் சதபதப்பிராம்மணத்தில் விசாரிக்கப்படுகின்றன. அன்றியும் இம்மந்திரங்களே பெரும்பாலும் தைத்திரீயஸம்ஹிதையிற் காணப்படுகின்றன. அதன் பின்னர் பத்தொன்பது முதல் இருபத்தைந்து முடிய பின்னர் இணைக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில் இருபத்தாறு முதல் கிலம் என உவ்வடபாஷ்யம் கூறும். காத்யாயனர் இயற்றிய ஸர்வாநுக்ரமணியிலும் அவ்வாறு கூறப்பட்டுளது என்பர். பத்தொன்பதாம் அத்தியாயம் முதல் முப்பத்தொன்பதாம் அத்தியாயம் வரை உள்ள மந்திரங்கள் தைத்திரீய-பிராம்மணத்திலும், தைத்திரீய-ஆரண்யகத்திலும் காணப்படுகின்றன.

* I. 1–2. दर्शपूर्णमासमन्त्राः

3. आधानाग्निहोत्रादिमन्त्राः

4–8. अग्निष्टोममन्त्राः

9–10 वाजपेयराजसूयमन्त्राः

11–18. अग्निचयनमन्त्राः

II. 19–21. सौत्रामणी

22–25. अश्वमेधः

III. 26–35. पुरुषमेधः, सर्वमेधः, पितृमेधः

36–39. प्रवर्ग्यः

IV. 40. ईशावास्योपनिषत्

யஜுர்வேதஸம்ஹிதையிலுள்ள காண்டங்களை ஸௌம்ய காண்டம், ஆக்னேயகாண்டம், வைச்வதேவகாண்டம், ப்ரஜாபதிகாண்டம் (ஸ்வாயம்புவகாண்டம்) என நான்காகப் பௌதாயனர் பிரித்து தம் கிருஹ்யசூத்திரத்திற் கூறுவர்.[1]

யஜுர்வேதஸம்ஹிதைகளில் மந்திரபிராமணங்களின் முறை யாகங்களில் அத்வர்யுவால் அனுஷ்டிக்கப்படவேண்டிய முறையை ஒட்டியது. ஆகலின் ருக்வேதஸம்ஹிதைமந்திரங்களின் முறைக்கும் யஜுர்வேதஸம்ஹிதைமந்திரபிராமணங்களின் முறைக்கும் உள்ள வேறுபாடு நோக்கத்தக்கது.

ஈசாவாஸ்யோபநிஷத் ஒன்றே ஸம்ஹிதையிற் காணப்படும் உபநிஷத். ஏனையவெல்லாம் அவ்வவ்வேதப்பிராமணங்களின் இறுதியிலே காணப்படும்.

---

1. आध्वर्यवं ग्रहा दाक्षिणानि समिष्टयजूंषि अवभृतयजूंषि वाजपेयश्शुक्रियाणि सत्रा इति सब्राह्मणानि सानुब्राह्मणानि सौम्यानि ।
अग्न्याधेयमग्निहोत्रमग्न्युपस्थानमग्निचयनं सावित्रं नाचिकेतं चातुर्होत्रीयं वैश्वसृजारुणा इति ब्राह्मणानि सानुब्राह्मणानि आग्नेयानि ।
राजसूय. पशुबन्धः इष्टय नक्षत्रेष्टय अश्वमेधः पुरुषमेध. सौत्रामण्यच्छिद्राणि पशुहौत्रमुपनिषद इति सब्राह्मणानि सानुब्राह्मणानि वैश्वदेवानि ।
स्वायम्भुवं काण्डं काठके कठिनम् ...... [बौ. गृह्य. III, 1]

## அத்தியாயம் 16

### யஜுர்வேதஸம்ஹிதைகளிலிருந்து அறியப்படுஞ் செய்திகள்

**தேவாஸுரரின் வரலாறு :—**

*ருக்வேதத்தில் தேவன், அஸுரன் என்ற சொற்கள் ஒளியுடையோன் அல்லது ஒளிகொடுப்போன், பலமுள்ளவன் அல்லது உயிர்கொடுப்போன் என்ற பொருளில் மித்ர அக்கினி முதலியோர்க்கு அடைமொழிகளாக வழங்கப்பட்டன. த்வஷ்டா இந்திரனுக்கு வஜ்ரத்தைச் செய்ததாகக் கூறப்பட்டது.[2]*

*யஜுர்வேதத்திலே ப்ரஜாபதி தேவரையும் அஸுரரையும் படைத்தார் என்றும்,[3] தொடக்கத்தில் அஸுரர்கள் பலமுள்ளவர்களையும்,[3] தேவர்களைக்காட்டிலும் எண்ணிக்கையில் அதிகமாயிருந்தனர் என்றும்,[4] தேவர்கள் செய்த யாகங்களை*

1. अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् । (ऋ. वे. 1, 1, 1)
वि सुपर्णो अन्तरिक्षाण्यख्यद्गभीरवेपा असुरः सुनीथः (1, 35, 7)
ईडांवा॰ एषो असुर प्रजावान्दीर्घो रयिः पृथुबुध्नः सभावान् (4, 2, 5)
2. त्वष्टा यद्वज्रं सुकृतं हिरण्ययं सहस्रभृष्टिं स्वपा अवर्तयत ।
धत्त इन्द्रो नर्यपांसि कर्तवे ...... (85, 9)
3. प्रजापतिर्देवासुरानसृजत ...... सोऽसुराननु यज्ञोऽपाक्रामत (तै. सं. 3, 3 7, 1)
4. कनीयांसो देवा आसन्भूयांसोऽसुराः (5, 3, 11 1)

அவர்களும் செய்தனர் என்றும், இருவர்களுக்கும் போட்டி இருந்தது என்றும்,[2] அவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டையிட்டனர் என்றும்,[3] இந்திரனுக்கு விஷ்ணு உதவினர் என்றும்,[4] தேவர்கள் அஸுரர்களை வென்றனர் என்றும்[5] கூறப்பட்டது. த்வஷ்டாவின் மகன் ஆன விச்வரூபன் தேவர்களுக்குப் புரோஹிதன் ஆக இருந்தான். அவன் அஸுரர்களின் மருகனாதலின் யாகபாகங்கள் தேவர்களுக்கு உரியன என வெளிப்படையாகவும், அஸுரர்கட்கு உரியன என இரகசியமாகவும் சொல்லினன். இதனை இந்திரன் அறிந்து அவனுடைய தலைகளை வெட்டினன்.[6] அதைக் கண்டு கோபங்கொண்டு த்வஷ்டா இந்திரனுக்கு ஸோமத்தில் பாகங்கொடாது ஸோம யாகஞ் செய்ய இந்திரன் பலாத்காரமாக ஸோமத்தைக்

1. देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत (तै. स 3, 2, 2, 2)

2 देवासुरा एषु लोकेष्वस्पर्धन्त (2, 6 1, 3)

3 देवासुरा संयत्ता आसन् (1, 5 1, 1)

4 अथाब्रवीद् वृत्रमिन्द्रो हनिष्यन्त्सखे विष्णो वितरं वि क्रमस्व [3 3 11, 3]

5 यज्ञस्य वै समृद्धेन देवा सुवर्गं लोकमायन्
यज्ञस्य व्यृद्धेनासुरान्पराभावयन् [1, 6, 10 2]

6 विश्वरूपो वै त्वाष्ट्रः पुरोहितः देवानामासीत्
स्वस्रीयोऽसुराणाम् . स प्रत्यक्षं देवेभ्यो भागमवदत् परोक्षमसुरेभ्य
तस्मादिन्द्रोऽबिभेत् . तस्य वज्रमादाय शीर्षाण्यच्छिनत्
[2, 5, 1, 1]

கொள்ள, எஞ்சிய ஸோமத்தால் இந்திரனைக் கொல்லும் மகன் பிறக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு இந்திரனாற் கொல்லப் படும் மகன் பிறக்க என்ற பொருளைக் கொடுக்கும் மந்திரத் துடன் தவஷ்டா ஹோமஞ் செய்தனன்.[1] அம்மகன் இந்திரனால் கொல்லப்பட்டான். தேவர்கட்கு தூதன் அக்கினி என்றும் அஸுராகட்கு சுக்கிரன் என்றும்,[2] தேவாகட்குப் புரோகிதன் பிருகஸ்பதி என்றும் அஸுராகட்குச் சண்டா-மாக்கௌ[3] என்றுங் கூறப்பட்டது. தேவாகளைக் குறித்து ஹோமஞ் செய்யும் அக்கினிக்கு ஹவ்யவாஹனன் என்றும்[4] அஸுராகளைக் குறித்து ஹோமஞ் செய்யும் அக்கினிகது ஸஹரக்ஷா[4] என்றும் பெயர். ஸெண்ட்அவெஸ்தாவில் தேவர்களைப் பகைவராகவும்[5] அஸுராகளைச் சிறந்தவராகவும கூறப்படுகின்றமையால், பாரஸீகர்கள் அஸுரர்களை வணங்கி னா எனக் கூறலாம்.

1. त्वष्टा हतपुत्रो वीन्द्रं सोममाहरत् तस्मिन्निन्द्र उपहवमैच्छत तं नोपाह्वयत पुत्रं मेऽवधीरिति, स यज्ञवेशसं कृत्वा प्रासहा सोममपिबत् तस्य यदत्यशिष्यत तत्त्वष्टाहवनीयमुपप्रावर्तयत् स्वाहेन्द्रशत्रुर्वर्धस्वेति [तै. सं. 2, 4, 12, 1]
2. अग्निर्देवानां दूत आसीदुशना काव्योऽसुराणाम् [2, 5, 8, 5]
3. बृहस्पतिर्देवानां पुरोहित आसीच्छण्डामर्कावसुराणाम् [तै. सं. 6, 4, 10, 1]
4. त्रयो वा अग्नयो हव्यवाहनो देवानां कव्यवाहन पितृणा सहरक्षा असुराणाम् [तै. सं. 2, 5, 8. 6]
5 I drive away the Varenya Dævas. (Sacred Books of the East Vol. IV X, 14)

தேவதைகளின் நிலை —

ருக்வேதத்தில் ருத்திரன் ஜ்வரங்களைத் தீர்க்கும் சிறந்த வைத்தியன் எனவும்,[1] அவன் கொடுக்கும் மருந்துகள் மனிதர் நூறு ஆண்டு ஜீவித்திருக்கப் பயன்படும்[2] எனவும் கூறப்பட்டது. அசுவினிகளோ வானவைத்தியர்களாகக் கூறப்பட்டனர் என்னலாம். யஜுர்வேதத்திலோ அசுவினிகளே தேவர்களின் வைத்தியர்களாகக் கூறப்படுகின்றனர்.[3] ஆகவே வைத்தியத்தொழில் ருத்திரனை விட்டு அக்காலத்து நீங்கியது போலும். ருத்திரன் அசாந்தன் எனவும்,[4] க்ரூரன் எனவும்[5] பிநாகஹஸ்தன்[6] எனவும் க்ருத்திவாஸஸ் எனவும்[6] கூறப்படுகிறான். அஸுரர்க்கு இரும்பாலும் வெள்ளியாலும் தங்கத்தாலும் இயற்றப்பட்ட முப்புரங்கள் இருந்தன வென்றும், அப்புரங்களை அழித்து அவ்வஸுரர்களை ருத்திரன் கொன்றனர்.[7]

1 भिषक्तमं त्वा भिषजां शृणोमि (ऋ वे 2, 33 4)
अमीवाश्चातयस्वा विषूची (2 33, 2)

2 त्वादत्तेभीरुद्र शंतमेभि शत हिमा अशीय भेषजेभि (2 33, 2)

3 अश्विनौ वै देवानां भिषजौ (तै स. 2, 3, 11 1)

4 रुद्रोऽशान्त (7 5, 11, 1)

5 रुद्रो वै क्रूर (6, 1, 7, 7)

6 एष ते रुद्र भाग .. पिनाकहस्त कृत्तिवासा (1 8 6 2)

7. तेषामसुराणां तिस्र पुर आसन्नयस्मय्यवमाथ रजताथ हरिणी
रुद्रोऽग्रामृतन् स तिस्र पुरो भित्त्वैभ्यो लोकेभ्योऽसुरान् प्राणुदत (6, 2, 3, 1)

எனறும கூறபபடுகினறது பசுபதி[1] எனறும கணஙகளுககுப பதி[2] எனறும கூறபபடுகிறான இதனால ருததிரன ஸமஹார கா எனற எணணம இககாலதது வநதது எனனலாம பரஜாபதி உலகததைப படைபபவராகவும, விஷணு உலகததைப பாதுகாபபவராகவும கருதபபடடனா எனவுங கூறலாம

ஜலததிறகுப பதியாகவும அரசனாகவும வருணன கூறப படுகினறான[3] ருகவேதததில அவனுககுக கூறபபடடவை யெலலாம ஈணடுப பிரஜாபதிககுக கூறபபடடன எனபா

ஏனைய செயதிகள —

தேவாகளுககு மககள இருநதனா எனகக கூறப படுகினறது[4] தேவாகள கிழககுதிககையும, பிதிரா தெறகினையும, மனுஷயா மேறகினையும, ருததிரா வடககினையும தஙகள திககாகக கொணடனா[5] பிராமமணன பிறககுமபோதே ரிஷிகள, தேவாகள, பிதிராகள இவாகளுககுக கடனபடடவன ஆகினறான. அககடனகளை வேதாததியயனததாலும, யாகஞ

1 येपामीशे पशुपतिं पशूनाम् [तै स 3, 1, 4, *2]
प्राजापत्या वै पशवस्तेपां रुद्रोऽधिपति (3, 1, 5, 1)

2 रुद्रस्य गाणपत्यात् (4 1 2, 2)

3 आपो वरुणस्य पत्नय (5 5 4, 1)
आप शस्योना भवन्तु । यासा राजा वरुण (5, 6, 1, 1)

4 ते देवा अकामयन्त ते प्रजामविन्दन्त (6, 2, 8 1)

5 देवमनुष्या दिशो व्यभजन्त प्राचीं देवा दक्षिणा पितरं प्रतीचीं
मनुष्या उदीचीं रुद्रा (6, 1, 1, 1)

செய்வதாலும், மக்களைப் பிறத்தலாலும் ருஷிகளினின்றும்¹ தேவர்களின் விருப்பப்படி இந்திரன் வியாகரணம் இயற்றினான்² தேவகாரியங்களைச் செய்யும்போது உபவீதியாகவும் பிதிர் காரியங்களைச் செய்யும்போது பிராசீனாவீதியாகவும் மனுஷ்ய காரியங்களைச் செய்யும்போது நிவீதியாகவும் ஒருவன் இருக்க வேண்டும்³ விசுவாமித்திரரும் ஜமதக்கினியும் வசிஷ்டரோடு போட்டிபோட்டனர்⁴ பிராமணன் வைத்தியனாக இருத்தல் தகாது⁵ எண்கள் பத்துப்பத்தாக எண்ணப்பட்டன லக்ஷம் பத்துலக்ஷம், கோடி முதலிய எண்களைக் குறிக்கத் தனிச் சொற்கள் இருந்தன⁶ இந்திரனுக்குப் பிருஹஸ்பதி தேவஷ்ப

1 जायमानो वै ब्राह्मणस्त्रिभिर्ऋणवा जायते ब्रह्मचर्येण ऋषिभ्यो यज्ञेन देवेभ्यं प्रजया पितृभ्यं (तै स 6 3 10, 5)

2 ते देवा इन्द्रमब्रुवन्निमां नो वाचं व्याकुरु
तामिन्द्रो मध्यतोऽवक्रम्य व्याकरोत् (6 4 7, 3)

3 निवीतं मनुष्याणां प्राचीनावीतं पितृणामुपवीतं देवानाम् (2 5, 11, 1)

4 विश्वामित्रजमदग्नी वसिष्ठेनास्पर्धेताम् (3 1, 7 3)

5 ब्राह्मणेन भेषजं न कार्यम् (6 4 9 2)

6 एकस्मै स्वाहा विंशत्यै स्वाहा त्रिंशते स्वाहा (7 2 17 1)
शताय स्वाहा सहस्राय स्वाहाऽयुताय स्वाहा नियुताय स्वाहा प्रयुताय स्वाहार्बुदाय स्वाहा न्यर्बुदाय स्वाहा (7 2 20 1)

வந்ததாகவும், அதனைப் பூமிக்கும், மரத்திற்கும், பெண்களுக்கும் பிரித்துக் கொடுத்ததாகவும்[1] அதற்காக அவர்க்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வரன் கொடுத்ததாகவுங் கூறப்பட்டுளது.

யஜுர்வேதஸம்ஹிதையில் குருபஞ்சாலதேசங்கள் குறிக்கப்படுகின்றமையான் அக்காலத்தில் ஆரியர்கள் சுதுத்ரி, யமுனை இவற்றின் நடுவில் இருந்தனர், என்னலாம். சுக்ல-யஜுர்வேதஸம்ஹிதையின் 16, 30 அத்தியாயங்களில் அநுலோமர் பிரதிலோமர் இவர்களைப்பற்றி விரிவாய்க் கூறப்பட்டமையான ருக்வேதத்திற் கூறப்பட்ட நான்கு வர்ணங்கள் நன்கு பிரிவடைந்தன. ஸர்ப்பபூஜையும், ருக்வேதஸம்ஹிதை அதர்வவேதஸம்ஹிதை இவற்றிற் காணப்படாத இஷ்டகா மந்திரங்களும் புதிதாய்த் தோன்றின என்னலாம்.

யஜுர்வேதஸம்ஹிதைகள் ருக்வேதஸம்ஹிதை, ஸாம-வேதஸம்ஹிதை, அதர்வவேதஸம்ஹிதை இவற்றிற்குப் பின்னர் வந்தன எனக் கூறல் தகும். ஆயினும் ஆங்குள்ள மந்திரங்களெல்லாம், ருக் ஸாம இவற்றின் பின்னரே காணப்பட்டன எனக் கூறல் தகாது. யஜுர்வேதஸம்ஹிதைகள் யஜுர்வேதப்பிராமணங்களுக்கு முன்னர் தோன்றியவை எனப் பலர் கருதுகின்றனர். ஆனால் பிராம்மணத்தைப்பற்றித் தைத்திரீயஸம்ஹிதையிலும்[2] ஏனைய சாகஸம்ஹிதைகளிலுங் கூறப்பட்டமையால், எல்லாம் ஒரே காலத்தில் தொகுக்கப்பட்டிருத்தலுங் கூடும்.

1. स पृथिवीमुपासीददस्यै ब्रह्महत्यायै तृतीयं प्रतिगृहाणेति ... स वनस्पतीनुपासीददस्यै ब्रह्महत्यायै तृतीयं प्रति गृह्णीतेति ... स स्त्रीषंसादमुपासीददस्यै ब्रह्महत्यायै तृतीयं प्रति गृह्णीतेति ...
(2, 5, 1, 1-4)

2. इदं ब्राह्मणं ब्रूहि (3, 1, 9, 4)

உலகத்துள்ள மதசாஸ்திர ஆராய்ச்சிக்கும், மதங்களில் தேவதாத்தியானம் இன்றியமையாது எனக் கொள்வதற்கும் யஜுர்வேதஸம்ஹிதையறிவு பயன்படும் என்பர்.[1]

---

1 A History of Indian Literature by M Winternitz p 166)

## அத்தியாயம் 17

---

### ஸாமவேதஸம்ஹிதை

எவ்வேதத்து ஸம்ஹிதையில் ஸாமாக்கள் பெரும்பாலும் காணப்படுகின்றனவோ, அந்த ஸம்ஹிதைக்கு ஸாமவேத ஸம்ஹிதை என்று பெயர். கானம் பண்ணப்பட்ட ருக்குகளுக்கு ஸாமங்கள் எனப் பெயர்[1]. செய்யுள்வடிவங் கொண்ட வேதவாக்கியங்கட்கு ருக் எனப் பெயர் என்று முன்னரே கூறப்பட்டது.[2] பல சந்தஸ்ஸில் ருக்குக்கள் காணப்படுமாறு ஸாமங்களும் பலவகையாக உள்ளன. சில ருக்குக்கள் ஒரே வகையாகக் கானஞ் செய்யப்படுகின்றன ; அவற்றை ஏகஸாமி[3] என்ற பகுதியிற் காணலாம். சில ருக்குக்கள் பலவகையாகக் கானஞ் செய்யப்படுகின்றன ; அவற்றைப் பகுஸாமி[4] என்ற பகுதியிற் காணலாம். பலவகைப்பட்ட சந்தஸ்ஸுக்களிலுள்ள ருக்குக்கள் ஒரேவகையாகவும் கானஞ் செய்யப்படலாம்[5].

1. गीतिषु सामाख्या [जै. सू. 2, 1, 36]; ऋच्यध्यूढं नाम
2. तेषामृग्यत्रार्थवशेन पादव्यवस्था [जै. सू. 2, 1, 35]
3 एकसामि
4. बहुसामि
5. तत्सवितुर्वरे°णियोम्
भार्गो° देवस्य धीमाहीऽ॰
धियो¹⁰ यो नः प्रचो॰ऽ 1212

சாகையும்[1] அத்யயனஞ் செய்யப்படுகின்றன. கௌதும சாகை கூர்ஜரதேசத்திலும் அத்யயனஞ் செய்யப்படுகிறது என்பர். தென்னாட்டில் தற்போது கௌதுமசாகை இரண்டு வகையாக உள்ளன. ஒருவகை புல்லஸூத்ரத்திற்[2] கண்ட முறையை ஒட்டியும் மற்றொரு வகை அதனின்றும் சிறிது மாறு பட்டும் வழங்குகின்றன.[3] பின்னுள்ளதைப் பழைய பாடம் என்றும், முன்னுள்ளதைப் புதிய பாடம் என்றுங் கூறுவர். கௌதுமசாகைக்கும் ஜைமினீயசாகைக்கும் முக்கியமான வேறுபாடு பாடதிராகாலத்திலே எனத் தோன்றுகிறது.

கௌதுமசாகையில் ப்ரக்ருதிபாகம்[4] என்றும் விக்ருதி பாகம்[5] என்றும் இருவகுப்புக்கள் உள. ப்ரக்ருதிபாகம் வேய கானம்[6] ஆரண்யகேயகானம்[7] என இருபகுப்பினைக் கொண்டன.

1. जैमिनीयशाखा
2. फुल्लसूत्रम्
3. புல்லஸூத்ரத்தின் முறையை ஒட்டி தென்னாட்டில் அத்யயனம் செய்வித்தவர் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் தஞ்சாவூர் ஜில்லா திருவையாற்றில் இருந்த கிருஷ்ணஸ்வாமி ச்ரௌதிகள் ஆவர். மற்றொரு வகையை அத்யயனஞ் செய்வித்தவர் அவர் தகப்பனார் ராமச்சந்த்ர ச்ரௌதிகள் ஆவர். அவர் திருவிசநல்லூரில் இருந்தார். கிருஷ்ணஸ்வாமி ச்ரௌதிகளின் உருவம் திருவையாற்றில் தர்மஸம்வர்த்தனி கோயிலில் முன்மண்டபத்தூணில் தற்போது உளது.
4. प्रकृतिभागः
5. विकृतिभागः
6. वेयगानम्
7. अरण्येगेयगानम्

விக்ருதிபாகம் ஊஹகானம்[1] ரஹஸ்யகானம்[2] என இரண்டு பகுப்பினைக் கொண்டன. ப்ரக்ருதி, விக்ருதி என்ற பெயராலே ப்ரக்ருதிபாகமே முன்னர் இருந்தது என்பதும் அஃதே வேத பாகக் கருதப்பட்டது என்பதும், அதனை அத்தியயனஞ் செய்தலே நியமம் என்பதும், விக்ருதிபாகம் யாகங்களில் ப்ரக்ருதியிலிருந்து வகுத்துக்கூறிய ஸாமங்களைக் கொண்டது என்பதும், அதனை அத்தியயனஞ் செய்தல் நியமமில்லை என்பதும், அப்பகுதி பிற்காலத்துத் தொகுக்கப்பட்டது என்பதும் அறியத்தக்கது. ஸாமம் என்பது கானம்பண்ணப்பட்ட ருக். ஆகலின் ப்ரக்ருதிஸாமங்களின் ருக்குக்கள் பூர்வார்ச்சிகம்[3] என்ற நூலிலும் விக்ருதிஸாமங்களின் ருக்குக்கள் உத்தரார்ச்சிகம்[4] என்ற நூலிலுங் காணப்படுகின்றன. சுமார் 1549 ருக்குக்கள் ஸாம வேதத்தில் கானஞ் செய்யப்பட்டன; அவற்றுள் 75 ருக்குக்கள் ருக்வேதத்தில் இல்லை என்றும் ஏனைய ருக்வேதத்தின் எட்டு ஒன்பது மண்டலங்களில் உள்ளன என்றுங் கூறுவர். சில ருக்குக்கள் பூர்வார்ச்சிகம் உத்தரார்ச்சிகம் இரண்டிலுமுள்ளன. அவற்றுள் உத்தரார்ச்சிகத்துள்ள ருக்குக்களின் பாடம் ருக்வேதத்துள்ள ருக்குக்களின் பாடத்தை ஒத்திருக்கின்றது: பூர்வார்ச்சிகத்தில் உள்ளனவற்றின் பாடம் சிறிது வேறுபட்டுளது.

பூர்வார்ச்சிகத்துள் ஆறு ப்ரபாடகங்கள்[5] உள; முதல் ஐந்தனில் பப்பத்து தசதிகள்[6] உள; ஆறாவதில் ஒன்பது தசதிகளே உள. உத்தரார்ச்சிகத்தில் ஒன்பது ப்ரபாடகங்கள்

1. ऊहगानम्
2. रहस्यगानम्
3. पूर्वार्चिकम्
4. उत्तरार्चिकम्
5. प्रपाठक
6. दशति

உள. ஒவ்வொன்றிலும் இரண்டு மூன்று அத்தியாயங்கள் காணப்படுகின்றன. பூர்வார்ச்சிகத்துள் பன்னிரண்டு தசதிகள் அக்கினியையும், முப்பததாறு இந்திரனேயும், பதி ஞென்று ஸோமனேயும் தேவதையாகக் கொண்டன. வேய கானததில் ஆக்நேயம்,[1] ஐந்த்ரம்,[2] பாவமானம்[3] என்ற பகுதி களும், அரண்யகேயகானத்தில் ஆர்க்கபர்வம்,[4] த்வந்த்வபர்வம்[5] வ்ரதபாவம்[6], சுக்ரியபாவம்[7], மஹாநாம்நீபர்வம்[8] என்றபகுதி களும் உள்ளன. இறுதியில் பாருண்டஸாமம் உளது.

காலம்.—ருக்வேதஸம்ஹிதையிலே ரதந்தரம்,[9] ப்ருகத் ஸாமம[10] முதலிய வகைகள் கூறப்பட்டமையால், ருக்வேத மந்திரங்கள் ஸம்ஹிதையாகத தொகுக்கப்பட்ட காலத்திறகு முன்னரே ஸாமங்கள் கானம் பண்ணப்பட்டன என்பதும் யாகங்களில் வழங்கப்பட்டன வன்பதும் வெளிப்படை. அவை ஸம்ஹிதையாகத தொகுக்கப்பட்ட காலம் யஜுர்வேத ஸம்ஹிதைககு முன்னரே இருததல் கூடும். ப்ரகிருதி ஸாமங்கள் முதலில் தொகுக்கப்பட்டிருததல் கூடும். அதன் பின்னா விக்ருதிஸாமஙகள் தொகுக்கப்பட்டிருததல் வேண்டும்.

அதன சிறப்பு.—ஸாமங்களிலிருந்து தேசியவரலாறுகள் மிகுதியாக அறியப்படாவிடினும், பாரதவர்ஷததில் தொடக் கததில் கானம் எவ்வாறு இருந்தது என்பதும், அது யாகங் களில் வழங்கப்பட்டது என்பதும், செய்யுளைக் கானஞ் செய் தால் செய்யுளில் இல்லாத சில சொற்களைச் சேரததல் அவச்யம் என்பதும், ஸ்வரததில் ஈடுபட்டிருக்கும்போது

1. आग्नेयम्
2. ऐन्द्रम्
3. पावमानम्
4. अर्कपर्व
5. द्वन्द्वपर्व
6. व्रतपर्व
7. शुक्रियपर्व
8. महानाम्नीपर्व
9. रथन्तरम्
10. बृहत्साम

பதத்தைத தவறாகப் பிரிப்பினும்[1] அது தவறாகக் கருதப்படவில்லை என்பதும், கீதியே தேவர்களுக்கு மகிழ்ச்சியை ஊட்டிபது என்பதும், கீதிகள் பலவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன என்பதும், கீதியில் சில சொற்களைப் பலதடவை கானஞ் செய்யலாம் என்பதும், அவ்வழக்கு இண்டோயூரோபியன பாஷை வழங்கிய காலத்தே இருந்திருத்தல் கூடும் என்பதும் ஸாமவேதஸம்ஹிதையிலிருந்து அறியப்படுகின்றன.

---

## அத்தியாயம் 18

---

### பிராம்மணங்களின் பொதுத்தன்மை

*மந்திரங்களையும் பிராம்மணங்களையும் கொண்டது வேதம் என முன்னர்க் கூறப்பட்டது. மந்திரங்கள் பெரும்பாலும் ஸம்ஹிதையில் உள்ளன. ஏனைய பிராம்மணங்களில் உள்ளன. அவை* விதி,[1] அர்த்தவாதம்,[2] நாமதேயம்[3] *முதலியன ஆக இருக்கும். பிராம்மணங்கள் பெரும்பாலும் யஜுஸ் ஆகவே இருக்கும். மந்திரங்கள் தேவதைகளைப்பற்றிய துதிகளானமையால், அவை எங்கு எதற்காக எப்படி வழங்கப்படவேண்டும் என்பது ருத்விக்குக்களிடமிருந்து அறிதல் வேண்டும். அவை பிராம்மணங்களில் தான் கூறப்பட்டன. ஆகலின் யாகங்களில் ருத்விக்காக இருக்க விரும்புகின்றவர்கள் அவசியம் பிராம்மணங்களைப் படித்தல் வேண்டும். யாகங்களைப்பற்றிப் பிராம்மணங்கள் வருணிக்கின்றமையால், அவற்றை* யாகீயசாஸ்திரம்[4] *என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். உண்மையாக அவற்றை ஆயுமிடத்து அவற்றிலிருந்து நாட்டின் நிலை, மக்களின் மனநிலை, மக்களுள் ஒருவருக்கொருவர் கொள்ளும் அன்பு பகை முதலியன, நூலாராய்ச்சி முதலிய பல செய்திகளை ஒருவன் அறியலாம்.*

*பிராம்மணம் என்ற சொல்லின் நிர்வசனம் யாது எனின்,* பிரம்ம *என்ற சொல்லிலிருந்தேனும்* பிராம்மண *என்ற சொல்லிலிருந்தேனும் அது வந்திருக்கலாம் என்பர்.* பிரம்ம *என்ற சொற்கு மந்திரம் என ஒரு பொருள் உண்டு. பிராம்மணம்*

1. विधिः
2. अर्थवादः
3. नामधेयम्
4. यागीयशास्त्रम्

மநதிரததைபபறறிக கூறலின, பிரமமததோடு இயைபுபடடது பிராமமணம எனக கூறபபடடது, அலலது யாகததிதளள ருதவிககுககளுள பிரமமா எனபவா ஒருவராகலாலும, அவா யாகததைபபறறி எலலாவறறையும அறிநதவராய இருகக வேணடுமாதலாலும, அவாககு வேணடியவறறைக கூறும நூல பிராமமணம எனக கூறபபடடது எனனலாம, அலலது பிராமமணாகளதான யாகததில ருதவிககுககளாக இருகக வேணடும என்ற நியதி இருநதிருததலின, அவாகளுககு வேணடிய நூல பிராமமணம எனபபடடது எனறுங கூறலாம, இவறறுள முதனமையிற கூறபபடடதே சிறநததாகும

மநதிரநதானே யாகஙகளில வேணடும, பிராமமணஙகள எறறுககு என ஐயம நிகழலாம மநதிரஙகளின பொருளும, விநியோகமும நனகு மககளால அறியபபடட காலததில பிராமமணஙகள வேணடாம, சிறிது ஐயம நிகழநதபோது, அநத அநத மநதிரததின பினனரே அவறறைப பறறிப பிராமமணஙகளைக கூறுதல தகும அவவாறு கிருஷ்ணயஜுாவேத ஸமஹிதைகளில உளளது பினனா ஐயஙகள பலவகையாகத தோனற, அவறறைப போகக, ஸமஹிதையை விடடுத தனியாக பிராமமணஙகள தோனறியிருததல கூடும அதனபினனா ஒவவொரு சாகையிலும மநதிரபாகததையொடடிப பிராமமணபாகம வேணடும என்ற எணணம வநது பிராமமணஙகள பெருகின எனனலும பொருநதும

பிராமமணஙகளே ஸமஸகிருதமொழியின பழைய வசன நூலகள ஆகும அவறறிலுளள வசனநடை மிகப பழமையாய உளளது முறறுவினைகளைக கொணட சிறு சிறு வாககியஙகளை அவை கொணடன தொகைமொழிகள (ஸமஸதபதஙகள) மிகுதியாக இலலை இருபபினும இரணடு மூனறு மொழிகளுககுமேல தொகை ஆனதாகத தோனறவிலலை ஸமஹிதையில வழஙகபபடட லேட[1] பிரயோகஙகள இஙகு மிகுதியாய

1 लेट्

இல்லை. காதைகள்[1] உள்ளன. அப்பிராம்மணங்களில் முதற் பகுதி யாகத்தில் வழங்கிய மந்திரங்களைப் பற்றியும், இடைப் பகுதி வானப்பிரஸ்தநிலையில் வழங்கவேண்டியவற்றைப் பற்றியும், கடைப்பகுதி ஸம்ஸாரவிதாமத்தைப் பற்றியும், ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றியும், மோக்ஷம் அடைவதற்குள்ள ஸாதனங்களைப் பற்றியுங் கூறும். கடைப்பகுதிக்கு உபநிஷத் எனப் பெயர்.

ஒவ்வொரு வேதத்திற்கும் பல சாகைகளும், ஒவ்வொரு சாகையிலும் பிராம்மணபாகமும் இருந்தனவாக அங்கங்குக் குறிக்கப்பட்டவற்றால் அறியப்படுகிறது, தற்போது வழக்கத்திலுள்ளன மிகச் சிலவேயாகும். அவற்றுள் பஞ்சவிம்சமும்,[2] தைத்திரீயமும்,[3] மிகப் பழமையானவை என்றும் அதன்பின்னர் ஜைமினீயமும்,[4] கௌஷீதகீயமும்[5] ஐதரேயமும்[6] காணப்பட்டவை என்றும், அதன் பின்னர் சதபதம்[7] காணப்பட்டது என்றும், நான்கு ஸாமவிதானப்பிராம்மணங்களும்,[8] கோபதம்[9] என்ற அதர்வவேதப்பிராம்மணமும் கடைசியிற் காணப்பட்டன என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

---

1. नारदेन हरिश्चन्द्रस्य प्रोक्ता गाथाः [ऐ. ब्रा. 7, 2]
ऋणमस्मिन्संनयत्यमृतत्वं च गच्छति ।
पिता पुत्रस्य जातस्य पश्येच्चेज्जीवतो मुखम् ॥
. . . . . . . . .

2. पञ्चविंशम्
3. तैत्तिरीयम्
4. जैमिनीयम्
5. कौषीतकीयम्
6. ऐतरेयम्
7. शतपथम्
8. सामविधानब्राह्मणानि
9. गोपथम्

# அத்தியாயம் 19

## ருக்வேதப்பிராம்மணங்கள்

ருக்வேதப்பிராம்மணங்களுள் தற்போது வழக்கிலுள்ளன இரண்டே ஆகும். அவை ஐதரேயமும், கௌஷீதகீயமும் ஆம்.

ஐதரேயம் — இதனுள் அவ்வைந்து அத்தியாயங்களைக் கொண்ட எட்டு பஞ்சிகைகள்[1] இருக்கின்றன. அவற்றுள் முதல் பதினாறு அத்தியாயங்கள் ஒரே நாளில் முடிவுபெறும் அக்னிஷ்டோமத்தைப்பற்றிக்[2] கூறும். பதினேழு, பதினெட்டு அத்தியாயங்கள் ஒரு வருஷத்தில் முடிவுபெறும் கவாமயனத்தைப்பற்றிக்[3] கூறும். பத்தொன்பதிலிருந்து இருபத்துநான்கு முடிய உள்ள அத்தியாயங்கள் பன்னிரண்டு நாளில் முடிவுபெறும் த்வாதசாஹத்தைப்[4] பற்றியன. இருபத்தைந்திலிருந்து முப்பத்திரண்டு முடிய உள்ள அத்தியாயங்கள் அக்னிஹோத்ரத்தைப்[5] பற்றியன. முப்பத்துமூன்று முதல் நாற்பது முடிய இருக்கும் அத்தியாயங்கள் இந்திரனின் மஹாபிஷேகத்தைப்[6] பற்றிக் கூறும். இறுதியிலுள்ள பத்து அத்தியாயங்களிற் கூறப்பட்ட பொருள் கௌஷீதகிப்பிராம்மணங்களில் இல்லை, அன்றியும் அவை யாகங்களைப் பற்றியனவும் இல்லை. ஆகலின் அவை பிற்காலத்து இணைக்கப்பட்டிருத்தல் கூடுமென்பர்.

1. पञ्चिका
2. अग्निष्टोमम्
3. गवामयनम्
4. द्वादशाहम्
5. अग्निहोत्रम्
6. महाभिषेक

இந்நூல் குருபாஞ்சாலதேசத்திற் காணப்பட்டது என்பதும், அதற்கு முன்னரே ருக்வேதஸம்ஹிதையில் பத்து மண்டலங்களும் இருந்தன என்பதும் இந்நூற்பொருளிலிருந்து அறிதல் கூடும்.

கண்டு அறியப்படும் சில செய்திகள். — ஐதரேயஆரண்யகத்தில் பதினெட்டு அத்தியாயங்கள் உள. இப்பிராம்மணம் காணப்பட்ட காலத்தில் அதர்வஸம்ஹிதை இல்லை என்னலாம். ஏனெனில் மூன்று வேதங்களே இருந்தன என்பதும், யாகத்தில் ஹோதா ருக்வேதத்து மந்திரங்களாலும், அத்வர்யு யஜுர்வேத மந்திரப்பிராம்மணங்களாலும், உத்காதா ஸாமவேதகீதிகளாலும், பிரும்மா மூன்று வேதங்களிற் கூறப்பட்டவற்றாலும் தங்கள் கடமையைச் செலுத்துகின்றனர் என்பதும் கூறப்பட்டன.[1] தேவதைகளுடன் ஸாயுஜ்யம், ஸாரூப்யம், ஸாலோக்யம் முதலியன யாகஞ் செய்வோர்க்கு கிடைக்கும்; தேவாஸுரர்கள் சண்டையிட்டனர்; அஸுரர் முதலில் ஜயித்தனர் எனக் கூறப்பட்டதையும், ப்ரஜாபதி இவ்வுலகத்தைப் படைத்தார் எனக் கூறப்பட்டதையும்[2] நோக்கின், இப்பிராம்மணம் தைத்திரீயஸம்ஹிதை இணைக்கப்பட்ட காலத்ததோ என எண்ண இடன் தருகிறது. ஸோமபானம் செய்யும் தேவர்கள் முப்பத்துமூவர் என்பதும், ஸோமபானஞ் செய்யாத

1. त्रयो वेदा अजायन्त ऋग्वेद एवाग्नेरजायत यजुर्वेदो वायोः सामवेद आदित्यात् । ... ऋचैव होत्रमकरोत् यजुषाध्वर्यवं साम्नोद्गीथम् । यदेतत् त्रय्यै विद्यायै शुक्रं तेन ब्रह्मत्वमकरोत् (V 31, 33)

2. एतासामेव तद्देवतानां यजमानं सायुज्यं सारूपतां सालोकतां गमयति (II, 24)
देवासुरा वा एषु लोकेषु समयतन्त (I, 14)
इमान् वै लोकान् प्रजापतिः सृष्ट्वा इदं सर्वमशक्नोत् (V, 7)

தேவர்கள் முப்பத்துமூவர் என்பதுங் கூறப்பட்டன.[1] மாமனாரைக் கண்டு மணாட்டுப்பெண் நாணங் கொண்டனள்[2] என்பதும், வித்வான் எப்பொழுதும் உண்மையே கூற வேண்டும்[3] என்பதுங் கூறப்பட்டன. ஒரு வருஷத்திற்கு 360 நாள் எனக் கொள்ளப்பட்டது.[4] ஹரிச்சந்திர அரசனின் குமாரனை ரோஹிதனுக்குப் பிரதியாக யூபஸ்தம்பத்திற் கட்டப்பட்ட சுனச்சேபன்[5] வருணனைத் துதித்து ஆபத்திலிருந்து விடுவிக்கப்பட்டான் என்பதும் நன்கு வருணிக்கப்பட்டது.[6]

கௌஷீதகீயம் — இதனுள் முப்பது அத்தியாயங்கள் உள். ஐதரேயத்தில் முதல் இருபத்தைந்து அத்தியாயங்களிற் கூறப்பட்ட பொருள்களே ஈண்டுக் காணப்படுகின்றன. முதல் ஆறு அத்தியாயங்களில் அக்நயாதானம், அக்னிஹோத்ரம், தர்ச-பூர்ணமாஸம், இஷ்டி முதலியன உணர்த்தப்படுகின்றன. அதற்குமேல் உள்ளவை ஸோமயாகத்தைப் பற்றியன. ஈண்டுப் பொருள் கூறப்பட்ட முறையை நோக்கின் இஃது ஐதரேயத்திற்குப் பின்னரே காணப்பட்டது என்பர் சிலர். இந்நூலில் ஈசானன், மகாதேவன் என்ற சொற்கள் சிவனைக் குறிக்கின்றமையாலும் அவ்வாறே சுக்லயஜுர்வேத ஸம்ஹிதை, அதர்வவேத ஸம்ஹிதை, சதபதத்தில் ஒரு பகுதி, இவற்றில் காணப்படுகின்றமையாலும், இவையெல்லாம் ஒருகாலத்தன

1 त्रयस्त्रिंशद्वै देवाः सोमपाः त्रयस्त्रिंशदसोमपाः (II, 18)

2 यथैवाद स्नुषा श्वशुराल्लज्जमाना निलीयमाना (III, 22)

3 विदुषा सत्यमेव वदितव्यम् (V, 14)

4 त्रीणि च वै शतानि षष्टिश्च संवत्सरस्याहानि (II 17)

5 शुनःशेप

6 VII 13 16

ஆகும் என்பர் சிலர். ஆரியாவர்த்தத்தில் வடமொழிக்கலை கிரந்தங்கள் நன்கு படிக்கப்பட்டன என்பது இந்நூலிலிருந்து அறியப்படுகின்றது.[1]

கௌஷீதகிய ஆரண்யகத்தில் 15 அத்தியாயங்கள் இருக்கின்றன. கௌஷீதகி மஹர்ஷியால் காணப்பட்டமையால் இப்பிராம்மணம் கௌஷீதகிப்பிராம்மணம் எனப் பெயர் பெற்றது.[2] , இப்பிராம்மணம் ஐதரேயப்பிராம்மணத்தின் பின்னர் வந்தது என்பதற்கு ஒரு சான்று கூறலாம்—யாகத்தில் ஹோதா, அத்வர்யு, உத்காதா இவர்கள் முறையே ருக்வேதத்தாலும், யஜுர்வேதத்தாலும், ஸாமவேதத்தாலும் தங்கள் கடமையைச் செய்ய, பிரும்மா மூன்று வேதத்தாலும் செய்கின்றார் என ஐதரேயப்பிராம்மணம் கூறுகின்றது. பிரும்மா யஜுர்வேதியாகவும் ஸாமவேதியாகவும் ருக்வேதியாகவும் இருக்கலாம் எனக் கௌஷீதகிப்பிராம்மணம் கூறுகின்றது. ஆகவே அக்காலத்தில் மூன்று வேதத்தையும் அத்தியயனஞ் செய்தவர் அரிதாயிற்று எனக் கொள்ளல் தகும்.[3] உவிஷ்டரும்

1. अथ कश्चिन् गव्ये वा अनुवचने वा प्रमत्त उपहन्यात् विचिकित्सा वा स्यादुपहतमनुद्धमतिक्रान्तं मन्यमानो मनसा वृत्तान्तमीक्षमाणो विनिवृत्त्योपहतमनुसहृतं , कृत्वानन्तर्यमित्रयोगः स्याद्वृत्तान्तादिति मीमांसन्ते (कौ. ब्रा. 26)
2. तदु ह स्माह कौषीतकिः [कौ. ब्रा. 2-9]
इति ह स्माह कौषीतकिः (7-10, 8-9, 11, 5)
3. ऋचैव होत्रं क्रियते, यजुषाऽऽध्वर्यवं साम्नोद्गीथं ... केन ब्रह्मत्वं क्रियते इति, त्रय्या विद्ययेति ब्रूयात् । [ऐ. ब्रा. 5, 33]
केन ब्रह्मा ब्रह्मा भवतीति यमेवामुं त्रय्यै विद्यायै तेजोरसं प्रावृहत्तेन ब्रह्मा ... किंविदं किञ्छन्दसं ब्राह्मणं वृणीत इति—अध्वर्युमित्येके ... छन्दोगमित्येके ... बह्वृचमिति ...
(कौ. ब्रा. 6, 11)

விசவாமிததிரும ஜமாதாளகதுடன இருநதனா எனற வாககியமும இபபிராமமணம பிறகாலததது எனபதைக குறிக கலாம [1] அசவினாகள தேவவைததியாகள எனபதும ஈணடுக கூறபபடடுளளது [2]

---

1 विश्वामित्रश्च वसिष्ठश्च समजानताम् ॥ (ऐत ब्रा 16 14)

2. अश्विनौ वै देवानां भिषजौ (18 1)

## அத்தியாயம் 20

---

### ஸாமவேதப்பிராம்மணங்கள்

ஸாமவேதத்தில் ஜைமினீயசாகையில் ஒன்றும் கௌதும சாகையில் எட்டுப் பிராம்மணங்களும் உள்ளன. அவை: தலவகாரம் தாண்ட்யம் என்ற பஞ்சவிம்சம், ஷட்விம்சம், ஸாமவிதானம், ஆர்ஷேயபிராம்மணம், தேவதாப்பிராம்மணம், வம்சப்பிராம்மணம், ஸம்ஹிதோபநிஷத், சாந்தோக்யம் என்பன ஆகும்.

தலவகாரம் — இதற்கு ஜைமினீய-உபநிஷத்-பிராம்மணம் என்றும் பெயர். இதற்கு நான்கு அத்தியாயங்களும், அவற்றில் முறையே 18, 5, 7, 12 அநுவாகங்களும் உள்ளன. நான்காம் அத்தியாயம் பத்தாம் அநுவாகம் கேநோபநிஷத் ஆகும். கேந என்ற சொல்லால் அவ்வுபநிஷத் தொடங்குவதால் அதற்கு அப்பெயர் வந்தது. இப்பிராம்மணம் ஐதரேயப்பிராம்மண காலத்தது எனக் கூறுதற்குச் சில சான்றுகள் உள. அவை: (1) வேதங்கள் மூன்று என்று கூறுதல்,[1] குருபாஞ்சால தேசத்தாரைப் பற்றிய கூறுதல்,[2] அவர்களிடமிருந்து அஸுரர

1. ऋग्वेद एवाग्नेर्यजुर्वेदो वायोस्सामवेद आदित्यात् (तल. ब्रा. 3-4)
प्रजापतिर्वा इदं त्रयेण वेदेनाऽजयत् (1-1, 2-1)
सा त्रयी विद्याऽभवत् (1-6)
त्रयो वेदा अजायन्त (ऐ. ब्रा. 5, 32)
2. यत्र भूयिष्ठा कुरुपञ्चालास्समागता. (तल. ब्रा. 3-2)
सह स कुरुपञ्चालनान्ब्राह्मणानुपपृच्छमानश्चरति (3-6)

தனிமையாய்ப் பிரிவுபட்டதற்குமுன் தேவர்கள் பஞ்சஜனர்களாய் இருந்தனர் என்று கூறலும்,[1] தேவர்களும் அஸுரர்களும் போட்டியிட்டனர் என்று கூறலும்[2] முதலியன. சுக்கிரன் அஸுரர்கள் செய்த யாகத்திற்கு உத்காதாவாக இருந்தான்.[3] இதனுள் பெரும்பாலும் ஆரண்யகம் கூறும் விஷயங்களே கூறப்பட்டன எனலாம்.

*தாண்டயப்பிராம்மணம்* — தாண்டிமகாவ்யரால் காணப்பட்டமையால்[4] இப்பிராம்மணத்திற்கு இப்பெயர் வந்தது. இதற்கே தாண்டயமஹாப்பிராம்மணம் எனவும், இருபத்தைந்து அத்தியாயம் உடையதால் பஞ்சவிம்சம் எனவும் பெயர் உள. பெரிதாகையால் பிரௌடப்பிராம்மணம் எனவும் பெயர். இது கௌதுமசாகையைச் சேர்ந்தது. அத்தியாயம் என்ற பெயர் பாஷ்யத்திலும், பரபாடகம் என்ற பெயர் மூலபுத்தகங்களிலும் காணப்படும் என்பர். இருபத்தைந்து அத்தியாயங்களையும் ஐந்து பாகமாக ஆக்கி, ஒவ்வொன்றையும் பஞ்சிகை எனக் கூறுதலும் உண்டு. ஈண்டு அக்நிஷ்டோமம் தொடங்கி ஸஹஸ்ரஸம்வத்ஸரம் முடிய உள்ள ஸோமயாகங்களில் உத்காதா முதலியோர்க்கு வேண்டிய அனைத்துங் கூறப்பட்டன. காத்யாயனர், ஆபஸ்தம்பர் இவ்விருவரும் இயற்றிய சௌதஸூத்திரங்களில் இந்நூலையே பிரமாணமாகக் கொண்டனர் என்பது வெளிப்படை. ஊரணவதீ,

1 ये देवा असुरेभ्य पूर्वे पञ्चजना आसन् (1, 13)

2. देवासुरा अस्पर्धन्त (1-15, 18)

3 उशनसा काव्येन असुरा पश्चादयं त उद्गायतु (2-2)

4 सामवेदीयताण्ड्यमहाब्राह्मणे द्वितीये विभागे पुरस्तान्निवेदने (2-30)

த்ருஷத்வதி, யமுனா[1] இந்நதிகளின் கரையிற் செய்யப்பட்ட யாகங்களைக் கூறுகின்றமையின் இப்பிராமணம் பழமை யானது எனக் கூறல் தகும். அதர்வமந்திரங்கள் தேவர்களின் தீமையைப் போக்கவும் நன்மையை ஆக்கவும் பயன்படும் என இங்குக் கூறப்பட்டமையாலும்[2] வ்ராத்யஸ்தோமங்கள் இங்கிருத்தலாலும்[3] இந்நூல் அதர்வவேதத்தின் ஒரு பகுதியாவது வேதமாகக் கொள்ளப்பட்ட பின்னர் வந்திருத்தல் கூடும். சுக்கிரன் அஸுரர்களுக்குப் புரோஹிதன் எனக் கூறப் பட்டுளது.[4] தேவர்களும் அஸுரர்களும் ப்ரஜாபதியின் புத்திரர்கள் எனவும் அஸுரர்கள் எண்ணிக்கையில் மிகுந்தவராய் இருந்தனர்[5] எனவும் தைத்திரீயஸம்ஹிதையிற் கூறப்பட்டவாறே ஈண்டுங் கூறப்பட்டமையான், இந்நூல் தைத்திரீய ஸம்ஹிதை இணைக்கப்பட்ட காலத்ததோ என ஐயம் நிகழ் கின்றது.

1. सरस्वत्या विनशने दीक्षन्ते (25, 10, 1)
   दृषद्वत्येन (25, 10, 14)
   स दक्षिणेन तीरेण दृषद्वत्या आग्नेयेनाष्टाकपालेन [illegible] (25, 13, 2,
   यमुनामवभृथमभ्यवैति (25, 13, 4)
   यमुनाया हव्यं निरावहत् (9, 4, 10
2. भेषजं वै देवानामाथर्वाणो भेषजायै[illegible] 15, 11, 10
3. ता. ब्रा. 17, 1–3
4 उशना वै काव्योऽसुराणां पुरोहित आसीत् (7, 5, 20
5 देवाश्च वा असुराश्च [illegible]
   वलीयांस आसन् [illegible] 12, 1, 2?

ஷடவிமசபபிராமமணம — பெயரிஞலே இபபிராமமணம பஞசவிமசததோடு சோநதது எனபது விளஙகும. ஆகலின இதறகுத தாணடயசேஷம் எனப பெயா கொடுததுக கூறுவா பாஷயகாரா பெருமபாலும பஞ்சவிமசபபிராமமணததிற கூறபபடட சிலவறறிறகு மாறுபாடும, ஆஙகுக கூறபபடாத ஆபிசாரயாகஙகளாகிய சயேனயாகம முதலிய ஐநதும இஙகுக கூறபபடடன இறுதியில காலை மாலை செயய வேணடும ஸநதயாவநதநததையும அதபுதசாநதியையும பறறி இரணடு பிரபாடகஙகள கூறும அதபுதசாநதியைபபறறிக கூறும பகுதிககு அதபுதபபிராமமணம எனப பெயா

ஸாமவிதாநபபிராமமணம — ஈணடு யாகததைபபறறிய விஷயஙகள ஒன்றுங கூறபபடடில செயயபபடட பாபஙகளைப போககப பிராயசசிததரூபமான ஸாமஙகளும அவறறிறகு அஙகமான ஹோமஙகளுங கூறபபடடன இநநூலில மூனறு பரபாடகஙகள உள பாபததைப போககும ஸாமஙகளை இநநூல விதிககினறமையால, இதறகு ஸாமவிதாநப பிராமமணம எனப பெயா வநதது எனனலாம

ஆரஷேயபபிராமமணம — ஸமஹிதையிற கூறபபடட ஸாமங கடகு ருஷி முதலியவறறை இபபிராமமணங கூறும. ஈணடும மூனறு பரபாடஙகள உள.

தைவதபபிராமமணம — தேவதை, சநதஸ முதலியவறறை இபபிராமமணங கூறும ஈணடு மூனறு கணடஙகள உள

வம்சபபிராமமணம — ஸாமவேதததை அதயாபனஞ்செயத ஆசாரயபரமபரையை இபபிராமமணங கூறும

ஸமஹிதோபநிஷத — ஸமஹிதைகளின பேதஙகளையும ஆங குள்ள மநதிரஙகளின பேதஙகளை௰ும அமமநதிரஙகளைப பறறிய பாசுபனையையும அவறறை ஜபிபபதால உணடாகும பயனையும இபபிராமமணங கூறும

சாங்க்ஷேபம்.—ஆரண்யகங்களில் உள்ள விஷயங்களை கண்டு உணர்த்தப்பட்டன. அவை பின்னர் விவரமாய்க் கூறப்படும்.

இவற்றுள் ஆர்ஷேயப்பிராம்மணம், தைவதப்பிராம்மணம் வம்சப்பிராம்மணம், ஸம்ஹிதோபநிஷத் இவை நான்கும் பெயரள் மாத்திரம் பிராம்மணமேயன்றி ஆங்கு உணர்த்தப்படும் பொருளால் அல்ல எனச் சிலர் கூறுகின்றனர். ஸம்ஹிதையிற் கூறப்பட்ட மந்திரங்களைப்பற்றிக் கூறும் பகுதிகள் எல்லாவற்றிற்கும் பிராம்மணம் என்ற பெயர் கொடுத்திருக்கின், அவருடைய கருத்து ஆராய்தற்குரியது.

## அத்தியாயம் 21

### கிருஷ்ணயஜுர்வேதப்பிராம்மணங்கள்

கடசாகையிலும் மைத்ராயணீசாகையிலும் ஸம்ஹிதையிற் காணப்படும் பிராமணங்களைத் தவிர்த்துப் பிராமணம் என்னத் தனிப்பகுதியாய் ஒன்றும் இல்லை என்பர். தைத்திரீயசாகையிலோ தைத்திரீயப்பிராமணமும் தைத்திரீய ஆரண்யகமும் உள. தைத்திரீயப்பிராமணத்துள் மூன்று அஷ்டகம் அல்லது காண்டங்களும் 28 பிரபாடகங்களும் உள. ஆங்கு ஸம்ஹிதையிற் கூறப்பட்ட விஷயங்களைப்பற்றி விவரணமே உளது.

ஆரண்யகத்தில் பத்துப் பிரபாடகங்கள் உள. அவற்றுள் முதல் ஆறும் வானப்ரஸ்தருக்கு வேண்டியவற்றைக் கூறும். அரண்யத்தில் அத்தியயனஞ் செய்யப்பட்டதால் ஆரணியகம் எனப் பெயர் வந்தது என்பர் ஸாயணாசாரியர்.[1] இந்தியாரம் ஸாவித்ரம் நாசிகேதம் சாதுர்ஹோத்ரம் வைசவஸ்ருஜம் இந்நான்கும் இல்லை என்பர். ஏழாவது முதல் ஒன்பதாவது முடிய உள்ள மூன்று பிரபாடகங்களும் தைத்திரீய-உபநிஷத் ஆகும். இறுதிப்பிரபாடகம் மஹாநாராயணீயோபநிஷத் ஆகும்.

பிராமணத்தின் இறுதியில் உள்ள மூன்று கண்டமும் ஆரண்யகத்தின் முதல் இரண்டு அத்தியாயங்களும் காடகத்திலிருந்து இணைக்கப்பட்டன என்பர்.[2]

1 अरण्याध्ययनादेतद् आरण्यकमितीर्यते ।
अरण्ये तदधीयीतेत्येव वाक्यं प्रवक्ष्यते ॥ (तै आ. भाष्यम्)

2 सावित्रो नाचिकेतश्च चातुर्होत्रस्तृतीयकः ।
तुर्यो वैश्वसृजस्तद्वदारुणकेतुकः ।
स्वाध्यायब्राह्मणं चेति मन्त्रं काठकमीरितम् ॥ (तै आ. भाष्यम्)

*ஆரண்யகத்தின் முற்பகுதியிலிருந்து சிற்சில விஷயங்கள் அறியப்படுகின்றன :—*

*நால்வகை நரகங்களின் பெயர் விஸர்ப்பீ, அவிஸர்ப்பீ, விஷாதீ, அவிஷாதீ என்பதும்,*[1] *மானதோலையோ வஸ்திரத்தையோ உபவீதமாகவும் ப்ராசீனவீதமாகவும் நிவீதமாகவும் தரித்துக்கொண்டனர் என்பதும்,*[2] *காலையிலும் மாலையிலும் ஆதித்யனே பிரும்மா எனத் தியானம் செய்யும் பிராம்மணன் எல்லாநன்மையையும் அடைந்து, பிரம்மமே ஆகின்றான் என்பதும்*[3]*, தான் பாபச்செயல் புரிந்ததாக நினைப்பவன் கூச்மாண்டஹோமஞ் செய்யலாம்*[4] *என்பதும், பஞ்சமஹா யஞ்ஞங்கள் யாவை என்பதும்,*[5] *தான் அசுத்தனாய் இருக்கும் போதும் அசுத்தமான இடத்தில் இருக்கும்போதும் வேதாத்தியயனம் செய்தல் தகாது என்பதும்*[6]*, இவைபோன்ற பலவும்.*

---

1. दक्षिणपूर्वस्यां दिशि विसर्पी नरकः ।
दक्षिणापरस्यां दिश्यविसर्पी नरकः ।
उत्तरपूर्वस्यां दिशि विषादी नरकः ।
उत्तरापरस्यां दिश्यविषादी नरकः ॥ [तै. आ. 1, 19]
2. अजिनं वासो वा दक्षिणत उपवीय . . . (2, 1)
3. उद्यन्तमस्तं यन्तमादित्यमभिध्यायन्कुर्वन् ब्राह्मणो विद्वान्सकलं भद्रमश्नुतेऽसावादित्यो ब्रह्मेति ब्रह्मैव सन्ब्रह्माप्येति (2, 2)
4. कूश्माण्डैर्जुहुयाद्योऽपूत इव मन्येत (2, 8)
5. पञ्च वा एते महायज्ञाः सतति प्रतायन्ते सतति सन्तिष्ठन्ते देवयज्ञः पितृयज्ञो भूतयज्ञो मनुष्ययज्ञो ब्रह्मयज्ञ इति (2, 10)
6. तस्य वा एतस्य यज्ञस्य द्वावनध्यायौ यदात्माऽशुचिर्यद्देशः (2, 15)

## அத்தியாயம் 22

### சுக்லயஜுர்வேதப்பிராம்மணங்களும் — சதபதத்தின் அமைப்பும்

சுக்லயஜுர்வேதப்பிராம்மணங்களுள் தற்போது காணப்படும் பிராம்மணங்கள் இரண்டே. அவை கண்வசாகீயப் பிராம்மணம், மாத்தியந்தினசாகீயப்பிராம்மணம் ஆகும். அவற்றுள் பின்னதாகக் கூறப்பட்டதே அச்சில் வந்துள்து. கண்வசாகீயப்பிராம்மணத்தில் 17 காண்டங்களும் மாத்தியந்தினசாகீயப்பிராம்மணத்தில் 14 காண்டங்களும் உள. பின்னதாகக் கூறப்பட்டதில் 100 அத்தியாயங்கள் உள ஆகலின் அதற்குச் சதபதப்பிராம்மணம் எனப் பெயர் வந்தது. ஆங்குள்ள ஒவ்வொரு காண்டத்துள்ளும் உள்ள அத்தியாயங்கள் அவற்றைக் கண்ட ரிஷியின் பெயர், உணர்த்தப்பட்ட பொருள் இவற்றைக் கீழ்க்குறிப்பிற் காண்க.[1] அவற்றை

| 1 काण्डम् | अध्याया | ऋषि | विषय |
|---|---|---|---|
| I | 9 | याज्ञवल्क्य | दर्शपूर्णमासौ |
| II | 6 | " | अग्न्याधानम् अग्निहोत्रम् चातुर्मास्यादि |
| III | 9 | " | अग्निष्टोम |
| IV | 6 | | |
| V | 5 | " | सोमविकृतय वाजपेयादीनि |

நன்கு நோக்கின் இப்பதினான்கு காண்டங்களுள் முதல் ஒன்பது காண்டங்கள் முன்னாகக் காணப்பட்டன என்றும், பின்னர் ஏனைய ஐந்து காண்டங்களும் சேர்க்கப்பட்டன என்ற கொள்கைக்குக் கூறிய காரணங்கள் பொருந்தும் என்றும் தோன்றும். முதல் ஒன்பது காண்டங்களுள் 60 அத்தியாயம், எஞ்சிய ஐந்தில் 40 அத்தியாயம் உள்ளன என்பது வெளிப்படை. மஹாபாஷ்யகாரர் ஓரிடத்தில்[1] ஷஷ்டிபதம், சதபதம் என இரண்டைக் கூறுகின்றனர். பன்னிரண்டாவது காண்டத்தை நடுக்காண்டம் என்பர். பன்னிரண்டு, பத்திற்கும் பதினான்கிற்கும் நடுவாகலின், பின்னுள்ள ஐந்து காண்டங்களுக்கும் அது நடுவாகும். அன்றியும் ஸம்ஹிதையில் முதல் 18-காண்டங்களிற் கூறப்பட்ட விஷயம் பிராம்மணத்தில் முதல் ஒன்பது காண்டங்களிலே தான் காணப்படுகின்றது. மஹாபாரதத்து சாந்திபர்வாவில் ரஹஸ்யத்துடனும் ஸங்கிரகத்துடனும் பரிசேஷத்துடனும் சதபதத்தைப் பெருமகிழ்ச்சியுடன்

| काण्डम् | अध्यायाः | ऋषि | विषयः |
|---|---|---|---|
| VI | 8 | शाण्डिल्यः | अग्निचयनम् |
| VII | 5 | ,, | ,, |
| VIII | 7 | ,, | ,, |
| IX | 5 | ,, | ,, |
| X | 6 | ,, | अग्निरहस्यम् |
| XI | 8 | याज्ञवल्क्य. | दर्शपूर्णमासीयविषया |
| XII | 9 | ,, | दर्शपूर्णमासगतप्रायश्चित्तानि |
| XIII | 8 | ,, | अश्वमेधः, पुरुषमेधः सर्वमेधश्च |
| XIV | 9 | ,, | प्रवर्ग्यम् (अन्त्ये षट् अध्यायाः बृहदारण्यकोपनिषत्) |

1. ऋत्वधादिसूत्रान्तात्तक् ( IV 2-60 ) इति सूत्रगतभाष्ये

## அத்தியாயம் 23

### சதபத்ப்பிராம்மணத்திலிருந்து அறியப்படுஞ் செய்திகள்

1. ஆரியர்கள் தொடக்கத்தில் ஸரஸ்வதி நதிக்கரையின் மேற்குக்கரையில் இருந்து, ஸதாநீரா நதிவரை வந்து, பின்னர் அதைத் தாண்டிக் கீழ்நாட்டிற்கு வந்தனர் என்பது விதேக மாதவ-ஆக்கியானத்திலிருந்து[1] அறியப்படுகின்றது.

2. ப்ரளயகாலத்தில் மனு ஒரு மீனின் உதவியால் எவ்வாறு உத்தரகிரியை அடைந்தான் என ஒரு ஆக்கியானம் கூறுகின்றது.[2]

3. பிற்காலத்து இலக்கியங்களில் வழங்கும் கதைகளுக்கு மூலம் இங்குக் காணப்படுகின்றது:—

i. விஷ்ணு ஒரு காலால் பூமியையும் ஒரு காலால் அந்தரிக்ஷத்தையும் ஒரு காலால் த்யுலோகத்தையும் அளந்தார்.[3]

1. विदेघो ह माथवोऽग्निं मुखे बभार । ... विदेघो माथव आस । सरस्वत्या स तत एव प्राङ् दहन्नभीयायेमा पृथिवीम् । ... सदानीरेत्युत्तराद्गिरेर्निर्धावति ता हैव नातिददाह । ता ह स्म ता पुरा ब्राह्मणा न तरन्त्यनतिदग्धाग्निना वैश्वानरेणेति । ... स होवाच विदेघो माथव क्वाहं भवानीत्यत एव ते प्राचीनं भुवनमिति होवाच (I 4-1, 10-17)
2. मनवे है प्रात. अवनेग्यमुदकमाजह्रु यथेदं पाणिभ्यामवने जनायाहरन्त्येवं तस्यावनेनिजानस्य मत्स्यः पाणी आपेदे । सहास्मै वाचमुवाद 'बिभृहि मा पारयिष्यामि त्वा' इति ...... (I 8-1, 1-5)
3. I 1-2-13

ii. ஊர்வசி மறைந்த பின்னர் அன்னவுருவங் கொண்ட வித்யுத்ஸ்திரீகளுடன் அவள் தோன்ற, அவளைப் புரூரவன் வேண்ட, அவள் மறுக்க, மக்கள்[1] தோன்ற, அவன் கந்தர்வன் ஆனான்

iii. தௌஷ்யந்தி, சகுந்தலை என்னும் பெயர் கொண்ட அப்ஸரஸினிடத்தில் தோன்றி, உலகத்தை வென்று, அசுவமேதஞ் செய்தான்

iv. பரதவம்சத்திற் பிறந்தவரின் வரிசையும் திருதராஷ்டிரன் என்ற பெயரும் இருக்கின்றன.[3]

v. இந்திரன், அர்ச்சுனன் என்ற பெயரோடு க்ஷத்திரத்திற் பிறந்தான்.[4]

4 ஆர்ஹத, சிரமண என்ற சொற்கள் ஜைனமதத்தில் எப்பொருளில் வழங்கப்பட்டனவோ அப்பொருளில் அன்று வழங்கப்படவில்லை

5 அஸுரர்கள் யாகத்தில் அபசப்தங்களைக் கூறியதால் நாசம் அடைந்தனர்.[5]

6 பிறக்கின்றவனுக்குக் கடன் நான்கு—தேவகடன், ருஷிகடன், பிதருகடன், மனுஷ்யகடன் என்பன.[6]

1 XI 5, 1, 1-12
2 XIII 5, 4, 11-13
3 XIII 5, 4, 22-23
4. II 1, 2, 11
5 असुरा आत्तवचसो हेऽलवो हेऽलव इति वदन्तः पराबभूवुः ।
तस्मान्न ब्राह्मणो म्लेच्छेत् (III 2 1 23-24)
6 I 7, 2, 1-5

7. மனைவி என்பவள் கணவனின் பாதி[1]

8 குதிரை, ஒட்டகம், கவயம், சரபம், இவற்றின் மாமசம் உண்ணத்தக்கதன்று[2]

9 ராஜன், ராஜ்பர்த்தா, ஸூதன், ஸ்தபதி, க்ராமணி, ஜாதன் என உத்தியோகப்பெயர்கள் வழங்கப்பட்டன[3]

10 வைசிரவணனாகிய குபேரன் ராக்ஷஸர்களுக்கு அதிபதியாகக் கூறப்பட்டிருக்கின்றான்[4]

11 கிழக்குதிசை தேவர்களுடையது, தெற்குதிசை பிதிரர்களுடையது என்ற காரணம்பற்றிக் கிழக்கிலும் தெற்கிலும் கால் நீட்டிக்கொண்டு ஒருவன் படுக்கலாகாது[5]

12 பிறந்த குழந்தைக்குப் பெயர் வைத்தல் அவசியம்[6]

13. வஸந்த க்ரீஷ்ம - வர்ஷ ருதுக்கள் தேவருதுக்கள் எனவும், சரத் - ஹேமந்த - சிசிர ருதுக்கள் பிதிரின் ருதுக்கள் எனவும் கூறப்பட்டது[7]

1 अर्धो ह वा एष आत्मनो जाया (V 2 1, 10)

2 I 2 3, 9

3 V 4 4 15-19 स्थपति , ग्रामणी

4 XIII 4 3, 10

5 III 1, 1 7

6 IV 1 3 9

7 II 1, 3 1 தற்போது தைமாதம் முதல் ஆனி முடிய தேவமாதங்களாகவும் ஆடி முதல் மார்கழி முடிய பிதுருமாதங்களாகவும் கருதப்படுகின்றன இதை நோக்கின் சதபதப்பிராமணம் வெகு காலத்திற்குமுன் இருந்திருத்தல் வேண்டும் என்பது அறியப்படும்

14 ஏனைய பிராமணங்களிற் போன்று ஈண்டும் ஒரு வருஷத்திற்கு 360 நாள் என்றும், 12 மாதம் என்றும், சில சமயங்களில் 13 மாதம் என்றும் கூறப்பட்டுள்ளது[1]

15 தேவகாரியஞ் செய்யும்போது உபவீதியாய் வலது முழங்காலை மடித்தும், பிதிருகாரியஞ் செய்யும்போது பிராசீனா வீதியாய் இடதுமுழங்காலை மடித்தும் இருத்தல் வேண்டும் எனக் கூறப்பட்டது[2]



1 I 3 5 6 7

2 III 4, 2 1 .

## அததியாயம 24

### யாஞயவலகயரின காலம்

யாஞயவலகயா பாணினியின காலததவரா, அவாககு முறபடடவரா எனபதிற கொளகைவேறுபாடு உளது வாயு புராணம விஷ்ணுபுராணம இவை, யாஞயவலகயா வைசமபாயனரின மாணாககா எனறும, அவரது பிரமமஹததிதோஷததைத தானே ஏறறுககொளளுவதாகக கூறியதறகு வைசமபாயனா கோபிதது யாஞயவலகயா தனனிடமிருநது கறறதைத திருபபிக கொடுககவேணடும எனறு அவரிடம கூறினா எனறும, அவா அவவாறே செயதனா எனறும கூறுகினறன. வைசமபாயனா வியாஸரின மாணவராகலின, யாஞயவலகயா வியாஸரின காலததிறகுச சிறிது பிறபடடவா எனல தகும அனறியும யாஞயவலகயா ஆருணியான உததாலகரின மாணவா எனச சதபதம கூறுகினறது[1] மஹாபாரதததில உததாலகா அநதால இயறறபபடட காலததிறகு ஸமீபகாலததவா எனக கூறபபடடது[2] இதனினறும யாஞயவலகயா வியாஸா மஹாபாரதம இயறறிய காலததிறகுச சிறிது பிறபடடவா

1 याज्ञवल्क्य उद्दालकात् उद्दालको अरुणात्...[बृहदारण्यके 6-5-3 ]

2 अस्मिंस्तु लोके न चिरान्मर्यादेय शुचिस्मिते ॥

स्थापिता येन यस्माच्च तन्मे विस्तरतश्शृणु ।

बभूवोद्दालको नाम महर्षिरिति नश्श्रुतम् ॥

श्वेतकेतुरिति ख्यात पुत्रस्तस्याभवन्मुनि ।

मर्यादेय कृता तेन धर्म्या वै श्वेतकेतुना ॥ (म भा. आ 128, 11-13)

என்பது பெறப்படும். அன்றியும்[1] சதானீகன் யாஞ்ஞவல்க்யரிடம் வேதாத்தியயனஞ் செய்து கிருபரிடம் அஸ்த்ரவித்தையைக் கற்று சௌனகரிடமிருந்து ஆத்மஞானம் பெறுவான் என விஷ்ணுபுராணம் கூறுகின்றது. இதனாலும் யாஞ்ஞவல்க்யர் வியாஸகாலத்தவர், அல்லது சிறந்து பிற்காலத்தவர் என்னலாம். ஆயினும் பாணினி கூறிய ஒரு ஸூத்திரத்தை[2] ஒட்டிக் காத்தியாயனர் ஒரு வார்த்திகம்[3] கூறியுள்ளார். அவ் வார்த்திகத்தால் யாஞ்ஞவல்க்யர் பாணினிகாலத்தவர் என்பது பெறப்படும் எனக் காசிகாவிருத்தி-ஆசிரியரும் பட்டோஜிதீக்ஷிதரும் கொண்டனர். நாகேசபட்டர் அவர்தம் கொள்கையை மறுத்து அவ்வார்த்திகத்தாலே யாஞ்ஞவல்க்யர் மிகவும் பிராசீனர் என்பது பெறப்படும் எனக் கூறினர். காசிகாவிருத்திகாரரைப் பின்பற்றினர் மோக்ஷமூலர்,[4] நாகேசரைப் பின்பற்றினர் கோல்ட்ஸ்டக்கர்.[5]



1. जनमेजयस्यापि शतानीको भविष्यति । योऽसौ याज्ञवल्क्याद्वेदमधीत्य कृपादस्त्राण्यवाप्य .. शौनकोपदेशात् आत्मज्ञानप्रवीण ... [वि पु]

2 पुराणप्रोक्तेषु ब्राह्मणकल्पेषु (IV 3 105)

3 याज्ञवल्क्यादिभ्यः प्रतिषेधस्तुल्यकालत्वात्

4 Maxmuller

5 Goldstucker

# அத்தியாயம் 25

## அதர்வவேதீயப்பிராம்மணம்

அதர்வவேதீயப்பிராம்மணத்திற்குக் கோபதப்பிராம்மணம் என்பது பெயர். யாகங்களில் பிரும்மா அதர்வவேதீயனாய் இருத்தல் வேண்டும்[1] எனவும், அதர்வவேதம் அறிந்தவன் எல்லாம் அறிந்தவன் எனவும்[2] ஆங்குக் கூறப்பட்டது. மற்ற வேதங்களின் பிராம்மணபாகங் காணப்பட்டபின்னரே அவ்வவற்றின் கல்பஸூத்ரம் இயற்றப்படினும், இப்பிராம்மணம் வைதானஸூத்ரம் இயற்றப்பட்டபின்னரே காணப்பட்டது எனத் தோன்றுகின்றது. ஈண்டுள்ள சில விஷயங்கள் சதபதப் பிராம்மணத்தின் 11, 12 காண்டங்களிலிருந்தும் ஐதரேயப் பிராம்மணத்திலிருந்தும் எடுக்கப்பட்டன. இப்பிராம்மணம் காணப்பட்டபொழுது அதர்வவேதத்தில் 20 காண்டங்களும் இருந்தன என்பது வெளிப்படை. இங்கு வழங்கப்பட்ட பாஷை ஏனைய பிராம்மணங்களில் வழங்கப்பட்ட பாஷையின் பிற்காலத்தது எனல் தகும். அன்றியும் இந்நூலின் முற்பகுதியில் மற்ற பிராம்மணங்களிற் கூறப்படாத விஷயங்கள் உள[3]. முற்பகுதியில் ஐந்து ப்ரபாடகங்களும் பிற்பகுதியில் ஆறு ப்ரபாடகங்

1. ऋग्विदमेव होतार वृणीष्व, यजुर्विदमध्वर्यु, सामविदमुद्गातार अथर्वाङ्गिरोविद ब्रह्माणम् (1, 2 24)
2. तस्माद्य एव सर्ववित्स्यात् त ब्रह्माण कुर्वीत, एष ह वै विद्वान् सर्वविद्ब्रह्मा यद् भृग्वङ्गिरोवित् (1, 5, 11)
3.

| पूर्वभाग प्रपाठक | विषय |
|---|---|
| 1 | सृष्टि, ओंकारस्योत्पत्ति, गायत्री, आचमनस्य प्रयोजनम् |
| 2 | ब्रह्मचारिधर्मा, अग्न्याधानादि |
| 3 | ऋत्विजा वर्णन, दक्षिणाविभागादि |

களும் உள. ஒவ்வொரு சாகையினும் மந்திரபாகம் பிராமமண பாகம் இரண்டும் இருத்தல் வேண்டும் என்ற எண்ணம் வந்த பின்னரே இப்பிராம்மணம் காணப்பட்டது என்பர். எவ்வாறு இருப்பினும் எல்லாப்பிராம்மணங்களுள்ளும் இப்பிராம்மணமே இறுதியிற் காணப்பட்டது என்பது திண்ணம்.

| पूर्वभाग. | प्रपाठक. | विषय |
|---|---|---|
| | 4 | ऋत्विग्दीक्षा, यज्ञानुष्ठानफलमित्यादि |
| | 5 | ऋत्विजामाधिकारसम्पदादि |
| उत्तरभागः | 1 | दर्शपूर्णमास, चातुर्मास्यम् . . . |
| | 2 | उपसदाराधनेन कथं देवा असुरानजनयन |
| | 3 | वषट्हिङ्कारायधिकृत्य विचारः |
| | 4 | उक्थादि |
| | 5 | शर्वर्या. रात्रिवाचकत्वम्; अप्तोर्यामादिप्रशंसनम् |
| | 6 | सम्पातादिमन्त्राणामुत्पत्ति स्तुतिः इत्यादि |

# அத்தியாயம் 26

## உபநிஷத்துக்கள்

உபநிஷத் என்ற சொல், அழித்தல் என்ற பொருள் கொண்ட ஸத் என்ற தாது உப, நி என்ற இரண்டு உபஸர்க்கங்களுடன் சேர, அதனின்றும் உண்டானது. ஆகலின் அச்சொற்கு நன்கு அழித்தற்கு ஸாதனம் எனப் பொருள் ஆகும். அஃது யாது எனின், அது ஆத்மவித்யையே ஆம். அவ்வாறிருக்க நூல்களை உபநிஷத் எனக் கூறலாமா எனின், அவை அவ்வித்யையை உணர்த்துகின்றமையால் உபசார வழக்கால் அவற்றையும் அவ்வாறு கூறலாம் என்பர்.[1] ஆசிரியனை அணுகிக் கற்கும் வித்யை அல்லது ரஹஸ்யம் என்பதும் அச்சொற்குப் பொருள் என்பர். வேதங்களின் அந்தத்தில் இருப்பதால் உபநிஷத்துக்களை வேதாந்தம் எனவுங் கூறுவர்.

ஈண்டு உணர்த்தப்படும் பொருள்கள் கர்மகாண்டத்தில் உணர்த்தப்பட்டனவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டன. அவை முக்தியின் தன்மையும், முக்தியடையும் ஸாதனமும் ஆம். முதன்முதலில் நிஷ்காமகர்மாக்களைச்[2] செய்து சித்தசுத்தியை[3] அடையவேண்டும்; பின்னர் ஆசிரியனை அடைந்து ஆத்ம

1. सदेः धातोः विशरणगत्यवसादनार्थस्य उपनिपूर्वस्य क्विप्प्रत्ययान्तस्य रूपमिदमुपनिषदिति । उपनिषच्छब्देन च व्याचिख्यासितग्रन्थप्रतिपाद्यवेद्यवस्तुविषया विद्या उच्यते . . . ग्रन्थस्यापि तादर्थ्येन तच्छब्दत्वोपपत्तेः आयुर्वै घृतमित्यादिवत् । तस्मात् विद्यायां मुख्यया वृत्त्या उपनिषच्छब्दो वर्तते, ग्रन्थे तु भक्त्या इति [ काठकोपनिषदि शाङ्करभाष्यम् ]

2. निष्कामकर्म

3. चित्तशुद्धिः

விஷயமாய்ச் சிரவணஞ் செய்யவேண்டும்; சிரவணஞ் செய்த வற்றை யுக்தியோடு கலந்து மனனஞ் செய்து அவற்றைத் தன தாக்கிக்கொள்ளவேண்டும். பின்னாகக் கடவுளைத் தியானஞ் செய்யவேண்டும். அவற்றால் அபரப்பிரும்மப்பிராப்தி அடைய லாம். அதன் பின்னர் கடவுளருளால் ஞானம் அடைந்து கடவுளோடு கடவுளாய் ஒன்றுகவேண்டும். ஒன்றுன பிறகு பிறப்பிறப்பு இல்லை. இவ்வுடலோடு இருக்கும்போதே ஒன்றுப் விட்டால் அவனுக்கு இறப்பு இல்லை. அந்நிலையை ஜீவன்முக்தி என்பர். ஒன்றுக ஆவதற்கு முன்னரே அவன் இறப்பின் அஜ்ஜீவன் பித்ருயாணம் தேவயானம் என்ற இரண்டு மார்க்கத்துள் ஒன்றில் வழியாகப் பித்ருலோகத்திற்கோ பிரும்மலோகத் திற்கோ கொண்டுபோகப்படுகிறான். கடவுளைத் தியானித்தல் பலவகைப்பட்டதாகலின் உபாஸனங்கள் பலவகைப்படும். இவற்றையெல்லாம் உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

உபநிஷத்துக்களிற் கூறப்பட்ட பொருள்களைக்கொண்டு அவை நான்கு காலங்களிற் காணப்பட்டிருத்தல் கூடும் என்பர்.

1. மிகப்பழமையானவை, பிருகதாரணியகம்,[1] சாந்தோக்யம்[2] ஐதரேயம்,[3] கௌஷீதகம்[4] இவை ஆகும். இவையெல்லாம் வசனநடையிலே உள்ளன.

செய்யுள்நடை, வசனநடை இரண்டையுங் கொண்ட கேனோபநிஷத்[5] அவற்றின் பின்னாகக் காணப்பட்டிருத்தல் கூடும்.

2. செய்யுள்நடையைக் கொண்ட காடகம்,[6] ஈசாவாஸ்யம்,[7] ச்வேதாச்வதரம்,[8] முண்டகம்[9] மஹாநாராயணம்[10] இவை பிற்காலத்தன.

1 बृहदारण्यकम्
2 छान्दोग्यम्
3 ऐतरेयम्
4 कौषीतकम्
5 केनोपनिषत्
6 काठकम्
7 ईशावास्यम्
8 श्वेताश्वतरम्
9 मुण्डकम्
10 महानारायणम्

பிரருபாணம் இவற்றின் வாணனேயும், மண்ணே உண்மை, குடம் முதலிய விகாரங்கள் சொற்களே என்பதும், ஆயில் ஜீவாதமாவும் பரமாதமாவும் ஒன்றே என்பதும், எழில் அன்னம் தொடங்கி ப்ராணன் வரையில் அவ்வவற்றைப் பிரும்மம் என உபாஸனை செய்தால பரப்பிரும்மததை அடைய லாம் என்பதும், எட்டில் பிரும்மததை அடைய உபாயங்களும் கூறப்பட்டன.

கேனுேபநிஷததில நான்கு கண்டங்கள் உள. முதலிரண்டு கண்டங்களும் செய்யுள்வடிவங் கொண்டன; எஞ்சிய இரண்டும வசனநடையில் உள்ளன. முதறபகுதியில் எது வாககு முதலியவறருல் உணாததப்படாததோ, எதன் உதவி யால் வாக்கு முதலியன தம் வேலையைச் செய்கின்றனவோ, அதுதான் பிருமமம் என உணாக என்பதுபோன்ற தொடா களால தெளிவாகவும் எளிதாகவும் பிரும்மன் வரூபம உணர்த்தப் படுகின்றது. இரண்டாம் பகுதியில் பிரும்மமே தேவர்களுக்குள் மேலானது என்பதும, பிருமம பபிராப்தி பிரும்மததின் அருளா லேயே கிடைக்கும் என்பதும் நன்கு வருணிக்கப்பட்டுளது. இது தலவகாரசாகையைச சோநதமையால் முன்னாத தலவகாரோப நிஷத எனப பெயா பெறறது. கேந என்ற சொல்லால் தொடங்குவதால் பின்னாக கேனோபநிஷத எனப் பெயா பெறறது.

கிருஷ்ணயஜுர்வேத - உபநிஷதுக்களில் சிறநதன தைத திரீயம், காடகம், ச்வேதாச்வதரம், மைத்ராயணீயம் முதலியன.

தைத்திரீயம் மூனறு வல்லிகளே உடையது. அவற்றிற்குச் சிக்ஷாவல்லி,[1] பிரம்மானநதவல்லி,[2] ப்ருகுவல்லி[3] என்பன பெயா. முதல் வல்லியில் சிக்ஷாத்தியாயம் ஸம்ஹிதோபநிஷத், ஓங்கா ரோபாஸனம், பிரும்மப்ராப்திஸாதனமான தபஸ்வின வகை

1 शिक्षावल्ली
2 ब्रह्मानन्दवल्ली
3 भृगुवल्ली

முதலியன உணர்த்தப்பட்டன. இரண்டாவதில் பிரும்மவித்யை யின் பயனும் பிரும்மானந்தத்தின் தன்மையும் நன்கு வருணிக் கப்பட்டன. மூன்றாவதில் பிரும்மவித்யாஸாதனமாகிய உபா ஸனங்கள் விரிவாய்க் கூறப்படுகின்றன.

காடகம். — இதனுள் இரண்டு அத்தியாயங்களும், ஒவ் வொன்றில் மூன்று வல்லிகளும் உள. முதல் வல்லியில் நசிகேதஸ் ஸுக்கு யமன் கொடுக்கும் இரண்டு வரங்களும், அவன் அவ னைக் கேட்கும் மூன்றாங் கேள்வியும், அதற்கு இடை உருவமாக அவனுக்கு ஆதமவித்யைக்கு ஸாதனசதுஷ்டயங்கள் இருக்கின் றனவா என அவர் அறிந்ததும் கூறப்பட்டன. இரண்டாம் வல்லியில் ஜீவாத்மா பரமாத்மா இவற்றின் ஸ்வரூபம் கூறப் பட்டது. மூன்றாவதில் ரதரூபகத்தால்[1] ஜீவான்மா, புத்தி, மனஸ், இந்திரியங்கள், வெளிப்பொருள்கள் இவற்றின் தன்மை யும், இவற்றின் ஸம்பந்தமும், ஜீவான்மா பரமான்மா ஆவதற் குச்செய்யவேண்டுவதும் நன்கு உணர்த்தப்பட்டன. நான்காம் வல்லியில் அந்தராத்மாவின் தன்மையும் அதனைப் பலருள் யாரோ ஒருவர் அறிய விரும்புவர் என்பதுங் கூறப்பட்டன. ஐந்தாம் வல்லி பிரும்மம் ஒன்றே உலகத்துப் பொருளெல்லா வற்றிலும் அந்தர்யாமியாய் இருக்கின்றது எனக் கூறும். ஆறாம் வல்லியில் யமன் முதலியோர் பிரும்மத்தின் ஆணையாலே வேலை செய்கின்றார் என்பதும், பிரும்மப்ராப்தி அதனருளாலே கிடைக்கும் என்பதும், ஜீவன்முக்தியின் தன்மையும் நன்கு உணர்த்தப்பட்டன.

ச்வேதாச்வதரம். — இதனுள் ஆறு அத்தியாயங்கள் உள. ச்வேதாச்வதரர் என்ற வித்வானால் இது அத்யாச்ரமிகளுக்குக் கூறப்பட்டமையால் ச்வேதாச்வதரம் என்ற பெயர் பெற்றது.[2]

1. रथीरथरूपकम्
2. तपः प्रभावाद्देवप्रसादाच ब्रह्म ह श्वेताश्वतरोऽथ विद्वान् ।
अत्याश्रमिभ्यः परमं पवित्रं प्रोवाच सम्यगृषिसङ्घजुष्टम् ॥
(6, 21)

காடகோபநிஷத்திலுள்ள பல மந்திரங்கள் இங்குக் காணப்படுவதால்,[1] இது காடகத்திற்குப் பிற்பட்டது என்பது வெளிப்படை. இவ்வுலகங்களை அளித்தருளும் ருத்திரன் ஒருவரே ஈசன் என்பதும்,[2] அவர் ஹிரண்யகர்ப்பரைப் படைத்தார் என்பதும்,[3] இறுதிக்காலத்தில் எல்லாப்பொருளும் அவரிடத்து லயமடைகின்றன என்பதும்,[4] சக்தியின் சேர்க்கையால் ஒருவரே பலர் ஆகின்றனர் என்பதும்,[5] ஒருகாலத்து மாயையுடன் இருந்து வேறொரு காலத்து அதை விட்டு இருக்கிறார் என்பதும்[6] அங்குக் கூறப்படுகின்றன. அந்தர்யாமியான பரம்பொருள் சாக்ஷியாயிருக்கிறார் எனக் கூறப்படுகின்றமையால்,[7] சாங்கியமதக் கொள்கையும் இங்குக் கலந்துள்ளது என்பர்.

மைத்ராயணீ-உபநிஷத். — இதனுள் ஏழு அத்தியாயங்கள் உள. ஆத்மா சரீரத்தில் ப்ரவேசிக்கும் பிரகாரமும், ஸம்ஸார நிவ்ருத்திப்ரகாரமும், பரமாத்மாவின் ஸ்வரூபமும், அங்குக்

1. 3, 20, 4, 6; 6, 14, ....
2. एको हि रुद्रो न द्वितीयाय तस्थुर्य इमाँल्लोकानीशत ईशनीभि. (3, 2)
3. यो देवानां प्रभवश्चोद्भवश्च विश्वाधियो रुद्रो महर्षिः ।
   हिरण्यगर्भं जनयामास पूर्वं ..... ॥ (3, 4)
4. अन्तकाले संसृज्य विश्वा भुवनानि गोपा. ॥ (3, 2)
5. य एकोऽवर्णो बहुधा शक्तियोगात् .... (4, 1)
6. अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीः प्रजाः सृजमानां सरूपाः ।
   अजो ह्येको जुषमाणोऽनुशेते जहात्येनां भुक्तभोगामजोऽन्यः ॥ (4, 5)
7. एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
   कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च ॥ (6, 11)

கூறப்பட்டன. அன்றியும் அக்னி, வாயு, ஆதித்தியன், காலம், ப்ராணன், அன்னம், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் இவர் எல்லாம் ஸோபாதிகப்பிரம்மங்கள் என உணர்த்தப்பட்டன.

சுக்லயஜுர்வேதிய உபநிஷத்துக்களுள் சிறந்தன ஈசாவாஸ்யமும் பிருகதாரண்யகமும்.

ஈசாவாஸ்யம்.—இது ஒன்றுதான் ஸம்ஹிதையிற் காணப்படும் உபநிஷத். பதினெட்டு மந்திரங்களில் பிரும்மத்தின் ஸ்வரூபமும், வித்தையை அவித்தை இவற்றின் பேதமும் நன்கு உணர்த்தப்பட்டன. இது காடகோபநிஷத்திற்குப் பின்னரும் ச்வேதாச்வதரத்திற்கு முன்னரும் காணப்பட்டது என்பர்.

ப்ருகதாரண்யகம்—இதனுள் மதுகாண்டம்,[1] யாஞ்ஞவல்க்ய காண்டம்,[2] கிலகாண்டம்[3] என மூன்று காண்டங்களும், ஒவ்வொரு காண்டத்துள்ளும் இரண்டு அத்தியாயங்களும் உள. முதற்காண்டத்தில் அச்வமேதவிஷயமான விஞ்ஞானத்தின் பயனும், பிராணன் இந்திரியங்களைக்காட்டிலும் சிறந்தது என்பதும் ஆத்மஸ்வரூபமும் உணர்த்தப்பட்டன. இரண்டாங் காண்டத்தில் அஃதில்லை அஃதில்லை எனப் பிரும்மத்தின ஸ்வரூபமும், அதை அறிதல் அரிது என்பதும், பிரும்ம ஸாக்ஷாத்காரம் வேண்டும் என்பதும், விழிப்பு ஸ்வப்னம் தூக்கம் இந்நிலைகளில் ஜீவனின் நிலைமை, ஆத்மாவை அறியும்பொருட்டு ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம்[4] வேண்டும் என்பதும் கூறப்பட்டன. மூன்றாங் காண்டம் உபாஸனங்களைப் பற்றியது.

அதர்வவேத உபநிஷத்துக்கள் பல ஆகும். அவற்றுள் சில ஆத்மஸ்வரூபத்தைக் கூறுகின்றன; சில, யோகத்தாலும் ப்ரணவோபாஸனத்தாலும் ஆத்மஸாக்ஷாத்காரம் அடையலாம்

1. मधुकाण्ड:
2. याज्ञवल्क्यकाण्ड:
3. खिलकाण्ड:
4. निदिध्यासनम्

எனக் கூறும், சிலவற்றுள் ஸந்நியாஸியின் சிறப்பு கூறப்பட்டது, சில, சிவனே பிரும்மம் என்றும் விஷ்ணுவே பிரும்மம் என்றும் கூறும்.

அவற்றுள் முண்டகமும் ப்ரச்னம், சாந்தோக்யம் பிருகதாரண்யகம் தைத்திரீயம் காடகம் இவற்றிற்குப் பிற்பட்டன என்பர்.

மாண்டூக்யோபநிஷத்தை மூலமாகக் கொண்டு சங்கராசாரியர்களின் பரமாசாரியராகிய கௌடபாதர்[1] வேதாந்த ஸித்தாந்தங்களை 200 காரிகைகள் கூறியுள்ளனர். அதற்கு ஆகமப்ரகரணம்,[2] வைதத்தியப்பிரகரணம்,[3] அத்வைதப்ரகரணம்,[4] அலாதசாந்திப்ரகரணம்,[5] என நான்கு ப்ரகரணங்கள் உள.

---

1. गौडपाद्
2. आगमप्रकरणम्
3. वैतथ्यप्रकरणम्
4. अद्वैतप्रकरणम्
5. अलातशान्तिप्रकरणम्

## அத்தியாயம் 27

### வேதாங்கங்களும், அவற்றின் தன்மையும், அநுக்ரமணிகைகளும்

இதுவரை கூறப்பட்ட மந்திரங்கள், பிராம்மணங்கள், உபநிஷத்துக்கள் இவற்றையும், வேதாங்கங்களாகிய சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் இவற்றையும் அபராவித்யா என முண்டகோபநிஷத் கூறும்.[1] வேதாங்கங்களுள் பல முதன்முதலில் ஸூத்திரங்களாக எழுதப்பட்டன. மந்திரங்களைப் பொருளுணர்ச்சியுடன் ஸ்வரம், எழுத்து முதலியவற்றில் தவறாது உச்சரிக்க உதவுவனவும், அம்மந்திரங்களை உச்சரிக்கும் இடம் காலம் முதலியவற்றை உணர்த்துவனவும் என அவ் வேதாங்கங்களை இருவகையாகப் பிரிக்கலாம்.

எழுத்துக்களைப் பிழைபடாது உச்சரிக்க அவற்றின் பிறப்பிடம், மாத்திரை, ஸ்வரம், ஸந்தியில் அவை கொள்ளும் மாறுபாடு இவற்றின் அறிவு வேண்டும். இவற்றை உணர்த்தும் சாஸ்திரம் சிக்ஷை எனப்படும்.

பெரும்பாலும் மந்திரங்கள் செய்யுள்வடிவங்கொண்டவையான, அச்செய்யுட்கள் எந்த சந்தஸ்ஸில் அமைந்துள்ளன என்ற அறிவும் வேண்டும். இதனைக் கூறும் சாஸ்திரத்திற்குச் சந்தஸ் எனப் பெயர்.

1. तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्ववेदः शिक्षा कल्पो व्याकरणं निरुक्तं छन्दो ज्योतिषमिति (मुण्डक. 1, 1, 5).

ஒரு சொல்லில் இது பகுதி, இது விகுதி என்பதனை அறிவும், சொற்கள் அவ்வவ்வேற்றுமையில் கொள்ளும் உருவத்தின் அறிவும், ஸ்வரத்தின் மாறுபாட்டால் பொருளும் மாறுபடும் என்ற அறிவும் வேண்டும். இவற்றை உணர்த்துவது வியாகரணம் ஆகும்.

பொருளறிவின்றி சொல்லை வழங்குதல் சிறப்பின்று என்ப பெரியோர் கூறியிருத்தலானும், வாக்கியத்தின் பொருள் சொற்களின் பொருளைக்கொண்டு அறியப்படுமாதலானும் சொற்களின் பொருளை அறிதல் இன்றியமையாதது ஆகும். அதனை உணர்த்துவது நிருக்தம் ஆகும்.

வேதமந்திரங்களை எந்த எந்த காலத்தில் வழங்கவேண்டும் என்ற அறிவும் வேண்டும். அக்காலத்தை அறிவிப்பது ஜ்யோதிஷம் ஆகும்.

யாகம் முதலியவற்றைச் செய்யும் முறையும், அங்கு மந்திரங்கள் எவ்வாறு வழங்கப்படவேண்டும் என்ற முறையும் அறிதல் இன்றியமையாதது. அதனை உணர்த்துவது கல்பம் ஆகும்.

அங்கங்கள் எவ்வாறு வேதங்களைக் காப்பாற்ற வந்தனவோ அவ்வாறே அவற்றைக் காப்பாற்ற அநுக்ரமணிகைகளும்[1] செய்யப்பட்டன. ருக்வேதத்தைப்பற்றிய ரிஷி, சந்தஸ், அநுவாகம், பதம், ஸூக்தம் இவைகளைக் குறித்துச் சௌனகர் இயற்றிய அநுக்ரமணிகைகள் ஏழ். இவற்றின் உரைகாரர் ஷட்குருசிஷ்யர்.[2] சௌனகரது தேவதாநுக்ரமணியிலிருந்து 10 வாக்கியங்கள் ஆளப்பட்டமையால், அவர் காலம்

1 अनुक्रमणिका

2 षड्गुरुशिष्य

தானுக்ரமணியும் செய்திருந்தார் எனத் தோன்றுகிறது. மக்கள் பிருகத்தேவதையைப்[1] படித்ததால் அது இறந்துவிட்டது போலும். மற்றோர் அநுக்ரமணியும் அவர் இயற்றியதாகக் கேள்வி. காத்யாயனர் ஸர்வாநுக்ரமணி[2] செய்தார். கிருஷ்ண யஜுர்வேதத்திற்கு ஆத்ரேயாநுக்ரமணி[3], காடகாநுக்ரமணி[4] இவ்விரண்டும், சுக்லயஜுர்வேதத்திற்குக் காத்யாயநாநுக்ரமணியும்,[5] ஸாமவேதத்திற்கு ஆர்ஷாநுக்ரமணி[6] தைவதாநுக்ரமணி[7] இவ்விரண்டும் உள.

---

1. बृहद्देवता
2. सर्वानुक्रमणी
3. आत्रेयानुक्रमणी
4. काठकानुक्रमणी
5. कात्यायनानुक्रमणी
6. आर्षानुक्रमणी
7. दैवतानुक्रमणी

## அத்தியாயம் 28

---

### சிக்ஷை

சிக்ஷா என்ற சொல் தைத்திரீயோபநிஷத்தில் சீக்ஷா என வழங்கப்பட்டிருக்கிறது. சிக்ஷையில் வர்ணமும், ஸ்வரமும், மாத்திரையும், ப்ரயத்னமும், மத்தியமவிருத்தியால் உச்சரிக்கையும், ஸம்ஹிதையும் கூறப்படும் என ஆங்கே உணர்த்தப்பட்டது.[1] இவற்றை விரிவாகக் கூறும் நூல்கள் ஒவ்வொரு வேதத்தின் ஒவ்வொரு சாகைக்கும் தனித்தனியாய் இருந்தன என்பது ப்ராதிசாக்யம் என்ற பெயரால் அறியப்படும். ஒவ்வொரு வேதத்துள்ளும் பல சாகைகள் தற்போது எவ்வாறு காணப்படவில்லையோ, அவ்வாறே பல ப்ராதிசாக்யங்களும் காணப்படவில்லை. இப்பொழுது வழங்கப்படுவன நான்கே ஆகும்.

அவை ருக்வேதப்ராதிசாக்யம், தைத்திரீயப்ராதிசாக்யம், வாஜஸநேயிப்ராதிசாக்யம், அதர்வவேதப்ராதிசாக்யம் என்பன. அவற்றுள் ருக்வேதப்ராதிசாக்யம் ஆச்வலாயன மஹர்ஷியின் ஆசிரியர் சௌனகமஹர்ஷியாலும், வாஜஸநேயிப்ராதிசாக்யம் காத்யாயனமஹர்ஷியாலும் இயற்றப்பட்டன. முன்னருள்ள இரண்டும் பாணினிகாலத்திற்கு முற்பட்டன என்பதும் அதர்வவேதப்ராதிசாக்யம் பிற்பட்டது என்பதும் வெளிப்படை. முற்கூறப்பட்ட காத்யாயனமஹர்ஷியும் பாணினி அஷ்டாத்யாயிக்கு வார்த்திகம் எழுதிய மஹர்ஷியும்

1 ॐ शीक्षां व्याख्यास्यामः । वर्णः । स्वरः । मात्रा बलम् । साम सन्तानः । इत्युक्तः शीक्षाध्यायः ॥

ஒருவராயிருப்பின் வாஜஸநேயிப்ராதிசாக்யமும் பாணினிகாலத்திற்குப் பிற்பட்டதே ஆகும். புஷ்பஸூத்திரத்தை ஸாமவேத ப்ராதிசாக்யம் எனலாம். ப்ராதிசாக்கியங்களிலிருந்து நாம் அறியும் சிறந்த செய்தி ஒன்று. அஃது யாதெனில் அக்காலத்திலிருந்து இன்றுவரை வேதமந்த்ரங்கள் மாறுபடாது இருக்கின்றன என்பது. நாரதீயசிக்ஷையும்[1] பாணினிசிக்ஷையும்[2] பிற்காலத்தன என்பர். தற்போது வழங்கும் பாரத்வாஜசிக்ஷா,[3] வ்யாஸசிக்ஷா,[4] வாஸிஷ்டசிக்ஷா,[5] யாஜ்ஞவல்க்யசிக்ஷா,[6] இவை எல்லாம் பிற்காலத்தன எனப்படும்.

ஸம்ஹிதாபாடத்தையும் பதபாடத்தையும் பிழையின்றி உச்சரிக்க சிக்ஷையின் அறிவு பயன்படும்.



1. नारदीयशिक्षा
2. पाणिनिशिक्षा
3. भारद्वाजशिक्षा
4. व्यासशिक्षा
5. वासिष्ठशिक्षा
6. याज्ञवल्क्यशिक्षा

# அத்தியாயம் 29

## சந்தஸ்

மந்திரங்கள் பெரும்பான்மையும் செய்யுள் வடிவம் கொண்டன எனக் கூறப்பட்டது. செய்யுள் பலவகையாயிருத்தலின் சந்தஸ்ஸுக்களும் பலவகைப்பட்டன. சந்தஸ்ஸுக்களுள் சில ஓரடியும், சில ஈரடியும், சில மூன்றடியும், சில நான்கடியும், சில ஐந்தடியும், சில ஆறடியும், சில ஏழடியும், சில எட்டடியும் கொண்டன[1] என்றும், அவை காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தீ, த்ரிஷ்டுப், ஜகதீ[2] முதலியன என்றும், தைத்திரீயஸம்ஹிதையிற் கூறப்பட்டது. காயத்ரீ 24 அக்ஷரங்களைக்[3] கொண்டது என்றும், மேலுள்ள ஒவ்வொன்றும் நாலு நாலு அக்ஷரங்களை மிகுதியாகக் கொண்டன என்றும் ஆங்கே கூறப்பட்டது. பெரும்பாலும் காயத்ரீ உஷ்ணிக் இவை மூன்றடியையும், அநுஷ்டுப் ப்ருஹதீ இவை நான்கடியையும், த்ருஷ்டுப்

•

1 एकपदी द्विपदी त्रिपदी चतुष्पदी पञ्चपदी षट्पदी सप्तपद्यष्टापदी
(तै स 3, 3, 10 2)

2 गायत्री त्रिष्टुप् जगत्यनुष्टुप् पङ्क्त्या सह ।
बृहत्युष्णिहा ककुत् (5, 2 11 1)

3 அக்ஷரம் என்பதற்கு உயிரெழுத்து என்ப பொருளிருப்பினும் இங்கு அஃது ஸ்வரங்களைக் குறிக்கும் एकान् — இங்கிலீஷில் syllable என்பர்

ஜகதீ பங்க்தி இவை ஐந்தையும், கொண்டன என்றும்,[1] ஒவ்வொன்றிலுமுள்ள அக்ஷரங்கள் எவ்வளவு என்றும் சாங்கியாயனச்ரௌதஸூத்திரத்திலும்,[2] சௌனகப்ராதிசாக்யத்திலும், ஸாமவேதநிதானஸூத்திரத்திலும் கூறப்பட்டுள்ளது. காத்யாயனர் இயற்றிய ஸர்வாநுக்ரமணியிலும் அவை காணப்படுகின்றன. பிங்களர் எழுதிய சந்தஸ்-சாஸ்திரத்தை வேதாங்கம் எனக் கூறுவர். அதற்குப் பிற்காலத்திய விருத்தங்களின் இலக்கணம் இருத்தலின், அந்நூல் , பிற்காலத்தது என்பது வெளிப்படை.

விருத்தங்களின் இலக்கணத்தைக் கூறும் நூல்கள் காளிதாஸரின் ச்ருதபோதம்,[3] கேதாரபட்டரின் விருத்தரத்னாகரம்,[4] க்ஷேமேந்திரரின் ஸுவிருத்ததிலகம்[5] ஆகும்.

1. अष्टाक्षरा गायत्री ... एकादशाक्षरा त्रिष्टुप् ... द्वादशाक्षरा जगती (तै. सं. 2, 2, 10, 6)
   त्रिपदा गायत्री ... चतुष्पदा त्रिष्टुप् (3, 2, 9, 3)
   सप्तपदा शक्वरी (6, 1, 8, 8)
   पञ्चाक्षरा पङ्क्तिः (6, 1, 9, 5)
   सप्तपदा शक्वरी (5, 3, 4, 6)
2. गायत्र्युष्णिहाविति त्रिपात्सारूप्यात्समामः, अनुष्टुब्बृहत्याविति चतुष्पात्सामान्यात् त्रिष्टुब्जगत्याविति (पङ्क्तेः पञ्चपादा भवन्ति)...
3. कालिदासीयश्रुतबोधः (ப்ரஸித்த காளிதாஸர் ச்ருதபோதத்தை இயற்றினார் என்பது ஐயம்).
4. केदारभट्टीयवृत्तरत्नाकरः
5. क्षेमेन्द्रीयसुवृत्ततिलकम्

சந்தஸ்ஸுக்களுக்கும் விருத்தங்களுக்கும் வேறுபாடு யாதெனின், சந்தஸ்ஸுகள் அக்ஷரங்களின் எண்ணிக்கையைப் பற்றியனவேயன்றி அவற்றின் மாத்திரையையும் பற்றியன அல்ல; விருத்தங்கள் அவற்றின் மாத்திரையையும் பற்றியன. அன்றியும் விருத்தங்களில் மும்மூன்று அக்ஷரங்களை ஒரு கணமாகக் கொண்டு அவை கணக்கிடப்படுகின்றன. சில விருத்தங்கள் அக்ஷரங்களின் மாத்திரையைப் பற்றியனவே; சில விருத்தங்களில் ஒவ்வொரு அடியிலும் ஒரே கணக்கான அக்ஷரங்கள் இருக்கும்; சிலவற்றில் அவ்வாறு இரா. ஆராய்ந்து பார்ப்பின் சில விருத்தங்கள் சில சந்தஸ்ஸுக்களைப் பின்பற்றி வந்திருத்தல் கூடும். உதாரணமாக இந்த்ரவஜ்ரா, உபேந்த்ரவஜ்ரா இவை த்ருஷ்டுபையும், வம்சஸ்தா ஜகதியையும், வஸந்ததிலகா சக்வரியையும் பின்பற்றின.[1] அநுஷ்டுப் வேதத்திலும் பிற்காலத்து நூல்களிலும் வழங்கப்பட்டது என்பது யாவரும் அறிவர்.

1. History of Sanskrit Literature Vol I by C. V. Vaidya p. 72.

## அத்தியாயம் 30

### நிருக்தம்

தற்போது வழக்கில் உள்ள நிருக்தம் யாஸ்கமஹர்ஷியால் இயற்றப்பட்டது. அதனில் நைகண்டுகம்,[1] நைகமம்,[2] தைவதம்[3] என்ற மூன்று காண்டங்களும் பன்னிரண்டு அத்தியாயங்களும் உள. முன் இரண்டு காண்டங்களில் மும்மூன்று அத்தியாயங்களும், மூன்றாவதில் ஆறு அத்தியாயங்களும் உள. நைகண்டுகத்தில் பதவிபாகங்களும்[4] அவற்றைப்பற்றி நிருக்தகாரருடைய கொள்கைகளும்[5] ஒருபொருட்கொண்ட பல சொற்களைப்பற்றிய ஆராய்ச்சியும் உணர்த்தப்பட்டன. அச்சொற்கள் நிகண்டுஸமாம்நாயத்தில் முதல் மூன்று அத்தியாயங்களிற் கூறப்பட்டன. நைகமத்தில் பல பொருட்கொண்ட ஒரு சொல்லின் பலபொருளும் அவற்றின் காரணமும்

1 नैघण्टुकम्

2 नैगमम्

3 दैवतम्

4 तद्यान्येतानि चत्वारि पदजातानि नामाख्याते चोपसर्गनिपाताश्च तानीमानि भवन्ति । भावप्रधानमाख्यातं सत्त्वप्रधानानि नामानि ... न निर्बद्धा उपसर्गा अर्थान्निराहुरिति शाकटायनः, नामाख्यातयोस्तु कर्मोपसंयोगद्योतका भवन्त्युच्चावचाः पदार्था भवन्तीति गार्ग्यः ... अथ निपाता उच्चावचेष्वर्थेषु निपतन्ति

5 नामान्याख्यातजानीति शाकटायनो नैरुक्तसमयश्च । न सर्वाणीति गार्ग्यो वैयाकरणानां चैके ॥

உணர்த்தப்பட்டன. அச்சொற்கள் நிகண்டுஸமாம்நாயத்தில் நான்காம் அத்தியாயத்தில் உள. தைவதத்தில் தேவதைகளுடைய விபாகத்தைக் கூறி ஒவ்வொன்றைப் பற்றிய விரிவான ஆராய்ச்சியும் செய்யப்பட்டது.

இவர் காலத்திற்கு முன்னரே பலர் நிருக்தம் எழுதியிருந்தனர் என்பதும், அவரது கொள்கை சில வையாகரணர்களின் கொள்கையிலிருந்து மாறுபட்டது என்பதும் விளங்கும். எல்லாப்பெயரும் தாதுவிலிருந்து வந்தன என நைருக்தர் கொண்டமையால், சிற்சில சொற்களுக்கு அவர் கூறும் வ்யுத்பத்தி வியப்பைத் தரும்.[1] நைகமகாண்டத்தில் விசாரித்த சொற்களைக் கவனித்தால், அவர் காலத்திற்கு முன்னரே ருக்வேத மந்திரங்களில் பலசொற்கு வ்யுத்பத்தியும் பொருளும் தெளிவாய் அறியப்படவில்லை என்னலாம். தைவத காண்டத்தில் தேவதைகள் ப்ருதிவீஸ்தானதேவதைகள் என்றும், அந்தரிக்ஷஸ்தானதேவதைகள் என்றும், த்யுஸ்தான தேவதைகள் என்றும் பிரிக்கப்பட்டனர். இந்நூலுள் ருக் வேதத்துள்ள பல ருக்குக்களின் பொருள் ஆராயப்பட்டது. தற்போதுள்ள ஸம்ஹிதை இந்நூலுக்கு முன்னரே அத்தியயனஞ் செய்யப்பட்டது என்னலாம். பஞ்சபூதங்களே தேவதைகளாக வருணிக்கப்பட்டன என்ற கொள்கை தோன்றுதற்கு இந்நூல் உதவியிருத்தல் கூடும். இந்நூலுக்கு உரை மூன்று உள: குமார முதல் நூற்றாண்டில் துர்க்கஸிம்மர் எழுதிய விருத்தி, ஆறும் நூற்றாண்டின் இறுதியில் ஸ்கந்தஸ்வாமி இயற்றிய நிருக்தடீகை, பன்னிரண்டாம் நூற்றாண்டில் மஹேச்வரர் இயற்றிய நிருக்தபாஷ்யடீகை என்பனவாம்.

---

1. अग्नि. कस्मात्? अग्रणीर्भवति, अग्रं यज्ञेषु प्रणीयते, अङ्गं नयति संनममानः । अक्नोपनो भवतीति स्थौलाष्ठीवि । न क्नोपयति न स्नेहयति । त्रिभ्य आख्यातेभ्यो जायत इति शाकपूणिः, इतात्, अक्तात् दग्धात् वा, नीतात्

இவ்வாசிரியர்களைக் கூறுகின்றனர் நூல்கள் இயற்றும்போது மங்களம் செய்யும் வழக்கு அவர்காலத்திற்கு முன்னரே இருந்தது எனக் காட்டுகின்றனர்[1]. சில வார்த்திகங்களுக்கும் ஜைமினீயஸூத்ரங்கட்கும் ஒற்றுமை இருப்பதால் ஜைமினியின் காலத்திற்குப் பிற்பட்டவர் எனக் கொள்ளின் தவறாகாது[2].

இவர்க்கு வரருசி என்ற பெயரும் உண்டு என்றும், வாரருசகாவ்யம் என்ற நூல் இவரால் இயற்றப்பட்டது என்றும் கூறுவர். ஆனால் காவ்யம் இயற்றிய வரருசி வேறு ஒருவர் எனச் சிலர் கூறுவர்[3]. காத்யாயனப்ராதிசாக்யம் எழுதியவரும் இவரும் ஒருவராயிருத்தல் கூடும்[4].

பதஞ்சலி — பாணினிஸூத்ரங்கட்கும் காத்யாயனர் முதலியோர் எழுதிய வார்த்திகங்கட்கும் உரையாக மஹாபாஷ்யம்[5] என்ற நூலைப் பதஞ்சலிமுனிவர் இயற்றினார். அந்நூலில் 85 ஆஹ்நிகங்கள்[6] உள்ளன. வார்த்திகங்களோடு கூடிய 1254 ஸூத்ரங்களும், வார்த்திகமில்லாத 435 ஸூத்ரங்களும் அதில் ஆராயப்பட்டன. அந்நூல் 24000 கிரந்த

1. भूवादीनां वकारोऽयं मङ्गलार्थं प्रयुज्यते
2. वार्त्तिकम् — जैमिनीयसूत्रम्
   सिद्धे शब्दार्थसम्बन्धे — औत्पत्तिकस्तु शब्दस्यार्थेन सम्बन्धः
   आदित्यवत्तु — आदित्यवद् यौगपद्यम्
3. History of Sanskrit Literature by A B Keith, p 427
4. एच इग्घ्रस्वादेशे என்ற வார்த்திகத்திலும் एद सस्थानत्वात् पेचोश्चोपरभूयस्त्वात् என்ற ப்ராதிசாக்யத்திலும் இக்கொள்கை காணத்தகும்
5. महाभाष्यम्
6. आह्निकानि

கொண்டது என்றும், அதற்குச் சூர்ணி எனப் பெயர் என்றும்; அதனை மூன்று தடவைகளிற் படித்தனர் என்றும் இட்ஸிங் என்ற சீனயாத்திரிகர் கூறுகின்றார்.[1] பதஞ்சலியை இஷ்டிக்ருத்[2] என மங்ககர் ஸ்ரீகண்டசரிதத்திற்[3] கூறுகின்றனர்.

, வ்யாடி எழுதிய ஸங்கிரஹத்தைப் படிப்போர் குறையுங் காலத்து பதஞ்சலி மஹாபாஷ்யத்தை இயற்றினர் என்றும், நாகவனத்தராகிய பர்வதரிடத்து[4] ஆசார்யசந்திரர்[5] அதனைக் கற்று காச்மீரத்து அரசனாகிய அபிமன்யுவின்[6] வேண்டுகோளுக்கு இணங்கிக் காச்மீரத்திற் பரவச்செய்தனர் என்றும் பர்த்ருஹரி[7] வாக்யபதீயத்திற்[8] கூறினர். அங்கே அவர் யோகம், வைத்தியம் இவற்றைப்பற்றி நூல்கள் எழுதியுள்ளார் எனக் குறிப்பிருக்கின்றனர். யோகத்தைப்பற்றிய நூல் யோகஸூத்ரமே என்பர் பலர்; யோகஸூத்ரத்தை இயற்றியவர் அவரல்லர் என்பர் சிலர்.[9]

1. A record of the Buddhist religion by Itsing and translated by J. Takakusu p. 178. பதஞ்சலியை சூர்ணிக்ருத் என பர்த்ருஹரி கூறியதாக மோக்ஷமூலர் கூறுவர்.
2. इष्टिकृत्
3. श्रीकण्ठचरिते (3, 57)
4. पर्वतः
5. आचार्यचन्द्रः
6. अभिमन्युः
7. भर्तृहरिः
8. वाक्यपदीयम्
9. अयं च योगशास्त्रकाराद्भिन्न इति सरलायामस्माभिस्समर्थितम। अनयोरभेद इति पाश्चात्यैर्वैयाकरणाः (वाचस्पत्यम्)

இராமபத்ரதீக்ஷிதர்[1] தம் பதஞ்சலிசரித்திரத்தில்[2] பின்வருமாறு கூறியுள்ளார் — ஒரு முனிவின் குமாரி கோணிகை[3] என்பவள் அர்க்கியம் விடும்போது ஆதிசேஷன் ஒரு முனிவின் உருவங் கொண்டு அவளது கையில் விழுந்தார், அவர் சிதம்பரத்திற்குச் சென்று சிவனருளால் மஹாபாஷ்யம் இயற்றினார். பல மாணவர்கள் அவரிடம் அந்நூலைப் படிக்க விரும்பினர். திரையை இடையில் இட்டுத் தான் பாடஞ்சொல்வதாகவும், அவர்கள் அதனை நீக்கித் தன்னைப் பார்க்கலாகாது எனவும் அவர் அவரிடங் கூறினார். அவர்கள் அதற்கு இணங்கிப் பல நாள் படித்தனர். ஒருநாள் பலர்க்கும் அவர் தாமதமின்றி விடை கூறுதலைக் கண்டு வியந்து அவர்கள் திரையைத் தூக்கினர், உடனே அவர் அவர்களைச் சபித்தனர். பாடங்கேட்டுக் கொண்டிருந்தபோது ஒருவன் மாத்திரம் வெளியே சென்று, பின்பு தன்னைச் சபிக்கலாகாது என வேண்ட, அவன் கேட்ட ஒரு கேள்விக்கு எவன் சரியாக விடைகூறுகின்றானோ, அன்று அவனுக்குச் சாபம் நீங்கும் என்றனர். அவ்வாறே ஒருகாலத்து

1 रामभद्रदीक्षित

2 पतञ्जलिचरितम्

3 गोणिका, பதஞ்சலி கோணிகைக்குப் பிறந்தவர் என்ற வழக்கைக் கொண்டு गोणिकापुत्र என்பது பதஞ்சலியைக் குறிக்கும் என்பர். எனக்கோரிப்பட்ட காமசூத்திரத்தில் கோணிகாபுத்ர் என்பது ஓரிடத்தில் குறிக்கப்பட்டிருந்தாலும், பதஞ்சலி காமசூத்திரம் எழுதினார் என ஒருவரும் கூறாமையாலும் கோணிகாபுத்ரர் என்பவர் பதஞ்சலியைத் தவிர்த்து வேறொருவர் என்று கொள்வதே நலம். அவ்வாறே கோநர்தீய் என்பது பதஞ்சலியைக் குறிக்கும் என்பர் கையடரும், வார்த்திககாரரைக் குறிக்கும் என ஹரிதீக்ஷிதரும் கூறினர். ஆயின் காத்யாயனரைத் தவிர்த்து வேறொரு வார்த்திககாரரை அது குறிக்கிறதாகத் தோன்றவில்லை.

உஜ்ஜயினியிலிருந்து சந்திரகுப்தர் என்ற ஒருவன் சரியான விடையைத் தர, அவனுக்கு அவர் மஹாபாஷ்யம் கற்பித்தார். அச்சந்திரகுப்தனுக்கு ருத்திரமதியிடம் பிறந்த மகன் பர்த்ருஹரி ஆவர்.

பதஞ்சலியின் சிறப்பு. — அவரது சிறப்பைப் பெரியோர் மஹாராஜ்யம் ஆளவேண்டும் அல்லது மஹாபாஷ்யம் பயில வேண்டும் என்ற ஒரே தொடரால் காட்டினர். மாணவர்க்குப் பொருள் எளிதில் விளங்குமாறு சிறு வாக்கியங்களால் கருத்தை உணர்த்துகின்றார். கருத்தை மாணவர் மனத்துள் வாங்கிக் கொள்கின்றார்களா என்பதைக் கவனிக்க இடையிடையே கேள்வி கேட்கின்றனர். மாணவர்க்கு ஆராயுந் திறனை உண்டுபண்ணுகின்றனர். மாணவரோடு தாம் சமமாக ஆராயும் நடையில் எழுதுகின்றனர். வார்த்திகங்களை நன்கு முதலில் விளக்குகின்றனர். அவற்றின் கொள்கையிலிருந்து தாம் மாறுபட்டால், பின்னர் அதைத் தெளிவாய்க் கூறுகின்றனர். இயற்கையில் நாம் பார்க்கும் அனுபவங்களையே உதாரணமாகக் காட்டிப் பொருளை விளக்குகின்றார். உலக நியாயங்களை வழங்குகின்றனர். பெரியோர் என்ற மரியாதை பாணினி வார்த்திககாரர்கள் இவர்களிடம் இருப்பினும், அவர்களுடைய கொள்கைகளை மனமார ஆராய்கின்றனர். சிலவிடங்களில் தாம் அவரோடு மாறுபடுதலைக் கூறுகின்றனர். சாஸ்திரப் பயிற்சி, லோகானுபவம், மக்களிடம் அன்பு இவற்றைக் கொண்ட அரசர்க்கு நாட்டை ஆளுதல் மேன்மேலும் இன்பத்தைத் தருவதுபோல் சாஸ்திரப்பயிற்சி, லோகானுபவம், வ்யாகரணசாஸ்திரத்தை நன்கு அறியவேண்டும் என்ற ஆசை இவற்றைக் கொண்டவர்க்கு மஹாபாஷ்யம் படிக்கப் படிக்க இன்பம் அளிக்கும் என்பதற்கு ஐயமே இல்லை.

மஹாபாஷ்யத்தின் உரைகள். — மஹாபாஷ்யத்திற்குப் ப்ரதீபிகா[1] என்ற உரையைப் பர்த்ருஹரி கி. பி. ஏழாம்

1. प्रदीपिका

நூற்றாண்டில் இயற்றினர், அதனை யொட்டிப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் கையடர் பிரதீபம்[1] என்ற உரையை இயற்றினர். கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் அன்னம்பட்டர் பாஷ்யம் கையடர் இரண்டிற்கும் முறையாக உத்யோதனம்[2] என்ற உரையை இயற்றினர். கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் நாகோஜிபட்டர் அதனை ஒட்டியே உத்யோதத்தை[3] இயற்றினர், பல இடங்களில் கையடரோடு அவர் மாறுபடுகின்றனர்.

பின்னருள்ள நூல்கள் — வியாகரண சாஸ்திரத்திற் பின்னர் எழுதப்பட்ட நூல்கள் அனைத்தும் பாணினி சூத்ரங்கள், வார்த்திகங்கள், பதஞ்சலிமஹாபாஷ்யம் இவற்றை ஒட்டியே இருக்கின்றன. அதற்குக் காரணம் பதஞ்சலிகாலத்தில் பேச்சில் இருந்த ஸம்ஸ்கிருதபாஷை பிற்காலத்தில் வழக்கில் இல்லாமையும், நூல்களில் அப்பாஷையே வழங்கப்பட்டமையும் ஆகும்.

பாணினி சூத்ரங்களின் போக்கை ஒட்டியே சூத்ரங்களுக்கு உரை எழுதியவர் சிலர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஜயாதித்யர்[4] வாமனர்[5] என்ற இருவரும் காசிகாவ்ருத்தி[6] என்ற நூலை இயற்றினர். அதற்கு ஹரதத்தர்[7] (12 அல்லது 13 ஆம் நூற்றாண்டு) பதமஞ்சரி[8] என்ற உரை இயற்றினர். பதமஞ்சரி மிகவும் சிறந்த நூல். மஹாபாஷ்யத்தில் உள்ளன ஆங்காங்கு எடுத்துக் கூறப்பட்டன. ஆகலின் மஹாபாஷ்யம் படிப்பார்க்குப் பதமஞ்சரி விளக்காகுமென்று படிப்போர்க்கு

1 प्रदीप
2 उद्योतनम्
3 उद्योत
4 जयादित्य
5 वामन
6 काशिकावृत्ति
7 हरदत्त
8 पदमञ्जरी

அது எளிது என்றுங் கூறப்பட்டுளது.[1] காசிகைக்கு ஜிநேந்திர புத்தியால்[2] எட்டாம் நூற்றாண்டில் ந்யாஸம்[3] என்ற உரை எழுதப்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டில் ராமபத்ர தீக்ஷிதரின் உறவினராகிய ரங்கநாதயஜ்வாவினால்[4] பதமஞ்சரீ மகரந்தம்[5] எனப் பெயர் கொண்ட பதமஞ்சரீவ்யாக்யானம் இயற்றப்பட்டது.

பாணினிஸூத்ரமுறையை விட்டு வேறு முறையைப் பலர் கொண்டனர். அவருள் முதல்வர் ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டிலுள்ள தர்மகீர்த்தி[6] என்ற ஜைனர். அவர் ஸூத்ரங்களை வேறு முறையிற் கொண்டு அவற்றிற்கு வ்ருத்தி எழுதியுள்ளார். அந்நூலுக்கு ரூபாவதாரம்[7] எனப் பெயர். அம்முறையில் 14 ஆம் நூற்றாண்டில் விமலஸரஸ்வதி[8] ரூபமாலையையும்,[9] 15ம் நூற்றாண்டில் ராமசந்திரர்[10] ப்ரக்ரியா கௌமுதியையும்,[11] 17 ஆம் நூற்றாண்டில் காசிவாஸி பட்டோஜிதீக்ஷிதர்[12] ஸித்தாந்தகௌமுதியையும்[13] அக்காலத்தே தென்மதுரைவாஸி சொக்கநாதமகி[14] சப்தகௌமுதியையும்[15] இயற்றினர்.

1 अनधीते महाभाष्ये व्यर्था सा पदमञ्जरी ।
अधीते च महाभाष्ये व्यर्था सा पदमञ्जरी ॥

2 जिनेन्द्रबुद्धिः
3 न्यासः
4. रङ्गनाथयज्वा
5 पदमञ्जरीमकरन्दम्
6. धर्मकीर्तिः
7. रूपावतारः
8. विमलसरस्वती
9. रूपमाल
10. रामचन्द्र.
11. प्रक्रियाकौमुदी
12 भट्टोजिदीक्षितः
13 सिद्धान्तकौमुदी
14. चोकनाथमखी
15 शब्दकौमुदी—कलये शब्दकौमुद्याः कवये गुरवे नम.
(रामभद्रदीक्षितकृतायाम् उणादिमणिदीपिकायाम्)



Skt—30

பரகரியாகௌமுதிககு விடடலாசாரியா[1] சுமாா 16 ஆம நூறறுணடிலும, படடோஜிதீக்ஷிதரின வயாகரணகுருவாகிய சேஷகிருஷணா[2] 17 ஆம நூறறுணடிலும, உரை இயறறினா முனனதறகு பரஸாதனம[3] எனப பெயா பரகரியாகௌமுதிக கொளகைகளை மறுதது படடோஜிதீக்ஷிதா பரௌடமனோரமா[4] எனற நூல இயறறினா அந நூலுககு அவா பௌததிரரும நாகேசரின குருவுமான ஹரிதீக்ஷிதரால[5] உரை எழுதபபடடது அவவுரைககுச சபதரதநம[6] எனப பெயா படடோஜிதீக்ஷிதரால சபதகௌஸதுபம,[7] பூஷணஸாரகாரிகை[8] எனற இரணடு நூல களும இயறறபபடடன அவருடைய சகோதரனபிளளை யாகிய கௌணடபடடரால[9] பூஷணம,[10] பூஷணஸாரம[11] எனற இரணடு நூலகள எழுதபபட டன படடோஜிதீக்ஷிதா இயறறிய ஸிததாநதகௌமுதிககு மூனறு உரைகள உள — அவை ஞானேநதரஸரஸவதி[12] இயறறிய ததவபோதினியும[13] நாகேசபடடா இயறறிய[14] சபதேநதுசேகரமும,[15] கோவிநதபுரவாஸியாகிய வாஸுதேவதீக்ஷிதா[16] இயறறிய பாலமனோ[17] ரமையும ஆகும

1 विट्ठलाचार्य
2 शेषकृष्ण
3 प्रसादनम्
4 प्रौढमनोरमा
5 हरिदीक्षित
6 शब्दरत्नम्
7 शब्दकौस्तुभ
8 भूषणसारकारिका
9 कौण्डभट्ट
10 भूषणम्
11 भूषणसार
12 ज्ञानेन्द्रसरस्वती
13 तत्त्वबोधिनी
14 नागेशभट्ट
15 शब्देन्दुशेखर
16 वासुदेवदीक्षित
17 बालमनोरमा

சபதகௌமுதி சென்னை ஓரியணடல கையபிரதி லைபரரியிலும, திருவனநதபுர கையபிரதி லைபரரியிலும, தஞசை ஸரஸவதிமஹால லைபரரியிலும உளளது தறபோது எஙகும ஸிததாநதகௌமுதி படிககபபடுவதுபோல, அநநால பாணடிய நாட்டிலும, கேரளததிலும படிககபபட்டது எனபது தமிழில உளள பரயோகவிவேகததால[1] அறியபபடுகினறது அதறகு மூனறு உரைகள உள. அவை திருவனநதபுர கையபிரதி சாலையில இருககினறன அவறறுள ஒனறு சொககநாதமகியின புததிரரான பாலபதஞசலியால[2] இயறறபபட்டது அதறகுச சாபதிகரக்ஷா[3] எனப பெயர.[4] மறறொனறு பாலபதஞசலியின குமாரரான சொககநாதராலும,[5] மூனறாவது ரஙகிரிதீக்ஷிதரின புததிரரான வைதயநாதசாஸதிரியாராலும இயறறபபட்டன இசசொககநாதர தனது தகபபனார இயறறிய சாபதிக ரக்ஷையை ஆளவதோடு மனோரமா, சபதகௌஸதுபம இவறறிலுளள சில கொளகைகளை மறுககினறனர நாகேச பட்டர இயறறிய சபதேநதுசேகரததிறகுத திருவையாறு வாஸியான மஹாமஹோபாதயாய ஸுபபராயசாஸதிரியாரும விஜய நகரவாஸியான மஹாமஹோபாதயாய தாததாஸுபபராயசாஸதிரியும உரை இயறறியுளளனர

1 प्रयोगविवेक

2 बालपतञ्जलि

3. शाब्दिकरक्षा

4 பாலபதஞசலி ராமபதரதீக்ஷிதருககு சிஷயர எனபது சுபரமணய தீக்ஷிதர் இயறறிய பரயோகவிவேகம் எனற தமிழ்வடநூலின இறுதிச்செய்யுட்களால விளஙகும.

5 இராமாமிர்தம இசசொககநாதரின பௌததிரர ஆவர

பர்த்ருஹரி மஹாபாஷ்யத்திற்கு உரை எழுதியதோடு நில்லாது வாக்யபதீயம்[1] என்ற நூலையும் இயற்றினர். அந்நூலில் சப்தத்திற்கு பரா,[2] பச்யந்தீ,[3] மத்யமா,[4] வைகரீ[5] என நான்கு நிலை உள்ளன என்றும், பரா நிலையில் எல்லாச்சப்தமும் ஒரே வகையாக இருக்கும் என்றும், அஃதே சப்தபிரம்மம்[6] என்றும், அதனையே ஸ்போடம்[7] என்பர் என்றும் கூறினர். அன்றியும் ஸ்போடம், வர்ணஸ்போடம், பதஸ்போடம், வாக்ய ஸ்போடம் என்ப பலவகைப்படினும் வாக்யஸ்போடமே நித்யம் என்றும், பொருளை அறியாது ஒரு சொல் ஸாது அல்லது அஸாது எனக் கூறல் தவறாகும் என்றும் கூறினர். ஈண்டுக் கூறியனவெல்லாம் மஹாபாஷ்யத்திலிருந்து திரட்டியெடுத்தன ஆகும். இந்நூலுக்கு உரை புண்யராஜரால் இயற்றப்பட்டது. இவர் தமிழிலக்கணவுரை இயற்றிய சேனாவரையரது காலத்திற்கு முற்பட்டவர் என்பது 'நான்காகுவதே' (தொல் சொல் 75) என்ற சூத்திரத்தின் உரையால் விளங்கும். பர்த்ருஹரி குமாரிலபட்டர்க்கு முற்பட்டவர் என்பதில் ஐயமில்லை.

வாக்யபேதத்திற்குப் பின்னர் ஹரிபீடிகா[8] என ஒரு வ்யாகரண நூல் படிக்கப்பட்டது என்த் தமிழ்ப்பிரயோகவிவேகத்தால் அறியப்படுகிறது.

எட்டாம் நூற்றாண்டில் ஆசார்யமண்டனமிச்ரரால்[9] ஸ்போடஸித்தி[10] என்ற நூல் இயற்றப்பட்டது. அதற்கு ருஷிபுத்ரபரமேச்வரர் உரை எழுதினர். அவ்வுரைக்குக் கோபாலிகா[11] என்ப பெயர்.

1 वाक्यपदीयम्
2 परा
3 पश्यन्ती
4 मध्यमा
5 वैखरी
6 शब्दब्रह्म
7 स्फोट
8 हरिपीठिका
9 मण्डनमिश्र
10 स्फोटसिद्धि
11 गोपालिका

பதினெட்டாம் நூற்றாண்டில் நாகேசபட்டர்[1] மகா-பாஷ்யத்தை நன்கு ஆராய்ந்து அதற்கு உரை, ஸித்தாந்த-கௌமுதிக்கு உரை இவற்றைச் செய்ததோடு விடாது, மகா-பாஷ்யத்திலிருந்து அறியப்பட்ட பரிபாஷைகளைத் தொகுத்து அவற்றை ஒரு நூலில் அமைத்தனர். அந்நூலுக்குப் பரிபாஷேந்து சேகரம்[2] எனப் பெயர். இந்நூலுக்குப் பல உரைகள் எழுதப்பட்டன. அன்றியும் நாகேசர் வையாகரணக்கொள்கைகளைத் தனி ப்ருஹன்மஞ்ஜூஷா,[3] லகுமஞ்ஜூஷா,[4] பரமலகு மஞ்ஜூஷா[5] என்ற நூல்களில் உரைத்தனர். இவர் வையாகரணஸித்தாந்தம்போல் மற்ற சாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் புலமைவாய்ந்தவர்; பாணினாது கொள்கைகளைப் பற்றித் தனிவகையானவைகளே உரைத்தவர்.

மற்ற நூல்கள். — சரணதேவருடைய[6] துர்கடவ்ருத்தி[7] (கி. பி. 12 நூ.), தைவருடைய[8] தைவம்[9] (கி. பி. 9–12 நூ.) ஸீரதேவருடைய[10] பரிபாஷாவ்ருத்தி,[11] கிருஷ்ணலீலாசுகனின் பருஷகாரம்,[13] நீலகண்டயஜ்வாவின்[14] பரிபாஷாவ்ருத்தி,[15]

1. नागेशभट्ट
2. परिभाषेन्दुशेखर.
3. बृहन्मञ्जूषा
4 लघुमञ्जूषा
5. परमलघुमञ्जूषा
6. शरणदेव
7. दुर्घटवृत्ति.
8. दैव
9. दैवम्
10. सीरदेव
11. परिभाषावृत्ति.
12. कृष्णलीलाशुक
13 पुरुषकारः
14 नीलकण्ठयज्वा
15. परिभाषावृत्ति.

சேஷாத்ரிநாதரின்[1] பரிபாஷாபாஸ்கரம்,[2] மாதவீயதாதுவ்ருத்தி[3] (கி. பி. 14 நூ.), வர்த்தமானரின்[4] கணரத்நமஹோததி[5] (கி. பி. 15 நூ.), அந்நம்பட்டரின்[6] மிதாக்ஷரீ[7] (கி. பி. 16 நூ.), பாவதீயவிச்வேச்வரஸூரியின்[8] வையாகரணஸித்தாந்தஸுதாநிதி,[9] சொக்கநாதமகியின் பாஷ்யரத்நாவளியும்,[10] தாதுரத்நாவளியும்,[11] ராமபத்ரதீக்ஷிதரின் உணாதிமணிதீபிகை,[12] பரிபாஷாவ்ருத்திவ்யாக்யானம்[13] (கி. பி. 17–18 நூ.) முதலியன, ராமபத்ரதீக்ஷிதரின் சிஷ்யர்களாகிய ஸ்ரீநிவாஸதீக்ஷிதர்[14] வேங்கடேச்வரகவி[15] இவர்கள் இயற்றிய ஸ்வரஸித்தாந்தசந்த்ரிகையும்[16] உணாதிநிகண்டுவும்,[17] அவருடைய தங்கை மகனாகிய வைத்யநாதர்[18] இயற்றிய பரிபாஷார்த்தஸங்க்ரகம்,[19] வரதராஜருடைய[20] லகுஸித்தாந்தகௌமுதி,[21] நாராயணருடைய[22] வாரருசஸங்க்ரகம்[23] முதலியன பாணினிவ்யாகரணத்தை[24] ஒட்டிய நூல்கள் ஆகும்.

1. शेषाद्रिनाथ:
2. परिभाषाभास्कर:
3. माधवीयधातुवृत्ति:
4. वर्धमान
5. गणरत्नमहोदधि:
6. अन्नम्भट्ट:
7. मिताक्षरी
8. पर्वतीयविश्वेश्वरसूरि:
9. वैयाकरणसिद्धान्तसुधानिधि.
10. भाष्यरत्नावली
11. धातुरत्नावली
12. उणादिमणिदीपिका
13. परिभाषावृत्तिव्याख्यानम्
14. श्रीनिवासदीक्षित:
15. वेङ्कटेश्वरकवि:
16. स्वरसिद्धान्तचन्द्रिका
17. उणादिनिघण्टु.
18. वैद्यनाथ:
19. परिभाषार्थसङ्ग्रह:
20. वरदराज
21. लघुसिद्धान्तकौमुदी
22. नारायण: -
23. वाररुचसङ्ग्रह:

24. இங்ஙனம் ஸ்ரீஹர்ஷகவி दाक्षिपुत्रस तन्त्रम् (नैषधीयचरिते 19, 62) என்றும் फणिभवशास्त्रम् (ibid 61) என்றும் கூறுவர்.

அபாணிநீயமான வ்யாகரண நூல்கள் சில. அவை சாந்த்ரம்[1] (கி. பி. 7 நூ.), ஜைநேந்த்ரவ்யாகரணம்[2] (கி.பி. 7 நூ.) சாகடாயனம்[3] (கி. பி. 9 நூ), ஹேமசந்த்ரவ்யாகரணம்,[4] அவரே இயற்றிய லிங்காநுசாஸனம்,[5] க்ரமதீச்வரரின்[6] ஸம்க்ஷிப்தஸாரம்,[7] வோபதேவரின்[8] முக்தபோதமும்[9] கவிகல்பத்ருமமும்,[10] சர்மவர்மரின்[11] காதந்த்ரம்[12] முதலியன ஆகும்.

ப்ராகிருதபாஷையில் இயற்றிய நூல்களை யொட்டி எழுதப்பட்ட வ்யாகரண நூல்கள் சில. அவை வரருசியின்[13] ப்ராகிருத ப்ரகாசம்,[14] சண்டரின்[15] ப்ராக்ருதலக்ஷணம்,[16] ராவணரின்[17] ப்ராகிருதகாமதேனு,[18] தர்க்கவாகீசரின்[19] ப்ராகிருதகல்பதரு[20] மார்க்கண்டேயரின்[21] ப்ராக்ருதஸர்வஸ்வம்[22] முதலியன ஆகும்.

மேனாட்டில் ஸம்ஸ்கிருதவ்யாகரணத்தில் ஈடுபட்டவர்கள் விட்நி,[23] வாக்கர்நாகல்,[24] மாக்டானல்[25] முதலியோர் ஆவர்.

---

1. चान्द्रम्
2. जैनेन्द्रव्याकरणम्
3. शाकटायनम्
4. हेमचन्द्रव्याकरणम्
5. लिङ्गानुशासनम्
6. क्रमदीश्वरः
7. सङ्क्षिप्तसारः
8. वोपदेवः
9. मुग्धबोधः
10. कविकल्पद्रुमः
11. शर्मवर्मा
12. कातन्त्रम्
13. वररुचिः இவர் பாணினிஸூத்ரங்கட்கு வார்த்திகம் எழுதிய வரருசி அல்லர்; பிற்காலத்தவர்.
14. प्राकृतप्रकाशः
15. चण्डः
16. प्राकृतलक्षणम्
17. रावणः
18. प्राकृतकामधेनुः
19. तर्कवागीशः
20. प्राकृतकल्पतरुः
21. मार्कण्डेयः
22. प्राकृतसर्वस्वः
23. Whitney
24. Wackernagel
25. A. A. Mac-Donell

## அத்தியாயம் 39

---

## பூர்வமீமாம்ஸை

யாகங்களை எவ்வாறு செய்வது என்பதும், மந்த்ரங்களை எம்முறையில் கூறவேண்டும் என்பதும், எச்செயல்கள் அங்கி எச்செயல்கள் அங்கம் என்பதும் இவைபோன்ற பலவும் ச்ரௌதஸூத்ரங்களிலும் க்ருஹ்யஸூத்ரங்களிலும் கூறப்பட்டன. வேதத்து பூர்வகாண்டத்தில் மந்திரங்கள் யாகங்களில் வழங்கவேண்டிய முறையிலே கூறப்படாமையாலும், எச்செயல்கள் அங்கி எவை அங்கம் என்று ஆங்குக் கூறப்படாமையாலும் அவை எல்லாம் மந்திரங்கள், விதிகள், அர்த்தவாதங்கள் இவற்றின் ஆராய்ச்சியால் அறிதல் வேண்டும். வேதவாக்கியங்களில் முரண்பாடு இருப்பின் எதனைக் கொள்ள வேண்டும் என்பதும் வேதவாக்கியத்திற்கும் ஸ்மிருதிவாக்கியத்திற்கும் முரண்பாடு இருப்பின் யாது ப்ரமாணம் ஆகும் என்பதும் இவைபோன்ற பலவும் இவ்வாராய்ச்சியால் அறிதல் கூடும். அவ்வாராய்ச்சி நூலுக்கு பூர்வமீமாம்ஸா என்ப பெயர். ஆதலால் பூர்வமீமாம்ஸா என்பதற்கு வேதங்களில் முன் பாகத்தில் கூறப்பட்டவற்றின் ஆராய்ச்சியைக்கொண்ட நூல் என்பது பொருளாகும். ஆகலின் ச்ரௌதஸூத்ரம், க்ருஹ்ய ஸூத்ரம் இவற்றை இயற்றுவதற்கும் பூர்வமீமாம்ஸை ஒரு சிறந்த ஸாதனம் ஆகும். அந்த ஸூத்ரங்கள் வேதத்திற்கு அங்க மாகக் கூறப்பட்டிருத்தலான், பூர்வமீமாம்ஸையும் அவற்றின் முகமாய் வேதத்திற்கு அங்கம் ஆகும் எனக் கூறுவது தவறாகாது. ஸ்ரீஹர்ஷகவியும், நைஷதத்தில் ஸரஸ்வதியின் ஒரு பக்கத்தை வர்ணிக்கும்போது பூர்வமீமாம்ஸையையும் கூறுதலால் அவர் அதனை வேதாங்கமாகவே கொண்டனர் என்பது விளங்கும்.[1] ஆகலின் வேதங்களைப்பற்றிக் கூறியபின் ஈண்டு பூர்வமீமாம்ஸையின் சரிதம் கூறப்படும்.

1 *Cf* नैषधीयकाव्ये (10, 80)

இந்நூல் பல பெயர்களுடன் வழங்கப்படுகின்றது. அவை தர்மமீமாம்ஸா,[1] கர்மமீமாம்ஸா,[2] ப்ரதமதந்த்ரம்,[3] பூர்வதந்த்ரம்,[4] பூர்வமீமாம்ஸா[5] என்பன ஆகும். பூர்வமீமாம்ஸா ஸூத்ரம் இயற்றிய ஜைமினிமஹர்ஷி[6], 'அதாதோ தர்மஜிஜ்ஞாஸா[7]' என நூலின் தொடக்கத்திற் கூறினர். ஜிஜ்ஞாஸா என்ற சொற்கு லக்ஷணையால் விசாரம்[8] அல்லது ஆராய்ச்சி என்பது பொருள் என்பது கௌஷீதகிப்ராஹ்மணம் முதலியவற்றிலிருந்து அறியப்படுகின்றது. அப்படியே மீமாம்ஸா[9] என்பதற்கும் ஆராய்ச்சி என்பது பொருள். ஆகலின் தர்மத்தினை ஆராயும் நூலுக்குத் தர்மமீமாம்ஸா எனப் பெயர் வழங்கியிருத்தல் கூடும். இரண்டாம் ஸூத்திரத்தை அவர் 'சோதநாலக்ஷணோ அர்த்த: தர்ம:'[10] எனப் படித்தனர். ஆங்குச் சோதனா என்பதற்குச் செயலில் ஈடுபடச்செய்யும் வாக்கியம் எனச் சபரஸ்வாமி[11] தம் பாஷ்யத்திற் பொருள் கூறினர். அக்காரணம்பற்றிக் கர்மமீமாம்ஸா என்ற பெயர் வழங்கியிருத்தல் கூடும். ப்ரதமதந்த்ரம் என்ற பெயர் பகவத்பாத சங்கராசார்யரால் வழங்கப்பட்டுளது.[12] பூர்வதந்த்ரம், பூர்வமீமாம்ஸா என்ற சொற்கள் எவ்வாறு வழங்கப்பட்டன எனின், உத்தரமீமாம்ஸைக்கு முன்னர் அந்நூல் செய்யப்பட்டமை

1. धर्ममीमांसा
2. कर्ममीमांसा
3. प्रथमतन्त्रम्
4. पूर्वतन्त्रम्
5. पूर्वमीमांसा
6. जैमिनिमहर्षिः
7. अथातो धर्मजिज्ञासा
8. विचारः
9. मीमांसा
10. चोदनालक्षणोऽर्थो धर्मः
11. शबरस्वामी
12. भगवतोपवर्षेण प्रथमे तन्त्रे आत्मास्तित्वाभिधानप्रसक्तौ ... (3, 3, 53)

யான் அவ்வாறு பெயர் வந்தன என்பர் சிலர். பூர்வமீமாம்ஸா பெரும்பாலும் வேதங்களின் பூர்வகாண்டத்தைப்பற்றிய நூலாகையாலும், அந்நூலுக்கே பூர்வகாண்டத்திற் கூறப்பட்ட கர்மாக்களை யொட்டிக் கர்மமீமாம்ஸா என்ப பெயர் இருந்த லாலும், பூர்வதந்த்ர பூர்வமீமாம்ஸா என்ற சொற்களுக்குப் பூர்வகாண்டத்தைப்பற்றிய ஆராய்ச்சிநூல் எனப் பொருள் கொள்ளலாம் எனத் தோற்றுகின்றது. அவ்வாறு கொள்ளின் ஜைமினிமஹர்ஷிக்கு ஆசிரியரான வேதவ்யாஸாசார்யர் ஜைமினி ஸூத்ரத்திற்குப் பின்னரே வேதாந்தஸூத்ரம் இயற்றினார் எனக் கொள்ளவேண்டிய நியதி இல்லை. பூர்வமீமாம்ஸையி லுள்ள நியாயங்களை யெல்லாம் வேதாந்தஸூத்ரத்தில் அவர் கொண்டிருக்கின்றாரே யெனின், மாணவர்க்குத் தெரிந்தது ஆசிரியர்க்குந் தெரிந்திருத்தல் கூடும் என்னலாம். உத்தர மீமாம்ஸை வேதாந்தசாஸ்திரம் என்ற பெயராலே வழங்கப் படுகின்றமையால், இக்காலத்தில் பூர்வமீமாம்ஸா என்பது மீமாம்ஸா எனவே வழங்கப்படுகின்றது.[1]

பூர்வமீமாம்ஸாவை முதன்முதலில் சாஸ்த்ரமாக இயற்றிய வர் யார்? ஜைமினிமஹர்ஷியா, அன்னியரா?[2] ஜைமினிதான் எனக் கூறல் தகும். ஏனெனில் பிருமமா[3] ப்ரஜாபதிக்கு[4] மீமாம்ஸையை உபதேசித்தார், ப்ரஜாபதி இந்திரனுக்கும், இந்திரன் அக்கினிக்கும்... வஸிஷ்டர்[5] பராசரர்க்கும்,[6] பராசர

1 मीमासाभ्युदये பக் 15 வரி 16, Karma mimāmsā, p 6 ll 12 13 A History of Sanskrit Literature by A. B. Keith p 437.

2 இவ்வழக்கு ஸ்ரீஹர்ஷகவிகாலத்திலே உண்டு என்பது,
मीमासयेव भगवत्यमृतांशुमौलौ [नैषधीयचरिते_11, 64]
என்பதால் விளங்கும்.

3 ब्रह्मा

4 प्रजापति

5 वसिष्ठः

6. पराशर

கிருஷ்ணத்வைபாயனர்க்கும்,[1] அவர் ஜைமினிக்கும் உபதேசிக்க, ஜைமினி அதனை நூலாக இயற்றினர் எனப் பெரியோர் வழக்கு உண்டு. பூர்வமீமாம்ஸாஸூத்ரத்தில் ஜைமினியின் பெயரும்[2] உத்தரமீமாம்ஸாஸூத்ரத்தில் பாதராயணரின் பெயரும்[3] இருக்கின்றமையால், இரண்டு நூல்களும் அவரவர் சிஷ்யர்களால் இயற்றப்பட்டன எனக் கோல்ப்ருக்[4] என்ற மேனாட்டு அறிஞர் கூறுவர். தன் நூலில் தன் பெயரைக் கூறுதல் வடமொழி நூலாசிரியர்களின் வழக்கமாகையாலும் சபர்ஸ்வாமியும் குமாரிலபட்டரும் ஜைமினியை ஸூத்ரகாரராகக் கூறுவதாலும் அக்கூற்று பொருந்தாது. ஆயினும் ஜைமினிக்கு முன்னர் மீமாம்ஸகர்கள் இருந்தனர் என்பது அவர்களை[5] அவர் குறித்தலாலே விளங்கும். அவர்களுள் ஒருவரும் நூல் எழுதியவராகத் தெரியவில்லை. ஆகலின் முதன்முதலில் பூர்வமீமாம்ஸாஸூத்ரம் இயற்றியவர் ஜைமினி எனக் கொள்ளுதல் தகும்.

1. कृष्णद्वैपायनः

2. कर्माण्यपि जैमिनिः फलार्थत्वात् (3, 1, 4); तदावृत्ति तु जैमिनिः (8, 3, 7) .....

3. अन्ते तु बादरायणः, तेषां प्रधानशब्दत्वात् (5, 2, 19); विधिं तु बादरायणः (10, 8, 44)

4. Dr. Colebrooke

5. द्रव्यगुणसंस्कारेषु बादरिः (3, 1, 3); स कुलकल्यः स्यादिति कार्ष्णाजिनिः (6, 7, 35); विप्रतिषेधात्तु गुण्यन्तरः स्यात् इति लाबुकायनः (6, 7, 37,; तथा चान्यार्थदर्शनं कामुकायनः (11, 1, 55)

ஜைமினியின் காலம் — ஸம்ஸ்கிருதவித்யாஸ்தானங்களிற் பலவிடத்தில் ஜைமினியின் பெயர் காணப்படுகின்றது. ஸாமவேதப்ரவர்த்தகர்[1] என ஜைமினீயஸம்ஹிதையிலும், ஜைமினீய ப்ராம்மணங்களிலும் மஹாபாரதத்திலும் இவர் கூறப்பட்டனர். ச்ரௌதஸூத்ரம், க்ருஹ்யஸூத்ரம் இவற்றை ஜைமினி இயற்றினர் எனக் கூறுவர். ஆச்வலாயனக்ருஹ்யம் முதலியவற்றில் ப்ரவருஷியாக ஜைமினி கூறப்படுகின்றனர். வேதாந்த ஸூத்ரங்களிலும் ஜைமினியின் பெயர் உள்ளது. இவ்வெல்லாவற்றுள்ளும் கூறப்பட்டவர் ஒருவரே எனின், அவர் மிகவும் பண்டையகாலத்தவர் என்பது திண்ணம். மீமாம்ஸாஸூத்ரம் ந்யாயஸூத்ரத்திற்கு முற்பட்டமையால், அதனை இயற்றியவர் கி. பி 200-க்கு முன்னர் இருந்திருக்க வேண்டும் என்பர் கீத் என்ற மேனாட்டறிஞர். ஆயினும், பௌதாயனர் மீமாம்ஸாஸூத்ரவ்ருத்தியை இயற்றினர் என்பது ப்ரபஞ்சஹ்ருதயத்திலிருந்து[2] அறியப்படுகின்றமையாலும், அவர் பாணினிகாலத்திற்கு முற்பட்டவராயிருத்தல் கூடுமாகலானும், பாதராயணரும் ஜைமினியும் ஒருகாலத்தவர் அல்லர் எனக் கூறுதற்கு ஆதாரமின்மையாலும், உபவர்ஷர்[3] என்பவர் மீமாம்ஸாஸூத்ரத்திற்கு வ்ருத்தி எழுதினர் என மீமாம்ஸா பாஷ்யத்திலிருந்து அறியப்படுகின்றமையாலும், அந்த உபவர்ஷர் காத்யாயனரது காலத்தில் இருந்தார் எனக் கதாஸரித்ஸாகரம்[4] கூறுதலாலும், மீமாம்ஸாஸூத்ரத்திற் பௌத்தமதத்தைப்பற்றிச் சிறிதேனும் கூறப்படாமையாலும், அதனை இயற்றிய ஜைமினி சுமார் கி. மு. 600-இல் இருந்தனர் எனக் கூறல் தகும்.

1. सामवेदप्रवर्तक
2. प्रपञ्चहृदयम्
3. उपवर्ष
4. कथासरित्सागर

மீமாம்ஸாஸூத்ரம் — இந்நூல் 12 அத்தியாயங்களைக் கொண்டது எனச் சங்கராசார்யர்[1] முதலியோர் கூறுவர், 16 அத்தியாயங்கள் கொண்டது என்பர் ராமானுஜாசார்யர்[2] முதலியோர் 12 அத்யாயங்களில் தர்மப்ரமாணம்,[3] கர்மபேதம்,[4] அங்கத்தன்மை,[5] ப்ரயோஜ்யப்ரயோஜகபாவம்,[6] க்ரமம்,[7] பலமனுபவிக்கும் அதிகாரம்,[8] அதிதேசஸாமான்யம்,[9] அதிதேசவிசேஷம்,[10] ஊஹம்,[11] பாதம்,[12] தந்த்ரம்,[13] ப்ரஸங்கம்[14] இவை உணர்த்தப்பட்டன சாஸ்த்ரங்களுள் இது மிகப் பெரியது இந்நூலுக்குப் பௌதாயனர் உரை எழுதினர் என்றும், அதற்கு க்ருதகோடி[15] என்பப் பெயர் என்றும், அதனைச் சுருக்கி உபவர்ஷர் வ்ருத்தி எழுதினர் என்றும், அதற்கு உரை தேவஸ்வாமியும்[16] பவதாஸரும்[17] இயற்றினர் என்றும் ப்ரபஞ்சஹ்ருதயம் என்ற நூல் கூறுகின்றது அவற்றுள்

1 तदुक्त द्वादशलक्षण्याम् — 'अपि तु वाक्यशेषत्वादितरपर्युदास स्यात्प्रतिषेधे विकल्प स्यात्' (सूत्रभाष्ये 3, 3, 26)

2 सहितमेतच्छारीरक जैमिनीयषोडशलक्षणेन [श्रीभाष्ये 1, 1 1] भाट्टदीपिकाया कस्तूरिरङ्गाचार्यवृत्तौ च

3 धर्मप्रमाणम्

4 कर्मभेद

5 अङ्गत्वम्

6 प्रयोज्यप्रयोजकभाव

7 क्रम

8 फलभोक्तृत्वरूपोऽधिकार

9 सामान्यतोऽतिदेश

10 विशेषतोऽतिदेश

11 ऊह

12 बाध

13 तन्त्रम्

14 प्रसङ्ग

15 कृतकोटि

16 देवस्वामी

17 भवदास

ஒரு சிறு பகுதியேனும தறபோது காணபபடவிலலை சபர ஸவாமியால குறிககபபடும ஆசாரயர[1] பவதாஸா எனபர குமாரிலபடடா, உபவாஷா எனபா மறறோா

அநத ஸூததாததிறகுப பாஷயம இயறறியவா சபரஸவாமி ஆவா அவா ஜைனாகளிடமிருநது தனனைப பிழைபபிததுக கொளள சபரவேஷம பூணடனா எனற ஒரு கதை உணடு அவ ப ணினி பிஙகலா இவரது காலததிறகுப பிறபடடவா எனபது அவா அவவிருவரையும தனனுடைய நூலிற குறிப பிடுவதால விளஙகும[2] மஹாபாஷயகாரரககுப பிறபடடவா எனபது அநநூலின சைலியால விளஙகும சஙகராசாரயாககு முறபடடவ எனபது அவா அவரைக குறிததமையால விளஙகும[3] குமாரிலபடடா பரபாகரா இவவிருவாககும அவா முறபடடவா எனபது அவாகளது நூலகளால விளஙகும இவரது காலம கி பி 200 எனபா ராமஸவாமி சாஸதிரிகள[4] சபரஸவாமியின பினனா ஆசாரயஸுநதரபாணடியா[5] மீமாமஸா வாாததிகம எழுதினா[6]

குமாரிலபடடா — ஆசாரயஸுநதரபாணடியாககுப பினனா கு ரிலபடடா[7] சாபரபாஷயததிறகு உரை எழு

1 भगवानाचार्य (शाबर 2 3 16)

2 पाणिनिकृतिमननुमन्यमानस् वा पिङ्गलकृतिमननुमन्यमानस्य वा (1, 1 5)

3 आचार्येण शबरस्वामिना (सूत्रभाष्ये 3 3 53)

4 Introduction by V A Ramaswami Sastri in Tattvabindu

5 आचार्यसुन्दरपाण्ड्य

6 Journal of Oriental Research Madras Vol I, p 8

7 कुमारिलभट्ट

தினர். குமாரிலரைக் குமார:[1] என்றும், துதாத:[2] என்றும் பட்டபாதர்[3] என்றும் பின்னோர் குறிக்கின்றனர். அவ்வுரை மூன்று வகையாய் உள்ளது. ஜைமினிஸூத்ரத்தின் முதல் அத்தியாயம் முதற்பாதத்தின் பாஷ்யத்திற்கு உரை ச்லோக ரூபமாகவும், இரண்டாம்பாதம் முதல் மூன்றாம் அத்தியாயம் நான்காம் பாதம் முடிய உள்ள பாஷ்யத்திற்கு உரை கத்யபத்ய ரூபமாகவும்,[4] அதற்குமேலுள்ள பகுதியின் சிற்சிலவற்றை விளக்கிய உரையாகவும் எழுதியுள்ளார். அவற்றிற்கு முறையே ச்லோகவார்த்திகம்,[5] தந்த்ரவார்த்திகம்,[6] டுப்டீகா[7] எனப் பெயர்.

இவர்காலம் — குமாரிலபட்டர் கி. பி. 620-680-இல் இருந்தனர் எனக் கூறலாம். அதற்குக் காரணம் ஆவன: கி. பி. 762-இல் இறந்த சாந்தரக்ஷிதர்[8] தனது தத்வஸங்க்ரஹத்தில்[9] ப்ருகட்டீகா[10] என்ற நூல் குமாரிலரால் இயற்றப் பட்டது என்பர். ச்லோகவார்த்திகத்திற்கு ரத்நாகரம்[11] என்ற உரை எழுதிய பார்த்தஸாரதிமிச்ரரும்[12] ப்ருகட்டீகையைக் குறிக்கின்றனர்.[13] ப்ருகட்டீகையின் சுருக்கமே ச்லோக வார்த்திகமாய் இருத்தல் கூடும். கி. பி. 650-இல் இறந்த பர்த்ருஹரியால் இயற்றப்பட்ட வாக்யபதீயத்தின் சில விஷயங் களைக் குமாரிலர் மறுக்கின்றார். அக்காலத்தவராகிய தர்ம

1. कुमारः
2. तुतातः
3. भट्टपादाः
4. गद्यपद्यरूपम्
5. श्लोकवार्त्तिकम्
6. तन्त्रवार्त्तिकम्
7. टुप्टीका
8. शान्तरक्षितः
9. तत्त्वसङ्ग्रहः
10. बृहट्टीका
11. रत्नाकरः
12. पार्थसारथिमिश्रः
13. अर्थापत्त्यन्तराणामुदाहरणप्रपञ्च. पक्षदोषावसरे श्रोत्रादिनास्तिताया-मित्यादिना बृहट्टीकायां दर्शितः

கீர்த்தி[1] மறுக்கப்படுகின்றார் என்று பார்த்தஸாரதிமிச்ரர் கூறுவர். கி பி 655–725-இல் வசித்தவரும் கான்யகுப்ஜத்தை ஆண்டவருமான யசோவர்மன்காலத்தில்[2] இருந்த உம்வேகர் என்ற பவபூதி[3] குமாரிலரது சிஷ்யராய் இருந்தார் கி பி 838 க்கு முன்னர் இருந்த வித்யானந்தர்[4] ப்ரபாசந்திரர்[5] இவ்விருவர்களாலும் குமாரிலர் மறுக்கப்படுகின்றார் குமாரிலருக்குத் திராவிடபாஷைகள் தெரிந்தமையால் அவர் தென்னாட்டினர் என்பர் கீத்[6] சாலிகநாதர் அவரை மிச்ரர் எனக் கூறியமையால் அவர் வடநாட்டினராய் இருந்தால் கூடும் என்பர் ராமஸ்வாமி சாஸ்திரியார்[7]

ப்ரபாகரமிச்ரர்[8] — குமாரிலபட்டரின் கொள்கைகளுக்கு மாறுபாடாக ப்ரபாகரமிச்ரர் சாபரபாஷ்யத்திற்கு இரண்டு உரைகள் எழுதினர்[9] முதலுரை ஆறாயிரம் கிரந்தம் உடையது இரண்டாம் உரை பன்னீராயிரம் கிரந்தம் உடையது அவற்றிற்கு விவரணம்[10] நிபந்தனம்[11] என்ற பெயர் முன்னர் எழுதிய

1 धर्मकीर्ति
2 Journal of Oriental Research Madras Vol I pp 131 146
3 भवभूति 4 विधानन्द 5 प्रभाचन्द्र
6 A History of Sanskrit Literature by A B Keith p 474
7 Introduction—Tattvabindu edited by A V Ramaswami Sastri
8 प्रभाकरमिश्र
9 பாட்டர் வாக்கியத்தின் பொருளை அறியுமிடத்து அபிஹிதான்வய வாதத்தையும் ப்ரமஞானத்தை அயதாக்யாதியாகவும் அபாவத்தைத் தனிப்ரமாணமாகவும் கூறுவர் ப்ராபாகரர் அன்விதாபிதானவாதத்தையும் ப்ரமஞானத்தை அக்யாதியாகவும், அபாவத்தை அதிகரணஸ்வரூபமாகவும் கூறுவர். இவை போன்ற மாறுபாடுகள் பல
10 विवरणम्
11 निबन्धनम्

உரையைக் குமாரிலர் மறுக்க, பின்னர் மற்றோர் உரை எழுதினர் என்பது நிபந்தனத்திற்குச் சாலிகநாதர்[1] எழுதிய உரையால் அறியப்படும். அந்நிபந்தனத்திற்கே ப்ருஹதீ[2] எனப் பெயரும் உண்டு.[3] சாலிகநாதர் விவரணம், நிபந்தனம் இரண்டிற்கும் உரை எழுதினர். அவற்றிற்கு தீபசிகா,[4] ருஜுவிமலா[5] எனப் பெயர். இவற்றை மாறறிக் கூறுகின்றது ஸர்வதர்சனகௌமுதீ[6] என்னும் நூல். அப்பையதீக்ஷிதர்[7] பரிமளத்தில்[8] ருஜுவிமலா நிபந்தனத்தின் உரை எனக் கூறினர். விவரணம் நிபந்தனம் இவற்றிற்கு லக்வீடீகா,[9] ப்ருஹதீ டீகா[10] எனப் பெயர் இருந்தமையால் ப்ரபாகரரைட் டீகாகாரர்[11] எனச் சாலிகநாதருரை கூறும்.

ப்ரபாகரமிச்ரர் குமாரிலரின் சிஷ்யர் என ஒரு வழக்கு உண்டு. ப்ரபாகரர் எழுதிய இரண்டு டீகைகளால் அவ்விருவரும் ஒரு காலத்தவர் என்றே கருதவேண்டும். ஒருவர் வயதானவராகவும் மற்றொருவர் வயதாகாதவராகவும் இருத்தல் கூடும்.

பாட்டமதம் உலகில் எவ்வாறு பரவியதோ அவ்வாறு ப்ராபாகரமதம் பரவவில்லை. அதற்குக் காரணம் ப்ராபாகர மதம் இருபிளவு பட்டதே ஆகும். இதற்குச் சான்று

1. शालीकनाथः — Journal of Oriental Research Madras Vol. III.
2. बृहती
3. निबन्धनं नाम पश्चात् गुरुणैव प्रणीता बृहती टीका (रामानुजाचार्यकृतनायकरत्ने)
4. दीपशिखा
5. ऋजुविमला
6. सर्वदर्शनकौमुदी
7. अप्पय्यदीक्षितः
8. परिमलः
9. लघ्वी टीका
10. बृहती टीका
11. टीकाकारः

ஜரத்ப்ராபாகரர்[1] என்ற வழக்கே ஆகும். இருபிரிவினர்க்கும் எட்டு பதார்த்தங்களுள் இரண்டில் கொள்கைவேறுபாடு உண்டு.[2] சாலிகநாதர் ஆதுனிகப்ராபாகரருள்[3] முதல்வர்.

மண்டனமிச்ரர்[4] — பாவநாவிவேகம்[5] விதிவிவேகம்[6] விப்ரமவிவேகம்,[7] மீமாம்ஸாநுக்ரமணி[8] என்ற நான்கு நூல்களை இயற்றினர். இவர் குமாரிலமதத்தினர். இவர் கி. பி. 850க்கு முன்னர் இருந்திருக்கவேண்டும், ஏனெனில் அக்காலத்து இருந்த வாசஸ்பதிமிச்ரர் இவரது விதிவிவேகத்திற்கு ந்யாயகணிகா[9] என்ற உரை எழுதியிருக்கிறார். மண்டனமிச்ரரே பிற்காலத்து சங்கராசார்யர்க்கு சிஷ்யராகி ஸுரேச்வரர்[10] எனப் பெயர் பெற்றனர் என்பர் பலர், அவ்வாறன்று எனக் கூறினர் மஹாமஹோபாத்யாயகுப்புஸ்வாமி சாஸ்திரியார். இவர் கி. பி. 680–750 இல் இருந்தவராகக் கூறுவர் ராமஸ்வாமி சாஸ்திரியார்.

1 जरत्प्राभाकरा

2 जरत्प्राभाकरै द्रव्यगुणकर्मसामान्यसमवायशक्तिसङ्ख्यासादृश्यरूपा अष्टौ पदार्था उच्यन्ते आधुनिकै (विद्यारण्यकृतविवरणप्रमेयसङ्ग्रहे)

3 आधुनिकप्राभाकरा

4 मण्डनमिश्र

5 भावनाविवेक

6. विधिविवेक

7 विभ्रमविवेक

8 मीमांसानुक्रमणी

9 न्यायकणिका

10 सुरेश्वर

உம்வேகபட்டர். — இவரது காலம் கி. பி. 670-750. இவர் உம்வேகர்[1] எனவும் கூறப்படுவர். இவரே பவபூதி[2] என்பர். இவர் ச்லோகவார்த்திகத்திற்கும் பாவநாவிவேகத்திற்கும் உரை எழுதினர்.

சாலிகநாதர்[3] — இவரது காலம் கி. பி. 690-760. இவர் ஆதனிகப்ராபாகருள் முதல்வர் என்பதும் ப்ரபாகரரின் நூல்களுக்கு ருஜுவிமலா, தீபிகா என்ற உரைகள் எழுதினர் என்பதும் முன்னர்க் கூறப்பட்டன. சாலிகம்[4] என்ற ஒரு ப்ரகரணமும், ப்ரகரணபஞ்சிகா,[5] பாஷ்யபரிசிஷ்டம்[6] என்ற நூல்களும் அவரே இயற்றினர்.

வாசஸ்பதிமிச்ரர்[7]. — இவருக்கு ஆறு தர்சனங்களிலும் ஒரே வகையான புலமையும் ஆதரவும் இருந்தன. இவர் விதிவேகத்திற்கு ந்யாயகணிகா என்ற உரையும், பாட்டமதத்தை விளக்கும் தத்வபிந்து[8] என்ற நூலும் இயற்றினர். இவரது காலத்தைப்பற்றிக் கொள்கைவேறுபாடுகள் பல.[9] தற்போது அவர் கி. பி. 841-ல் இருந்தவர் என்பர். தத்வபிந்துவிற்கு உரை 15-ஆம் நூற்றாண்டில் கொச்சி ஸமஸ்தானத்தில் பேரகுளம் என்ற கிராமத்தில் வசித்த பரமேச்வரர்[10] உரை எழுதினர். அதற்குத் தத்வவிபாவனா[11] எனப் பெயர்.

1. उम्वेकः
2. भवभूतिः
3. शालीकनाथः
4. शालिकम्
5. प्रकरणपञ्चिका
6. भाष्यपरिशिष्टम्
7. वाचस्पतिमिश्रः
8. तत्त्वविन्दुः
9. கோல்ப்ருக் கி. பி. 1150 சு., மாக்டானெல் கி. பி. 1100 சு., வெபர் கி. பி. 10 நூ.
10. परमेश्वरः
11. तत्त्वविभावना

ஸுசரிதமிச்ரா[1] — இவரது காலம் கி. பி. 1000–1100. இவர் ச்லோகவார்த்திகத்திற்கு உரை எழுதியவர். அதற்குக் காசிகை[2] என்ப பெயர்.

பவநாதமிச்ரா — இவரது காலம் கி. பி. 1050–1150. இவர் ஸூத்ரத்திற்கு நயவிவேகம்[3] என்ற உரைஎழுதியவர்.

பார்த்தஸாரதிமிச்ரா[4] — இவரது காலம் கி. பி. 1050–1120. இவர் தந்த்ரரத்னம்,[5] ந்யாயரத்னமாலா,[6] சாஸ்த்ரதீபிகா,[7] ந்யாயரத்னாகரம்[8] என்ற நூல்களை இயற்றினார். தந்த்ரரத்னம் குமாரிலரின் டுப்டீகைக்கு உரை. ந்யாயரத்னாகரம் ச்லோகவார்த்திகத்தின் உரை. ந்யாயரத்னமாலா, பாட்டமதத்தை விளக்கும் ப்ரகரண நூல். இவர் ப்ரபாகரமதத்தில் ஈடுபட்ட ஸுசரிதமிச்ரர்,[9] பவநாதர்[10] இவ்விருவர்க்கும் பிற்பட்டவர். குமாரிலமதப்ரவர்த்தகரான ஸுசரிதமிச்ரரும் பவநாதரும் கி. பி. 13 ஆம் நூற்றாண்டிற்கு முன் இருந்தவர்கள்.

பவதேவபட்டர்[11] — இவர் தௌதாதிமததிலகம்[12] என்ற நூலை இயற்றினார்.

பரிதோஷமிச்ரா[13] — கி. பி. 1200. இவர் தந்த்ரவார்த்திகத்திற்கு ஓர் உரை எழுதினார். அதற்கு அஜிதா என்ப பெயர்.

1 सुचरितमिश्र
2 काशिका
3 नयविवेक
4 पार्थसारथिमिश्र
5 तन्त्ररत्नम्
6 न्यायरत्नमाला
7 शास्त्रदीपिका
8 न्यायरत्नाकर
9 सुचरितमिश्र
10 भवनाथ
11 भवदेवभट्ट
12 तौतातितमततिलकम्
13 परितोषमिश्र

பட்டஸோமேச்வரா[1] — இவர் ந்யாயஸுதையை[2] இயற்றினார். மீமாம்ஸாசாஸ்த்ரபரிஷ்காரஸம்ப்ரதாயத்தை இவர்தான் ஆரம்பித்தனர் என்பர்.

முராரிமிச்ரா[3] — இவரது காலம் கி. பி. 1150–1220. இவர் த்ருபாதீநீதிநயநம்[4] இயற்றினார்.

நந்தீச்வரா.[5] — இவரது காலம் கி. பி. 1220–1300. இவர் ப்ரபாகரவிஜயம்[6] எழுதியவர்.

சிதாநந்தபண்டிதா.[7] — இவரது காலம கி. பி. 1200–1300. இவர் நீதிதத்வாவிர்பாவம்[8] இயற்றியவர்.

வேதாந்ததேசிகா.[9] — இவரது காலம் கி. பி. 1269–1369. இவர் மீமாம்ஸாபாதுகா,[10] ஸேச்வரமீமாம்ஸா[11] இரண்டும் இயற்றினார்.

மாதவாசாரியா.[12] — இவர் 14-ஆம் நூற்றாண்டில ஜைமினீய ந்யாயமாலாவிஸ்தரம்[13] இயற்றினார்.

அப்பய்யதீக்ஷிதா. — இவரது காலம் கி. பி. 1520–1593. இவர் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர இவரை மீமாம்ஸகமூர்த்தன்ய என்பர் கண்டதேவர். இவர் விதிரஸாயனம்[14] அதன் உரை உபக்ரமபராக்ரமம்,[15] வாதநக்ஷத்ரமாலை,[16] மயூகாவளி,[17] சித்ரபடம்[18]

1. भट्टसोमेश्वरः
2. न्यायसुधा
3. मुरारिमिश्रः
4. त्रिपादीनीतिनयनम्
5. नन्दीश्वरः
6. प्रभाकरविजयम्
7. चिदानन्दपण्डितः
8. नीतितत्त्वाविर्भावम्
9. वेदान्तदेशिक.
10. मीमांसापादुका
11. सेश्वरमीमांसा
12. माधवाचार्यः
13. जैमिनीयन्यायमालाविस्तर
14. विधिरसायनम्
15. उपक्रमपराक्रमः
16. वादनक्षत्रमाला
17. मयूखावली
18 चित्रपटम्

என்ற நூல்கள் இயற்றினர் சாஸ்த்ரதீபிகைக்கு உரையும் இயற்றினர் என்பர் கோபாலபட்டர் விதிரஸாயனபூஷணத்திலும்,[1] சங்கரபட்டர் [2] விதிரஸாயனதூஷணத்திலும்[3] விதிரஸாயனக்கொள்கைகளை மறுத்தனர் சங்கரபட்டர் சாஸ்த்ரதீபிகைக்கு ஓர் உரை, மீமாம்ஸாஸாரஸங்கிரஹம்,[4] மீமாம்ஸாபாலப்ரகாசம் [5] இவற்றையும் இயற்றினர்

கேசவர் [6] — இவர் மீமாம்ஸாபாலப்ரகாசத்திற்கு உரை இயற்றினர்

ஸோமநாததீக்ஷிதர் [7] — இவரது காலம் கி பி 1600 சாஸ்த்ரதீபிகைக்கு இவரும் ஓர் உரை எழுதினர் அதற்கு மயூகமாலிகா [8] என்பது பெயர்

சங்கரமிச்ரர் [9] — இவரும் சாஸ்த்ரதீபிகைக்கு ஓர் உரை இயற்றினர் பாலப்ரகாசம் [10] என்ற நூலையும் இயற்றினர்

பட்டவிஷ்ணு [11] — இவரது காலம் கி பி 1400 இவர் நயதத்வஸங்கிரஹம் [12] இயற்றினர் இந்நூல் ப்ராபாகரமதப்படித் தத்துவங்களைக் கூறும்

அனந்தநாராயணமிச்ரர் [13] — இவரது காலம் கி பி 1400. இவர் பார்த்தஸாரதிமிச்ரரின் தந்த்ரரத்னத்திற்கு உரை எழுதினர் அவ்வுரைக்கு விஜயம் [14] என்பது பெயர்

1 विधिरसायनभूषणम्
2 शङ्करभट्ट
3 विधिरसायनदूषणम्
4 मीमांसासारसङ्ग्रह
5 मीमांसाबालप्रकाश
6 केशव
7 सोमनाथदीक्षित
8 मयूखमालिका
9 शङ्करमिश्र
10 बालप्रकाश
11 भट्टविष्णु
12 नयतत्त्वसङ्ग्रह
13 अनन्तनारायणमिश्र
14 विजय

ரவிதேவர்[1]—இவரது காலம் கி.பி.1400. இவர் நயவிவேகத்திற்குஉரை எழுதினர். அதற்கு விவேகதத்துவம்[2] எனப் பெயர்.

பரமேச்வரர் I[3]—இவர் வாசஸ்பதிமிச்ரரின் ந்யாயகணிகைக்கு இரண்டு உரைகள் இயற்றினர். அவற்றிற்கு ஜுஷத்வங்கரணி,[4] ஸ்வதிதங்கரணி[5] எனப் பெயர். இவர் கொச்சி தேசத்துப் பெருகுளம் கிராமத்தார்

பரமேச்வரர் II. — இவர் ஸ்போடஸித்தி, விப்ரமவிவேகம், தத்வபிந்து, நீதிதத்வாவிர்ப்பாவம் இவற்றிற்கு எளிதான உரைகள் இயற்றினர். இவர் பரமேச்வரரின் I பௌத்திரர்.

பரமேச்வரர் III — இவர் ஸுசரிதமிச்ரரின் காசிகைக்கு ஓர் உரையும் மீமாம்ஸாஸூத்ரார்த்தஸங்க்ரஹமும்[6] இயற்றினர். இம்மூவரும் கி. பி 1300 பின்னர் கி. பி. 1500 முன்னர் இருந்திருத்தல் வேண்டும்.

வரதராஜர்[7] — இவரது காலம் கி. பி. 1500-1570. இவர் பவநாதரின் நயவிவேகத்திற்கு தீபிகை[8] என்ற உரை எழுதியவர்.

கண்டதேவர்[9] — இவர் பாட்டதீபிகை,[10] பாட்டரஹஸ்யம்,[11] மீமாம்ஸாகௌஸ்துபம்[12] என்ற மூன்று நூல்களை இயற்றினர். தற்போது மீமாம்ஸாசாஸ்திரம் படிப்போர் எல்லோராலும் அவசியம் படிக்கப்படும் நூல்கள் பாட்டதீபிகையும், பாட்டரஹஸ்யமும் ஆகும். மீமாம்ஸாகௌஸ்துபம் ஜைமினிஸூத்ர

1. रविदेव.
2. विवेकतत्त्वम्
3. परमेश्वरः
4. जुषध्वङ्करणी
5. स्वदितङ्करणी
6. मीमांसासूत्रार्थसंग्रहः
7. वरदराज.
8. दीपिका
9. खण्डदेवः
10. भाट्टदीपिका
11. भाट्टरहस्यम्
12. मीमांसाकौस्तुभः

தின் முதல் அத்யாயம் இரண்டாம் பாதத்திலிருந்து மூன்றும் அத்யாயம் மூன்றும் பாதம் முடிய உள்ள விஷயங்களைப் பற்றியது. இவர் 1665-ல் லோகாந்தரஞ் சென்றார் என்பர். கீதே பேருபட்டருக்கு [1] மீமாம்ஸை கற்பித்தவர் இவரே. இவர் சிஷ்யராகிய சம்புபட்டரால் [2] பாட்டதீபிகைக்கு உரை எழுதப்பட்டது. அதற்குப் பிரபாவளி [3] எனப் பெயர்.

காகாபட்டர் [4] — இவர் பாட்டசிந்தாமணி [5] இயற்றியவர். இவருக்கு விச்வேச்வரர் [6] என்ற பெயரும் உண்டு.

ஆபதேவர் [7] — இவர் மீமாம்ஸாந்யாயப்ரகாசம் [8] இயற்றினர். மீமாம்ஸாசாஸ்த்ரம் படிக்க ஆரம்பிப்போர்க்கு இந்நூல் போதிக்கப்படுகின்றது. இவரின் தகப்பனார் அநந்ததேவர் [9], இவரின் ஆசிரியர் கோவிந்தர் [10], இவர்க்குப் பிள்ளைகள் இருவர், அவர்களுடைய பெயர்கள் அநந்ததேவர் [11] ஜீவதேவர் [12] என்பன. அநந்ததேவர் மீமாம்ஸாந்யாயப்ரகாசத்திற்கு உரை எழுதினர், அதற்குப் பாட்டாலங்காரம் [13] எனப் பெயர். ஜீவதேவர் பாட்டபாஸ்கரம் [14] என்ற நூலை இயற்றினர். இவர்கள் கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் இருந்தனர்.

1 पेरुभट्ट
2 शम्भुभट्ट
3 प्रभावलि
4 गागाभट्ट
5 भाट्टचिन्तामणि
6 विश्वेश्व
7 आपदेव
8 मीमांसान्यायप्रकाश
9 अनन्तदेव
10 गोविन्द
11 अनन्तदेव
12 जीवदेव
13 भाट्टालङ्कार
14. भाट्टभास्कर

## அத்தியாயம் 39

லௌகாக்ஷிபாஸ்கரர்[1] — இவரது காலம் கி. பி. 1600. இவர் அர்த்தஸங்கிரஹம்[2] எழுதினர். பாலர்களால் படிக்கப்படும் நூல்களுள் இஃது ஒன்று.

கிருஷ்ணதீக்ஷிதர்[3] — இவரது காலம் கி. பி. 1709–1760. இவர் இயற்றியது மீமாம்ஸாபரிபாஷா.[4] இந்நூலும் பாலர்களால் முதன்முதலிற் படிக்கப்படுகின்றது.

### எஞ்சிய நூல்களும் அவற்றின் ஆசிரியரும்.

| நூலின் பெயர் | | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| மீமாம்ஸாஸூத்ரதீதிதி[5] | ... | ராகவாநந்தஸரஸ்வதி[6] |
| மீமாம்ஸாபாலப்ரகாசம்[7] | ... | சங்கரபட்டர்[11] |
| மீமாம்ஸாஸாரஸங்க்ரஹம்[8] | .... | ,, |
| விதிரஸாயனதூஷணம்[9] | | ,, |
| ப்ரகாசம்[10] | | ,, |
| மீமாம்ஸாஸூத்ரவ்யாக்யா[12] | .. | மகாதேவர்[13] |
| ,, | .... | கமலாகரர்[14] |
| ,, | | வைத்யநாதர்[15] |

1. लौगाक्षिभास्करः
2. अर्थसङ्ग्रहः
3. कृष्णदीक्षितः
4. मीमासापरिभाषा
5. मीमासासूत्रदीधितिः
6. राघवानन्दसरस्वती
7. मीमासाबालप्रकाश.
8. मीमासासारसङ्ग्रह.
9. विधिरसायनदूषणम्
10. प्रकाश.
11. शङ्करभट्ट.
12. मीमासासूत्रव्याख्या
13. महादेव.
14. कमलाकरः
15. वैद्यनाथ.

| நூலின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|
| ஸுபோதினீ[1] | ராமேசுவரஸூரி[2] |
| மீமாம்ஸாரத்னம்[3] | ரகுநாதர்[4] |
| பாட்டபாஷாப்ரகாசம்[5] | நாராயணதீர்த்தர்[6] |
| அதிகரணகௌமுதி[7] | ராமகிருஷ்ணர்[8] |
| பாட்டாலங்காரம்[9] | ராகவேந்த்ரயதி[10] (1600—1670) |
| மீமாம்ஸாந்யாயதர்ப்பணம்[11] | ராமகிருஷ்ணதீக்ஷிதர்[12] (1500—1670) |
| வார்த்திகாபரணம்[13] | வெங்கடேசுவரதீக்ஷிதர்[14] (கி பி 1600) |
| விதித்ரயபரித்ராணம்[15]<br>மீமாம்ஸாமகரந்தம்[16] | வேங்கடாத்வரி[17] (கி பி 1590-1660) |
| தந்த்ரசூடாமணி[18]<br>கர்ப்பூரவார்த்திகா[19]<br>ஸுபோதினீ[20]<br>ஸுதாஸாரம்[21] | ராஜசூடாமணிதீக்ஷிதர்[23] (கி பி 1580-1650) |

1 सुबोधिनी
2 रामेश्वरसूरि
3 मीमासारत्नम्
4 रघुनाथ
5 भाट्टभाषाप्रकाश
6 नारायणतीर्थ
7. अधिकरणकौमुदी
8 रामकृष्ण
9 भाट्टसङ्ग्रह
10 राघवेन्द्रयति
11 मीमसान्यायदर्पणम्
12 रामकृष्णदीक्षित
13 वार्त्तिकाभरणम्
14 वेङ्कटेश्वरदीक्षित
15 विधित्रयपरित्राणम्
16 मीमासामकरन्द
17 वेङ्कटाध्वरी
18. तन्त्रचूडामणि
19 कर्पूरवार्त्तिका
20 सुबोधिनी
21 सुधासार
22 राजचूडामणिदीक्षित

| நூலின் பெயர் | நூலாசிரியர் பெயர் |
|---|---|
| மானமேயோதயம்[1] ....<br>நிபந்தனம்[2] (தந்த்ரவார்த்திக உரை) .... | நாராயணபட்டர்[3] (கேரளியர்) (கி. பி. 1560-1656) |
| தந்த்ரரஹஸ்யம்[4] ....<br>நாயகரத்னம்[5] .... | ராமானுஜாசார்யர்[6] (கி. பி. 1750) |
| பாட்டசந்திரிகை[7] ... | பாஸ்கரராயர்[8] (கி. பி. 1700-1760) |
| அத்வரமீமாம்ஸாகுதூஹல வ்ருத்தி[9] .... | வாஸுதேவதீக்ஷிதர்[10] (கி. பி. 1700-1760) |
| தந்த்ரஸித்தாந்ததீபிகை[11] .. | அப்பய்யதீக்ஷிதர்[12] (கி. பி. 1650) [அப்பய்யதீக்ஷிதரின் ஸஹோதரரின் புத்ரர்.] |
| ஸுபோதினி[13] (தந்த்ரவார்த்திக உரை) ....<br>ராணகோஜ்ஜீவினி[14] (ந்யாய ஸுதையின உரை) .... | அன்னம்பட்டர்[15] (கி. பி. 1700) |
| பாட்டதினகரீயம்[16] .... | தினகரர்[17] |

1. मानमेयोदय.
2. निबन्धनम्
3. नारायणभट्टः
4. तन्त्ररहस्यम्
5. नायकरत्नम्
6. रामानुजाचार्यः
7. भाट्टचन्द्रिका
8. भास्कररायः
9. अध्वरमीमासाकुतूहलवृत्तिः
10. वासुदेवदीक्षितः
11. तन्त्रसिद्धान्तदीपिका
12. अप्पय्यदीक्षितः
13. सुबोधिनी
14. राणकोज्जीविनी
15. अन्नम्भट्टः
16. भाट्टदिनकरीयम्
17. दिनकर.

| நூலின் பெயர் | நூலாசிரியரின் பெயர் |
| --- | --- |
| தந்த்ரவிலாஸம்[1] | லக்ஷ்மணாசார்யர்[2] |
| பாட்டசிந்தாமணி[3] (பாட்ட தீபிகையுரை) | வாஞ்சேச்வரர்[4] (கி பி 1760 1830) |
| பாட்டஸாரம்[5] | கிருஷ்ணதாதாசார்யர்[6] |
| ஸாரபோதினி[7] | கஸ்தூரிரங்காசார்யர்[8] |
| ஸாரவிவேசினி[9] (மீமாம்ஸா ந்யாயப்ரகாசத்தின் உரை) | மஹாமஹோபாத்யாய சின்னஸ்வாமிசாஸ்திரிகள்[10] |

---

1 तन्त्रविलास
2 लक्ष्मणाचार्य
3 भाट्टचिन्तामणि
4 वान्छेश्वर
5 भाट्टसार
6 कृष्णताताचार्य
7 सारवोधिनी
8 कस्तूरिरङ्गाचार्य
9 सारविवेचिनी
10 चिन्नस्वामिशास्त्री

படடன இவாகள ஸூததரஙகளின கருததுககளில மாறுபடட னா அதறகுக காரணம அவாகளின கொளகைவேறுபாடும, ஸூததரஙகள வெவவேறு விஷயவாககியஙகளைக கொணடன என்ற கொளகையும ஆகும உதாரணமாக முதல ஸூததரத தில முதறசொல ஆகிய அத எனபதறகு ஒவவொருவரும ஒவவொரு வகையாகப பொருள கூறினா நிதயாநிதயவஸது விவேகம[2], இஹாமுதராாததபலபோகவிராகம[3], சமதமாதி ஸமபத[4], முமுக்ஷுததவம[5] இவறறை அடைநதபினனா என்ச சஙகராசாரியரும மததவாசாரியரும, வேதவேதாநதஙகளின அறிவு காமாநுஷடானம, காமபலம நிலையறறது என்ற உணாவு மோக்ஷததில ஆசை இவறறை அடைநதபினனா என ராமாநுஜா சாரியரும, தோடககததில என வலலபாசாரியரும, தாமவிசாரம செயதபினனா என நீலகணடாசாரியரும அதறகுப பொருள கூறினா. இவவாறு பொருள கூறுதறகு அவரவாகளுடைய அநுபவமே காரணம ஆகும. சஙகராசாரியரும மததவா சாரியரும பிருமமசாரிநிலையில[6] இருநதே ஸநநியாஸி ஆசரமம ஏறறுக கொணடனா, ஆகவே தாமவிசாரததின பினனா என அவவிருவரும கொளளவிலலை. எனையோா இருவரும கிருஹஸத[7] நிலையி

1 अथातो ब्रह्मजिज्ञासा

2 नित्यानित्यवस्तुविवेक

3 इहामुत्रार्थफलभोगविराग

4 शमदमादिसम्पत्

5 मुमुक्षुत्वम्

6 ब्रह्मचारी

7 गृहस्थ

# அத்தியாயம் 41

## அத்வைதம்

அத்வைதமத்தின் சிறப்புக்கொள்கைகள் ஆவன —ஜீவனும் பிரும்மமும் ஒன்றே,[1] ஜீவன் அவித்யையை உபாதியாக உடையவன்,[2] அவித்யை அநிர்வசநீயஸ்வரூபத்தை உடையது,[3] அநாதியாயுள்ள[4] அந்த அவித்யையால் ஆதாரபூதமான[5] பிரும்மத்தில்[6] இவ்வுலகு தோற்றுவிக்கப்படுகின்றது. ஜகத் தன் ஸ்வரூபத்தால் மித்யை,[7] அதிஷ்டானமான[8] பிரும்ம ஸ்வரூபத்தால் உண்மை. உலகில் உள்ள பொருள் எல்லாவற்றிற்கும் அதிஷ்டானம் பிரும்மமே, அதில் வேறு பொருள்கள் அவித்யையால் ஆரோபிக்கப்படுகின்றன. ஆரோபிக்கப்பட்டன என்ற காரணம்பற்றியே அவற்றிற்கு மித்யாத்வம், இருளில் பழுதையைக் கண்டு ஜனங்கள் பாம்பு என மயங்க, தீபம் வந்தவுடன், அதனைப் பழுதை என அறிந்தபின்னர் அம்மயக்கத்திலிருந்து நீங்குகின்றனர். அப்பழுதையில் பழுதைத்துவம் உண்மை, பாம்புத்துவம் பொய். உலகில் வ்யவஹாரகாலத்தில் அவித்யை இருப்பதாலும், ஸாக்ஷாத்காரகாலத்தில் அது இல்லாமையாலும், அதன்

1 जीवब्रह्मणोरैक्यम्
2. अविद्योपाधिक जीव
3 अविद्या अनिर्वचनीयस्वरूपा
4. अनादि
5 आधारभूतम्
6 ब्रह्म
7 मिथ्या
8 अधिष्ठानम्

அநிர்வசநீயம்[1] எனக் கூறுகின்றனர். அக்காரணம்பற்றியே அத்வைதிகளை அநிர்வசநீயக்யாதிவாதி[2] எனக் கூறுகின்றனர். உலகு அவித்யையின் பரிணாமம்,[3] பிரமத்தின் விவர்த்தம்.[4] மோக்ஷம் என்பது ஓர் உலகு இன்று. ஜீவன் பிரம்மத்துடன் ஒன்றாய் இருக்கும் நிலையே மோக்ஷம் ஆகும்.

இக்கொள்கைகளைப் பரவச்செய்தவர் கௌடபாதாசார்யர்[5] (கி. பி. 700). அவர் சங்கராசார்யரின் ஆசிரியரான கோவிந்த பாதர்க்கு[6] ஆசிரியர். அவர் மாண்டூக்யகாரிகைகளை[7] இயற்றினர். அந்நூலில் நான்கு ப்ரகரணங்கள்[8] உள. முதலாவது மாண்டூக்யோபநிஷத்தின் உரை, இரண்டாவது வைதத்ய ப்ரகரணம், மூன்றாவது அத்வைதப்ரகரணம்.[10] நான்காவது அலாதசாந்திப்ரகரணம்.[11]

இக்கொள்கைகளை விரிவாய்ப் பரவச்செய்தவர் சங்கராசார்யர். (கி. பி. 800) அவர் ஸூத்ரபாஷ்யம்,[12] உபநிஷத் பாஷ்யம்,[13] கீதாபாஷ்யம்,[14] பல ப்ரகரணக்ரந்தங்கள்[15] இவற்றை இயற்றினர். நிருபாதிகபிரும்மமே[16] உண்மை எனவும், பிரும்மம் ஸ்வப்பிரகாசம்[17] எனவும் அவர் கூறின

1. अनिर्वचनीयम्
2. अनिर्वचनीयख्यातिवादी
3. परिणामः
4 विवर्तः
5 गौडपादाचार्यः
6. गोविन्दपादाः
7. माण्डूक्यकारिका
8. प्रकरणानि
9. वैतथ्यप्रकरणम्
10 अद्वैतप्रकरणम्
11. अलातशान्तिप्रकरणम्
12. सूत्रभाष्यम्
13. उपनिषद्भाष्यम्
14 गीताभाष्यम्
15 प्रकरणग्रन्थाः
16 निरुपाधिकब्रह्म
17. स्वप्रकाशम्



Skt—34

மையால் நாகார்ஜுநரின் சூன்யவாதத்தையும்[2], பௌத்தமத விஞ்ஞானவாதத்தையும்[3] ஒத்துக்கொண்டார் எனவும் அக் காரணம்பற்றி அவர் பிரச்சன்னபௌத்தர்[4] என விஞ்ஞான பிக்ஷு[5] கூறுகின்றார்.

சங்கராசாரியர்க்கு முன்னர் கி. பி. 650 இல் ஆசார்ய ஸுந்தரபாண்டியர்[6] என்ற ஒருவர் வார்த்திகம் எழுதினார் என்பது பஞ்சபாதிகையின்[7] உரையாகிய ப்ரபோத பரிசோதினியிலிருந்து[8] அறியப்படுகின்றது[9]. அத்வைத நூல்கள் பாஷ்யப்ரஸ்தானம்[10] எனவும் வாதப்ரஸ்தானம்[11] எனவும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன.

பாஷ்யப்ரஸ்தானம்—சங்கராசாரியர் எழுதிய பாஷ்யத்தை ஒட்டி ஸுரேசவரர்[12] வார்த்திகம் எழுதினார். பாஷ்யத்திற்குப் பல உரைகள் உள. அவை ஆநந்தகிரி[13] இயற்றிய நியாய நிர்ணயம்[14], கோவிந்தாநந்தர்[15] இயற்றிய ரத்னப்ரபை,[16] வாசஸ்பதிமிச்ரர்[17] இயற்றிய பாமதி,[18] ஸநந்தனர்[19] என்ற பத்மபாதர்[20] இயற்றிய பஞ்சபாதிகை[21] ஆகும்.

1 नागार्जुन
2 शून्यवाद
3 विज्ञानवाद
4 प्रच्छन्नबौद्ध
5 विज्ञानभिक्षु
6 आचार्यसुन्दरपाण्ड्य
7 पञ्चपादिका
8 प्रबोधपरिशोधिनी
9 Journal of Oriental Research Madras Vol I p 7
10 भाष्यप्रस्थानम्
11 वादप्रस्थानम्
12 सुरेश्वर
13 आनन्दगिरि
14 न्यायनिर्णय
15 गोविन्दानन्द
16 रत्नप्रभा
17 वाचस्पतिमिश्र
18 भामती
19 सनन्दन
20 पद्मपाद
21 पञ्चपादिका

பாமதிக்கு உரை அமலாநந்தர்[1] (கி. பி. 1247—1260) இயற்றினர்; அதன் பெயர் கல்பதரு[2]; அதற்குப் பரிமளம்[3] என்ற உரையை அப்பைய தீக்ஷிதர்[4] இயற்றினர்.

பஞ்சபாதிகைக்கு விவரணம்[5] ப்ரகாசாத்மயதி[6] (கி. பி. 1200) இயற்றினர். அதற்கு உரைகள் பல: அவை விஷ்ணு பட்டோபாத்யாயர்[7] இயற்றிய ருஜுவிவரணம்,[8] அகண்டாநந்தர்[9] இயற்றிய தத்வதீபனம்,[10] ந்ருஸிம்ஹாச்ரமமுனி[11] (கி. பி. 1200) இயற்றிய விவரணபாவப்ரகாசிகை,[12] ஆகும். பஞ்சபாதிகைக்கு வேறு உரைகளும் உள: அவை அமலாநந்தர்[13] இயற்றிய பஞ்சபாதிகாதர்ப்பணம்,[14] வித்யாஸாகரர்[15] இயற்றிய பஞ்சபாதிகாடீகை,[16] ஆத்மஸ்வரூபர்[17] இயற்றிய ப்ரபோத பரிசோதினீ[18] ஆகும். இவற்றுள் பஞ்சபாதிகாவிவரணமே பெருவழக்கில் உள்ளது. அங்குள்ள விஷயங்களை மாதவர்[19] விவரணப்ரமேயஸங்க்ரஹத்தில்[20] விரிவாக உரைத்துள்ளார்.

1. अमलानन्दः
2. कल्पतरुः
3. परिमलम्
4. अप्पय्यदीक्षितः
5. विवरणम्
6. प्रकाशात्मयतिः
7. विष्णुभट्टोपाध्यायः
8. ऋजुविवरणम्
9. अखण्डानन्दः
10. तत्त्वदीपनम्
11. नृसिंहाश्रममुनिः
12. विवरणभावप्रकाशिका
13. अमलानन्दः
14. पञ्चपादिकादर्पणम्
15. विद्यासागरः
16. पञ्चपादिकाटीका
17. आत्मस्वरूपः
18. प्रबोधपरिशोधिनी
19. माधवः
20. विवरणप्रमेयसङ्ग्रहः

வித்யாரண்யர்[1] ஜீவன்முக்திவிவேகம்,[2] பஞ்சதசீ[3] இவ்விரண்டையும் இயற்றினர். ஸர்வஜ்ஞாத்மமுனியால்[4] (கி பி 900) ஸங்க்ஷேபசாரீரகம்[5] இயற்றப்பட்டது. அதற்கு உரை ராமதீர்த்தர்[6] செய்தார். பிரும்மஸூத்திரத்தின் முதல் அத்தியாயத்திலுள்ள அதிகரணங்களைப்பற்றி அப்பைய தீக்ஷிதர் ந்யாயரக்ஷாமணியில் ஆராய்ந்துள்ளனர்.

## வாதப்ரஸ்தானம்

அத்வைதமதக்கொள்கைகள் பின்னருள்ள நூல்களுள் விரிவாய்க் கூறப்பட்டன —

| நூலாசிரியரின் பெயர் | நூலின் பெயர் |
|---|---|
| மண்டனமிச்ரர்[8] | பிரும்மஸித்தி[9] |
| ஸுரேச்வரர்[10] | நைஷ்கர்ம்யஸித்தி[11] |
| விமுக்தாத்மா[12] | இஷ்டஸித்தி[13] (கி பி 1100) |
| ஸ்ரீஹர்ஷர்[14] | கண்டனகண்டகாத்யம்[15] (கி பி 1190) |

1. विद्यारण्य
2. जीवन्मुक्तिविवेक
3. पञ्चदशी
4. सर्वज्ञात्ममुनि
5. सङ्क्षेपशारीरकम्
6. रामतीर्थ
7. न्यायरक्षामणि
8. मण्डनमिश्र
9. ब्रह्मसिद्धि
10. सुरेश्वर
11. नैष्कर्म्यसिद्धि.
12. विमुक्तात्मा
13. इष्टसिद्धि
14. श्रीहर्ष
15. खण्डनखण्डखाद्यम्

| ஆசிரியரின் பெயர் | நூலின் பெயர் |
|---|---|
| சித்ஸுகாசார்யர்[1] | தத்வதீபிகை[2]<br>பாஷ்யபாவப்ரகாசிகை[3] |
| தர்மராஜாத்வரி[4] | வேதாந்தபரிபாஷை[5] 16 நூ. |
| மதுஸூதனஸரஸ்வதி[6] | அத்வைதஸித்தி[7] |
| சித்ஸுகர்[8]<br>சங்கரமிச்ரர்[9]<br>ரகுநாதர்[10] | கண்டனகண்ட காத்ய உரைகள் |
| ப்ரத்யக்ரூபர்[11] | நயனப்ரஸாதினீ[12] (தத்வதீபிகையின் உரை) |
| ராமகிருஷ்ணாத்வரி[13] (தர்மராஜாத்வரியின் புத்ரர்) | சிகாமணி[14] |
| அமரதாஸர்[15] | மணிப்ரபை[16] (வேதாந்தபரிபாஷையின் உரைகள்) |
| பிரம்மானந்தர்[17] | கௌடபிரம்மானந்தீயம்[18] |

1. चित्सुखाचार्यः
2. तत्त्वदीपिका
3. भाष्यभावप्रकाशिका
4. धर्मराजाध्वरी
5. वेदान्तपरिभाषा
6. मधुसूदनसरस्वती
7. अद्वैतसिद्धिः
8. चित्सुखः
9. शङ्करमिश्रः
10. रघुनाथः
11. प्रत्यग्रूपः
12. नयनप्रसादिनी
13. रामकृष्णाध्वरी
14. शिखामणिः
15. अमरदासः
16. मणिप्रभा
17. ब्रह्मानन्दः
18. गौडब्रह्मानन्दीयम्

| ஆசிரியர் பெயர் | நூலின் பெயர் |
| --- | --- |
| பலபத்ரர்[1] | ஸித்திவ்யாக்யை[2] (கி. பி 17 நூ. அத்வைத ஸித்தியின் உரைகள்) |
| விட்டலேசோபாத்யாயர்[3] | ப்ருமமானந்தீயவ்யாக்யை |
| ஸதாநந்தர்[4] | அத்வைதஸித்திஸித்தாந்த ஸாரம்[5] |
| | வேதாந்தஸாரம்[6] |
| | ஸுபோதினீ[7] |
| | வித்வந்மனோரஞ்சனீ[8] (வேதாந்தஸாரத்தின் உரைகள்) |
| ஸதாநந்தயதி[9] | அத்வைதப்ரும்மஸித்தி[10] |
| ஆநந்தபோதபட்டாரகாசார்யர்[11] | ந்யாயமகரந்தம்[12] |
| ப்ரகாசாநந்தர்[13] | வேதாந்தஸித்தாந்த முக்தாவளீ[14] |
| அப்பய்யதீக்ஷிதர்[15] | ஸித்தாந்தலேசஸங்க்ரஹ[16] |
| | வேதாந்ததத்வதீபிகை[17] |
| | ஸித்தாந்ததத்வதீபிகை[18] |

1 बलभद्र
2 सिद्धिव्याख्या
3 विट्ठलेशोपाध्याय
4 सदानन्द
5 अद्वैतसिद्धिसिद्धान्तसार
6 वेदान्तसार
7 सुबोधिनी
8 विद्वन्मनोरञ्जनी
9 सदानन्दयति
10 अद्वैतब्रह्मसिद्धि
11 आनन्दबोधभट्टारकाचार्य
12 न्यायमकरन्द
13 प्रकाशानन्द
14 वेदान्तसिद्धान्तमुक्तावली
15 अप्पय्यदीक्षित
16 सिद्धान्तलेशसङ्ग्रह
17. वेदान्ततत्त्वदीपिका
18 सिद्धान्ततत्त्वदीपिका

| நூலாசிரியர் பெயர் | நூலின் பெயர் |
| --- | --- |
| அச்யுதகிருஷ்ணாநந்தர்[1] | ஸித்தாந்தலேசஸங்க்ரஹத்தின் உரை |
| ந்ருஸிம்ஹமுனி[2] | பேததிக்காரம்[3] |
| நல்லாதீக்ஷிதர்[4] | அத்வைதரஸமஞ்சரி[5] (17 ஆ.) |
| கிருஷ்ணாநந்தஸரஸ்வதி[6] | ஸித்தாந்தஸித்தாஞ்சனம்[7] |
| பாஸ்கரதீக்ஷிதர்[8] | ரத்நதூலிகை[9] (ஸித்தாந்தஸித்தாஞ்சனத்தின் உரை) |
| அத்வைதாநந்தர்[10] (சித்விலாஸர்[12] — ராமாநந்த சிஷ்யர்)- | ப்ரம்மவித்யாபரணம்[11]<br>சாந்திவிவரணம்[13]<br>குருப்ரதீபம்[14] |
| ராமப்ரம்மேந்த்ரஸரஸ்வதி[15] | அத்வைதஸித்தாந்த குருசந்த்ரிகை[16] |
| சந்த்ரிகாசார்யபிக்ஷு[17] | அம்ருதரஸமஞ்சரி[19] (அத்வைதஸித்தாந்த குருசந்த்ரிகையின் உரை) |

1. अच्युतकृष्णानन्द.
2. नृसिंहमुनि.
3. भेदधिक्कारः
4. नल्लादीक्षितः
5. अद्वैतरसमञ्जरी
6. कृष्णानन्दसरस्वती
7. सिद्धान्तसिद्धाञ्जनम्
8. भास्करदीक्षितः
9. रत्नतूलिका
10. अद्वैतानन्दः
11. ब्रह्मविद्याभरणम्
12. चिद्विलासः
13. शान्तिविवरणम्
14. गुरुप्रदीप ([illegible])
15. रामब्रह्मेन्द्रसरस्वती
16. अद्वैतसिद्धान्तगुरुचन्द्रिका
17. चन्द्रिकाचार्यभिक्षु
18. अमृतरसमञ्जरी

## அத்தியாயம் 42

---

### விசிஷ்டாத்வைதம்

விசிஷ்டாத்வைதமத்தின் சிறப்புக்கொள்கைகள் ஆவன — ஒவ்வொரு சரீரத்திலுமுள்ள ஜீவன் பின்னன்,[1] அணு,[2] சேதனன்[3], ஸகலகல்யாண குணங்களையுடைய பிரும்மத்திற்கு அம்சபூதன்[4] அந்த ஜீவன் பத்தன்,[5] முக்தன்,[6] நித்யன்[7] என மூவகையுடையன. பத்தன் பிறப்பிறப்பு உடையன், முக்தன் உபாஸனத்தாலோ[8] ப்ரபத்தியாலோ[9] ஸம்ஸாரவிலிருந்து விடுபட்டு மோக்ஷம் அடைந்தவன், நித்யன் கருடன்[10] விஷ்வக்ஸேனன்[11] முதலியோருள் ஒருவன். ஜகத்,[12] ஜடம்[13] உண்மை,[14] பிரம்மத்தின் உடலாம். மோக்ஷம் வைகுண்டவுலகம் ஆகும். முக்தர்கள் ஜகத்தின் ஸ்ருஷ்டி[15] ஸம்ஹாரம்[16] முதலிய ஆற்றல்களின்றிக் கடவுளுக்குச் சமமாய் இருப்பர்.

1 भिन्न
2 अणु
3 चेतन
4 अंशभूत
5 बद्ध
6 मुक्त
7 नित्य
8 उपासनम्
9 प्रपत्ति
10 गरुड
11 विष्वक्सेन
12 जगत्
13 जडम्
14 सत्यम्
15 सृष्टि
16 संहार

இக்கொள்கையைக் முதன்முதலில் போதாயனர்[1] தமது பிரும்மஸூத்ர வ்ருத்தியில் விரிவாகக் கூறினார் என்றும், அவற்றைப் பிரும்மநந்தி[2] என்ற டங்கர்,[3] குஹதேவர்,[4] கபர்தி,[5] பாருசி[6] முதலிய பூர்வாசாரியர்கள் சுருக்கமாகக் கூறினா ரென்றும், இராமாநுஜாசாரியர் தமது ஸ்ரீபாஷ்யத்திலும் வேதார்த்தஸங்கிரகத்திலும் கூறினர்.[7] இம்மதத்தைக் கலந்து பரவச்செய்தவர் இராமாநுஜாசாரியர்.[8] அவருக்கு முன்னர் நாதமுனி, யாமுனமுனி,[10] என இருவர் இருந்தனர். நாதமுனி ந்யாயதத்வம்,[11] யோகரஹஸ்யம்[12] என்ற இரண்டு நூல்களை இயற்றினார். யாமுனமுனி இயற்றிய நூல்கள் ஆகமப்ராமாண்யம்,[13] கீதார்த்தஸங்கிரஹம்,[14] ஆத்மஸித்தி,[15] ஈச்வர

1 बोधायन
2 ब्रह्मनन्दि
3 टङ्क
4 गुहदेव
5 कपर्दी
6 भारुचि

7 भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः संचिक्षिपुः तन्मतानुसारेण सूत्राणि व्याख्यास्यन्ते (श्रीभाष्यम्), पूर्वाचार्या इति शब्देन ब्रह्मान्यपरनामकटङ्क गुहदेव, कपर्दी, भारुचि इत्यादयो गृह्यन्ते (वेदार्थसंग्रह)

8 रामानुजाचार्य
9 नाथमुनि
10 यामुनमुनि
11 न्यायतत्त्वम्
12 योगरहस्यम्
13 आगमप्रामाण्यम्
14 गीतार्थसंग्रह
15 आ

ஸித்தி,[1] ஸம்வித்ஸித்தி,[3] புருஷநிர்ணயம்,[3] ஸ்தோத்ரரத்னம்,[4] சதுச்லோகீ[5] என்பனவாம். யாமுனமுனியின் பராசார்யர்[6] ஆசாரியர் நாதமுனி என்பர்.

இராமாநுஜாசார்யர் கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டின் இறுதியிலும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இருந்தார். அவரது தகப்பனார் பெயர் கேசவர்,[7] தாயாரது பெயர் காந்திமதி,[8] காஞ்சீபுரத்தில் அவர் தாய்மாமனாகிய யாதவ பரகாசரிடத்தில்[9] படித்தார். அவர் அபினவவைஷ்ணவ ஸம்பிரதாயத்தை ஆக்கியவர். இவர் இயற்றிய நூல்கள் பல. அவை, ஸ்ரீபாஷ்யம்,[10] கீதாபாஷ்யம்,[11] வேதார்த்தஸங்கிரஹம்,[12] வேதாந்ததீபம்,[13] வேதாந்தஸாரம்,[14] மிதகத்யம்,[15] ப்ருது கத்யம்,[16] வைகுண்டகத்யம்[17] முதலியன ஆகும். ஸ்ரீபாஷ்யத்தில் சங்கராசார்யர், பாஸ்கராசார்யர், யாதவப்ரகாசர் இவர்களுடைய கொள்கைகளை மறுக்கின்றனர். ஸ்ரீபாஷ்யத்திற்கு

1 ईश्वरसिद्धि
2. संवित्सिद्धि
3 पुरुषनिर्णय
4 स्तोत्ररत्नम्
5 चतुश्श्लोकी
6 प्राचार्य
7 केशव
8 कान्तिमती
9 यादवप्रकाश
10 श्रीभाष्यम्
11 गीताभाष्यम्
12 वेदार्थसङ्ग्रह
13 वेदान्तदीप
14 वेदान्तसार
15 मितगद्यम्
16 पृथुगद्यम्
17 वैकुण्ठगद्यम्

தாமம், பரதனின் ஸாத்விகமான எண்ணமும் தியாகமும், தூதனின் இலக்கணம் இவற்றை நன்கு விளக்கும். உலகத்தில் சிறந்த நூல்களுள் வால்மீகி-இராமாயணம் ஒன்று எனப் பெரியார் கூறுவர்.

ப்ரக்ஷிப்தங்கள் பின்னர் வந்ததற்கு ஸி. வி. வைத்யர் பின்வரும் காரணங் கூறுவர் —(1) மஹாபாரதத்தில் கிருஷ்ணனை விஷ்ணுவின் அவதாரமாகக் கொண்டதுபோன்று இராமனை அவதாரமாகக் கொள்ளல் வேண்டும் என்ற விருப்பம், (2) இராமாயணத்தை ஸர்க்கபந்தகாவ்யங்களுள் முதலானது என்ற எண்ணம், (3) நகரம், போர், ருதுக்கள் முதலியவற்றை மிகுதியாக வருணிக்கவேண்டும் என்ற விருப்பம் முதலியன.[1]

शक्ष्यामि . द्रष्टु तयोश्च निधनेन रिपु कृतार्थम् (वेणी 6)

वागीशाद्या सुमनस सर्वार्थानामुपक्रमे ।

य नत्वा कृतकृत्या स्युस्त नमामि गजाननम् ॥

என்ற சுலோகங்களில் कृतकृत्या , कृतार्थम् என்ற விடத்துள்ள कृत என்ற சொற்கு ஸாதிக்கப்பட்ட என்பது பொருள். அவ்வாறே अकृतदार என்ற விடத்து अकृत என்ற சொற்கு உபயோகப்படுத்தாத என்பது பொருள் என்னலாம். ஒவ்வொரு மொழியிலும் சில தாதுக்கள் பல பொருள்களில் வழங்கப் படுகின்றதைக் காணலாம். स्था என்பதற்கு நிற்றல் என்ற பொருளோடு இருத்தல் என்ற பொருளும் உண்டு.

Cf उपविष्टस्तिष्ठति (वेणी. 5)

அவ்வாறே தமிழில் காண் என்ற தாதுவிற்கு இயற்றல் என்ற பொருளும் ("நூலைக்கண்டான் —தொல் பொ), வெட்டல் என்ற பொருளும் ("குளத்தைக் கண்டான் —அப்பர் தேவா), அறிதல் (பொருளைக்கண்டான்), பார்த்தல் என்ற பொருளும் இருத்தல் நோக்கத்தக்கது. அவ்வாறே ஆங்கிலத்திலும் stand, make முதலிய தாதுக்களைக் காணலாம்.

1. The Riddle of the Ramayana by C V Vaidya

அவற்றோடு மஹாபாரதத்தில் 24000 ச்லோகம் முதலில் இருந்ததுபோல் கண்டும் 24000 ச்லோகம் இருக்கவேண்டும் என்ற விருப்பமும் காரணம் ஆகலாம்.

இராமாயணத்தின் காலம். — ப்ரக்ஷிப்தங்களை[1] நீக்கி எஞ்சிய இராமாயணப்பகுதி மஹாபாரதத்திற்கு முன்னர் இயற்றப்பட்டிருக்கவேண்டும்; ஏனெனில் யுத்தகாண்டம் 81-ஆவது ஸர்க்கத்தில் உள்ள 28-ஆவது ச்லோகம் மஹாபாரதத் த்ரோணபர்வம் 143-ஆவது அத்தியாயத்தில் வால்மீகியால் கூறப்பட்டதாகக் கூறப்பட்டது.[2] அன்றியும் வனபர்வாவில் இராமோபாக்யானம் உள்ளது. மஹாபாரதத்தின் இறுதிப்பகுதியான ஹரிவம்சத்தில் வேதத்திற்கும் பாரதத்திற்கும் இடையில் இராமாயணம் குறிக்கப்பட்டது.[3] வால்மீகி, வ்யாஸர் இருவரையும் தொகைச்சொல்லால் ஆநந்தவர்த்தனர் கூறும்போது பாணினிஸூத்திரப்படி[4] குறைந்த எழுத்துக்

1. மஹாபாரதம் ஸபாபர்வத்து ஐந்தாம் ஸர்க்கத்தில் கூறப்பட்ட ராஜதர்மத்தைப்பற்றிக் கூறும் அயோத்யாகாண்டம் நூறாவது ஸர்க்கம், புத்தனைப்பற்றிய ச்லோகம், யவனரைப்பற்றிய ச்லோகம், கிஷ்கிந்தாகாண்டத்து 18-ஆம் ஸர்க்கத்தில் 31, 32 ஆக உள்ள இரண்டு மநுஸ்ம்ருதி ச்லோகங்கள் முதலியன ப்ரக்ஷிப்தம் ஆகும்.

2. अपि चायं पुरा गीतः श्लोको वाल्मीकिना भुवि ।
न हन्तव्याः स्त्रिय इति यद्ब्रवीषि प्लवङ्गम ॥
पीडाकरममित्राणां यत्स्यात् कर्तव्यमेव तत् ॥ (गृह्म. उत्त. 7, 37)

3. वेदे रामायणे पुण्ये भारते भरतर्षभः ।
आदौ चान्ते च मध्ये च हरिः सर्वत्र गीयते ॥ [हरिवंशे.]

4. अल्पाच्तरम् (पा. अ. 2, 2, 34)

கலைக் கொண்ட வியாஸர் என்ற சொல்லை முதலிற் கூறவேண்டி-யிருந்தும் வால்மீகி என்ற சொல்லையே முதலிற் கூறுகின்றனர்.[1] அவ்வாறே இராமாயணம் மஹாபாரதம் இவ்விரண்டையும் கூறும்போது இராமாயணத்தையே முதலிற் கூறுகின்றனர்.[2] ப்ரக்ஷிப்தங்கள் கலந்த இராமாயணத்திற்கு முன்னர் மஹாபாரதம் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பர் ஹாப்கின்ஸ்.[3] ஒரே ச்லோகங்களும்,[4] ஒரே கருத்தும்[5] இரண்டு நூல்களிலும் காணப்படுகின்றன. புத்தரைப்பற்றிய ச்லோகம் லங்காநகரத்தைப்பற்றிய ச்லோகம் முதலியன ப்ரக்ஷிப்தமென்பதற்கு ஐயம் இல்லை. அவ்வாறே யாகோபியுங் கூறியுள்ளார். காலாசோகரால் ப்ரதிஷ்டிக்கப்பட்ட பாடலிபுத்ரம் இந்நூலிற் கூறப்படாமையாலும், கோஸலநாட்டிற்கு ஸாகேதம் ப்ரதான நகரமாகக் கூறப்படாமையாலும், இராமாயணம் கி மு 380க்கு

1 वाल्मीकिव्यासमुख्याश्च ये प्रख्याता कवीश्वरा
(ध्वन्यालोके उद्योत 1)

2 रामायणमहाभारतप्रभृतिनि लक्ष्ये (ibid उद्योत 1)
रामायणमहाभारतादिषु सङ्ग्रामादय पुन पुनरभिहिता अपि नवनवा प्रकाशन्ते (ibid उद्योत 4)

3 The great epic of India by E W Hopkins, p. 59

4 तेषा तद्वचन श्रुत्वा देवाना विष्णुरब्रवीत् ।
मामेव यजता शक्र पावयिष्यामि वज्रिणम् ॥
पुण्येन हयमेधेन मामिष्ट्वा पाकशासन ।
पुनरेष्यति देवानामिन्द्रत्वमकुतोभय ॥
[रामा उत्त 85 20 21] [म भा उद्यो 13 13 14]

5 श्रूयते शम्बुके शूद्रे हते ब्राह्मणदारक ।
जीवितो धर्ममासाद्य रामात्सत्यपराक्रमात् ॥
(रामा उत्त 73 76) (म भा शा 152, 67)

முன்னர் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பர். இக்காரணங் கொண்டு கி. மு. 500க்கு முன்னர் இந்நூல் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என மாக்டானல் கூறியிருப்பினும், கி. மு. 300இல் அது இயற்றப்பட்டது என்பர் விண்டர்நிட்ஸ். கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் நூலாகிய தமிழ்ப்புறநானூற்று 378-ஆம் பாட்டில் இராவணன் சீதையை தூக்கிப்போனது கூறப்பட்டது.[1] ப்ரவராத்யாயத்தில் போதாயனர், பாணினி வால்மீகி இருவரையும் சேர்த்துப் படித்திருப்பதாலும், வால்மீகியின் சில சொற்கள் பாணினிஸூத்திரத்திற்குப் பஹிர்ப்பூதமாய் இருப்பதாலும்[2] தைத்திரீயப்ராதிசாக்யம் வாஜஸநேயி ஸம்ஹிதை இவற்றில் வால்மீகி குறிக்கப்பட்டிருத்தலாலும், வால்மீகி இராமன் காலத்திருந்தவராதலாலும், இராமாயணம் பாணினி அஷ்டாத்யாயிக்குப் பின்னர் இயற்றப்பட்டிருத்தல் தகாது. அன்றியும் அதர்வவேதத்தை யாகத்தில் உபயோகப்படுத்தும் வேதமாகக் கருதுதற்கு முன்னரே அது இயற்றப்பட்டிருத்தல் கூடும். எனெனில் இரண்டிடத்தில்[3] ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இவையே கூறப்பட்டன; ஓரிடத்து இம்மூன்றே யாகத்தில் பயன்படுகின்றன எனப்பட்டது.[4] அதர்வவேதம் அதர்வசிரஸ்[1] என்ற பெயரால் ஓரிடத்து வழங்கப்பட்டது.

இராமாயணத்தைப்பற்றிய மேனாட்டறிஞரது கொள்கைகள்— ஆர்யர் பாரதவர்ஷத்தில் தென்பகுதியை வென்றதைக் கதை

1. கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை. (143, 85-86)
2. पश्यामहे (अयो. 47,4) उप्य. (*ibid* 16, 1);
वसामहे (*ibid* 50, 27); त्रुमिं (*ibid* 12, 36); त्रूमि (अर. 13, 17)
3. नानृग्वेदविनीतस्य नायजुर्वेदधारिणः ।
नासामवेदविदुषः शक्यमेवं विभाषितुम् ॥ (कि. 3, 28)
उपासाञ्चक्रिरे हृष्टा वेदालय इवाध्वरम् । [उत्त. 37, 17]
4. अथर्वशिरसि प्रोक्तैर्मन्त्रैः सिद्धां विधानतः (बा. 15, 2)

யாகக் கூறினர் வால்மீகி என லாஸ்ஸன்[1] கூறுவர். தென்னாட்டிலும் ஸிம்மளத்திலும் வைதிகமார்க்கம் பரவியதைக் கதையாகக் கூறினர் என வேபர்[2] கூறுவர். கிரேக்கர் கதையைப் பார்த்து இந்நூல் எழுதப்பட்டது என்றும், இந்திரன் வருத்திரனைக் கொன்றதை இக்கதையாகக் கூறினர் எனவும், இந்திரன் மருத்துக்களோடு வருத்திரனை வென்று கோக்களைக் கொண்டுவந்ததுபோல், இராமன் மாருதியோடு இந்திரஜித்தின் தகப்பனைக் கொன்று பூமகளாகிய ஸீதையைத் திருப்பிக் கொண்டனர் எனவும் யாகோபி கூறுவர்.

இராமாயணத்தைப் படிக்கப்படிக்க ருசி உண்டாகலாலும், அதனை ஒட்டிப் பின்னர் பல நூல்கள் இயற்றப்பட்டமையாலும், அதைப் படித்த பின்னரே காளிதாஸரின் நூல்களின் கருத்து பல இடங்களில் நன்கு விளங்குகின்றமையாலும், இராமாயணத்தைப் படித்தல் இஹத்திற்கும் பரத்திற்கும் நன்மை பயக்கும் என ஆஸ்திகர்களால் கருதப்படுகின்றமையாலும், இராமாயணத்தை எல்லோரும் அடிக்கடிப் படித்தல் கடமையாகும்.

இராமாயணத்திற்கு மூவகைப் பாடங்கள் உள:—வங்கதேசியப்பாடம், பம்பாய்ப்பாடம், பாரதவர்ஷத்து மேற்பகுதிப் பாடம். 6000 ச்லோகங்கள் ஒன்றில் உளது மற்றொன்றில் இல்லை என்பர். அவற்றுள் பம்பாய்ப்பாடமே சிறந்தது என்பர். அதனை ஒட்டியே போஜசம்பு[3] இயற்றப்பட்டது. க்ஷேமேந்திரர் இவை பாடங்களை மூலமாகக் கொண்டு இராமாயணகதாமஞ்சரீ[4] இயற்றினர்.

1. Lassen. 2. Weber.
3. भोजचम्पू
4. रामायणकथामञ्जरी

இராமாயணத்திற்குப் பின்னர் வந்த காவ்யம் மஹா பாரதம் ஆகும்.[1] இந்நூலுக்கு உரை எழுதியவர் பலர். அவற்றுள் தென்னாட்டில் கோவிந்தராஜர், மஹேச்வரதீர்த்தர் திலகர் இவர்கள் எழுதிய உரைகள் அச்சில் உள.

1. कृतं मयेदं भगवन् काव्यं परमपूजितम् [म. भा I. 1, ६१]

## அத்தியாயம் 49

---

### மஹாபாரதம்.

மஹாபாரதம் முதன்முதலில் பராசரர்க்கும் ஸத்யவதிக்கும் பிறந்த த்வைபாயனவ்யாஸரால் இயற்றப்பட்டது.[1] அவர் அதை ஸுமந்து, ஜைமினி, பைலர், சுகர், வைசம்பாயனர் இவர்களுக்குக் கற்பித்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாய்ப் பாரதஸம்ஹிதையைச்[2] செய்தனர். வைசம்பாயனரது ஸம்ஹிதையில் உபாக்யானங்களைத் தவிர்த்து 24000 ச்லோகங்கள் உள்ளன என்றும், அவற்றைச் சேர்த்து லக்ஷம் ச்லோகங்கள் உள்ளன என்றும் கூறப்பட்டது.[3] சுகர் தன் மகன் உக்ரச்ரவஸ்ஸுக்கு அதைக் கற்பித்தனர். அந்நூலை வியாஸரின் உத்தரவுப்படி வைசம்பாயனர் ஸர்ப்பஸத்ரத்தில் ஜனமேஜயர்க்கும், உக்ரச்ரவஸர் சௌனகரின் பன்னிரண்டு ஆண்டு

1. इतिहासमिमं चक्रे पुण्यं सत्यवतीसुतः ।
पराशरात्मजो विद्वान् ब्रह्मर्षिः संशितव्रतः ॥
[म. भा. आदि 1, 68, 69]

2. सुमन्तुं जैमिनिं पैलं शुकं चैव स्वमात्मजम् ।
प्रभुर्वरिष्ठो वरदो वैशम्पायनमेव च ॥
संहितास्तैः पृथक्त्वेन भारतस्य प्रकाशिताः ।
[म. भा. आदि. 64, 131-2]

3. इदं शतसहस्रं तु श्लोकानां पुण्यकर्मणाम् ।
उपाख्यानैः सह ज्ञेयं श्राव्यं भारतमुत्तमम् ॥
चतुर्विंशतिसाहस्रीं चक्रे भारतसंहिताम् ।
उपाख्यानैर्विना तावत् भारतं प्रोच्यते बुधैः ॥ (ibid 1, 77-78)

நிகழ்த்த சத்திரத்தில் ரிஷிகளுக்குக் கூறினர்.[1] வியாசரே 150 சுலோகத்தில் பாரதக்கதையைச் சுருக்கமாகச் செய்தனர்.[2] இவற்றைக்கொண்டு முதலில், இந்நூல் பாரதரின் சரித்திரத்தைக் கூறிய இதிகாசம் என்றும், பின்னர் தாயகங்களைப்பற்றிய பகுதி இணைக்கப்பட்டது என்றும், இறுதியில் உபாக்கியானங்கள் சேர்க்கப்பட்டன என்றும், ஸி. வி. வைத்யா முதலிய அறிஞர் கருதுகின்றனர். முதற்பதிப்பு வியாசருடையது, இரண்டாம் பதிப்பு வைசம்பாயனருடையது, மூன்றாம் பதிப்பு சௌதியுடையது, என்றும் கூறுவர்.[3] அவற்றுள் 8800 சுலோகங்களின் பொருள் எளிதிற் புலப்படாதது என்றும், அவை பாரதம் எழுதிய விநாயகரைக் குறித்து அவ்வாறு இயற்றப்பட்டன என்றும் கூறப்பட்டது.[4]

இதனைக்கொண்டு டாக்டர்வெல் முதற்பதிப்பில் 8800 சுலோகங்களும், இரண்டாம் பதிப்பில் 24000 சுலோகங்களும் மூன்றாம் பதிப்பில் லக்ஷம் சுலோகங்களும் உள்ளன என்பர்; அது

1. जनमेजयस्य राजर्षेः सर्पसत्रे महात्मनः ।
कृष्णद्वैपायनप्रोक्ताः सुपुण्या विविधाः कथाः ॥
कथिताश्चापि विधिवद्या वैशम्पायनेन वै ॥ (*ibid* 1, 1o-16)
सौतिः...शौनकस्य कुलपतेर्द्वादशवार्षिके सत्रे ... उवाच तान् सर्वान्
(*ibid* 1, 5-6)
2. ततोऽध्यर्धशतं भूयः संक्षेपं कृतवानृषिः (*ibid* 1, 79)
3 The Mahābhārata, A criticism by C. V. Vaidya, pp 2-8.
4. ओमित्युक्त्वा गणेशोऽपि बभूव किल लेखकः ।
ग्रन्थग्रन्थिं तदा चक्रे मुनिर्गूढं कुतूहलात् ॥
अष्टौ श्लोकसहस्राणि अष्टौ श्लोकशतानि च ॥ (*ibid* 1, 115-7)
[illegible] (Mahābhārata by S. S. Sukthankar Vol. I. Part I p. lxxxi )

பொருந்தாது என ஸி. வி. வைத்யர் கூறியுள்ளார். மஹாபாரதத்து ஆதிபர்வாவின் இரண்டாம அத்யாயத்தில் பின்வருமாறு கூறப்பட்டுளது. பர்வாக்கள் 18; கிலமாகிய ஹரிவம்சம் அதன் பின்னர் உள்ளது; 18 பர்வாக்களில் உள்ள அத்யாயங்கள் 1923; ச்லோகங்கள் 84836; ஹரிவம்சத்தில் ச்லோகங்கள் 12000. ஆனால் தற்போதுள்ள பம்பாய்ப்பதிப்பில 18 பர்வாக்களில் 2111 அத்யாயங்களும் 83246 ச்லோகங்களும ஹரிவம்சத்தில 12580 ச்லோகங்களும் உள்ளன; கும்பகோணப்பதிப்பில் 18 பர்வாக்களில 2314 அத்யாயங்களும 96565 ச்லோகங்களும் உள்ளன. இவற்றை நோக்கின் ஆங்காங்கு பல ச்லோகங்கள் பின்னர்ச் சேர்க்கப்பட்டன என்பது திண்ணம்.[1]

| | அத்தியாயங்கள் | | | ச்லோகங்கள் | |
|---|---|---|---|---|---|
| பாரதப்படி. | பம்பாய் | கும்பகோணம் | பாரதப்படி. | பம்பாய | கும்பகோணம |
| ஆதிபர்வம் | | | | | |
| 227 | 234 | 260 | 8884 | 8466 | 10999 |
| ஸபாபர்வம் | | | | | |
| 78 | 81 | 103 | 2511 | 2709 | 4360 |
| வனபர்வம் | | | | | |
| 296 | 315 | 315 | 11664 | 11854 | 12178 |
| விராடபர்வம் | | | | | |
| 67 | 72 | 78 | 2067 | 2327 | 3494 |
| உத்யோகபர்வம் | | | | | |
| 186 | 196 | 196 | 6698 | 6618 | 6735 |
| பீஷ்மபர்வம் | | | | | |
| 117 | 122 | 122 | 5884 | 5817 | 5918 |
| த்ரோணபர்வம் | | | | | |
| 170 | 202 | 203 | 8909 | 9593 | 10014 |
| கர்ணபர்வம் | | | | | |
| 69 | 96 | 101 | 4964 | 4987 | 4985 |
| சல்யபர்வம் | | | | | |
| 59 | 65 | 66 | 3220 | 3608 | 3590 |

இந்நூல இதிஹாஸம்[1] எனவும், காஷ்ணவேதம்[2] எனவும், ஐந்தாம வேதம்[3] எனவும், தர்மசாஸ்த்ரம், அர்த்தசாஸ்த்ரம், மோக்ஷ சாஸ்த்ரம்[4] எனவும் கூறப்படும். இதனை ஸ்ம்ருதி[5] என்பர

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சௌப்திகபர்வம் | 18 | 18 | 18 | 870 | 810 | 815 |
| ஸ்த்ரீபர்வம் | 27 | 27 | 27 | 775 | 826 | 807 |
| சாந்திபர்வம் | 329 | 366 | 375 | 14732 | 13732 | 15150 |
| அநுசாஸநபர்வம் | 146 | 169 | 274 | 8000 | 7839 | 11242 |
| அச்வமேதபர்வம் | 103 | 92 | 118 | 3320 | 2852 | 4530 |
| ஆச்ரமவாஸிபர்வம் | 42 | 39 | 41 | 1506 | 1085 | 1098 |
| மௌஸலபர்வம் | 8 | 8 | 9 | 320 | 287 | 301 |
| மஹாப்ரஸ்தானிகபர்வம் | 3 | 3 | 3 | 320 | 109 | 111 |
| ஸ்வர்க்காரோஹணபர்வம் | 5 | 6 | 5 | 209 | 307 | 232 |
| ஹரிவம்சம் | | | | 12000 | 12590 | |
| | 1923 | 2111 | 2314 | 96836 | 95826 | 96565 |

1 इतिहासमिमं चक्रे पुण्यं सत्यवतीसुतः (म. भा. आदि 1, 38)

2 कार्ष्णं वेदमिमं विद्वान् श्रावयित्वार्थमश्नुते (ibid 62, 20)

3 इतिहासपुराणं पञ्चमम् [छा. उप. 7]

4 धर्मशास्त्रमिदं पुण्यमर्थशास्त्रमिदं परम् ।
मोक्षशास्त्रमिदं प्रोक्तं व्यासेनामितबुद्धिना ॥ [म. भा. आदि 62, 25]

5 सूत्रभाष्ये आनन्दमयाधिकरणे

சஙகராசாரயா இந நூல முதல சலோகததில ஜயம [1] எனற சொலலாற குறிககபபடடுளளது ய எனபது ஒனறையும ஜ எனபது எடடையும கணிதநூலகளில குறிககினறமையால ஜயம எனபது பதினெடடைக குறககும •இலக்ஷணையால 18 பாவஙகொணட பாரததைதக குறிககும எனபா பெரியோா அவவாறுபின ஹரிவமசம இநநூலுககுப புறததது ஆகும அககாரணமபறறயே அத னக கிலம எனக குறிககப படடது எனனலாப. ஆனல ஹரிவமசததை மஹாபாரதத தின இறுதிபபகுதியாக ஆநநதவாததனா கூறியுளளாா [3]

பாரதம மஹாபாரதம எனற சொறகளின நிருகதம — பாரதம எனற சொறகுப பாரதயுததததைபபறறிய காவயம எனப பொருளாகும எனபது பாணினியின ஸூததாததாலும [4] அதன விருததியாலும [5] அறியபபடும இபபொருளே [6] மஹாபாரதத

1 नारायण नमस्कृत्य नर चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं चैव ततो जयमुदीरयेत् ॥

2. खिलेषु हरिवशश्च [म भा आदि 2 380]

3 अय च निगूढरमणीयोऽर्थो महाभारतावसाने हरिवशवर्णनेन समाप्ति विदधता तेनैव कविवेधसा कृष्णद्वैपायनेन सम्यक् स्फुटीकृत (ध्वन्यालोके उद्योते 4)

4 सङ्ग्रामे प्रयोजनयोद्धृभ्य [पा अ IV 2 56]

5 भरता योद्धारो अस्य

6 व्यास उवाच—
कुरूणा पाण्डवाना च यथा भेदोऽभवत्पुरा ।
तदस्मै सर्वमाचक्ष्व यन्मत्त श्रुतवानसि ॥
गुरोर्वचनमाज्ञाय स तु विप्रर्षभस्तदा ।
आचचक्षे तत सर्वमितिहास पुरातनम् ॥

துள்ள சில ச்லோகங்கள் வலியுறுத்தும். பரதர்களின் பெரிய பிறப்பைக் கூறுதலின் மஹாபாரதம் என்றும்,[1] கேட்போர்க்கு நீண்ட ஆயுள் முதலியவற்றைத் தருதலின் சிறந்தும் நான்கு வேதங்களுக்குமேல் கனமாயிருந்தமையின் பெரிதாயும் இருத்தலின் மஹாபாரதம் என்றும் கொள்ளப்பட்டது எனக் கூறும் சில ச்லோகங்கள்.[2] பெரியதும் பாரதப்போரைப் பற்றியதும் ஆகிய நூல் என்றே பொருள் கொள்ளல் தகும்.

மஹாபாரதத்துள்ள ரஸங்கள். — இந்நூலைக் காவ்யமாகக் கொள்ளின் சண்டு அங்கிச்சுவை சாந்தம் என ஆநந்தவர்த்தனர் கூறினர்.[3] இது மஹாபாரதத்தில் அடிக்கடி கூறப்படும் ஒரு

स ते तस्मै सदस्येभ्यः पार्थिवेभ्यश्च सर्वशः।
भेदं सर्वविनाशं च कुरुपाण्डवयोस्तदा ॥
[म. भा. आदि 60, 22-24]

1. भरताना महज्जन्म महाभारतमुच्यते [म. भा. आदि. 1, 38]

2. यश्चैनं शृणुयान्नित्यमार्षं श्रद्धासमन्वितः ।
स दीर्घमायुः कीर्तिं च स्वर्गतिं चाप्नुयान्नरः ॥
एकतश्चतुरो वेदा भारतं चैतदेकतः ।
पुरा किल सुरैः सर्वैः समेत्य तुलया धृतम् ॥
चतुर्भ्यः स रहस्येभ्यो वेदेभ्यो ह्यधिकं यदा ।
तदा प्रभृति लोकेऽस्मिन्महाभारतमुच्यते ॥
.. .. .. .. ..
महत्त्वाद्भारवत्त्वाच्च महाभारतमुच्यते ।
(म. भा. आदि. 1, 296-300)

3. महाभारतेऽपि शास्त्रकाव्यरूपच्छायान्वयिनि वृष्णिपाण्डवविरसावसानवैमनस्यदायिनीं समाप्तिमुपनिबध्नता महामुनिना वैराग्यजननतात्पर्यं प्राधान्येन स्वप्रबन्धस्य दर्शयता मोक्षलक्षणः पुरुषार्थः शान्तो रसश्च मुख्यतया विवक्षाविषयत्वेन सूचितः [ध्वन्यालोके उद्योते 4)

சலோகத்தாலும்,[1] ஒரு சலோகத்துள்ள[2] 'ச' என்ற சொல்லாலும் அறியப்படும் எனவும் கூறுவர்.

ஒவ்வொரு பர்வத்திலும் சாந்தச்சுவை நன்கு உணரப்படுகின்றது. ஆதிபர்வத்தில்[3] 107-ஆவது அத்தியாயத்தில் பீஷ்மரது பிரதிஞ்ஞையையும் 115-ஆவது அத்யாயத்தில் தருதராஷ்டிரர் முதலியோரின் பிறப்பினையும், 124 ஆவது அத்தியாயத்தில் சாபம் பெற்ற பாண்டுவின் தபஸ்ஸினையும், 170-ஆவது அத்தியாயத்தில் ஏகசக்ரபுரியில் பாண்டவர்கள் பிக்ஷை எடுப்பதையும் வர்ணிக்கும்போது சாந்தச்சுவை உணரப்படுகின்றது. அவ்வாறே ஸபாபர்வத்தில் 89–90-ஆம் அத்தியாயங்களில் அரசர் ஸபையில் த்ரௌபதியின் வஸ்த்ராபஹாரத்தையும், வன பர்வத்தில் 12-ஆம் அத்தியாயத்தில் கிருஷ்ணனிடம் த்ரௌபதியின் முறையிடுகையையும், 29-ஆம் அத்தியாயத்தில் தர்மபுத்ரர் த்ரௌபதிக்குச் சாந்தியைப்பற்றிக் கூறுகையையும், 49–76 ஆம் அத்தியாயங்களில் நளனின் உபாக்யானத்தையும் வர்ணிக்கும்போது சாந்தச்சுவையை உணரலாம். விராடபர்வத்தில் 2–14-ஆம் அத்தியாயங்களில் தர்மர் முதலியோர் மாறுவேடம் பூண்டு விராடனின் ஸபைக்குச் செல்லுகையையும், 25 ஆம் அத்தியாயத்தில் த்ரௌபதி கீசகனை இரவில் தன்னிடம் வரச் சொல்லுகையையும் படிக்கும்போது சாந்தச்சுவையை உணராமல் இருத்தல் அரிது. உத்யோகபர்வத்தில் 71-73-ஆம் அத்தியாயங்களில் தர்மபுத்திரரும் பீமனும் ஸந்திசெய்விக்கு

1 स्वय चोद्गीर्ण . लोकनाथेन,
यथा यथा विपर्येति लोकतन्त्रमसारवत् ।
तथा तथा विरागोऽत्र जायते नात्र सशय ॥
[म भा शा. 174 4]
इत्यादि बहुश कथयता । [ध्वन्यालोके उद्योते 4]

2 भगवान्वासुदेवश्च कीर्त्यतेऽत्र सनातन [म. भा आदि 1, 282)

3 இங்குக் குறிக்கப்பெறுவது கும்பகோணப்பதிப்பு ஆகும்

மாறு கிருஷ்ணனை வேண்டுதலையும் பீஷ்மபர்வத்தில் பகவத் கீதையின் ஸாராம்சமாக அஹங்காரமின்மையை அறிவித்தலையும், த்ரோணபர்வத்தில் 52 65 ஆம் அத்தியாயங்களில் அபிமன்யு வதத்தால் வருந்திய தர்மருக்கு வ்யாஸர் சமத்தைப்பற்றிக் கூறுதலையும், கர்ணபர்வத்தில் 74 ஆம் அத்தியாயத்தில் அர்ஜுனனால் அதிக்ஷேபிக்கப்பட்ட தர்மர் காட்டிற்குப் போவதாகக் கூறுகையையும், சல்யபர்வத்தில் 3 ஆம் அத்தியாயத்தில் கிருபரின் உபதேசத்தையும், ஸௌப்திகபர்வத்தில் 10 ஆம் அத்தியாயத்தில் தர்மபுத்திரரது அழுகையையும், ஸ்திரீபர்வத்தில் 1 8 ஆம் அத்தியாயங்களில் ஸஞ்சயரும் வ்யாஸரும் திருதராஷ்டிரரின் சோகத்தைப்போக்கச் சமாதானஞ் சொல்லுகையையும், சாந்தி முதலிய பர்வங்களில் மோக்ஷதர்மம், அநுகீதை, குந்தியின் உபதேசம், திருதராஷ்டரர் முதலியோரின் தவஞ் செய்கை முதலியவற்றையும் ஹரிவம்சத்தில் விருஷ்ணிகளின் அழிவையும் வருணிக்குமிடத்துச் சாந்தச்சுவை மிளிர்கின்றது

அச்சுவைக்கு அங்கமாக மிகுதியாய் வீரமும், சிறுபான்மை சிருங்காரம், சிருங்காராபாஸம், பயானகம், கருணம், அத்புதம் முதலியனவும் உணர்ப்படுகின்றன போரைப்பற்றக் கூறும் பர்வங்கள் அனைத்திலும் வீரம் உணர்ப்படுவது வெளிப்படை ஆதிபர்வத்தில் 108 ஆம் அத்தியாயத்தில் பீஷ்மர் காசிராஜனது பெண்களைக் கொண்டுவருகையையும் வனபர்வத்தில் 39 ஆம் அத்தியாயத்தில் கிராதார்ஜுனப்போரையும் விராடபர்வத்தில் அர்ஜுனன் கர்ணன் முதலியோரை வெல்லுகையையும் வருணிக்கும்போதும் வீரச்சுவை உணர்ப்படும் ஸௌப்திகபர்வத்தில் 1 9 ஆம் அத்தியாயங்களில் வீராபாஸம் உணர்ப்படுகின்றது

ஆதிபர்வத்தில் 164 ஆம் அத்தியாயத்தில் இடும்பி பீமனை மணக்க விரும்புகையை வருணிக்கும்போது சிருங்காரச்சுவையும், வனபர்வத்தில் 44 ஆம் அத்தியாயத்தில் ஊர்வசி அர்ஜுனனை விரும்பும்போதும், விராடபர்வத்தில் 16 ஆம் அத்தியாயத்தில் கீசகன் திரௌபதியை விரும்பும்போதும் சிருங்காராபாஸமும் உணர்ப்படுகின்றன

வனபர்வத்தில் 244 ஆம் அத்யாயத்தில் சித்ரரதன் தூக்கிப் போகும்போது துரியோதனனின் கதறுகையால் பயானகம் உணரப்படுகின்றது.

கர்ணபர்வத்தில் 33-37 அத்யாயங்களில் சல்யன் கர்ணனை அதிக்ஷேபஞ் செய்வதிலும், கர்ணன் அதற்கு விடையளிப்பதிலும் ஒருவாறு அத்புதம் உணரப்படுகின்றது என்னலாம்.

ஆதிபர்வம் 134 ஆம் அத்யாயத்தில் பாண்டுவின் இறந்ததிலும் ஸ்த்ரீபர்வம் 16-24 ஆம் அத்யாயங்களில் இறந்த போர் வீரர்களுடைய மனைவிகளின் விலாபத்திலும் கருணம் உணரப்படுகின்றது.

இவற்றைக்கொண்டே ஆநந்தவர்த்தனர் இந்நூலில் சாந்தரஸம் அங்கியாகவும் ஏனைய ரஸங்கள் அதற்கு உபஜீவியாகவும் உணரப்படுகின்றன என்றனர்.[1]

மஹாபாரதத்தின் காலம் — ஆச்வலாயனக்ருஹ்யஸூத்ரத்தில் ஸுமந்து, ஜைமினி, வைசம்பாயனர், பைலர் இவர்களை மஹாபாரததர்மாசார்யர் எனக் கூறப்பட்டுளது.[2] மஹாபாரதம்[3], யுதிஷ்டிரர்[4], விதுரர்[5] இச்சொற்களைப்பற்றிப் பாணினி தமது நூலிற் கூறியுள்ளார். இவற்றிலிருந்து மஹாபாரதம் என்ற நூல் பாணினி ஆச்வலாயனர் இவருடைய காலத்திற்கு

1. शान्तो रस रसान्तरै . . . तदुपसर्जनत्वेनानुगम्यमानोऽङ्गित्वेन विवक्षाविषय इति महाभारततात्पर्यं सुव्यक्तमेवावभासते
(ध्वन्यालोके उद्योते. 4)

2 आश्वलायनगृह्यसूत्रे (III, 3, 5)

3 महान् . . . भारत . प्रवृद्धेषु (पा. अ 6, 2, 38)

4 गवियुधिभ्यां स्थिरः (ibid 8, 4, 95)

5 विदिभिदिच्छिदेः कुरच् (3 2, 162)

முன்னர் இருந்தது என்பது இன்னும். ஆனால் பல பிரதிகளில் ஒன்றுக்கொன்று உள்ள மாறுபாட்டினைக் கவனித்தால், பல காலங்களில் அந்நூலிலுள்ள பாடம் மாறுபட்டிருத்தல் வேண்டும் என்பது அறியப்படும். ஆகலின் பாணினியால் குறிக்கப்படும் மஹாபாரதம் இதிஹாஸமாயும் காவ்யமாயும் கொள்ளப்பட்ட நூலா, அன்றித் தர்மசாஸ்த்ரம், அர்த்த-சாஸ்த்ரம், மோக்ஷசாஸ்த்ரம் எனக் கொள்ளப்பட்ட நூலா என்பதை அறிவதற்குச் சான்று இல்லை.

வியாஸர் பாரதப்போர் நடந்தபோது இருந்தார் என அந்நூலால் அறியப்படுகின்றமையாலும், பாரதப்போர் சுமார் கி. மு. 3100 கலியுகத்தொடக்கத்தில் நடந்ததாகக் கூறப்பட்டமையாலும், வ்யாஸர் எழுதிய பாரதம் அக்காலத்தது எனக் கொள்ளலாம் என்று ஸி வீ. வைத்யா கூறுவர். ஆனால் வ்யாஸர் இயற்றியது 24000 ச்லோகங்கள் எனவும், ஸௌதி பலவற்றைச் சேர்த்து லக்ஷம் ச்லோகங்கள் ஆக்கினர் எனவும் அவரது கொள்கை.

கி. பி. 5, 6 நூற்றாண்டில் எழுதப்பட்ட சாஸனங்களில் அநுசாஸனபர்வத்திலுள்ள தானதர்மத்தைப்பற்றிய ச்லோகங்கள் குறிக்கப்பட்டமையாலும், ஒரு சாஸனத்தில் மஹாபாரதம் லக்ஷம் ச்லோகங்களை உடையது எனக் கூறப்பட்டமையாலும், பழைய காலத்தில் உத்ஸவங்களில் மஹாபாரதம் படிக்கப்பட்டது எனக் கூறப்பட்டமையாலும், கி. பி. 600 ஆண்டில் கம்போடியாவில் எழுதப்பட்ட சாஸனத்தில் மஹாபாரதம் அந்நாட்டில் படிக்கப்பட்டது எனக் குறிக்கப்பட்டமையாலும்[1], பௌத்தரின் ஜாதகங்களில் மஹாபாரதம் குறிக்கப்பட்டமையாலும் லக்ஷம் க்ரந்தம் கொண்ட மஹாபாரதம் கி. மு. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னரும் கி. மு. இரண்டாம் நூற

1 A History of Indian Literature by M Winternitz Vol. I p. 464.

ருண்டிற்கு முன்னரும் இருந்திருத்தல் வேண்டும் என விண்டர்
நீட்ஸ் கூறுவர்.[1] கி. பி. முதல் நூற்றாண்டில் இருந்த ஒரு
கிரேக்க அறிஞர் லக்ஷம் கிரந்தங்கொண்ட மஹாபாரதத்தைக்
குறிக்கின்றமையால், இந்நூல் பதஞ்சலிக்கு முன்னர் அசோக
ரது காலத்திலே இப்போதுள்ளவாறு இருந்திருத்தல்வேண்டும்
என ஸி. வி. வைத்யா கூறுவர். கி. மு. இரண்டாம் நூற்றாண்டு
நூலாகிய தமிழ்ப்புறநானூற்றில் 55 ஆம் பாட்டில் சிவபிரான்
ஒருகணைகொண்டு மூவெயிலை உடற்றியதாகக் கூறப்பட்டதும்
மஹாபாரதம் கர்ணபர்வத்தில் 27 ஆம் அத்யாயத்திற் கூறப்
பட்டதும் ஒரேவிதமாக உள.[2] பரிபாடலிற் கூறப்பட்ட
முருகனின் பிறப்பும் மஹாபாரதம் அநுசாஸனபர்வத்து 130,
133 ஆம் அத்யாயங்களிற் கூறப்பட்ட முருகனின் பிறப்பும்
ஒரேவிதமாய் உள. பெரும்பாணாற்றுப்படை 402-4 அடி
களிலும் மஹாபாரதம் வனபர்வம் 273-ஆம் அத்தியாயத்

1 ibid pp 474-5

2 ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண்கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கு மொருகண் போல (புறம் 55)

अथाधिज्य धनु कृत्वा शर्वे सन्धाय त शरम् ।
युक्त्वा पाशुपतास्त्रेण त्रिपुर समचिन्तयत् ॥
तस्मिन् स्थिते ततो राजन् रुद्रे सञ्जातकार्मुके ।
पुराणि तेन कालेन जग्मुरेकत्वमाशु वै ॥
एकभावेन त देवास्त्रिपुरं परमेश्वर ।
निजघ्ने मागुरगण नेत्रदेवो महेश्वर ॥
मन पशुनिमापथा देवगोभाम्नर्थपय (म भा कर्ण 27)

43-45 ஆம் ச்லோகங்களிலும் கூறப்பட்ட பிரம்மனின் பிறப்பு ஒரே வகையாய் உளது[1]

மஹாபாரதத்தைப்பற்றிய மேனாட்டாரது கொள்கைகள் :— மஹாபாரதத்துள்ள இராமோபாக்யானத்திற்கும் இராமாயணத்திலுள்ள கதைக்கும் சில மாறுபாடுகள் இருக்கின்றமையாலும், மஹாபாரதத்துள் வால்மீகியின் பெயர் குறிக்கப்படாமையாலும், மஹாபாரதம் இராமாயணத்திற்கு முன்னர் எழுதப்பட்டது என வேபர் கூறினர்.[2]

மாக்டானல் கூறுவது :—யஜுர்வேதத்தில் கௌரவ பாஞ்சாலர் இருவரும் நண்பராகக் குறிக்கப்பட்டனர். காடக ப்ராம்மணத்தில வைசித்ரவீர்ய - த்ருதராஷ்டிரர் நன்கு எல்லோராலும் அறிந்தவராகக் கூறப்பட்டது. ஆகையால் மஹாபாரதக்கதை கௌரவபாஞ்சாலரின் பழைய சண்டையை அடிப்படையாகக் கொண்டது. அச்சண்டை கி. மு. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் இருந்திருத்தல் தகாது. அவ்விருவர்க்கும் உள்ள சண்டையைப் பற்றிய பாட்டுக்களை ஒருவர் தொகுத்திருத்தல் கூடும். தொடக்கத்தில் ந்யாயமான வழியில் உள்ள கௌரவர்கள் பாண்டவர்களாலும் கிருஷ்ணனுடைய

1. நீன்ற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி. (பெரும் 402-4)
आपो नारास्तत्तनव इत्यपां नाम शुश्रुमः ।
अयनं तेन चैवास्ते तेन नारायणः स्मृतः ॥
प्रध्यानसमकालं तु प्रजाहेतोः सनातन. ।
ध्यातमात्रे तु भगवान्नाम्ना पद्म. समुत्थितः ॥
ततश्चतुर्मुखो ब्रह्मा नाभिपद्माद्विनिःसृतः ।
[म. भा. वन. 273, 43-45]

2. Indian Wisdom by M. Williams pp 366-7.

தரோஹபுததியாலும சணடையில அழிககபபடடிருததல் வேணடும பினனாப பாணடவாகளது செயகைகளையெலலாம நனனெறியில உளளனவாக 24000 சலோககஙகளில வருணித திருததல கூடும[1]

மஹாபா.தம ஒரே கவியால இயறறபபடாதது எனறும, பதிபபிததோரைக கவி என பயஙகி, அவரெலலோரையும வயாஸா எனற ஒரு பெயரால வழஙகினா எனறும ஹாபகினஸ கூறுவா[2] தறபோதுளள இராமாயணததில மஹாபாரதத தைபபறறியும, தறபோதுளள மஹாபாரததில இராமாயணத தைபபறறியும செயதிகள இருபபதால, இராமாயணததின பிறபதிபபில மஹாபாரதசசெயதிகளும, மஹாபாரததின பிறபதிப்பில வாலமீகிராமாயணசசெயதிகளும கூறியிருததல வேணடும எனறும, இரணடு நூலகளிலும பல ஒறறுமைப பகுதிகள உளளன எனறும அவரே நனகு விளககிக கூறியுள ளார.

மஹாபாரததின உரைகாராகள —மஹாபாரததிறகு உரை எழுதியவா பலா தேவபோதா, விமலபோதா, அாஜுன மிசரா, ரதனகாபபா, ஸாவஞஞநாராயணா இவாகளைத தனககு முனனருளள உரைகாராகளாக நீலகணடா தனது உரையிற குறிபபிடுகினறனா. இபபோது அறியபபட்ட உரைகளுள தேவபோதா உரையே பழையதும சிறநததும ஆகும எனபா[3] அதறகுப பெயா ஞானதீபிகை[4] அாஜுனமிசராின உரை ஆாததீபிகை, அது பெருமபாலும ஞானதீபிகையைப பின பறறியது நீலகணடாின உரை பாரதபாவதீபம[5] அவா

1. A History of Sanskrit Literature by A A Mac Donell pp 284, 285
2 The Great Epic of India by W Hopkins p 58
3 Mahabharata by Sukthankar Vol I Part I p LXX
4 ज्ञानदीपिका   5 भारतभावदीपम्

17 ஆம் நூற்றாண்டில் மகாராஷ்டிரதேசத்திற் பிறந்த, காகிபில இவ்வுரையை எழுதினர்[1] பஞ்சநாராயணர், வாதிராஜர் முதலிய ஏனையோரும் உரை எழுதியிருக்கின்றனர். சிலர் உரை எழுதாது மஹாபாரததாத்பரியநிர்ணயம்[2] என த்வைதாசாரியராகிய மத்வாசாரியரும் (12 நூ. கி பி) பாரததாத்பரிய நிர்ணயம்[3] என வாதிராஜரும் (கி. பி. 1500) நூல்கள் எழுதியுள்ளனர்



1 Mahabharata by Sukthankar Vol I Part I p. LXV

2 महाभारततात्पर्यनिर्णय

3. भारततात्पर्यनिर्णय

## அத்தியாயம் 50

---

### இராமாயணம் மஹாபாரதம் இவற்றிலிருந்து அறியப்பட்ட சில செய்திகள்

மனைவி கணவனைத் தெய்வமாக நினைத்தனள். சுகம் துக்கம் இரண்டிலும் அவனைப் பின்பற்றி நின்றனள். கற்புடைமனைவியர்க்குத துன்பம் ஒருவன் செயின், அவன் குடும்பத்தோடு அழிவான். கற்புடைமகளிர எவ்வகைத்துனபத்திலும் தைர்யத்தை இழக்கவில்லை. இல்லறத்தில் இருப்பவன் எவ்வளவு மேன்மையுற்றவனாக இருப்பினும், சில காலம் தன்னைச் சேர்ந்தாரின் நன்மையைக் குறிதது பொய் சொல்லுதலையும் மறைந்து கொல்லுதலையும் ஏற்றுக்கொள்ள நேரும். உடன் பிறந்தாரகள் வெவ்வேறு கொள்கையைக கொண்டிருந்தாலும், மூத்தவனுக்கு அடங்கியும் அவனைப் போற்றியும், அவனுக்காக எவ்வகைப்பட்ட துன்பத்தையும் பொறுத்துக்கொண்டும் இருந்தனர். ஒரு ஆசிரியரின்கீழ்ப் படிதத மாணவர்கள் தமருள் சிறந்தானை நோக்கிப் பொறாமையுற்று அவனை அழிக்கத் தம்மால் இயன்றமட்டும் முயன்றனா. ஆசிரியன் உண்மையாக எல்லோரிடத்திலும் ஒரே மனப்பான்மையுற்றவனாக இருந்தாலும சிறந்த மாணவரிடத்தில் பக்ஷபாதங் கொண்டவன் என ஏனையோரால் குற்றங் கூறப்பட்டான். தன் மக்களைக் காட்டிலும் தன் உடன்பிறந்தாரின் மக்கள் மேன்மையுற்று இருந்தால், அதனை அவர் ஸஹிப்பது இல்லை. தம்மக்கள் தம் சொல்லைக் கேட்காவிடினும், அவரிடதது அவாக்கு அன்பு குன்றுவதில்லை.

க்ஷத்திரியாகளின் நிலை மேன்மையுற்று இருந்தது. பகைவன் சோர்வுற்று இருந்தாலும், படையின்றி இருந்தாலும் அவனை அடிப்பது இல்லை. தங்களுடைய அன்பாகளே எதிர்ப்பக்கதில்

சண்டையிடினும், அப்போது அவரைப் பகைவராகவே கருதிப் போா புரிந்தது வியககததக்கது. தேசததின் நன்மையைக கருதியே அவா உழைததனா. ஆயினும் மக்கட்டன்மையால் அவரிடம் சில குற்றங்களும் இருநதன. உடல்வலிமை காரண மாகப் பிறா நனமதி கூறினும், அதனை அவா கேடகவில்லை. ஆயினும் வைதிகமததைப் போற்றுவதில் அவா பெரும் பானமையும் கண்ணுங் கருததுமாக இருந்தனா. தன தகப் பனது நன்மையைக் கருதித தான் ஆயுள் முழுவதும் பிரம்ம சாரியாய் நின்ற பீஷ்மரின் விரததன்மை போறறததக்கது. தன் தகப்பனது சொல்லை உண்மையாககக காட்டிற்குச் சென்ற இராமனின் செயலும் போற்றத்தக்கது. தனக்கு வந்த இராஜ யததைத் தன் தமையனுக்கு அர்ப்பணஞ் செய்த பரதனின் த்யாகம் அதனினும் போற்றததக்கது. கடவுளின் அருளால் நன்கு வாழலாம் என நினைததனா. ஒவ்வொருவரும் தமது அறிவாலே தம்மை நல்வழிப்படுததிக் கொள்ளவேண்டுமே யன்றி பிறரது ஆணையால் அன்று என நன்கு அறியப் படுகின்றது.

## அத்தியாயம் 51

---

### கி. பி. முதல் ஐந்து நூற்றாண்டில் வடமொழிநூல்நிலை

கி. பி. முதல் நூற்றாண்டு முதல் ஐந்தாம் நூற்றாண்டு முடிய இந்தியாவில் வடமொழிவளர்ச்சி குன்றி இருந்தது என மோக்ஷமூலர் கூறுவர்.[1] அதற்கு அவர் கூறும் காரணங்கள் ஆவன :—

(1) கி. பி. ஆறாம் நூற்றாண்டில் இருந்த விக்கிரமாதித்திய வரசனின் சபையில் தன்வந்தரி, க்ஷபணகன், அமரஸிம்மன், வேதாளசங்குபட்டன், கடகர்ப்பரன், காளிதாஸன், வராஹமிஹிரர், வரருசி என்ற நவரத்தினங்கள் இருந்தனர்.[2] (2) அந்த விக்கிரமாதித்தியன் சகர்களை வெருட்டி, அதன் ஞாபகத்திற்காக விக்கிரமசகத்தை ஏற்படுத்தினன் (3) அவருள் ஒருவரான காளிதாஸனால் மேகஸந்தேசகாவ்யத்தில் திங்நாகன்[3] குறிப்பாக உணர்த்தப்பட்டனன். (4) காளிதாஸன் ஜாமித்ரம்[4] என்ற சொல்லை வழங்குதலால், அவன் கிரேகஜ்யோதிஷம் அறிந்

1 A History of Sanskrit Literature by Mac Donell pp 318-325

2 धन्वन्तरि क्षपणकोऽमरसिंहशङ्कुवेतालभट्टघटकर्परकालिदासा ।
ख्यातो वराहमिहिरो नृपते सभाया रत्नानि वै वररुचिर्नव विक्रमस्य ॥
(ज्योतिर्विदाभरणे)

ஜைனர்கள் கட்டியது இக்கூற்று என்பர் S P பண்டிட்

3. दिङ्नाग —दिङ्नागाना पथि परिहरन् स्थूलहस्तावलेपान्
(मेघदूते I, 14)

4 अथौषधीनामधिपस्य वृद्धौ
तिथौ च जामित्रगुणान्वितायाम् [कुमार VII, 1]

இருத்தல்வேண்டும். ஆகலின் அவன் ஆர்யபட்டரது[1] காலத்திற்குப் (கி.பி. 499) பிற்பட்டவனாய் இருக்கவேண்டும்.

ஆறாம் நூற்றாண்டில் விக்ரமாதித்யன் எனப் பெயர் கொண்ட ஓர் அரசனும் இல்லை எனச் சாஸனங்களாலும் மற்ற பிரமாணங்களாலும் அறியப்பட்டமையாலும், நவரத்னங்கள் ஒரே காலத்தவர் அல்லர் என நிரூபிக்கப்பட்டமையாலும் முதற்காரணம் நில்லாது. விக்ரமசகம் கி.பி. 544-ல் உண்டாகவில்லை என்பதும், அதற்கு முன்னர் அஃதே மாலவசகம் எனப் பெயர் பெற்றிருந்தது என்பதும் கி.பி. 800 இல் அதற்கு விக்ரமசகம் எனப் பெயர் வந்தது என்பதும் ப்ளீட்[2] என்ற அறிஞரால் சாஸனங்களிலிருந்து நிரூபிக்கப்பட்டன. இந்தியாவின் மேற்குப்பகுதியிலிருந்து சகர்கள் ஆறாம் நூற்றாண்டில் வெருட்டப்பட்டனர் என்பதும் பொருந்தாது; ஏனென்றால் ஐந்தாம் நூற்றாண்டிலேயே அப்பகுதி குப்தரின் ஆட்சிக்கு வந்துவிட்டது. அன்றியும் அங்கிருந்து ஹூணர்கள் யசோவர்மன் விஷ்ணுவர்த்தனனால் வெருட்டப்பட்டனர்.

காளிதாஸன் திங்நாகனைக் குறிப்பாகக் குறிக்கின்றான் என்ற காரணமும் நில்லாது:—ஏனெனில் பௌத்ததிங்நாகனைக் குறிக்கின்றானா வேறொரு திங்நாகனைக் குறிக்கின்றானா என்று நிர்ணயிக்கப் பிரமாணமில்லை; அன்றியும் திங்நாகன் வஸுபந்துவின்[3] மாணாக்கனா இல்லையா என்பதும் ஐயம்; அன்றியும் வஸுபந்துவின் நூல்கள் கி.பி. 404இல் சீனபாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருத்தலால், திங்நாகர் ஆறாம் நூற்றாண்டினர் என்பதும் பொருந்தாது. ஆர்யபட்டருக்கு முன்பே க்ரேக் ஜ்யோதிஷத்தைப் பின்பற்றி ரோமகஸித்தாந்தம்[4] (கி.மு. 150–கி.பி. 150) எழுதப்பட்டமையால் நான்காம் காரணமும் நில்லாது.

1. आर्यभट्ट.
2. Fleet
3. वसुबन्धुः
4. रोमकसिद्धान्त.

வளர்ச்சியின்மைக்குக் கூறிய காரணங்கள் பொருந்தா எனக் கூறிய பின்னர், வளர்ச்சி இருந்தது என்பதற்குப் பின் வரும் பிரமாணங்கள் கூறப்படும்: நாஸிக் கர்நா முதலிய இடங்களிலிருந்து கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் இருந்த சாஸனங்கள் கிடைக்கப் பெற்றிருக்கின்றன. நான்காம் நூற்றுண்டில் ஹரிஷேணனுல்[1] இயற்றப்பட்ட ப்ரசஸ்திகளில் கத்யம்[2] பத்யம்[3] இரண்டும் உள்ளன. தசபுரியிலுள்ள சூரியன் கோயிலைப் பற்றி ஐந்தாம் நூற்றுண்டில் வத்ஸபட்டியால்[4] காவ்யம் எழுதப்பட்டது எனச் சாஸனங்களால் அறியப்படுகின்றது. சகர்களால் பாரதவர்ஷத்தில் கால்பங்கிற்குக் குறைவாகவே வ்யாபிக்கப்பட்டதேயன்றி அது முழுவதும வியாபிக்கப்படவில்லை என்பதும், அச்சகாகள், இங்கு வந்தபின்னர், வைதிகமதத்தைக் கொண்டனர் என்பதும் அறியப்படுகின்றன.

ஆகலின் மோக்ஷமூலா கொண்ட கொள்கை பொருந்தாது.

---

1. हरिषेण:
2. गद्यम्
3. पद्यम्
4. वत्सभट्टि:

## அத்தியாயம் 52

### ஒரே கவியின் நூல்களின் பௌர்வாபர்யவிவேசனம்

ஒரு கவி பல நூல்கள் இயற்றி யிருப்பின் அவற்றின் பௌர்வாபர்யத்தை அறிதற்கு அக்கவியின் மனோநிலை ஒரு சிறந்த காரணம் ஆகும். தன் படிப்பு முடிந்தவுடன் நூல் எழுதத் தொடங்கிய கவியின் மனோநிலைக்கும் சிறிது காலம் கழிந்த பின்னர் இருக்கும் மனோநிலைக்கும் மாறுபாடு இருக்கும். அக்கவியே வயது முதிர்ந்த நிலையில் இருக்கும்பொழுது அவனது மனோநிலை வேறு வகையாகவே இருக்கும். அவ்வாறு இளவயதில் ஒருவனுக்கு உள்ள மனோநிலைக்கும், நடுவயதில் உள்ள மனோநிலைக்கும், வயது முதிர்ந்த காலத்துள்ள மனோநிலைக்கும் மாறுபாடுகள் உள. இவற்றை மனத்தில் வைத்துக் கொண்டு ஒரே கவி எழுதிய நூல்களுள் எது முன்னர் எழுதப் பட்டது, எது பின்னர் எழுதப்பட்டது என நிர்ணயிக்கலாம்.

உதாரணமாகப் படிப்புமுடிந்தவுடன் ஒருவன் நூல் எழுத ஆரம்பித்தால், தான் படித்த படிப்பை யெல்லாம் அங்கு வாரியிறைத்தே கூறிவிடுவான். "நான் நினைத்ததே தவ றற்றது; என்னுடைய நூலைப் போற்றாதார் அறியாதார்" எனக் கூறுவன். உதாரணமாகப் பவபூதி மாலதீமாதவத்தில் வேதம், உபநிஷத், யோகம், ஸாங்க்யம் இவற்றின் அறிவு நாடகம் இயற்றுவதற்குச் சிறந்த ஸாதனமாகுமா! இதினின்றிச் சிறந்த சொல்வழக்கு, பொருட்செறிவுள்ள சொல் இவை யல்லவோ சிறந்த ஸாதனம் ஆகும் என்கின்றார்.[1] இதன்

1. यद्वेदाध्ययनं तथोपनिषदां सांख्यस्य योगस्य च
ज्ञानं तत्कथनेन किं न हि ततः कश्चिद्गुणो नाटके ।
यत्प्रौढित्वमुदारता च वचसां यच्चार्थतो गौरवं
तच्चेदस्ति ततस्तदेव गमकं पाण्डित्यवैदग्ध्ययोः ॥
(मालती. 1. 7)

அவா இவையெலலாம படிததவா எனக காணபிததனா அதன பினனா "தன நூலைப பலா போறறுது இகழகினறா அவாகள அறியாதாா. தன நூலைப போறற யாரோ ஒருவன எஙகேயாவது எககாலததாவது பிறபபான எனகினறனா[1]

வேறு சிலா "தன நூலைப போறறுதான மூடன எனறும போறறுகிறவா சிறநதவா" எனறும வாசசியமாகவே கூறு வதும உணடு உதாரணமாகக காளிதாஸன மாளவிகாகனி மிதரததில "பழையதெலலாம சிறநதனவலல, புதியதெலலாம இழிநததுமலல, பெரியோா ஆராயநதே உணமையை அறி கினறனா, மூடன பிறா கூறுவதையே கொளகினறான்[2]

அனறியும தன நூலின சிறபபைத தானே நேரிற கூறுவா உதாரணமாக மாலதீமாதவததில பவபூதி தனனுடைய நூலில சுவைகள செறிநதும, நாயிகை நாயகன இவருடைய செயல கள அனபுமிகுதியால மனோஹரமாயும தனனை புயாததிக

1 ये नाम केचिदिह न प्रथयन्त्यवज्ञा
जानन्ति ते किमपि तान्प्रति नैष यत्न ।
उत्पत्स्यते मम तु कोऽपि समानधर्मा
कालोह्यय निरवधिर्विपुला च पृथ्वी ॥ (ibid 1 6)

இங்குத் தன்னைக் குறிக்கும்போது न என்ப பஹுவசனத்திற் கூறுவதும், தற்போது தனக்குச் சமானமானவன் ஒருவனு மில்லை என்று குறிப்பும், பிற்காலத்தும் யாரோ ஒருவன் தனக்குச் சமமாகப் பிறப்பான் என்பதைக் குறிக்க कोऽपि என்றவிடத்து ஏகவசனப்பிரயோகமும் கவனிக்கத்தகுரியன

2 पुराणमित्येन न साधु सर्व
न चापि काव्य नवमित्यवद्यम् ।
सन्त परीक्ष्यान्यतरद्भजन्ते
मूढ परप्रत्ययनेयबुद्धि ॥ (मालवि 1)

கூறியும் பிறரை இகழ்ந்து கூறியும், கதைகளைச் சித்திரமாயும் சொல்லழகுக்குச் சிறந்தும் விளங்குகின்றன என்றனர்.[1]

சிலவிடத்து மறைபொருளாய்த் தன் நூலின் சிறப்பைக் கூறுவர்.[2]

மேலும் மூச்சு விடாமல் படிக்குமாறு ஸமாஸம் நிறைந்தனவும் பெரிய விருத்தங்களில் இணைக்கப்பட்டனவுமான செய்யுள்களைக் கூறுவர். அவ்வாறு உள்ள சுலோகங்களைப் பலவற்றை மாலதீமாதவத்திற் காணலாம். முதல் சுலோகமே அவ்வாறு உள்ளது.[3] இளைஞராய் இருப்பவர் எல்லாக் கலைகளிலும் சிறந்தவளாய் ஒத்த அன்பு உடையவளாய் உள்ள மாது தனக்கு மனைவி ஆகவேண்டும் எனவும் அவளைத் தானே

1 भूम्ना रसाना गहना प्रयोगा
साहार्दहृद्यानि विचेष्टितानि ।
औद्धत्यमायोजितकामसूत्र
चित्रा कथा वाचि विदग्धता च ॥ (मालती 1, 4)

2 अहो उपन्यासशुद्धि (ibid III)
अन्य एवाक्षुण्णो कथाप्रकार (ibid III)
अस्ति वा कुतश्चिदेवभूतमद्भुत विचित्ररमणीयोज्ज्वल प्रकरणम्? (ibid X)
सर्वतोमुखं वैदग्ध्यमभयस्य सुभाषितरत्नकोश (ibid VIII)

3 सानन्द नन्दिहस्ताहतमुरजरवाहूतकौमारबर्हि-
त्रासान्नासाग्ररन्ध्र विशति फणिपतौ भोगसङ्कोचभाजि ।
गण्डोड्डीनालिमालामुखरितककुभस्ताण्डवे शूलपाणे-
र्वैनायक्यश्चिर वो वदनविधुतय पान्तु चीत्कारवत्य ॥
இங்கு [illegible], [illegible] சுலோகங்களை
[illegible]

நேரில் கண்டு தெளிந்து மணக்சவேண்டும் எனவும் நினைத்தலும் இயற்கையாதலின், முதலில் ஸம்போகச்ருங்காரம் கொண்டதும் காந்தாவமணங்கொண்டதுமான நூலைத் தாம் இயற்றுவர். தமக்குத் தகுந்த மனையாள் கிடைக்காவிடின் இணையற்றவனை மணப்பதைக் காட்டிலும் தாம் இறப்போம் என்பர். உதாரண மாகக் காளிதாஸன் மாளவிகாக்னிமித்ரத்தில் மாளவிகைக்கு ந்ருத்யததில் உள்ள புலமையைப் பார்க்க அக்னிமித்ரனையே நியாயாதிபதியாகச் செய்தலும், 'ஒதத அன்பு அற்றவரின் சம் போகமும் சிறந்ததன்று; ஒத்த அன்பு உள்ளவா சம்போக மின்றி இறப்பினும் சிறந்தது[1] எனக் கூறுதலும் நோக்கத் தக்கது. . ஒத்த அன்புடைய மனையாள் கிடைப்பதும், ஒத்த அன்புடைய கணவன் கிடைததலும், தவஞ் செய்து கடவுளின் அருளாலே யன்றி வேறொன்றாலும் நிகழாது என்பதைக் குறிக்க, அவரே குமாரஸம்பவததில் சிவபிரானையும் பார்வதி யையும் தவஞ் செய்வதாக வருணிததல் அறியத் தக்கது மாதவனும் மாலதியும் பிராம்மணாகளாய் இருப்பினும் ஒத்த அன்பு காரணங் கொண்டே காந்தர்வமுறையால் மணக்குமாறு பவபூதியும் செய்கின்றனா. அன்றியும் இளமைப பருவததில் பழைய நூல்களைப் பின்பற்றாது புதிய நூலாய் எழுதவேண்டும் என்ற எண்ணம் வரலாம். மாளவிகாக்னிமித்ரம் மாலதீமாதவம் இவற்றின் வஸ்துப்ராசீன கதையை ஒட்டியது அன்று.

தனக்கு முன்னர்ப் பெரியோர் கூறிய சொற்றொடர்களை அப்படியே வழங்குவது உண்டு. காளிதாஸன் மாளவிகாக்னி

1. अनातुरोत्कण्ठितयोः प्रसिध्यता
समागमेनापि रतिर्न मां प्रति ।
परस्परप्राप्तिनिराशयोर्वरं
शरीरनाशोऽपि समानुरागयोः ॥

மித்ரத்திற் பலவிடத்தில் அவ்வாறு வழங்குகின்றன[1]. அக்கருத்துக்களைத் தம் சொற்றொடர்களாற் கூறுதலும் உண்டு. இதனைப் பவபூதியின் மாலதீமாதவத்திற் காணலாம். கணவனுக்கும் மனைவிக்கும் ஒத்த அன்பு வேண்டும் எனக் காளிதாஸன் பலவிடங்களிற் கூறுவதைப் பவபூதியுங் கூறினர்[2]. நாயகியின் மேல் பட்ட காற்று தன் மேல் பட்டிடும் என நாயகன் கூறல் மேகஸந்தேசத்திற்போல மாலதீமாதவத்திலுங் காணலாம்[3].

1 छेदो दंशस्य दाहो वा क्षतेर्वा रक्तमोक्षणम् ।
एतानि दष्टमात्राणामायुष्याः प्रतिपत्तयः ॥ (मालविका IV, 4)
अनुरागोऽनुरागेण परीक्षितव्य इति सुजनवचनम् (ibid III)
भ्रमरसम्बाधोऽस्मीति किं न वसन्तावतारसर्वस्वं नवचूतप्रसवोऽवतंसनीय (ibid III)
चन्दनं खलु मया पादुकापदेशेन दूषितम् (ibid V)

2 इतरेतरानुरागो हि दारकर्मणि परार्ध्यं मङ्गलम् [मालती II]
अनातुरोत्कण्ठितयोः प्रसिध्यता
समागमेनापि रतिर्न मां प्रति ।
परस्परप्राप्तिनिराशयोर्वरं
शरीरनाशोऽपि समानुरागयोः [मालविका III]

3 उन्मीलन्मुकुलकरालकुन्दकोश
प्रश्च्योतद्घनमकरन्दगन्धबन्धो ।
तामीषत्प्रचलविलोचनां नताङ्गीम्
आलिङ्गन्पवन मम स्पृशाङ्गमङ्गम् ॥ (मालती I 38)
अथवा तदङ्गपरिवाससीतल
मयि किञ्चिदर्पय मनाग्दृशे गतिः । (ibid IX 43

மாலதீமாதவத்துள் ஒன்பதாம் அங்கத்தில் மேகத்தை மாதவன் தூதாக அனுப்புவதும், மாலதியைப் பிராணிகள் கண்டனவா எனப் புலம்புதலும் மேகஸந்தேசத்தில் மேகத்தை யக்ஷன் தூதாக அனுப்புவதையும்,[1] விக்ரமோர்வசீயத்தில் புரூரவஸ் ஊர்வசியைப் பிராணிகள் கண்டனவா எனப் புலம்புதலையும்[2] ஒத்திருக்கின்றன. மாலதியை எவ்வகையிலும் ஒத்த

भित्त्वा सद्य किसलयपुटान्देवदारुद्रुमाणा
ये तत्क्षीरस्रुतिसुरभयो दक्षिणेन प्रवृत्ता ।
आलिङ्ग्यन्ते गुणवति मया ते तुषाराद्रिवाता
पूर्वं स्पृष्टं यदि किल भवेदङ्गमेभिस्तवेति ॥ [मेघ II 46]

1 दैवात्पश्येर्जगति विचरन्तिच्छया मत्प्रिया चेत्
आश्वास्यादौ तदनु कथयेर्माधवीयामवस्थाम् ।
आशातन्तुर्न च कथयतात्यन्तमुच्छेदनीय
प्राणत्राण कथमपि करोत्यायताक्ष्या स एक ॥ [माल्ती IX 26]
तस्मिन्काले जलद यदि सा लब्धनिद्रासुखा स्यात्
अन्वास्यैना स्तनितविमुखो याममात्र सहस्व ।
माभूदस्या प्रणयिनि मयि स्वप्नलब्धे कथञ्चित्
सद्य कण्ठच्युतभुजलताग्रन्थि गाढोपगूढम् ॥ (मेघ II 36)

2 भवद्भि सर्वाङ्गप्रकृतिरमणीया कुलवधू
इहस्थैर्दृष्टा वा विदितमथवास्या किमभवत् ।
वयोवस्था तस्या शृणुत सुहृदो यत्र मदन
प्रगल्भव्यापारश्चरति हृदि मुग्धश्च वपुषि ॥ (माल्ती IX 29)
अपि दृष्टवानसि मम प्रिया वने
कथयामि ते तदुपलक्षण शृणु ।
पृथुलोचना सहचरी यथैव ते
सुभगा तथैव खलु सापि वीक्ष्यते ॥ [विक्रम IV 59]

பொருள்களை ஒரே இடத்தில் காணாதது இவை என மாதவன் கூறுதல் யக்ஷனுடைய கூற்றை ஒத்திருக்கின்றது. இரண்டாம் அங்கத்தில் மாலதியின் வர்ணனையும், சாகுந்தலத்து மூன்றாம் அங்கத்தில் சகுந்தலையின் வர்ணனையும் ஒத்திருக்கின்றன.[2] பல இடங்களில் பவபூதி பாணனை ஒத்திருத்தலும்[3] நோக்கத்தக்கது

1 नवेषु लोध्रप्रसवेषु कान्तिर्दृशः कुरङ्गेषु गतं गजेषु ।
लतासु नम्रत्वमिति प्रमथ्य व्यक्तं विभक्ता विपिने प्रिया मे ॥
(मालती. IX 27)

श्यामास्वङ्गं चकितहरिणीप्रेक्षणे दृष्टिपातं
वक्त्रच्छायां शशिनि शिखिनां बर्हभारेषु केशान् ।
उत्पश्यामि प्रतनुषु नदीवीचिषु भ्रूविलासान्
हन्तैकस्मिन्क्वचिदपि न ते चण्डि सादृश्यमस्ति ॥ (मेघ. II 43)

2 परिपाण्डुपाण्डुलकपोलमाननं
दधती मनोहरतरत्वमागता ।
रमणीयतन्वनि जने परिभ्रमन्
ललितो विधिर्विनयने हि मन्मथ ॥ [मालती II 4]

निकामं क्षामाङ्गी सरसकदलीगर्भसुभगा
कलाशेषा मूर्तिः शशिन इव नेत्रोत्सवकरी ।
अवस्थामापन्ना मदनदहनोद्दाहविधुरा
इयं नः कल्याणी रमयति मनः कम्पयति च ॥ (ibid II, 3)

क्षामक्षामकपोलमाननमुरः काठिन्यमुक्तस्तनं
मध्यः क्लान्ततरः प्रकामविनतावंसौ छविः पाण्डुरा ।
शोच्या च प्रियदर्शना च मदनक्लिष्टेयमालक्ष्यते
पत्राणामिव शोषणेन मरुता स्पृष्टा लता माधवी ॥ (शाकु. III 8)

3 कल्याणानन्तरवनता हि कल्याणमप्युपरिष्टाद्भवति [मालती IV]
भवन् भावमनुबध्नाति (कादम्बरी)

இவற்றை யெல்லாம் நோக்கின், காளிதாஸனுடைய நூல்களில் குமாரஸம்பவம், மாளவிகாக்னிமித்ரம் இவ்விரண்டும், பவபூதியின் நூல்களுள் மாலதீமாதவமும் முன்னர் இயற்றப் பட்டன என்று கூறலாம்.

மனைவியும் கணவனும் இல்லறவாழ்க்கையில் ஈடுபட்டு இருக்கும்போது, சிறிது காலம் இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திருக்க நேரிடும். அப்போது கணவன் மனைவியையும், மனைவி கணவனையும் நினைத்துக்கொண்டே இருத்தல் கூடும். பிரிவுத்துயரத்தால் யாரையேனும் தூதாக அனுப்பலாம். இவ்வாறு மேகஸந்தேசத்தில யக்ஷன் மேகத்தைத் தூதாக அனுப்புவதைக் காணலாம்.

சில வேளை கணவன் தன்னை விட்டு வேறு ஒரு கணிகையை விரும்புதலைக் கண்டு, மனைவி அவனது விருப்பத்திற்கு இணங்கவும் இணங்கலாம் இதனை விக்ரமோர்வசீயத்திற் காணலாம்[1]

இவ்விரண்டு வகையுள் முன்னாகக் கூறப்பட்டதில் மனைவிக்கும் கணவனுக்கும் ஒத்த அன்பு இருக்கும்; பின்னாக் கூறப்பட்டதில் தலைவனுக்குக் கணிகையிடத்தில் எவ்வளவு அன்பு இருக்குமோ, அவ்வளவு அன்பு அவட்கு அவனிடம் இராது.

இக்காரணம் பற்றி மேகஸந்தேசமும் விக்ரமோர்வசீயமும் காளிதாஸன் நடுவயதிற் செய்யப்பட்ட நூல்கள் ஆகலாம்.

சிலர் ஸம்போகசிருங்காரம் விப்ரலம்பசிருங்காரம் இவற்றில் ஈடுபட்ட பின்னர் வீரச்சுவையில் ஈடுபட ஆரம்பிக்கலாம்[2]. தானே கட்டிய கதைகளை விட்டு முன்னோர் கொண்ட

1. अद्य प्रभृति आर्यपुत्रो यां स्त्रियं कामयते, या आर्यपुत्रसमागमप्रणयिनी तया मयाप्रतिबन्धेन वर्तितव्यम् [विक्रम. III]

2. *Cf.* महावीरचरितम्

கதைகளைப் பின்பற்றலாம். தன் நூலுக்குச் சிறப்பு தன்னுடைய ஸாமர்த்தியத்தால் மாத்திரம் இல்லை; முன்னோரின் கதைகளைப் பின்பற்றினமையாலும், சபையோரின் புலமையாலும் எனவும் எண்ணலாம்[1]. இவற்றைக்கொண்டு மஹாவீரசரிதம் பவபூதியின் நடுவயதில் இயற்றப்பட்டிருக்கலாம்.

சிறந்த வயதாய பின்னர் மக்கட்பேறு ஒருவனுக்கு இல்லையேல் அதனையே மனைவியும் கணவனும் நினைத்தல் கூடும்[2]. அதற்காக வ்ரதங்களை கைப்பற்றுதல் கூடும்.[3] மகனில்லாது இறப்

1. *Cf.* वश्यवाचः कवेर्वाक्यं सा च रामाश्रया कथा ।
   लब्धश्च वाक्यनिष्यन्दनिर्णेयनिकषो जनः ॥ (महावीर. I 4)
2. नूनं मत्तः परं वंश्याः पिण्डविच्छेददर्शिनः ।
   न प्रकामभुजः श्राद्धे स्वधासङ्ग्रहतत्पराः ॥ (रघु. I 66)
   लोकान्तरसुखं पुण्यं तपोदानसमुद्भवम् ।
   सन्तति शुद्धवंश्या हि परत्रेह च शर्मणे ॥ (*ibid* 1, 69)
   अहो दुष्यन्तस्य संशयमारूढाः पिण्डभाजः । कुतः
   अस्मात्परं बत यथाश्रुति सम्भृतानि
   को नः कुले निवपनानि नियच्छतीति ।
   नूनं प्रसूतिविकलेन मया प्रसिक्तं
   धौताश्रुशेषमुदकं पितरः पिबन्ति ॥ [शाकु. VI, 25]
3. ஒரு பேரரசன் தன் மனைவியோடு பசுவிற்கு உபசாரம் செய்ததை ரகுவம்சத்திற் காணலாம்.

*Cf.* आस्वादवद्भिः कवलैस्तृणानां कण्डूयनैर्दंशनिवारणैश्च ।
अव्याहतैः स्वैरगतैः स तस्याः सम्राट् समाराधनतत्परोऽभूत् (रघु. II 5)
प्रदक्षिणीकृत्य पयस्विनीं तां सुदक्षिणा साक्षतपात्रहस्ता ।
प्रणम्य चानर्च विशालमस्याः शृङ्गान्तरं द्वारमिवार्थसिद्धेः ॥ (*ibid* II 21)

பின் நல்ல உலகத்திற் செல்ல முடியாதே என்று வருந்தக் கூடும். இல்லறத்தில் பற்றற்று இருத்தலுங் கூடும்.[1] மகன் பிறந்த பிறகு, அவனுக்குத் தக்க வயது வந்த பின்னர், தாம் வானப்ரஸ்தர்கள் ஆதல் கூடும்;[2] கணவன் ஸந்நியாஸியும் ஆகலாம்;[3] தான் ஜீவன்முக்தனாய்த் தனக்குப் பின்னர் பிறப்பு வேண்டாம் எனக் கடவுளை வேண்டுதலுங் கூடும்[4] ஸபையோர்கள் ஒவ்வொருவரையும் வித்வானாக நினைத்தலுங் கூடும்[5] அப்போது மூச்சுவிடாமற் சொல்லப்படும் பெரிய விருத்தத்தில்

1. जुगोपात्मानमत्रस्तो भेजे धर्ममनातुरः ।
अगृध्नुराददे सोऽर्थमसक्त सुखमन्वभूत् ॥ (ibid I 21)

2 अथ स विषयव्यावृत्तात्मा यथाविधि सूनवे
नृपतिककुदं दत्त्वा यूने सितातपवारणम् ।
मुनिवनतरुच्छाया देव्या तया सह शिश्रिये
गलितवयसामिक्ष्वाकूणामिदं हि कुलव्रतम् ॥ [रघु. 3, 70]

3. अथ वीक्ष्य रघु' प्रतिष्ठितं
प्रकृतिष्वात्मजमात्मवत्तया ।
विषयेषु विनाशधर्मसु
त्रिदिवस्थेष्वपि निस्पृहोऽभवत् ॥ (ibid VIII 10)

4. ममापि च क्षपयतु नीललोहित.
पुनर्भवं परिगतशक्तिरात्मभूः ॥ शाकु. (VII 35)

5, आ परितोषाद्विदुषा
न साधु मन्ये प्रयोगविज्ञानम् ।
बलवदपि शिक्षितानाम्
आत्मन्यप्रत्ययं चेतः ॥ (ibid I 2)

இணைக்கப்பட்ட ச்லோகங்களையும் நீண்ட ஸமாஸங்களைக் கொண்ட சொற்களையும் வழங்க இடன் இராது.[1]

இவற்றைக்கொண்டு ரகுவம்சமும் சாகுந்தளமும் காளிதாஸன் இயற்றிய நூல்களுள் இறுதிநூல்களாய் இருத்தல் வேண்டும் எனக் கூறலாம்.[2]

உத்தரராமசரிதத்தில் அங்கிச்சுவை கருணமாதலாலும் முதற்செய்யுளில் முன்னுள்ள கவிகளுக்கு வணக்கம் கூறும் முறையாலும்[3] இறுதிச்செய்யுளில் புதாகள் தன் நூலை கௌரவப் படுத்தட்டும் எனக் கூறினமையாலும்,[4] நீண்ட ஸமாஸங்கள்

1. ரகுவம்சமே காளிதாஸனின் முதல காவ்யம் என டாக்டர் குன்ஹன்ராஜா கூறுவது எனக்கு உடன்பாடு இன்று (Annals of Oriental Research Vol. VI 1941—2.)
2. *Cf* प्रसन्नादिक्पासुविविक्तवातम् [कुमा. 1, 33]
   दिशः प्रसेदुर्मरुतो ववुः सुखाः [रघु. 3, 14]
3. इदं कविभ्यः पूर्वेभ्यो नमोवाकं प्रशास्महे ।
   विन्देम देवता वाचममृतामात्मनः कलाम् ॥ [उत्तम. I, 1]
4. तामेता परिभावयन्त्वभिनयैर्विन्यस्तरूपा बुधाः ।
   शब्दब्रह्मविदः कवेः परिणतां प्राज्ञस्य वाणीमिमाम् ॥
   (*ibid* VII 20)
   பவபூதிக்கு மாலதீமாதவம் இயற்றும்போது உள்ள ஞானத்தவம் உத்தரராமசரிதம் எழுதும்போது இல்லை எனினும், அவரது அஹங்காரம் முற்றிலும் மறைந்தது எனக் கூறுதற்கு இடமில்லை. அதற்குச் சான்று இச்செய்யுளில் உள்ள शब्दब्रह्मविदः, परिणता, प्राज्ञस्य என்ற சொற்களாகும். பிரும்மத்தை அறிந்தேன் எனக் கூறுகிறவன் பிரும்மத்தை அறியவில்லை என்றும் பிரும்மத்தை அறியேன் எனக் கூறுகின்றவ பிரும்மத்தை அறிந்திருத்தல் கூடும் என்றும் அறிந்துகொள்ளவேண்டும் என கேனோபநிஷத் கூறுதல் நோக்கத்தக்கது.

# அத்தியாயம் 53

## பத்யகாவ்யங்கள்

காவ்யம் என்ற சொல் ச்ரவ்யகாவ்யத்தைக் குறிக்கும் என்பதும், இராமாயணமே ஆதிகாவ்யம் என்பதும், மஹாபாரதம் அதற்குப் பின்னருள்ள காவ்யம் என்பதும் முன்னரே கூறப்பட்டன.

மஹாபாஷ்யத்திற் குறிக்கப்பட்ட வாருசம் காவ்யம்[2] என்பது பத்யமயமானதா, கத்யமயமானதா என அறிதற்கு இயலவில்லை. இரண்டாம் நூற்றாண்டில் ஜூனா நாஸிக் என்ற இடத்தில் எழுதப்பட்ட சாஸனங்களும் கத்யமாய் இருக்கின்றன எனக் கூறுவர். கி. பி. 473இல் தசபுரத்தில் தேவாலயத்தின் ப்ரதிஷ்டாகாலத்தில் அதன் ப்ரசம்ஸையாக வத்ஸபட்டி ஒரு காவ்யம் இயற்றினார் என்றும், அதைப் படித்தால் அவர் காளிதாஸனுடைய நூல்களைப் படித்தவர் என்பது அறியப்படும் என்றும் கூறுவர்.

தற்போது காணப்படும் பத்யகாவ்யங்களுள் முதன்மையான காளிதாஸன் இயற்றிய ருதுஸம்ஹாரம்[3] குமாரஸம்பவம்[4], மேகஸந்தேசம்[5], ரகுவம்சம்[6] இவையா, அல்லது அச்வகோஷன

1 அத்யாயம் 47

2 वाररुच काव्यम्

3 ऋतुसंहारम्

ருதுஸம்ஹாரம் ஏனைய மூன்றையும் இயற்றிய காளிதாஸனே இயற்றினனா இல்லையா என்பது பின்னர் ஆராயப்படும்

4 कुमारसम्भवम्

5 मेघसन्देशम्

6 रघुवंशम्

இயற்றிய ஸௌந்தராநந்தம்[1] புத்தசரிதம்[2] இவையா என்பதில் கொள்கை வேறுபாடுகள் உள.

மாக்டானலும் அவரைப் பின்பற்றியவரும் அச்வகோஷனே முற்பட்டவன் எனக் கூறுவா. அதற்குக காரணங் கள் ஆவன:—

(1) அச்வகோஷன் கனிஷ்கனின் ஸமகாலீனன் எனப் பௌததாகளுள் ப்ரஸிததி உளது[3]. (2) அவன் இயற்றிய புததசரிதம கி. பி. 414—421 காலததில் சீனபாஷையில் மொழி பெயாக்கப்பட்டது. ஆகலின் கி. பி. 400கது முறபட்டே அவன் இருந்திருத்தல் கூடும். (3) காளிதாஸன் கி. பி. 400க்குப் பிற்பட்டவன் எனக் கூறுதல் இயலாதே யன்றி, அதற்கு முற் பட்டவன் எனக் கூறச் சான்று ஒன்றும் இல்லை.

காளிதாஸனே முறபட்டவன எனக் கூறுவோா கொண்ட காரணங்கள் ஆவன:—

(1) காளிதாஸன் தன் கருததுக்களை அச்வகோஷனிட மிருந்து கொள்ளுதல் தகாது (2) காளிதாஸன் கி. மு. 56இல் இருந்தான் என்பதற்குச் சான்றுகள் உள.

அவ்விருவருள் யாா முன்னிருப்பினும் யாா பின்னிருப்பினும், அவவிருவருடைய நூல்களினும் ஒப்புமைப்பகுதிகள் மிக உள[4]

1. सौन्दरानन्दम्
2. बुद्धचरितम्
3. புத்தன் நாட்டைவிட்டு வெளியே செல்லும்போதும், அவன் [illegible] மதிலை [illegible] பட்டணத்தில் நுழையும்போதும் [illegible] பெண்டிர்செயல்கள் ஒத்துள்ளன.
4. वातायनेभ्यस्तु विनिःसृतानि परस्परोपासितकुण्डलानि ।
स्त्रीणां विरेजुर्मुखपङ्कजानि सक्तानि हर्म्येष्विव पङ्कजानि ॥ [बुद्ध.]

காளிதாஸனின் காலம்.—கி. மு. 56இல் சகாகளை வெருட்டிச் சகத்தை ஸ்தாபித்த ஒரு விக்ரமாதித்யனுடைய ஸபையில காளிதாஸன் இருந்தான். ஆகலின் கி. மு. முதல் நூற்றாண்டே அவனுடைய காலம் என்பர் ஸா வில்லியம் ஜோன்ஸ்[1]. அவரது கொள்கையைக் கொண்டு வேறு சில காரணங்களையுங் கூறுவாரிலர்[2]. அவையாவன :—

(1) மஹாபாஷ்யத்தில் புஷ்யமித்ரஸபை எனப் பதஞ்சலி கூறியிருக்கின்றனர்; மாளவிகாக்நிமித்ரத்து நாயகனாகிய அக்னிமித்ரன் அவனது புதல்வனாகக் கூறப்பட்டிருக்கிறான்.

(2) ரகுவம்சம் குமாரஸம்பவம் இவற்றுள் வருணிக்கப்பட்டிருக்கும் யவனா பாரஸீகா காம்போஜா முதலியோருடைய செயல்கள் கி மு. முதல் நூற்றாண்டின ஆகும்.

(3) ஜானகீஹரணத்தை நன்கு படித்தால் அதனுடைய ஆசிரியரான குமாரதாஸன காளிதாஸனுக்குப் பிறபட்டவன் என்பது நன்கு விளங்கும்.

तासां मुखैरासवगन्धगर्भैर्व्याप्तान्तराः सान्द्रकुतूहलानाम् ।
विलोलनेत्रभ्रमरैर्गवाक्षाः सहस्रपत्राभरणा इवासन् ॥ (रघु.)

மேகதூதத்திலும் புத்தசரிதத்திலும் ஒருவகைப்பட்ட கருத்து உளது.

कस्यैकान्तं सुखमुपनतं दुःखमेकान्ततो वा
नीचैर्गच्छत्युपरि च दशा चक्रनेमिक्रमेण ॥ [मेघ.]

द्वन्द्वानि सर्वस्य यतः प्रसक्तान्यलाभलाभप्रभृतीनि लोके ।
अतोऽपि नैकान्तसुखोऽस्ति कश्चिन्नैकान्तदुःखः पुरुषः पृथिव्याम्
[बुद्ध.]

1. Sir William Jones
2. Kalidasa-His Period, Personality, Poetry by K. S. Ramaswami Sastri pp. 38—80

(4) காளிதாஸன் கிரேக்ஜ்யோதிச்சாஸ்த்திரத்தை ஆர்யபடயத்திலிருந்துதான் கற்றிருக்கவேண்டும் என்ற நியதி இல்லை. கிரேக்கருக்கு ஆசிரியரான எகிப்த்தேசியரிடமிருந்தும் அறிந்திருத்தல் கூடும்.

(5) தற்போது காணப்படும் பாஸநாடகங்கள் கி. பி 300ஐச் சேர்ந்தவாகலின், பாஸருக்குப் பிற்பட்ட காளிதாஸன் கி. பி. 400இல் இருந்திருக்கவேண்டும் என்ற டாக்டர் கீத்தின் கொள்கை பொருந்தாது; ஏனெனில் தற்போது காணப்படும் பாஸநாடகங்கள் காளிதாஸனாற் குறிக்கப்பட்ட பாஸனின் நாடகங்கள் இல்லை. இந்த பாஸன் பிற்காலத்தில் கேரள தேசத்தில் இருந்த ஒரு கவி ஆதல் வேண்டும்.

அக்னிமித்ரன் காலத்தே காளிதாஸன் இருந்திருக்க வேண்டும் என்பதற்கு டாக்டர் குன்ஹன்ராஜா மூன்று காரணங்கள் கூறுவர் அவையாவன :—[1]

(1) மாளவிகாக்னிமித்ரத்தின் பரதவாக்கியத்தில் அக்னிமித்திரனைக் குறித்தல்.

(2) புஷ்யமித்ரனின் யாகத்திற்காக வஸுமித்ரன் குதிரைக்குப் பின்னர் சென்றதாக மாளவிகாக்னிமித்ரத்தில் கூறப்பட்டதும் திலீபனின் யாகத்திற்காகக் குதிரைக்குப் பின்னர் ரகு சென்றதாக ரகுவம்சத்திற் கூறப்பட்டதும் ஒத்திருத்தல்.

(3) விதிசையை இராஜதானியாக மேகசந்தேசத்திற் கூறியிருத்தல்.

காளிதாஸனின் காலம் கி பி. 400க்குப் பின்னர் இல்லை என மாக்டானெல் கூறுவர்.

நான்காம் நூற்றாண்டில் ஹரிஷேணன் இயற்றிய ப்ரசஸ்தியும் வீரஸேனன் இயற்றிய சாஸனமும் காளிதாஸனின் ரீதியை

1. Anuals of Oriental Research Vol II Part I.

ஒட்டி உள்ளன. கி. பி. 473இல் வத்ஸபட்டி எழுதிய காவ்யத்தைப் படிப்பின், அவன் காளிதாஸனுடைய நூல்களைப் படித்திருக்கவேண்டும் என அறிதல் கூடும்.

காளிதாஸன் கி. பி. ஆறும் நூற்றாண்டில் இருந்தான் என்ற மோக்ஷமூலர்கொள்கை சாஸனச்சான்றால் தவறென உணர்த்தப்பட்டது என முன்னரே கூறப்பட்டது. அவரது கொள்கையை டாக்டர் பண்டார்க்கார், பதாகா[2], டாக்டர் பௌ தாஜி[3] முதலியோர் பின்பற்றுவர். அவனது காலம் கி. பி. 250 என லாஸ்ஸெனும்[4], கி. பி. 470 என வில்போர்ட்[5], வில்ஸன்[6] முதலியோரும், கி. பி. 11 நூ. என பெண்ட்லியும்[7] கொள்ளுகின்றனர். ஸ்கந்தன்[8], குமாரன்[9], என்ற பெயர்கள் ரகுவம்சத்தில் வழங்கப்பட்டமையாலும், அவை ஸ்கந்தகுப்தன் குமாரகுப்தன் இவரைக் குறிப்பால் உணர்த்துதல் தகுமாதலானும், சாலிகோப்ய:[10] என்ற சொல்லும குப்தர்களைக் குறிப்பால் உணர்த்துமாகலானும், காளிதாஸன் குப்தர்களுடைய காலத்தில் இருந்தவன் எனக் கீத் முதலியோர் கொள்வர். அச்செய்யுள்களில் அச்சொற்கள் அவ்வாறு குறிப்பால் உணர்த்துகின்றன எனக் கொள்ளுதல் அந்நூல் போகும் நடைக்கு ஒத்ததன்று.

1. Dr. Bhandarkar.
2. K. B. Pathaka.
3. Dr. Bhau Daji.
4. Prof. Lassen.
5. Col. Wilford.
6. H. H. Wilson.
7. Bentley.
8. स्कन्दस्य मातुः पयसां रसज्ञः (रघु. II 36)
9 हरेः कुमारोऽपि कुमारविक्रमः ... (*ibid* III 55)
10. आकुमारकथोद्घातं शालिगोप्यो जगुर्यशः (*ibid* IV 20)



Skt—45

காளிதாஸனின் இருப்பிடம் — காளிதாஸன் எங்குப் பிறந்து வளர்ந்தான் எனவும் எங்குத் தன் ஆயுளைக் கழித்தான் எனவும் வெளிப்படையாய் ஒருவரும் கூறவில்லை அவன் சிறப்பாக வருணித்த இடங்களிலிருந்து அவற்றைச் சிலர் ஊகிக்கின்றனர்

ரகுவம்சத்தில் வருணிக்கப்பட்ட வஸிஷ்டாசிரமமும்,[1] ஸிந்துநதியும்,[2] காச்மீரத்தில் உள்ள குமுதநாகன்[3], நீலமதம் என்ற நூலில் நாகர்களுள் ஒருவனாகக் கூறப்பட்டனன் சாகுந்தளத்தில் வருணிக்கப்பட்ட ஸோமதீர்த்தம்,[4] அப்ஸரஸ தீர்த்தம்[5] இவையெல்லாம் அங்கே உள்ளன குமாரஸம்பவத்திற் கூறப்பட்ட கௌரீசிகரமும்,[6] அங்குக் குறிக்கப்பட்ட ஔபதாஷி

1 अथाभ्यर्च्य विधातारं प्रयतौ पुत्रकाम्यया ।
तौ दम्पती वसिष्ठस्य गुरोर्जग्मतुराश्रमम् ॥ (रघु I 35)
गङ्गाप्रपातान्तविरूढशष्पं गौरीगुरोर्गह्वरमाविवेश । (ibid II 26)
अमुं पुरः पश्यसि देवदारुं पुत्रीकृतोऽसौ वृषभध्वजेन ॥
(ibid III 36)

2 विनीताध्वश्रमास्तस्य सिन्धुतीरविचेष्टनैः । (ibid IV 67)
(सिन्धुर्नाम काश्मीरदेशेषु कश्चिन्नदविशेषः मल्लिनाथ )

3 नागेन लौल्यात्कुमुदेन नूनमुपात्तमन्तर्हृदवासिना तत् ।
(ibid XVI 76)

4 इदानीमेव दुहितरं शकुन्तलामतिथिसत्काराय नियुज्य दैवमस्याः
प्रतिकूलं शमयितुं सोमतीर्थं गतः [शाकु I]

5 स्त्रीसंस्थानं चाप्सरस्तीर्थमाराद्उत्क्षिप्यैनां ज्योतिरेकं जगाम ।
(ibid V)

6 प्रजासु पश्चात्प्रथितं तदाख्यया जगाम गौरीशिखरं शिखण्डिमत् ।
[कुमा V 7]

தீர்த்தமும்[1] ஆங்கே உள. மேகஸந்தேசத்தில் உஜ்ஜயினி விரிவாய் வருணிக்கப்படுகின்றது. ஆகலின் காளிதாஸன் பிறந்து வளர்ந்தவிடம் காச்மீரம் என்பதும், அவனுடைய ஆயுளைக் கழித்தவிடம் உஜ்ஜயினி என்பதும் அறியப்படும்.[2]

காளிதாஸனைப்பற்றிய செய்திகள்.—ஒப்பற்ற ப்ரதிபையைக் கொண்டு வடமொழியில் நூல்கள் இயற்றிய மஹாகவிகள் இருவரோ மூவரோ ஐவரோ அறுவரோ தான் எனவும் அவருள் காளிதாஸன் முதல் ஆனவன் எனவும்[3] ஆனந்தவர்த்தனர் கூறுவர். தான் ஒன்றைக் கண்டு அநுபவிக்குமாறு, தன் நூலைப்படித்துப் பிறரும் அவ்வாறே அநுபவிக்குமாறு செய்யக் கூடிய நூலியற்றுஞ்சக்தியே ப்ரதிபை என்னலாம். அதனைக் கொண்டே குமாரஸம்பவத்தில் உலகத்திற்குத் தாய்தந்தையரின் ஸம்போகத்தைக் க்ராம்யமாகாது எல்லோரும் போற்றுமாறு காளிதாஸன் வருணித்தனன் என்றும்,[4] பார்வதியை ஒன்று, மூன்று, ஏழு இந்த ஸர்க்கங்களில் வெவ்வேறு வகையில் வருணித்து புதிது புதிதாகத் தோன்றுமாறு செய்தனன் என்றும்,[5]

1. सप्तर्षिहस्तावचितावशेषाणि ... (*ibid* I 16)
2. இதனைப்பற்றி விரிவாய் 'The birth-place of Kalidasa by by Pandit Lachhmi Dhar Kalla' என்ற நூலிற் பார்க்கவும்.
3. अस्मिन्नतिविचित्रकविपरम्परावाहिनि संसारे कालिदासप्रभृतयो द्वित्राः पञ्चषा वा महाकवयो गण्यन्ते (ध्वन्या. I 6)
4. महाकवीनामप्युत्तमदेवताविषयप्रसिद्धसंभोगश्रृङ्गारनिबन्धनाद्यनौचित्यं शक्तितिरस्कृतं ग्राम्यत्वेन न प्रतिभासते, यथा कुमारसम्भवे देवीसम्भोगवर्णनम् (*ibid* III 6)
5. अवस्थाभेदान्नवत्वं यथा—भगवती पार्वती कुमारसम्भवे 'सर्वोपमाद्रव्यसमुच्चयेन ... इत्यादिभिः .... तां प्राङ्मुखीं तत्र निवेश्य तन्वीम्' इत्याद्युक्तिभिर्नवेनैव प्रकारेण निरूपितसौष्ठवा (*ibid* IV)

இவற்றில் புலமை வாய்ந்தவர்.[1] கல்யாணத்தில் ஆண்ட சாளுக்கியவிக்ரமாதித்யரின் மன்றத்தில் வித்யாபதியாய் இருந்து விக்ரமாங்கசரிதம் என்ற காவ்யத்தை இயற்றினர். இந்நூல் காவ்யமாகவே இயற்றப்பட்டதன்றி, சரித்திரவிஷயங்களைக் குறிக்க இயற்றப்படவில்லை என அவரே கூறுகின்றார்.[2] ஆகலின் இந்நூலிலிருந்து அறியப்படும் சரித்திரப்பகுதி மிகச் சிறிதே ஆகும். இந்நூலுள் 18 ஸர்க்கங்கள் உள. 18-ஆவது ஸர்க்கம் கவியின் சரித்திரத்தைக் கூறும். 17 ஸர்க்கங்கள் சாளுக்யவம்சத்திற் பிறந்த விக்ரமார்க்கன், அவன் தகப்பன், அவன் குழந்தைகள் இவர்களைப்பற்றி வர்ணிக்கும்.[3] இரண்டாம் ஸர்க்கத்தில் புத்ரஸந்தானம் இல்லாது ஆஹவமல்லன்

इष्टापूर्तेष्वतिथिविषये सान्त्वने सेवकानाम्
अन्येष्वन्येष्वपि च गहनं किं नु तस्योचितेषु ।
दृष्टादृष्टोपकरणगणप्रापणे यः प्रवीणां
नागादेवीमलभत शुभस्तोमपात्रं कलत्रम् ॥ (*ibid* 18, 80)
सूरेस्तस्मादजनि जगतां शेखरो बिल्हणाख्यः । (*ibid* 18, 81)

1. साङ्गो वेदः फणिपतिदृशा शब्दशास्त्रे विचारः
प्राणा यस्य श्रवणसुभगा सा च साहित्यविद्या । (*ibid* 18, 82)

2. रसध्वनेरध्वनि ये चरन्ति सङ्क्रान्तवक्रोक्तिरहस्यमुद्राः ।
तेऽस्मत्प्रबन्धानवधारयन्तु कुर्वन्तु शेषाः शुकवाक्यपाठम् ॥
(*ibid* 1, 22)

3. एषाम्तु चालुक्यनरेन्द्रवंशसमुद्गताना गुणमौक्तिकानाम् ।
सद्वाग्गुणीसूत्रनिवेशितानामेकावली कण्ठविभूषणं वः ॥ (*ibid* 1, 30)

வருந்துவதும்,[1] அவன் மனைவியுடன் சிவனை வழிபடுதலும், சிவனது அருளால் மூன்று குமாரர்கள் பிறத்தலும், நான்காம் ஸர்க்கத்தில் விக்ரமாதித்யன் திக்விஜயம் செய்தலும், ஒன்பதாம் ஸர்க்கத்தில் சந்த்ரலேகையின்[2] ஸ்வயம்வரமும்,[3] பத்தாம் ஸர்க்கத்தில் அவ்விருவரையும் பட்டணத்துப் பெண்டிர் பார்த்தலும், ரகுவம்சத்தில் முதல் ஏழு ஸர்க்கங்களில் உள்ள வர்ணனையை ஒத்துள்ளன. ஒன்பது முதல் பதின்மூன்று வரையில் உள்ள ஸர்க்கங்களில் பூப்பறித்தல், ருது வர்ணனை, ஜலக்ரீடை முதலியன வர்ணிக்கப்பட்டன. இறுதிச் செய்யுளில் விக்ரமாதித்யன் அரசனாய் இருக்கும்போது சோழ அரசனை ஜயித்து காஞ்சியில் தங்கி, பின்னர் தன்னூர் சென்றான் என்று உளது.[4]

நடை எளிதாய் உள்ளது. கவி சொற்சித்திரங்களில் ஈடுபடவில்லை. ஸமஸ்தபதங்கள் மிகுதியாய் இல்லை. சுவை ஒழுகவேண்டும் என்ற எண்ணத்துடன் கவி இந்நூலை எழுதியுள்ளனர்.

1. ऋणं पितॄणामपनेतुमक्षमाः कथं लभन्ते गृहमेधिनः शुभम् ।
(*ibid* 2, 34)
फलेन शून्यः सुतरां दुनोति मामयं गृहस्थाश्रमधर्मपादपः ।
विलोकयामि प्रतिबिम्बमात्मनः सुताभिधानं त्वयि नाधुनापि यत् ॥
(*ibid* 2, 29)

2. चन्द्रलेखा

3. तदीयवक्त्रेन्दुविलोकनेन मान्द्रोल्लसद्रागपयोनिधीनाम् ।
तत्रागतानां पृथिवीपतीनामासन्विचित्राणि विचेष्टितानि ॥
(*ibid* 9, 75)

4. अथ शिथिलितचापश्चोललक्ष्मीं गृहीत्वा
कृतविविधविनोदस्तत्र काञ्चीनगर्याम् ।
निजनगरमगच्छन्मान्द्यमानक्रमेणा-
भरभरितदिगन्तः कुन्तलक्ष्माभुजङ्गः ॥ (*ibid* 17, 68)

1, 4, 15, 16, 17 ஸர்க்கங்களில் வீரச்சுவையும், இரண்டாம் ஸர்க்கத்தில் சாந்தச்சுவையும், 9, 10, 11, 12, 13 ஸர்க்கங்களில் ச்ருங்காரச்சுவையும் உணரப்படுகின்றன. உபக்ரமோபஸம்ஹாரந்யாயத்தைக்[1] கொண்டு காவ்யத்தின் அங்கிச்சுவை வீரம் என்னலாம்.

இக்கவி எழுதிய மற்றொரு நூல் சௌரபஞ்சாசிகை[2] என்பது. இப்பெயரால் இந்நூலுள் ஐம்பது ச்லோகங்கள் இருக்க வேண்டும். காச்மீரத்தில் ஒரு பாடமும், தென்னிந்தியாவில் மற்றொரு பாடமும் வழக்கத்தில் உள்ளது. இரண்டிலும் ஒரே வகையாய்க் காணப்படுவன 34 ச்லோகங்கள் என்பர்.[3] ராஜகன்யகையோடு ரஹஸ்யமாய் உல்லாஸமாய் இருந்த ஒருவன் அவளிடமிருந்து பிரிவுபட, அப்போது அவன் தன்னுடைய பழைய அநுபவத்தை நினைத்து, அது மறுபடியும் சேருமோ என வருந்துவதைக் கூறுகின்றது இந்நூல்[4]. இராஜகன்யகை யார் என்பதும், அவளைக் காமுற்றவன் யார் என்பதும் திண்ணமாய் அறிய இடமில்லை. காமுற்றவன் கொலைக்களத்தில் இச் செய்யுள்களைக் கூற, அவற்றைக் கேட்ட மன்னவன், அவனை மன்னித்து அவளை மணக்கச் சம்மதித்தனன் எனக் கூறுவர். சோரன் என்பது சௌரபல்லீஸுந்தரனைக் குறிக்கின்றது என்பர் ராமதர்க்கவாகீசர் என்ற உரைகாரர்.

1. उपक्रमोपसंहारन्यायः
2. चौरपञ्चाशिका
3. A History of Sanskrit Literature by A. B. Keith pp. 188-9
4. अद्यापि तां यदि पुनः कमलायताक्षीं
पश्यामि पीवरपयोधरभारखिन्नाम् ।
सम्पीड्य बाहुयुगलेन पिबामि वक्त्रम्
उन्मत्तवन्मधुकरः कमलं यथेष्टम् ॥ (3)

காலம்.—கலயாணததில சாளுகயவிகரமாதிதயன VI கி பி 1076 முதல கி. பி 1127 வரை ஆணடதால இககவி பதினோராம நூறறாணடின பிறபகுதியிலும பனனிரணடாம நூறறாணடின முறபகுதியிலும இருநதனா எனனலாம.

வாஸுதேவன[1]—இககவி குலசேகராது[2] ராஜபததில இருநத பாரதகுரு[3] எனற விதவானின சிஷயா[4] இவா இயறறிய நூல யுதிஷடிரவிஜயம[5] இதனுள 8 ஆசவாஸஙகள[6] உள இஙகு பாணடு வேடடைககுச சென்றது முதல தாமபுதா

अद्यापि ता स्तिमितवस्त्रमिवाङ्गलग्ना
प्रौढप्रतापमदनानलतप्तदेहाम् ।
बालामनाथशरणामनुकम्पनीया
प्राणाधिका क्षणमह न हि विस्मरामि ॥ (21)
अद्यापि तामविहृता मनसा चलेन
सञ्चिन्तयामि युवतीं मम जीविताशाम् ।
नान्योपभुक्तनवयौवनभारसारा
जन्मान्तरेऽपि यदि सैव गतिर्यथा स्यात् ॥ (33)

1. वासुदेव
2 कुलशेखर
3 भारतगुरु
4 तस्य च वसुधामवन काले कुलशेखरस्य वसुधामवत ।
वेदानामध्यायी भारतगुरुरभवद्रायनामध्यायी ॥ (1, 6)
समजनि कश्चित्तस्य प्रवण शिष्योऽनुवर्तकश्चित्तस्य ।
शास्त्रानामालोके पटुमनसो वासुदेवनामा लोके ॥ (1, 9)
5 युधिष्ठिरविजयम्
6 आश्वासा

அச்வமேதம் செய்தது முடிய வாணிக்கப்பட்டன. ஒவ்வொரு ச்லோகமும் யமகாலங்காரததைக்கொண்ட ஆரியாவ்ருத்ததில் இணைக்கப்பட்டுள்ளது. இதனுள் ருதுக்கள், சந்தரோதயம், ஜலக்ரீடை, பானகோஷ்டி முதலியன வர்ணிககப்படுகின்றமை யால் இதனை மஹாகாவயமாகவே கவி கருதினா என்பது வெளிப்படை. யமகத்தோடே ஒவ்வொரு ச்லோகமும் இருப் பதால், இக்காவ்யத்தைச் சித்ரகாவ்யம் எனவே கூறல் வேண்டும். அவ்வாறே அந்நூலின் உரைகாராரகிய ராஜா னகரத்னகண்டா கூறுகின்றனா. இருப்பினும் மற்ற யமக காவ்யங்களைப் படிப்பதில் உள்ள க்லேசம் இதனைப் படிக்கும் போது இல்லை[1] அன்றியும் நடை எளிதாக இருக்கின்றது என்ற தோற்றமும் உண்டாகின்றது.

காலம்.—குலசேகரா காச்மீரத்தரசர் என்றும், இக்கவி கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டில் இருநதவர் என்றும் சிவதததரும் காசிநாதரும் கூறினா.[2] இவா திருவிதாங்கூரில் குலசேகரரது காலததில் ஒன்பதாம் நூறறுண்டில் இருந்தார எனக் கிருஷ்ணமாச்சாரியா கூறினா.[3]

க்ஷேமேந்த்ரன.—[4] இக்கவி காச்மீரத்தவா. இவாக்கு வ்யாஸதாஸா[5] என்ற மறறொரு பெயரும் உண்டு. இவரது தகப்பனா ப்ரகாசேந்த்ரா.[6] இவா அபிநவகுப்தரிடம் ஸாஹித்யம்

1. त्वं च सुयोधन मत्तः शृणु गिरमपगच्छति श्रियो धनमत्त. ।
तस्मादंशस्तेभ्य. प्रदीयता तरितुमापदं शस्तेभ्य. ॥ (6, 111)
वृत्तं पुत्राणा तं पार्थाना चोदयं रिपुत्राणान्तम् ।
विदुरगिरा जातान्तस्ताप शुश्राव तदनु राजा तान्त. ॥ (2, 4)
2. Kāvyamālā 60, bhūmikā (1)
3. Classical Sanskrit Literature by M. Krishnamachariar p. 168.
4, 5, 6 समासेयं महाभारतमञ्जरी कृति. कवेर्व्यासदासापरनाम्न. प्रकाशेन्द्रसूनो. क्षेमेन्द्रस्य ।

படித்து, பல ஸாஹித்யக்ரந்தங்களை இயற்றுவதில் காலத்தைக் கழித்தனர்.[1] முதன்முதலில் பாரதமஞ்சரியை இயற்றியிருக்க வேண்டும் என்பது வ்யாஸதாஸர் என்ற பெயராலும், பாரத மஞ்சரியின் முடிவில் அவர் கூறும் வாக்கியத்தாலும் விளங்கும்.[2] முதன்முதலில் மஹாபாரதம், ராமாயணம், ப்ருஹத்கதை இவற்றைச் சுருக்கிக் கூறவேண்டும் என்ற எண்ணத்தால் பாரத மஞ்சரி,[3] ராமாயணமஞ்சரி,[4] ப்ருஹத்கதாமஞ்சரி[5] இவற்றை

1. प्रयात. कविगोष्ठीषु नामग्रहणयोग्यताम् ।
   श्रुत्वाभिनगुप्ताख्यात्साहित्यं बोधवारिधेः । (बृहत्कथा end)
2. एष विष्णुकथातीर्थपुण्यवत्सलिलोक्षितः ।
   प्राप्तः सामान्यजल्पोऽपि क्षेमेन्द्रोऽद्य कवीन्द्रताम् ॥
3. भारतमञ्जरी
4. रामायणमञ्जरी
5. बृहत्कथामञ्जरी

   ப்ருஹத்கதை என்பது குணாட்யரால் பைசாசிபாஷையில் இயற்றப்பட்டு சாதவாகனுக்குக் கூறப்பட்ட நூல். இக்கதைகளைப் பரமசிவன் பார்வதிக்குக் கூறினர். அவற்றைப் புஷ்பதந்தன் ரஹஸ்யமாய்க் கேட்க, அவனைப் பரமசிவன் சபித்தனர். அச்சாபத்தால் அவன் வரருசியாய்ப் பிறந்து இக்கதைகளைக் காணபூதிக்குக் கூற, அவன் குணாட்யனுக்குக் கூறினன்.

   महेश्वरात्पुष्पदन्तः काणभूतिरिमां ततः ।
   तस्माद्गुणाढ्यस्तस्माच्च श्रुतवान्सातवाहनः ॥
   [बृहत्कथामञ्जरी 2, 1, 2]

   இந்நூலும் வசு வித்யாதரசக்ரவர்த்திகளின் சரித்திரமும் உபகதைகளும் உள்ளன.

   श्रुत्वा गुणाढ्यकथितं काणभूतिरुवाच तम् ।
   दोपिनेन त्विय क्षिप्रं सप्तानां चक्रवर्तिनाम् ।
   कथां विद्याधरेन्द्राणां कथयामि स्थिरो भव ।
   (*ibid* 1, 3, 84-85)

எழுதினர் எனக் கூறலாம். இவற்றுள் முறையே பதினாயிரம், ஆறாயிரம், ஏழாயிரம் இவற்றிற்கு மேற்பட்ட ச்லோகங்கள் உள்ளன. இவையெல்லாம் புராணநடையிலே உள்ளன. இவற்றைப் படிக்கும்போது ஒருவகையிலும் மனக்கவர்ச்சி உண்டாகவில்லை. ஆகலின் இவற்றைக் காவ்யம் எனக் கூறுதல் பொருந்தும் எனத் தோன்றவில்லை. இவற்றைப் புராணநடையைக் கொண்ட பத்யக்ரந்தங்கள் எனக் கூறுதலே சாலும். இவற்றுள் மூலநூல்களிலிருந்து சிலவிடத்து அவர் மாற்றிக் கூறியிருத்தல் கூடும். உதாரணமாக ராமாயண மஞ்சரியில் பாயஸப்பகுப்பில்[1] இதனைக் காணலாம்.

அவர் இயற்றிய மற்ற நூல்கள்[2] ராஜாவளி,[3] தசாவதார சரிதம்,[4] ஸமயமாத்ருகம்[5] முதலியன.

ராஜாவளி.—இதனுள் காச்மீரத்து அரசர்களின் சரிதை கூறப்படுகின்றது என்பர்.

1. कौसल्यायै नरपतिः पायसार्धं ददौ तदा ।
अर्धादर्धं ददौ चापि सुमित्रायै नराधिपः ॥
कैकेय्यै चावशिष्टार्धं ददौ पुत्रार्थकारणात् ।
प्रददौ चावशिष्टार्धं पायसस्यामृतोपमम् ॥
अनुचिन्त्य सुमित्रायै पुनरेव महामतिः । (रा. बा. 16, 27-29)
ततोऽर्धं प्राप कौसल्या चतुर्भागं च कैकयी ।
चतुर्भागं सुमित्रा च स्वयं तेन द्विधा कृतम् ॥ [रा. म. बा. 74]

2 Classical Sanskrit Literature by M. Krishnamachariar pp. 171 & 172.

3. राजावली

4. दशावतारचरितम्

5. समयमातृकम्

தசாவதாரசரிதம். — இதனுள் பத்து அவதாரங்களும் வர்ணிக்கப்படுகின்றன. ஒன்பதாவது பௌத்தாவதாரம்.

ஸமயமாத்ருகம்.—தன்னைப் பெண்ணாகக் கருதவேண்டும் என்ற ஸமயத்தால் கங்காலியைத் தன் மாத்ருகையாகக் கலாவதி என்ற வேச்யை செய்துகொண்ட காரணம் பற்றி இந்நூலுக்கு இப்பெயர் வந்தது.[1] இந்நூலுள் வாரஸ்த்ரீகளுக்கு வேண்டிய மந்த்ரதந்த்ரங்கள் அழகாய்க் கூறப்பட்டன.[2] சிற்சில வர்ணனைகள் மிக அழகாய் உள்ளன [3]

கலாவிலாஸம்.—மனிதர்களின் பல தொழில்களைப்பற்றியும் பல குறைகளைப்பற்றியும் இந்நூல் கூறும்.

காலம்.—காச்மீரத்தில் கி. பி. 1020—1064 இல் ஆண்டு வந்த அனந்தன் என்ற அரசன் காலத்தில் இவர் இருந்தனர் என்பது ஸமயமாத்ருகம் போன்ற நூல்களின் இறுதியில் அவ்வரசனைக் குறித்தலால் அறியப்படுகின்றது.[4]

1. समयेन मातृका सा कृत्रिमरूपा कृता कलावत्या ।
तन्नाम्नैव निबन्ध क्षेमेन्द्रेण प्रबद्धोऽयम् ॥ (8, 129)
तस्माद्भजस्व परिकल्पितपुत्रिका माम् (4, 13)

2. क्षेमेन्द्रेण रहस्यार्थमन्त्रतन्त्रोपयोगिनी ।
क्रियते वाररामाणामियं समयमातृका ॥ (1, 3)

3. भुक्त्वा सहस्रशरसम्पदमम्बरश्रीः
कृत्वा जनस्मरणमात्रदशावशेषाम् ।
वेश्येव काममनपेक्षितपक्षपाता
क्षिप्रं शशाङ्कविभवाभरणा बभूव ॥ (3, 9)

4. तस्यानन्तमहीपतेर्विरजसः प्राज्याधिराज्योदये
क्षेमेन्द्रेण सुभाषितं कृतमिदं सत्यक्षरक्षाक्षमम् ॥ [समयमातृका]

ஸோமதேவபட்டர்.[1]—இவரும் காச்மீரத்தவர். அநந்த வாசனின் மனைவியாகிய ஸூர்யவதிக்கு[2] விநோதத்தைக் குறித்து ப்ருஹத்கதையைச் சுருக்கி ஸாரமாக எழுதினர். இந்நூலிற்குக் கதாஸரித்ஸாகரம்[3] எனப் பெயர். க்ஷேமேந்த்ரரின் ப்ருகத்கதாமஞ்சரியில் கதைகள் மிகச் சுருக்கப்பட்டமையால் அவை அழகு குன்ற, அவற்றின் சிறப்பைக் காட்ட இவர் இந்நூலை இயற்றினர் என்பர்.[4] இந்நூலும் ப்ரஸாதநடையைக் கொண்ட பத்யக்ரந்தம் என்றே கூறல் தகும்.

ஹேமசந்த்ரர்.[5] — இவர் எழுதியது த்வ்யாச்ரயகாவ்யம்[6] என்ற மஹாகாவ்யம். இதற்குக் குமாரபாலசரிதம்[7] என மற்றொரு பெயரும் உண்டு என்பர். கூர்ஜரதேசத்து அணஹில பாடகபுரத்தில் சாளுக்யவம்சத்தினரான மூலராஜன்[8] முதல் குமாரபாலன் முடிய இருந்தவரின் சரித்திரம் இங்கு வர்ணிக்கப் படுகின்றது. ஈண்டு உள்ள ச்லோகங்கள் அவர் இயற்றிய இலக்கணநூலிற் கண்ட விதிகளுக்கு லக்ஷ்யம் ஆகவும் இருக் கின்றன. காவ்யமாகவும் சொல்விளக்கங்கட்கு இலக்கிய

1. सोमदेवभट्टः
2. सूर्यवती
3. कथासरित्सागरः
4. औचित्यान्वयरक्षा च यथाशक्ति विधीयते ।
कथारसाविघातेन काव्यांशस्य च योजना ॥ (कथासरित्सागरे 1, 1, 11)
5. हेमचन्द्रः
6. द्व्याश्रयकाव्यम्
7. कुमारपालचरितम्
8 मूलराजः

மாகவும இருவகையாய இருததலின, இநநூலுககு தவயாச ரயம எனற பெயா கொடுககபபடடது ஆனால சிலா அப பெயாககு வேறு காரணங கூறுவா —முன 20 ஸாககஙகளும ஸமஸகருததநிலும பின எடடு ஸாககஙகளும பராகிருததநிலும இருததல எனபது [1] இவறறுள முறகாரணமே சிறநதது

இநநூலைச சிததிரகாவயம எனனலாம [2]

காலம —இககவி கி பி 1143—1174 இல ஆடசி புரிநத குமாரபாலனுககு[3] உறற துணையாய இருநது, ஜைநமதக கொளகைகளை அவனை ஏறகச செயதனா எனறு கூறபபடு தலால, இவா பனனிரணடாம நூறறுணடில இருநதவா எனபது திணணம

மஙககன [4]—இககவி காசமீரததில வஸிததாா. இவா ருயயகரின சிஷயா [5] ஸுஸஸலன ஜயஸிமமன இவாகளின கீழ மநதிரியாய இருநத அலஙகாரன இவருடைய ஒரு மூதத ஸஹோதரன.[6] இவா வயாகரணததில சிறநத அறிவு வாயநத

1 History of Sanskrit Literature by A B Keith

2 चन्द्रे नैमित्तिको मौहूर्तिको नैयायिकश्च स ।
शम्भो सहस्रमष्टौ चायतनानि सरस्तटे ॥ (15, 117)

3 आयुष्मांश्च कुमारपाल चिरमित्याशासितो नार्हतै
चैत्य स्फाटिकपार्श्वबिम्बमहून स्वर्णेन्द्रनीलैर्नृप ॥ (20, 98)

4 मङ्खक (அலலது) मङ्खुक, मङ्ख (எனறும கூறுவா)

5 न श्रीरुय्यकमालोक्य स निय गुरुममहीत् ।
(श्रीकण्ठचरितम् 25, 30)

6 एन श्रीजयसिंहपार्थिवपति साम्राज्यनिष्कन्
तस्यो सान्धिविग्रहिकमलङ्कारं द्वितीय स्तुम । (25 61)

வர்.[1] லங்ககர என்ற பெரிய பண்டிதரும் அவரின் மூத்த ஸஹோதரன்.[2] இவர் எழுதிய நூல் ஸ்ரீகண்டசரிதம் என்ற மஹாகாவ்யம். அதனுள் 25 ஸர்க்கங்கள் உள. தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கிச் சிவபிரான் த்ரிபுர தஹனஞ்செய்தல் இங்கு வர்ணிக்கப்பட்டது. நான்காம் ஸர்க்கத்தில் கைலாஸவர்ணனையில் தொடங்கி, இருபத்துநாலாம் ஸர்க்கத்தில் த்ரிபுரதஹனத்தைக் கூறுகின்றார். இருபத்தைந்தாம் ஸர்க்கத்தில் இந்நூலை அரங்கேற்ற இவர் ஸஹோதரன் கூட்டிய புலவர்களையும் அவரவரது சிறப்பையும் கவி கூறுகின்றனர். முதல் மூன்று ஸர்க்கங்களில் தேவதைகளின் ஸ்துதி, ஸத்கவியின் இலக்கணம் முதலியன உணர்த்தப்பட்டன.

கவி ரஸத்திலே ஈடுபடவேண்டும் என்றும்,[3] ச்லேஷத்தில் ஈடுபட்டால் ரஸத்தில் ஈடுபடமுடியாது என்றும்,[4] பிறரைப் போல் மனிதரின் குணநிசயங்களைப் பற்றி வருணிக்காமல் சிவ பிரானைப் பற்றித் தனக்கு வர்ணிக்க நேர்ந்தது தன் பெரும் பாக்கியம் என்றும்[5] கூறுகின்றார் அவருடைய வர்ணனைகள்

1. न सूत्रकृद्वार्त्तिककृन्न चेष्टिकृच्छशाक यल्लक्षणतन्त्रमीक्षितुम् ।
स्वयं तदुन्मीलितवानकल्पयश्चतुर्मुनि व्याकरणस्य वर्त्म यः ॥ (3, 67)
2. मदग्रजन्मनः श्रीमल्लङ्ककस्य सभागृहम् ।
तेऽध्यासते च विस्रब्धाः सारसा इव मानसम् ॥ (25, 15)
3. व्यर्थं विना रसमहो गहनं कवित्वम् । (2, 30)
4. प्रदर्शिताश्लेषनिपीडनोल्लसद्रसातिरेकेषु न यत्र जातुचित् ।
कुचेषु नैविड्यमधीरचक्षुषां महाकवीनां च वचःसु शीर्यते ॥ (3, 23)
5. महत्कष्टमहो हित्वा यच्छर्वं मर्त्यतः श्रुतिम् ।
गर्वानवधिमाधिर्यो नरेण स्तूयते नरः ॥ (15, 6)

*புதிதாய் உள்ளன :—பார்வதிதேவியின் முககமலததில் களங்க மின்மைக்குக் காரணம் வாஹனமாகிய ஸிங்கத்தைக் கண்டு மான் ஓடிப்போனதே.[1] சந்திரன் மன்மதனுக்கு ஸங்கமனீய ரத்னம்.[2] சிவபிரான் அர்த்தநாரீச்வரமூர்த்தத்தில் பார்வதியை விட்டுப் பிரியாதிருக்கை சந்திரனின் ப்ரபாவம்.[3] இவருடைய நடை சில இடங்களில் எளிதாய் இருக்கின்றது. 17-ஆம் ஸர்க்கத்தில் சிவனது துதியிலுள்ள 22-ஆம் ச்லோகத்திலிருந்து இவர் விவர்த்தவாதத்தைக் கைப்பற்றினா என அறியப்படுகின்றது.*

*காவ்யத்தில் அங்கிச்சுவை வீரம் என்றே கூறல் வேண்டும். ஆனல் அச்சுவை 19, 20, 21, 22, 23, 24 இந்த ஆறு ஸர்க்கங்களில்தான உணரப்படுகின்றது. 18-இல் அதற்கு அனுகுண மான க்ரோதம் உணரப்படுகின்றது ஆனல் அதற்கு முன்னர்ப் பல ஸர்க்கங்களில் ச்ருங்காரமே உணரப்படுகின்றது.*

காலம் — கி. பி. 1127–1159 இல் *காச்மீரத்தில் ஆண்டு வந்த ஜயஸிம்மனின் காலத்தில் இக்கவி இருந்தமையால், இவரது காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டே ஆகும்.*

मानुष्यजन्म वैदुष्यं विवेकः काव्यचातुरी ।
श्रीकण्ठे चाटुकारित्वमहो पुण्यपरम्परा ॥ (2, 5, 7)

1. बाहुस्थपञ्चास्यभयाद्विदूराद्दत्तझम्पो मृगशावकेन ।
देव्याः स वोऽव्यात् ..... (1, 18)

2. त्वन्मण्डलं नूनमतिभ्रमदमे चेतोभुवः सङ्गमनीयरत्नम् ।
यस्य प्रभावात्समहर्दिशेव भङ्गं यात्यङ्गनाना प्रियविप्रयोगः ॥ (11, 64)

3. यदर्धनारीश्वरमूर्तिरीशः सदैव गौरीविरहानभिज्ञः ।
शृङ्गारबन्धो भजते शिरोऽयं शशाङ्क शङ्के स तव प्रभावः ॥(11, 65)

ஸ்ரீஹர்ஷன்[1] — இம்மஹாகவி கான்யகுப்ஜத்தில் இருந்தார்.[2] இவரது தகப்பனார் ஸ்ரீஹீரர்; இவரது தாயார் மாமல்லதேவி. சிந்தாமணி என்ற மந்திரத்தில் ஸித்தி பெற்று இந்திரிய நிக்ரஹத்துடன்[3] பரப்பிரம்மஸமாதியில் ஈடுபட்டவர்.[4] இவர் எழுதிய காவ்யங்களுள் சிறந்தது நைஷதீயசரிதம்.[5] சில விடத்து இதனை நளீயசரிதம்,[6] வைரஸேநிசரிதம்[7] என்ற பெயர்களாலும் இவர் வழங்கினர். இக்காலத்து நைஷதம் என்ற பெயராலும் வழங்குகின்றது. கதாநாயகனது பெயரால் நூலை வழங்குதற்கு இஃது உதாரணம் ஆகும். இது சிருங்காரச் சுவையைக் கொண்ட மஹாகாவ்யம்.[8] இந்நூலுள் 22 ஸர்க்கங்கள் உள; 60 அல்லது 120 ஸர்க்கங்கள் இருந்தன என்பர் சிலர்; ஆனால் இந்நூலின் சுவை சிருங்காரம் எனக் கவியே கூறுதலாலும், 22-ஆம் ஸர்க்கத்து இறுதிச்லோகத்தில் "சந்த்ரன் நமக்கு மகிழ்ச்சி அளிக்கட்டும்"[9] என அவரே கூறுதலாலும், அச்சிலரின் கருத்து ஆராய்தற்கு உரியது.[10]

1. श्रीहर्षः

2-4. ताम्बूलद्वयमासनं च लभते यः कान्यकुब्जेश्वरात्
यः साक्षात्कुरुते समाधिषु परं ब्रह्म प्रमोदार्णवम् (4 at the end)

3, 5, 8. श्रीहर्षं कविराजराजिमुकुटालङ्कारहीरः सुतं श्रीहीरः सुषुवे
जितेन्द्रियचयं मामल्लदेवी च यम् ।
तच्चिन्तामणिमन्त्रचिन्तनफले शृङ्गारभङ्ग्या महाकाव्ये चारुणि
नैषधीयचरिते सर्गोऽयमादिर्गतः ॥
(नैषधीयचरिते 1, 145)

6. *ibid* 15, 93; 18, 168; 19, 68; 22, 151. சிலவிடத்து नलस्य चरिते எனவும் வழங்குகின்றனர். 4, 123 etc.

7. *ibid* 7, 110

9. तुषारद्युतिः .... अस्तु नस्तुष्टये (*ibid* 22, 150)

10. [illegible]

இந்நூலுள் நளன் தமயந்தியை மணந்து அவளோடு இன்புற்று இருப்பது தான் வர்ணிக்கப்பட்டது. அக்கதை மஹாபாரதத்திலிருந்து எடுக்கப்பட்டது என்பது வெளிப்படை.

முன்னருள்ள கவிகள் கூறிய கருத்துக்களையும் முறைகளையும் கொள்ளாது புதிதாகக் காவ்யம் இயற்றவேண்டும் என்றும்,[1] சிற்சில இடத்து பற்பல சாஸ்திரங்களின் விஷயங்களைக் கூறுதலால் அவற்றைப் படிப்போர் ஆசிரியன்முகமாகவே கற்கவேண்டும் என்றும்,[2] தன் நூலை 14 வித்தைகளிலும் தேர்ச்சி பெற்ற காசமீரத்து வித்வான்கள் போற்றினர் என்றும்,[3] கவியே கூறியுள்ளார். பதின்மூன்றும் ஸர்க்கத்தில் இந்திரன், அக்னி, யமன், வருணன் இந்நால்வரும் நளன்போல் தோன்றும்படி வர்ணனையும் அப்போது தமயந்தியின் மனநிலைமையின் வர்ணனையும், பதினாறும் ஸர்க்கத்தில் கல்யாணவிருந்தின் வர்ணனையும் பதினேழாம் ஸர்க்கத்தில் குண்டினபுரத்தின் வர்ணனையும் இதற்கு முன்னருள்ள மஹாகாவ்யங்களில் காணப்படவில்லை

1 नव्ये महाकाव्ये (6, 138)
तत्र सौधसुरभूधरे तयोराविरासुरथ कामकेलय ।
ये महाकविभिरप्यवीक्षिता पांसुलाभिरपि ये न शिक्षिता ॥ (18 29)
कविकुलादृष्टाध्वपान्थे महाकाव्ये (8, 109)
अन्याक्षुण्णरसप्रमेयभणितौ महाकाव्ये (20 102)
अतिनव्ये कृतौ (21, 164)

2 ग्रन्थग्रन्थिरिह क्वचित्क्वचिदपि न्यासि प्रयत्नान्मया
... .. ..
श्रद्धाराद्धगुरुश्लथीकृतदृढग्रन्थि समासाद्यताम्
... ... ...
(at the 3 end)

3 काश्मीरैर्महिते चतुर्दशतयीं विद्या विदद्भिर्महाकाव्ये (16, 131)

பதினேந்தாம் ஸர்க்கத்தில் நளனைப் பார்க்க வரும் பெண்டிரின் வர்ணனையும், 20, 21 ஸர்க்கங்களில் நளன் தமயந்தி இருவரின் ஸம்போகவர்ணனையும், பத்தொன்பதாம் ஸர்க்கத்தில் ப்ரபாத வர்ணனையும், இருபத்திரண்டாம் ஸர்க்கத்தில் ஸாயங்காலம் சந்த்ரோதயம் இவற்றின் வர்ணனையும் புதிய முறையில் உள்ளன. அங்கிச்சுவையின் பரிபோஷத்தைக் குறைக்கும்படி பர்வத வர்ணனை, ருதுவர்ணனை ஜலக்ரீடவர்ணனை இவையெல்லாம் ஏனைய காவ்யங்களில் இருப்பதுபோல் இங்கு இல்லை. தொடர்ச்சியாய் யமகமும் அநுப்ராஸமும் இங்கு ஆளப்படவில்லை.

வ்யாகரணம்,[1] தர்க்கம்,[2] ஜ்யௌதிஷம்[3], ஸாமுத்ரிகா லக்ஷணசாஸ்த்ரம்,[4] தர்மசாஸ்த்ரம்,[5] மந்த்ரப்ரயோகம்[6] முதலிய வற்றில் வழங்கப்படுவன நன்டுக் கூறப்பட்டுள்ளன. அவற்றின் கருத்தை ஒருவன் அறிந்தாலன்றி அந்த ச்லோகங்களின் கருத்தை அறியமுடியாது.

1. उभयी प्रकृतिः कामे सजेदिति मुनेर्मनः ।
   अपवर्गे तृतीयेति भणतः पाणिनेरपि ॥ (17, 70)
2. द्व्यणुकोदरि (4, 3)
3. त्वदाननेन्दोः प्रियकामजन्मनि
   श्रयत्ययं दौहृदधुरीं धुरं ध्रुवम् ॥ (15, 42)
   पूर्वापरराशिस्थगुरुशुक्रयोः मध्यराशिस्थचन्द्रस्य स्थितिः दुरुधराख्यो महायोगः
4. येनामुना पितृमुखि ध्रियते करश्रीः (13, 12)
   [धन्या पितृमुखी कन्या]
5. कुण्डिनपुरवर्णनश्लोकाः
6. स्थिरा त्वमश्मेव भवेति मन्त्रवाक् । (16, 36)

இந்நூலின் அங்கிச்சுவையாகிய ஸம்போகசிருங்காரத்தின் பரிபோஷம் எங்கும் குறைவு அடையவில்லை. விருந்து வர்ணனையில் ஹாஸ்யரஸமும் உணரப்படுகின்றது. இயற்கையாய் ஒருவர்க்கு ஒருவர் பேசும் இடமெல்லாவற்றின்கணும் 19, 20-ஆம் ஸர்க்கங்களில் ஸம்போகசிருங்காரவர்ணனையிலும் பதலாலித்யம் விளங்குகின்றது.[1] தமயந்தியை வர்ணிக்கும் ஸர்க்கங்களில் எல்லாம் பதலாலித்யம் இல்லை. அவற்றுக்குக் கவி

1 मदेकपुत्रा जननी जरातुरा
नवप्रसूतिर्वरटा तपस्विनी ।
गतिस्तयोरेष जनस्तमर्दयन्
अहो विधे त्वां करुणा रुणद्धि न ॥ (1, 135)
तव रूपमिदं तया विना
विफलं पुष्पमिवावकेशिनः ।
इयमृद्धधना वृथावनी
स्ववनी सम्भवदल्पिकापि का ॥ (2, 45)
धार्यः कथंकारमहं भवत्या
वियद्विहारी वसुधैकगत्या ।
अहो शिशुत्वं तव खण्डितं न
स्मरस्य सख्या वयसाप्यनेन ॥ (3, 16)
पाणिपीडनमहं दमयन्त्याः
कामयेमहि महीमिहिकांशोः ।
दूत्यमत्र कुरु न स्मरभीति
र्निर्निमज्य [illegible] ॥ (5, 99)

கொடுக்கும் விசேஷணம் எல்லாம் [1] வேறு காவ்யங்களில் காணப் படாதனவே ; அவளைப் பற்றிய ச்லோகங்களெல்லாம் குணீபூத வ்யங்கியத்திற்கே உதாரணமாகும்; பதின்மூன்றும் ஸர்க்கத்தில் இந்திரன் முதலியோரை வர்ணிக்கும் ச்லோகங்களெல்லாம் சப்தசக்திமூலத்வனிக்கு உதாரணம் ஆகும். 20 ஆம் ஸர்க்கத்துள்ள பல ச்லோகங்கள் வஸ்துத்வனிக்கு உதாரணம் ஆகும். அங்கச்சுவை அங்கிச்சுவையின் பரிபோஷத்தைக் குறைக்காதிருக்கும் காரணம் பற்றி இந்நூலைக் காளிதாஸனுடைய நூல்களுக்கு அடுத்ததாகக் கூறலாம்.

आकर्ण्य तुल्यमखिलां सुदती लपन्तीम्
    आखण्डलेऽपि च नलेऽपि च वाचमेताम् ।
रूपं समानमुभयत्र विगाहमाना
    श्रोत्राच्च निर्णयमवापदसौ न नेत्रात् ॥ (13, 8)

उवास वैदर्भगृहेषु पञ्चषा
    निशाः कृशाङ्गीं परिणीय तां नलः ।
अथ प्रतस्थे निषधान्सहानया
    रथेन वार्ष्णेयगृहीतरश्मिना ॥ (16, 113)

जगति मिथुने चक्राविव स्मरागमपारगौ ।
नवमिव मिथः सम्भुञ्जाते वियुज्य वियुज्य वा ॥ (19, 34)

रागं दर्शयते सैषा वयस्याः सूनृताश्नैः ।
मम त्वमिति वक्तुं मा मौनिनी मानिनीं पुनः ॥ (20, 33)

1. द्व्यणुकोदरी (11, 26); घटप्रतिभटस्तनी (13, 6);
रुचिरकर्णी (13, 11) मृगोदरी (22, 113);
हिमांशुबिम्बलक्ष्मीविडम्बिमुखी (22, 137)

இவா வயாகரணம[1], தாககம[2], பூாவமீமாமஸை[3], உததா மீமாமஸை[3], ஜயோதிஷம்[4], ரேகாசாஸ்தரம[5], காமசாஸதரம[6] முதலிய சாஸதிரஙகளில தோசசி பெறறவா எனபதும, பஞசாயதனபூஜை செயதவா எனபதும,[7] ராமநாமததில ஈடுபடடவா

1 फणिभाषितभाष्यफक्किकाविषमा कुण्डलनामवापिता । (2 95)
किं स्थानिवद्भावमधत्त दुष्ट तादृक्कृतव्याकरण पुन स (10, 36)
भण फणिभवशास्त्रे तातड स्थानिनौ कौ (19, 61)
दाक्षीपुत्रस्य तन्त्रे ध्रुवमयमभवत्कोऽप्यधीती कपोत 19, 62)

2 तर्केष्वप्यसमश्रमस्य ... तस्य .. महाकाव्ये (10, 137)
कार्य निदानाद्धि गुणानधीते (3, 17)

3 ब्रह्मार्थकर्मार्थकवेदभेदा द्विधा विधाय स्थितयात्मदेहम् ।
चक्रे पराच्छादनचारु यस्या मीमासया मासलमूरुयुग्मम् ॥ (10, 80)

4 विरहिवर्गवधव्यसनाकुल कलय पापमशेषकल विधुम् ।
सुरनिपीतसुधाकमपापक ग्रहविदो विपरीतकथाः कथाम् ॥ (4, 61)
भूगोलच्छायमायामयगणितविदुन्नेयनायोऽभियाभृत् ।
एतत्कीर्तिप्रतानैर्विधुभिरिव युधेराहुराहूयमान (12, 94)

5. पाणिपर्वणि यत्र पुनरात्यद्भुदैवतर्पणयवार्पणमस्य ।
न्युप्यमाननलभोगितिरोधे सद्भिरक्तनरकालतिरोऽभूत् ॥ (11, 20)

6. कामानुशासनशते सुतरामधीती ... (11, 121)

7 11, 31-111
[illegible]

என்பதும்[1] அத்வைதக்கொள்கைகளைப் பின்பற்றியவர் என்பதும்[2] இந்நூலிலிருந்து அறியப்படும்.

இந்நூல் நாரிகேளபாகத்தில் எழுதப்பட்டது எனச் சிலரும், கபித்தபாகத்தில் எழுதப்பட்டது எனச் சிலரும், ஔஷதபாகத்தில் எழுதப்பட்டது என மஹாமஹோபாத்யாய - குப்புஸ்வாமி சாஸ்திரிகளும் கூறினர்.[3] முழுநூலையும் படித்துப் பார்த்தால், உணவு எல்லாவகைபாகத்துடன் இருப்பதுபோன்று, இந்நூலும் எல்லாபாகத்துடனும் உளது என்பது எளிதில் விளங்கும். 16, 19, 20 ஸர்க்கங்கள் பெரும்பாலும் த்ராக்ஷாபாகத்தில் இருக்கின்றன என்னலாம். தமயந்தியைப்பற்றிக் கூறும் இடமெல்லாம் நாரிகேளபாகத்தில் உள்ளன என்னலாம். ஔஷதங்களை வைத்தியனது உதவியின்றித் தாமே வழங்க முடியாதது போன்று, சாஸ்திரமுடிச்சுகளைக் கொண்ட இடமெல்லாம்

1. अस्मदाद्यविषयेऽपि विशेषे रामनाम तव धाम गुणानाम् ।
अन्वबन्धि भवतैव तु कस्मादन्यथा ननु जनुस्त्रितयेऽपि ॥ (21, 116)

2. நிருபாகப்பிரம்மத்தைப் பற்றிக் கூறுதலாலும் प्रापुस्तमेकं निरुपाख्यरूपं ब्रह्मेव चेतांसि यतव्रतानाम् (3, 3)

ப்ரம்மாநந்தத்தைப் பற்றிக் கூறுதலாலும் ब्रह्माद्वयस्यान्वभवत्प्रमोदं . . . (7, 3)

அத்வைதத்தவம் ஸத்யதாம் எனக் கூறுதலாலும் अद्वैततत्त्व इव सत्यतरेऽपि लोकः (13, 36)

ஜீவன்முக்தர்களைப்பற்றிக் கூறுதலாலும் जीवन्मुक्तानवैक्षत (17, 197)

சிவன் விஷ்ணு இருவரையும் ஸமமாய் பூஜை செய்ததாகக் கூறுதலாலும் இக்கவி அத்வைதி எனக் கொள்ளல் தகும்.

3. Naishadha Part I published by R. Subrahmanya Vadhyar—Foreword.

சாஸ்திரமறிந்தோரைக் கொண்டு அறியவேண்டுமாகலான், அவ்விடமெல்லாம் ஔஷதபாகம் என்னலாம். ஔஷதம் மக்களின் நோயைப் போக்கிப் பலத்தைத் தந்து உத்ஸாஹத்தை உண்டு பண்ணுவது போன்று, எல்லாம் முன்னோரால் கூறப்பட்டமையான் தாம் கூறுதற்கு ஒன்றும் இல்லை என்ற தப்பெண்ணத்தைப்போக்கி, தாமும் புதிதாகக் காவ்யம் இயற்றலாம் என்ற தைரியத்தை உண்டுபண்ணி, காவ்யங்களை இயற்றித் தம்மையும் பிறரையும் மகிழ்விக்குமாறு அறிஞரை இந்நூல் செய்வதால், நைடதம் வித்வானுக்கு ஔடதம்[1] என்ற சான்றோர்வாக்கு உண்டாயிற்று என்னலாம்.

இக்கவி விஜயப்ரசஸ்தி,[2] கௌடோர்வீசகுலப்ரசஸ்தி,[3] ஆணவ வர்ணனம்,[4] சிந்தப்ரசஸ்தி,[5] என்பனவற்றையும், நவஸாஹஸாங்க சரிதம்[6] என்ற சம்புவையும், சிவசக்திஸித்தி[7] என்ற நூலையும்,

1. नैषधं विद्वदौषधम् இந்நூலைப் படிக்கும்போது
प्रतायन्तां वाचो निमितविविधार्थामृतरसा
न वादः कर्तव्यः कविभिरनवद्ये स्वविषये ।
परस्वादानेच्छाविरतमनसो वस्तु सुकवेः
सरस्वत्यैवैषा घटयति यथेष्टं भगवती [ध्वन्यालोके 4, 17]
என்ற சுலோகம் நினைவிற்கு வருகின்றது.
2. तस्य श्रीविजयप्रशस्तिरचनातातस्य नव्ये महाकाव्ये (6, 138)
3. गौडोर्वीशकुलप्रशस्तिभणितिभ्रातरि . . . महाकाव्ये (7, 110)
4. संदृब्धार्णववर्णनस्य . . . तस्य . . . महाकाव्ये (9, 160)
5. स्यसुः सुसदृशि छिन्दप्रशस्तेर्महाकाव्ये (17, 222)
6. नवसाहसाङ्कचरिते चम्पूकृतः . . . महाकाव्ये (22, 151)
7. शिवशक्तिसिद्धिभगिनीसौभ्रात्रभव्ये महाकाव्ये (18, 154)

ஸ்தைர்யவிசாரணப்ரகரணம்[1] என்ற நூலையும், கண்டனகண்ட காத்யம்[2] என்ற நூலையும் இயற்றினர் என்பது ஸர்க்கங்களின் இறுதியிலுள்ள ச்லோகங்களால் அறியப்படுகின்றது. அவற்றுள் கண்டனகண்டகாத்யத்தின் ஒரு பகுதியே அச்சில் உள்ளது.[3]

நைஷதீயசரிதத்திலிருந்து சில செய்திகள் அறியப்படுகின்றன:—மணமகனின் உறவினா மணமகளை வரிக்கும் வழக்கம் இறந்து மணமகளின் உறவினர் மணமகனை வரிக்கும் வழக்கு இவரது காலத்தில் இருந்தது.[4] சைவர்கள் ருத்ராக்ஷம் தரித்தனர்.[5] ஸாதுக்கள் தங்களுடைய பெயரைக் கூறுவதில்லை.[6] கூட்டத்தில் எள்ளுப்போட்டால் எள் விழாது,[7] வெள்ளை வேஷ்டியில்தான் அழுக்கு தெரியும்,[8] கழுத்து வரையில் சாப்பிட்டனா[9] என்ற பழமொழிகள் இவரது காலத்திலே வழக்கில்

1. स्थैर्यविचारणप्रकरणभ्रातरि . . , महाकाव्ये (4, 123)
2. खण्डनखण्डतोऽपि सहजात्क्षोदक्षमे महाकाव्ये (6, 113)
3. இந்நூலுள் ஏனைய மதக்கொள்கைகளை மறுத்து அத்வைதக் கொள்கைகளையே நிலைநாட்டுகின்றார். இதனை முதல் ச்லோகத்திற் குறிப்பாகக் காட்டுகின்றார்.

   अविकल्पविषय एकः स्थाणुः पुरुषः श्रुतोऽस्ति यः श्रुतिषु ।

   ईश्वरसुमया न परं वन्देऽनुमयापि तदधिगतम् ॥
4. स्मरोपतप्तोऽपि भृशं न स प्रभु-

   र्विदर्भराजं तनयामयाचत ॥ (1, 50)
5. वहतो बहुशैवलक्ष्मता धृतरुद्राक्षमधुव्रतं खगः (2, 6)
6. महाजनाचारपरम्परेदृशी स्वनाम नामाददते न साधवः (9, 13)
7. तले यथैषुनै तिला विकीर्णाः सैन्यैस्तथा राजपथा बभूवुः (10, 5)
8. सिते हि जायेत शितेः सुलक्ष्यता (12, 22)
9. अमीभिराकण्ठमभोजि (16, 93)

இருந்தன கணவன் நீண்டகாலம் உயிரோடு இருத்தலை நோக்கிப் பெண்டிர் நெற்றியில் திலகம் தரிக்கின்றனர்[1] விவாஹவீட்டின் வாசலில் இரண்டு வாழை மரங்கள் கட்டும் வழக்கு அப்போதே இருந்தது.[2] மணமகன் மணமகள் இருவருடைய ஆடையையும் புரோஹிதர் முடிப்பிட்டனர்.[3] அவரது காலத்து விருந்துகளில் தேமனம்,[4] பாலில் இட்ட வடம்,[5] கோலகை,[6] மண்டகம்,[7] லட்டுகம்[8] முதலிய உணவுப்பொருள்கள் வழங்கப்பட்டன. வேதத்தின் க்ரமபாடமும்[9] வாமதேவ்ய ஸாமோபாஸ்தியும்[10] அக்காலத்தே இருந்தன.

இக்கவியின் காலம் —கான்யகுப்ஜத்தில் கி. பி. பனிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆண்ட ஜயந்தசந்த்ரனது காலத்தில் ஸ்ரீஹர்ஷன் இருந்தார் என ராஜசேகரன்[11] தனது

1. नृपस्त्रियो ... शिर.सु सिन्दूरमिव प्रियायुषे (15, 55)
2. स्थैर्यदले. स्तम्भयुगस्य रम्भयोश्चकास्ति चण्डातकमाण्डिता स सा । (16, 8)
3. प्रियाशुकग्रन्थिनिबद्धवाससं तदा पुरोधा विदधे विदर्भजाम् (16, 37)
4. अराधि यन्मीनमृगाजपत्रिजैः पलैर्मृदु स्वादु सुगन्धि तेमनम् (16, 87)
5. अलङ्कृतं क्षीरवटैस्तदन्नता रराज पार्कापितगैरिकश्रिया (16, 98)
[वटः - मापसाधितः घटकाख्यः पक्वान्नविशेषः]
6. घनैरमीषां परिवेषकैर्जनैरवर्षि वर्षोऽपलगोलकावली (16, 100)
7-8. पय स्मिता मण्डकमण्डनाम्बरा वदाननेन्दुः पृथुलड्डुकस्तनी (16 107)
9. श्रुतिपाठकवक्त्रेभ्यस्तत्राकर्णयन् क्रमम् (17, 164)
10. ... वामदेव्याभ्युपासकम् (17, 104)
11. राजशेखरः

ப்ரபந்தகோசத்திற்[1] கூறினர். கி. பி. 1296 சண்டுபண்டிதா[2] நைஷதீயசரிதரத்திற்கு உரை எழுதினா. அவர்க்கு முன்னர் வித்யாதரா[3] இயற்றிய ஒரே உரை இருந்தது என அவர் கூறுகின்றனா. கதாதரா[4] தனது உரையில் ஸ்ரீஹர்ஷன் காசியில் கோவிந்தசந்தரனின்[5] ஸபையில் இருந்தனர் என்பா. ராஜசேகரது கொள்கையைக் கொள்ளின், இக்கவி கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டின பிற்பகுதியில் இருந்தனராகக் கொள்ளல் வேண்டும். கதாதரரின் கொள்கையைக் கொள்ளின், அந்நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்தனராகக் கொள்ளல் வேண்டும்.[6]

நைஷதீயசரிதத்தின் உரைகள்.—இந்நூலுக்கு 34 உரைகளின் பெயர்கள் காணப்படுகின்றன.[7] அவற்றுள் நாராயணா மல்லிநாதா இவர் இயற்றிய உரைகளே அச்சில் உள்ளன.

கல்ஹணன்.[8]—இவா காச்மீரத்தில் கி.பி 1089—1101இல் ஆண்ட ஹர்ஷனுடைய மந்திரியாகிய சம்பகனின்[9] புதல்வா.

1. प्रबन्धकोश.
2. चण्डुपण्डितः
3 विद्याधर.
4. गदाधरः
5. गोविन्दचन्द्र.
6. Classical Sanskrit Literature by M Krishnamachariar pp. 178 & 183.
7. *Ibid* pp 182 & 183.
8 कल्हण
9. चम्पक.

ஸுஸஸலனின மகனுகிய ஜயஸிமமனின[1] ஸபையில இருநதார[2] கி பி 1149 1150 இல ராஜதரஙகிணி[3] எனற நூலை இயறறினா இதனுள எடடு தரஙகஙகள உள 7783 சலோகஙகள உள எடடாவது தரஙகததில உசசலன[4] ஸுஸஸலன[5] இவருடைய சரிதம கூறபபடடது அவவிருவரும இககவியின காலததவ ராதலின ஆஙகுக கூறபபடடது மிக உணமை எனபதில ஐய மிலலை தான ராகம தவேஷம இவை அறறவன எனக கவி குறிபபாயக கூறுகினறா[6] நீணட சரிததததைக கூறவேணடுத லால நூலில அதிக வைசிதரயம இலலை எனகிறா[7] ஆயினும சிறசில இடததில கருததை விசிதரமாக வெளியிடுகினறா[8] இசசரிததததைப படிததலால சாநதரஸம உணரபபடும என கினறா[9] ஆயினும பொதுவாக நூல புராணசசாயையை உடையது எனறே கூறல தகும

1 जयसिंह

2 सुत सुस्सलभूभर्तु सम्प्रत्यप्रतिक्षम ।
नन्दयन्मेदिनीमास्ते जयसिंहो महीपति ॥ (43 at the end)

3 राजतरङ्गिणी

4 उच्चल

5 सुस्सल

6 श्लाघ्य स एव गुणवान् रागद्वेषबहिष्कृत (1, 7)

7 कथादैर्घ्यानुरोधेन वैचित्र्येऽप्यप्रपञ्चिते ।
तदत्र किंचिदस्त्येव वस्तु यत्प्रीतये सताम् ॥ (1, 0)

8 निगृहो नियोगी च यदेवाश्रित्य वर्धते ।
चित्र करोति तस्यैव स्थानास्यनभिगम्यताम् ॥ (8 91)

9 क्षणभङ्गिनि जन्तूना स्फुरिते परिचिन्तिते ।
मूर्धाभिषेक शान्तस्य रसस्यात्र विचार्यताम् ॥ (1 23)

இவர்க்குப் பின்னர் ஜோனராஜரும், ஸ்ரீவரபண்டிதரும், ப்ராஜ்யபட்டரும் ராஜதரங்கிணி இயற்றினர்.

கவிராஜன்.—இவர் காதம்பவம்சத்திற் பிறந்த காமதேவர் என்ற அரசனின் ஸபையில் இருந்தார். அவ்வரசனின் விநோதத்திற்காக இராமாயணம் மஹாபாரதம் இரண்டிலிருந்தும் பொதுவான செய்திகளைப் பொறுக்கி, ஒவ்வொரு ச்லோகத்திலும் ராமாயணக்கதையும் மஹாபாரதக்கதையும் பொருள் படும்படி எளிய நடையில் அழகாக இவர் இயற்றியுள்ளார்.[1] இந்நூலின் 13 ஸர்க்கங்கள் உள. இதனை மஹாகாவ்யம் என்பர் உரைகாரர். இராமனின் பிறப்பு முதல் பட்டாபிஷேகம் வரையிலும் தர்மபுத்ரரின் பிறப்பு முதல் பட்டாபிஷேகம் வரையிலும் உள்ள கதைகள் இங்கு உள்ளன. நூல் முழுவதும் படித்துப் பார்த்தால் ராமாயணக்கதை தொடர்ந்து இருக்குமாறும், ஒவ்வொரு ச்லோகத்திலும் பாரதக்கதையும் தோன்றுமாறும், இந்நூல் எழுதினாரோ என்ற ஐயம் தோன்றுகின்றது. ராமாயணபாரதம் என்ற தொகைச்சொல்லில் குறைவான எழுத்துக்களைக் கொண்ட பாரதம் என்ற சொல்லை முதலிற் கூறுவதும் அவ்வையத்தை வலுப்படுத்துகின்றது. இந்நூலில்

1. अस्ति कादम्बसन्तानसन्तानकनवाङ्कुरः ।
कामदेवः क्षमादेवकामधेनुर्जनेश्वरः ॥ (राघवपाण्डवीये 1, 13)
तस्यावदातैः कविसूक्तिसूत्रैः संस्यूतनानागुणरत्नराशेः ।
विनोदहेतोः कविराजसूरिर्निबन्धनद्वन्द्वमिदं विधत्ते ॥ (1, 35)
प्रायः प्रकरणैक्येन विशेषणविशेष्ययोः ।
परिवृत्त्या क्वचिद्वद्दुपमानोपमेययोः ॥ (1, 37)
क्वचित्पदैश्च नानार्थैः क्वचिद्वक्रोक्तिभङ्गिभिः ।
विधास्यते मया काव्यं श्रीरामायणभारतम् ॥ (1, 38)

அங்கிச்சுவை வீரம் என்னலாம்; ஏனைய சுவைகளும் ஆங் காங்கு உணரப்படுகின்றன. இருப்பினும் படிப்போர்க்கு ஒவ்வொரு ச்லோகத்திலும் இருவகைப்பொருளும் வருகின் றனவா என்பதில நோக்கம் போகுமாறு சுவையுணர்ச்சிபிற போகாமையால், இதனை ஒரு சித்ரகாவ்யம்[1] எனவே கூறல் தகும். ஸுபந்து, பாணபட்டர் இவர்க்கடுத்து தான் வக் ரோக்தியிற சிறந்தவன் என இக்கவியே கூறினர்[2] இவர் கி. பி. 800இல் இருந்திருக்கலாம் என மாக்டானலும் பன்னி ரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்திருக்கலாம் எனக் கீத்தும் கூறினர்.[3]

இந்நூலைப் போன்றே தனஞ்சயன் என்ற ஜைனர் இவர்க்கு முன்னர் ராகவபாண்டவீயம் என ஒரு நூல் எழுதினர் என்பர் கீத். இவர் பாரிஜாதஹரணம் என மற்றொரு நூலை 10 ஸர்க்கங்களில் எழுதியுள்ளார் என்பர்.[4]

1. *Cf.* नृपेण कन्या जनकेन दित्सितामयोनिजा लम्भयितुं स्वयंवरे ।
द्विजप्रवर्येण स धर्मनन्दनः सहानुजस्ता भुवमप्यनीयत ॥ (2, 1)
साकं भूपैर्मानभङ्गं प्रपन्ने चापे तस्मिन्निर्वृता लक्ष्यसिद्ध्या ।
व्रीडानम्रा सादरं राजपुत्री धैर्या रामं प्राप ह्रिया कुमारम् ॥ (2, 29)

2. सुबन्धुर्बाणभट्टश्च कविराज इति त्रय ।
वक्रोक्तिमार्गनिपुणाश्चतुर्थो विद्यते न वा ॥ (1, 41)

3. A History of Sanskrit Literature by A. A. Mac Donell p. 331.
A History of Sanskrit Literature by A. B. Keith p. 137.

4. Classical Sanskrit Literature by M. Krishnamachariar p. 189

இதற்குச் சசதரர் இயற்றிய உரை அச்சில் உளது. இன்னும் எழு உரைகள் உள்ளன என்பர்.[1]

கிருஷ்ணாநந்தன்[2].—இவர் கபிஞ்சலகுலத்திற்[3] பிறந்தவர்; மஹாமாத்ரர (பிரதானமந்திரி) ஆய் இருந்தார். இவர் எழுதிய நூல் ஸஹ்ருதயாநந்தம்[4] என்பது. இந்நூல் ஸஹ்ருதயர்களுக்கு[5] ஆநந்தத்தை உண்டுபண்ணுவதால், இப்பெயர் பொருளொடு புணர்ந்த சொல் (அந்வர்த்தநாமா) எனச் சொல்லலாம். இக் கவியும் இறுதியில் உள்ள ச்லோகத்தில் இந்நூல் ரஸிகர்க்கு மகிழ்ச்சி அளிக்கட்டும் என வேண்டுகின்றார்.[6] இந்நூலில் 15 ஸர்க்கங்கள் உள; நளனின் பிறப்பு முதல் இரண்டாம் முறை அவன் தமயந்தியை அடைதல் முடிய வர்ணிக்கப்படுகின்றன. செய்யுள்களெல்லாம் வைதர்ப்பீரீதியில் பதலாலித்யத்துடன் விளங்குகின்றன. வர்ணனைகளும் புதிய முறையில் உள்ளன.[7] அங்கிச்சுவை ச்ருங்காரமே ஆகும். சிலவிடத்து ஸம்

1. *ibid* p. 189.
2. कृष्णानन्दः
3. कृष्णानन्दकवेः कपिञ्जलकुलक्षीरोदशीतद्युतेः सहृदयानन्दे (15, 61)
4. सहृदयानन्दम्
5. காவ்யத்தைப் படிக்கும்போதோ கேட்கும்போதோ கதாபாத்திரங்களோடு தன்மயீபவனம் அடையும் ஆற்றலுடையோர் ஸஹ்ருதயர் ஆவர். அவரே ரஸிகர் என்று சொல்லாலும் வழங்கப்படுவர்.
6. तावत्काव्यमिदं तनोतु कृतिनामन्तःप्रमोदोदयम् (15, 61)
7. लब्धार्थकामार्जनकोविदत्वमयं न लिप्येत कदापि पापे ।
   इतीव निश्चित्य गुरुर्निमित्तैश्चकार नाम्ना नलमात्मजं तम् ॥ (1, 24)
   हिमरुचिर्दहतीति किमद्भुतं बहिरसौ विशदः कलुषो हृदि ।
   अबुध एष जनस्तु यदीदृशादपि सुखाधिगमाय समुत्सुकः ॥ (4, 20)

போகமும் சிலவிடத்து விப்ரலம்பமும் உணரப்படுகின்றன. இம்மஹாகாவ்யம் எங்கும் ரஸமயமாகவே இருத்தலால், இதனை முழுமையும் த்வனிகாவ்யம் என்னலாம்.

சிலவிடத்தில் மஹாபாரதக்கதையிலிருந்து வேறுபடுகின்றார். இங்கே இந்திரன் முதலிய நால்வரும் நளனுருவத்துடன் ஸ்வயம்வரமண்டபத்திற்கு வந்ததாகக் கூறப்படவில்லை. இம்மஹாகவி இறுதியிலுள்ள ச்லோகத்தில் நரஸிம்மர், சிவன் இருவரையும் கூறுகின்றமையாலும்[1] முதல் ஸர்க்கம் இரண்டாம் ச்லோகத்தில்[2] நரஸிம்மரைப் பற்றிக் கூறுதலாலும், இவர் அத்வைதி என்றும், நரஸிம்மத்தை உபாஸித்தார் என்றும் கூறல் தகும்.

अनुघते भास्वति मन्दभासि विधौ किमप्याविरभूत्तमिस्रम् ।
आसाद्य रन्ध्रं महनीयधाम्ना मलीमसः सम्पदमातनोति ॥ (6, 3)
साहसे वर्तमानस्य विपदः स्युः पदे पदे ।
सदृशं चेष्टमानस्य स्वयं लक्ष्मीः प्रसीदति ॥ (8, 29)
समधिगम्य समाधिबलान्मुनिर्मनसि खेदमवाप मुहुर्मुहुः ।
परगतामपि दुःखपरम्परां कृतधियो हि निजामिव मन्वते ॥ (12, 14)
मया विना नैष घनश्चकास्ति विलोक्य गा ताम्यति नैषधश्च ।
इतीव विद्युत्परिचिन्तयन्ती मुहुश्चकाशे च तिरोदधे च ॥ (14, 20)

1. लक्ष्मीर्यावदलङ्करोति हृदयं विष्णोर्नृसिंहाकृतेः ।
यावद्विष्णुपदी च धूर्जटिजटाजूटान्तरे क्रीडती ॥ (15, 61)

2 दैत्येन्द्रमेकं करजैरनेकैर्विदारयन्नीडमिव प्रपन्नं ।
स्वच्छेषु मुक्तेष्वनुबिम्बदम्भाद्युर्वन्ननेकं जयतां नृसिंहः ॥ (1, 2)

ஜயரதா [1] — இககவி காசமீரததில வஸித்தவா. இவா ஹர சரிதசிநதாமணி [2] எனற நூலை 32 பரகாசஙகளில எழுதியுளளாா சிவனைபபறறிய சரிதஙகளும ஸகநதனின உறபததியும, [3] அாததநாரீசவர—அவஸரததின உறபததியும, ஆஙகுளள விஜயேசவாா கபாடேசவரா முதலிய மூாததிகளின மாஹாதமயஙகளும வாணிககபபடடன இதனைக கவி காவயம எனக கூருது சரிதம எனக கூறியது மிகப பொருததமாகும க்ஷேமேநதரனின பாரதமஞ்ஜரி, ராமாயணமஞ்ஜரி போனறு புராணநடையிலே எழுதபபடடது இதனை இககவியே குறிககினறாா [4] இவா பதினமூனறும நூறறாணடில இருநதாா எனபா

ஸோமேசவரதேவன [5] — இககவி குாஜரதேசததரசனின புரோஹிதா இவரது தாயதநதையா குமாரனும லக்ஷ்மியும ஆவா. [6]

1 जयरथ

2 हरचरितचिन्तामणि

3 இஙகுளள ஸகநதனுறபததி மஹாபாரதம, குமாரஸமபவம இவறறிற கூறபபடடதினினறும பலவிடஙகளில மாறுபடடு உளது.

4 इय साधारणा वाणी शम्भुशक्तिमत प्रति ।
समस्तलोकसुभगा शैथिल्यैनैव शोभते ॥

5 सोमेश्वरदेव

6 प्रवर्तमानेऽत्र कवित्वमत्रे सत्कृत्य सत्पात्रममात्यमेवम् ।
पूर्नार्धमात्मानममावमस्त सौवस्तिको गुर्जरनिर्जराणाम् ॥
[सुरथोत्सवे 15, 66 ]

कुमारपुत्रेण कुमारमातुः काव्यं तदेतज्जगदेकदेव्या ।
श्रुतिस्मृतिव्याकृतियज्ञविद्याविशारदेन क्रियते स्म तेन ॥ (15 67)

இவர் ஸுரதோத்ஸவம்[1] என்ற மஹாகாவ்யத்தை 15 ஸர்க்கங்களில் எழுதியுள்ளார். ஸுரதன் என்ற அரசன் ராஜ்யத்தை இழந்து பார்வதியைக் குறித்து தவஞ்செய்து அவளது அருளால் ராஜ்யத்தை மறுபடியும் அடைந்ததைப் பற்றிக் கூறும். இந்நூலில் பார்வதியின் வைபவத்தைப் பற்றிக் கூறுதலே கவியின் நோக்கம் என்பது குமாரன் தாயின் காவ்யம் என்ற தொடரால் நன்கு விளங்கும். இங்கு உள்ள ஹிமாலய வர்ணனம், ருதுவர்ணனம், சந்திரோதயவர்ணனம் எல்லாம் அழகாய் இருக்கின்றன. இக்கவி வால்மீகி, வ்யாஸர், குணாட்யர் காளிதாஸன், மாகன், முராரி இவர்களின் பெயரைக் கூறி, காளிதாஸனுடைய வாக்கில் ஈடுபட்ட தனக்கு வேறொன்றிலும் மனது செல்லவில்லை என்கிறார்.[2] இவர் பீமதேவர், வீஸலதேவர் இவர்களின் ஸபையில் இருந்தனர். இவரது காலம் கி பி. 1179–கி. பி. 1262 என்பர். ஆகவின் பதின்மூன்றாம் நூற்றாண்டில் இருந்த கவிகளுள் இவரும் ஒருவர்.

அபயதேவன்[3].—இவர் ஜைனர்களுள் சிறந்த கவி. பத்மேந்துமுனிராஜனின்[4] சிஷ்யர். ஜயந்தவிஜயம்[5] என்ற மஹாகாவ்யத்தை 19 ஸர்க்கங்களில் இயற்றியுள்ளார். "விக்ரம

—

अभूदभिधया लक्ष्मीः साक्षाल्लक्ष्मीरिव क्षितौ ।
आदिमः प्रशममन्दिरं महादेव इत्यभिधया तदङ्गभूः ।
सोमेश्वरदेव इति क्षितिदेवस्यास्य बन्धुरनुजन्मा ॥ (15, 40-42)

1. सुरथोत्सवः
2. श्रीकालिदासस्य वचो विचार्य नैवान्यकाव्ये रमते मतिर्मे । (1, 35)
3. अभयदेवः
4. पद्मेन्दुमुनिराजः
5. जयन्तविजयम्

ஸிமமன எனற அரசன வெகுநாள புதரோதஸவததை அனுப வியாது பஞசபரமேஷடிகளின நமஸகாராதிகளால[1] ஜயநதன எனற மகனை அடைநதான, அவன திகவிஜயம முதலியன செயய, அவனுடைய குணாதிசயஙகளைக கேட்டு வைரஸிம மனின[2] மகள ரதிஸுநதரீ[3] எனபவள ஸவயமவரததில அவனை மணநதாள" எனபது இககாவயததின வஸது ஈணடு ருதுக கள, சநதரோதயம, ஜலகரீடை முதலியன நனகு வாணிககப படுகினறன சுவை நனகு படிப்போரால அனுபவிககபபடு மாறு எளிய நடையில இநநூல எழுதபபடடது சில கருத துககள புதிதாய உளளன[4] அஙகிச்சுவை சருஙகாரமே ஆகும் வீரம முதலியன அஙகசசுவைகளாக இருககினறன இநநூலை கி பி 1221-இல இககவி இயறறினா எனபா ஆகலின இவரும பதினமூனறும நூறறாணடில இருநத கவி களுள ஒருவா ஆகும.

1 नमस्कार पर तत्र श्रीपञ्चपरमेष्ठिनाम् ।
प्रयात्यनन्यसामान्ययानपात्रसगोत्रताम् ॥ (3, 2)

2 वैरसिंह.

3. रतिसुन्दरी

4 वश्य स्वकान्तोऽपि स धावति स्म सापायसङ्गासु पराङ्गनासु ।
किं केतकीषु स्फुरत्कण्टकासु न याति जाती परिहाय भृङ्ग ॥ (6, 3)

यत्र यत्र सुकुमारपुङ्गव सञ्चचार सुभगाग्रणी पथि ।
तत्र तत्र तमनङ्गविभ्रमात्पूजयन्ति नयनोत्पलै स्त्रिय ॥ (7, 21)
धन्य धन्य न तरोर्यथोचितै श्लाघ्यपुष्पफलपत्रसञ्चयै ।
रामणीयकविशेषनाटके सूत्रधारपदवीं दधौ मधु ॥ (7, 55,)

ஸ்ரீவீரநந்தி[1] —இக்கவி ஜைநமதத்தைச் சேர்ந்தவர். இவரது ஆசிரியர் அபயநந்தி[2] என்பவர். இவர் சந்த்ரப்ரபசரிதம்[3] என்ற நூலை இயற்றினர். இங்கு ஜிநேந்த்ரப்ரபரின் சரிதத்தை[4] வர்ணிக்கின்றனர். ஈண்டு 18 ஸர்க்கங்கள் உள. இறுதியில் கவி தனது குருபரம்பரையைப் பற்றிக் கூறுகின்றார் 18 ஸர்க்கத்தில் ஜைனக்கொள்கைகளை விரிவாய்க் கூறுகின்றனர்; முன் ஸர்க்கங்களிலும் ஆங்காங்கு அவற்றைக் கூறுகின்றார். மகப்பேறு இல்லாது அரசனும் அரசியும் வருந்துதல், ஜலக்ரீடை, அரசன் நகரத்தில் நுழையும்போதுள்ள பெண்டிரின் நிலை முதலியவற்றை இக்கவி வர்ணிக்கும்போது காளிதாஸனின் ரகுவம்சத்தையே மனத்திற் கொண்டிருந்தாரோ எனத் தோற்றுகின்றது[5]. சிலவிடத்தில் சில ச்லோகங்கள் ஆங்குள்ளவற்றைப்

1. श्रीवीरनन्दी
2. अभयनन्दी
3. चन्द्रप्रभचरितम्
4. शब्दार्थसुन्दरं तेन रचितं चारुतेजसा ।
   श्रीजिनेन्दुप्रभस्येदं चरितं रचनोज्ज्वलम् ॥ [प्रशस्तिः 5]
5. विविक्षुरर्हच्चरितं तदल्पधीर्ध्रुवं न यास्यामि न हास्यतां सताम् ।
   (चन्द्रप्रभचरितम् 1, 9)

   तथापि तस्मिन्गुरुसेतुवाहिते सुदुष्प्रवेशेऽपि पुराणसागरे ।
   यथात्मशक्ति प्रयतोऽस्मि पोतकः पथीव यूथाधिपतिप्रवर्तिने ॥ (1, 10)
   अथ प्रजाना नयनाभिरामो लक्ष्मीलतालिङ्गितसुन्दराङ्गः ।
   वृद्धिं स पद्माकरवत्प्रपेदे दिनानुसारेण शनैः कुमारः ॥ (4, 1)
   रघुवंशे 1, 3 and 4; 4, 1.

போல உள்ளன. ஆயினும் நடை மிகவும் சிதிலமாய் இருத்தலின், அதனைப் பாஞ்சாலி என்றே கூறலாம்[1] சில வர்ணனை புதுமுறையில் உளது[2] அங்கிச்சுவை சாந்தம் எனினும், சருங்காரம் சில ஸர்க்கங்களில் விரிவாய் உணர்த்தப்பட்டது, வீரமும் அங்கச்சுவையாய் விளங்குகின்றது இவர் பதின்மூன்றும் நூற்றாண்டில் இருந்திருத்தல் கூடும் என்பர்

அமரசந்த்ரஸூரி[3]—இக்கவி ஜைனமதத்தைச் சார்ந்த ஜிநதத்த ஸூரியின்[4] சிஷ்யர் இவர் பாலபாரதம், பத்மாநந்தமஹாகாவ்யம்[5] என்ற மஹாகாவ்யங்களை இயற்றினர் முன் நூல் மஹாபாரதக்கதையை ஒட்டியது அந்நூலுள் மயிர்முடிவைக

1 अर्थं धर्माय सेवन्ते काम सन्तानवृद्धये ।
यत्र न व्यसनाल्लोका परलोकक्रियोद्यता ॥ (2, 119)
न नव वयो व्यसनवर्गहत न जरा मतिस्मृतिविमोहहता ।
न हता गुणा मलिनदोषगणैर्न च यत्र मृत्युरपमृत्युहत ॥ [5 9]
न जहाति पुमान्कृतज्ञतामसुभङ्गेऽपि निसर्गनिर्मल ।
रविणा गमित समुन्नतिं सह तेनास्तमियाय वासर ॥ (10 13)
विपत्सम्पदि जागर्ति जरा जागर्ति यौवने ।
मृत्युरायुषि जागर्ति वियोग प्रियसङ्गमे ॥ (15 135)

2 माधुर्यमिच्छुरतिशायि परिग्रहीतु
चूताङ्कुरप्रसनजातकषायकण्ठ ।
मूकीभवन्परभृता निरहोऽपि नूनम्
आकर्णयिष्यति तवानलगात्रि वाणीम् ॥ (8, 15)

3 अमरचन्द्रसूरि

4 जिनदत्तसूरि

5 पद्मानन्दमहाकाव्यम

கத்தியாக வர்ணித்தமையால் இக்கவிக்கு வேணீக்ருபாண:[1] என்ற பெயரும் உண்டு. பத்மாநந்தமஹாகாவ்யத்திற்கு ஜிநேந்திரசரிதம்[2] என்ற மற்றொரு பெயரும் உண்டு. இதனுள் 19 ஸர்க்கங்கள் உள. 24 தீர்த்தங்கரர்களைப்பற்றி இங்கு வர்ணிக்கப்பட்டது. அங்கிச்சுவை சாந்தம்; ச்ருங்காரம் முதலியன அங்கச்சுவைகள் ஆகும்.

காலம்—இக்கவியின் ஆசிரியராகிய ஜினதத்தஸூரியால் கி. பி. 1220 இல் இயற்றப்பட்ட விவேகவிலாஸம்[3] என்ற நூல் பதினைன்காம் நூற்றாண்டினரான மாதவாசார்யரால் குறிக்கப் பட்டமையால், இவர் பதின்மூன்றாம் நூற்றாண்டினர் எனக் கூறல் தகும்.

பாலசந்த்ரஸூரி.[4]—முஞ்சாலன்[5] என்ற பிராம்மணன் ஜைநாசார்யரான ஹரிபத்ரஸூரியின்[6] சிஷ்யராய்ப் பாலசந்த்ரன் என்ற பெயருடன் விளங்கினர். அவர் எழுதிய நூல் வஸந்த விலாஸமஹாகாவ்யம்[7] என்பது. வீரதவளன் என்ற சளுக்ய வரசனின் மந்திரியான வஸ்துபாலனின் சரிதம் இந்நூலில்

1. वेणीकृपाण:
2. जिनेन्द्रचरितम्
3. विवेकविलास:
4. बालचन्द्रसूरि:
5. मुञ्जाल:
6. हरिभद्रसूरि:
7. वसन्तविलासमहाकाव्यम्

வர்ணிக்கப்பட்டது.[1] வஸ்துபாலனுக்கு வஸந்தன் என்ற மற்ெறாரு பெயரும் உண்டு.[2] அக்காரணம்பற்றியே இந்நூல் வஸந்தவிலாஸம் என்ற பெயரை அடைந்தது. வஸ்துபாலனின் மகனான ஜைத்ரஸிம்மனின் விநோதத்திற்காக[3] இஃது எழுதப் பட்டது. இதனுள் 14 ஸர்க்கங்கள் உள.

இந்நூலுள் வஸ்துபாலனின் வீரச்செயல், தர்மச்செயல் இவை நன்கு வர்ணிக்கப்பட்டன. மூன்று ஸர்க்கங்களில் ருதுக்கள், ஜலக்ரீடை, ஸூர்யோதயம், சந்த்ரோதயம் இவை வாணிக்கப்பட்டன. ஆயினும் தாமச்செயலின் வர்ணனையே சிறப்புற்று விளங்குகின்றது. ஆகலின் இந்நூலுள் சாந்தம் அங்கிச்சுவை என்றும், வீரமும் ச்ருங்காரமும் அங்கச்சுவை என்றுங் கூறல் தகும். நடை மிகவும் எளிதாய் இருக்கிறது' பழைய கருத்துக்கள் புதுமுறையாகக் கூறப்பட்டன.[4]

காலம்.—வஸ்துபாலன் பதின்மூன்றும் நூற்றுண்டின் இறுதியில் இறந்தமையாலும், இந்நூல் அவனது மகனின் காலத்தில் இயற்றப்பட்டமையாலும், இந்நூலின் காலம் பதி ன்காம் நூற்றுண்டின் முறபகுதி என்னலாம்.

1. श्रीवीरपूर्वो धवलः क्षितीन्दुरस्याभवत्सूनुरनूनतेजाः (3, 46)
तावलञ्चक्रतुरुभौ राज्यं चौलुक्यभूपतेः (4, 2)
2. अथादितीर्थेशमुपत्यकापुरीवतंसमभ्यर्च्य वसन्तसंज्ञितः । (13, 1)
3. श्रीवस्तुपालाङ्गभुवो नवोक्तिप्रियस्य विद्वज्जनमज्जनस्य ।
श्रीजैत्रसिंहस्य मनोविनोदकृते महाकाव्यमुदीर्यते ह (1, 75)
4. क्षत्रियाः कलियुगेन दूषिताः सर्वतोऽपि न तु मामकः प्रभु ।
कालतोऽप्यखिलधातुजित्वरी श्यामिका न कनकस्य जायते ॥ (10, 7)
पापकालकलिकालसङ्गतोऽप्येति नैव विकृतिं कृती जनः ।
उत्कठोररवकाकपोषितः क्वापि कूजति कटूनि कोकिलः ॥ (10, 7-8)

வாஸுதேவன்.—இவர் இயற்றிய நூல் நளோதயம் என்பது. இதனுள் நான்கு ஸர்க்கங்கள் உள. யமகம் அநுப்ராஸம் இவற்றுடன் செய்யுள் செய்யும் சக்தியை இக்கவி காட்டுகின்றனர்.[1] இதனைச் சித்ரகாவ்யம் எனலாம். சரித்திரகாவ்யம் என்பாரும் உளர்; ஆனல் இதனின்றும் அறியப்படும் சரித்திரப்பகுதி மிகச் சிறிதே ஆகும். இந்நூலைக் காளிதாஸன் இயற்றினன் எனச் சிலர் கூறுவர். அது தவறு என்பது இந்நூலைப் படித்தால் விளங்கும். இவருடைய காலம் தெளிவாய அறியப்படவில்லை.

வேங்கடநாதர்[2]—இவர் வேதாந்ததேசிகர்[3] என்ற பெயராலும் வழங்குவர். இவர் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர்[4] கவிதார்க்கிக ஸிம்மர்[5] என்ற பட்டமும் அடைந்தனர். இவரது தகப்பனார் அனந்தஸூரி; தாயார் தோதாம்பா; இவர் காஞ்சீபுரத்தின் அருகிலுள்ள தூப்பல் என்ற ஊரில் கி. பி. 1268 இல் பிறந்தார்; தமது தாய்மாமனாகிய ஆத்ரேய-ராமாநுஜரிடம் கல்வி கற்றனர். திருவஹீந்த்ரபுரம் ஸ்ரீரங்கம் இவ்விடங்களில் சிலகாலம் வசித்தனர். இவரே ஸ்ரீவைஷ்ணவர்களுள் வடகலைஸம்பிரதாயக் கர்த்தா ஆகினர். விசிஷ்டாத்வைதநூல்களை நூற்றுக்கு மேல் இயற்றினர். மதக்கொள்கைகளில் இவர் ஈடுபட்டிருந்தபோதி

1. अहितानामायस्य त्राता यः शरणगामिनामायस्य ।
   गननानामायस्य सून: पिता वीरसेनतामयस्य ॥ (1, 13)
   अयि मवने त्रायस्व स्वभुवं पुष्कर मुदं जनेऽत्राऽश्यस्व ।
   युगयलनेत्राय स्वस्नेहाय पुरेव विमलनेत्राय स्वः ॥ (4, 41)
2. वेङ्कटनाथः
3. वेदान्तदेशिकः
4. सर्वतन्त्रस्वतन्त्रः
5. कवितार्किकसिंहः

ஆம் இராமாயணம் மஹாபாரதம் காளிதாஸனின் நூல்கள் கிராதார்ஜுனீயம் முதலிய நூல்களில் ஈடுபட்டிருந்தனர் என்பது இவருடைய ஹம்ஸஸந்தேசம்,[1] யாதவாப்யுதயம்[2] என்ற நூல்களால் நன்கு அறியப்படுகின்றது.

ஹம்ஸஸந்தேசம்.—ஹநூமான் இலங்கைக்குச் சென்று ஸீதையைக் கண்டதை இராமனுக்குக் கூறிய பின்னர் இராமன் கிஷ்கிந்தையிலிருந்து ஸீதைக்கு அன்னத்தைத் தூது விடுவதாக இந்நூல் கூறும். இது கருத்திலும், சொற்பிரயோகத்திலும், வருத்தத்திலும் காளிதாஸனின் மேகஸந்தேசத்தைப் பின்பற்றியது. இங்குத் திருப்பதி, காஞ்சி, ஸ்ரீரங்கம் இவற்றின் வர்ணனை உள்ளது. இந்நூலில் அங்கிச்சுவை விப்ரலம்பசருங்காரம் எனவே கூறல் வேண்டும். இங்கு இரண்டு ஆச்வாஸமும் 110 ச்லோகங்களும் உள.

யாதவாப்யுதயம்.—இந்நூல் கிருஷ்ணனுடைய சரிதையைக் கூறுகின்றது.[3] இது 24 ஸர்க்கங்களைக்கொண்ட ஒரு மஹா காவ்யம்.[4] பெரும்பாலும் நடை எளிதாய் உள்ளது.[5] சிற்சில

1. हंससन्देशः

2 यादवाभ्युदयम्

3 वक्ष्ये विबुधजीवातुं वसुदेवसुतोदयम् । (1, 8)

4 Yādavabhyudaya Vol 1, Vani Vilas Edn. Preface.

5 चरमतश्च ऋणादिव देवकी-
पतिरमुच्यत शृङ्खलत स्थिरात् ।
निखिलबन्धनिवर्तकसन्निधौ
विगलन निगलस्य किमद्भुतम् ॥ (3, 11)

இடங்களில் சப்தசித்ரம் உள்ளது.[1] நூல் முழுதும் பக்தி ததும்புகிறது. அங்கிச்சுவை சாந்தம் எனக் கூறல் தகும். வீரம் முதலியன அங்கமாகவே உள்ளன.

காலம் —வேதாந்ததேசிகரது காலம் கி. பி. 1268—1369. ஆகலின் ஹம்ஸஸந்தேசம், யாதவாப்யுதயம் இரண்டும் பதின் மூன்றும நூற்றாண்டின் இறுதியிலோ பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ இயற்றப்பட்டிருக்கவேண்டும்.

யாதவாப்யுதயத்திற்கு முதன்முதலில் உரை எழுதியவர் அப்பையதீக்ஷிதர். சின்னதிம்மராஜனின் தூண்டுதலால் அவர் உரை எழுதியதாகக் கூறுகின்றார்.[2] அதன் பின்னர்ப் பல தெங்கலையாசாரியர்கள் உரைகள் எழுதியதாகக் கூறுவர்.

स लीलया मेरुमिव द्वितीयं
गोवर्धनं गोपकुलप्रदीपः ।
नवप्ररूढं निहितैकहस्तो
नागो नलस्तम्बमिवोज्जहार ॥ (7, 48)

निशेव चन्द्रेण घनात्यपाये
नैसर्गिकी बुद्धिरिव श्रुतेन ।
फलेन सा नीतिरिवाप्रमादा
युक्ता बभौ नूतनयौवनेन ॥ (12, 24)

1. धीर धीरधुराधारी धाराधरधरोऽधरे ।
राधोधरारोधरोधिधाराधारो धराधरः ॥ (6, 81)

2. श्रीचिन्नतिम्मराजः प्रतापनीराजितक्ष्मावलयः ।

... ... ...

यादवाभ्युदयं काव्यमश्रौषीद्विदुषा मुखात् ।

... ... ...

विदुषा पुरतस्तस्य विवृतौ मा न्ययोजयत् ।

அகஸ்த்யபண்டிதன்.[1]—இவர் ப்ராதபருத்ரனின்[2] ஸபையில் இருந்தவர். இவர் பாலபாரதம்[3] என்ற மஹாகாவ்யத்தை 20 ஸர்க்கங்களில் எழுதியுள்ளார். இந்நூல் த்ராக்ஷாபாகத்தில் இயற்றப்பட்டது.[4] இவருடைய புலமையைப் போற்றிக்கூறுகின்றனர் ராஜசூடாமணி தீக்ஷிதர்.[5] இவர் 74 நூல்களை இயற்றினர் என மதுராவிஜயம்[6] இயற்றிய கங்காதேவி[7] கூறுகின்றாள்.[8] இவருடைய பாண்டியத்யத்தைக் கண்டு மெச்சிப் ப்ரதாபருத்ரதேவன் இவர்க்கு வித்யாநாதன்[9] என்ற பட்டத்தைச் சூட்டினன்.

1. अगस्त्यपण्डितः
2. प्रतापरुद्रः
3. बालभारतम्
4. अथापगासूनुरभाषितोच्चैः
   शृण्वन्तु सर्वेऽपि मम प्रतिज्ञाम् ।
   यावन्मयेदं भ्रियते शरीरं
   तावद्भविष्याम्यहमूर्ध्वरेताः ॥ (1, 67)
5. जडाशयाना हृदयं जगत्या
   यस्योदयाद्यातितमा प्रसादम् ।
   स एव सारस्वतमर्मवेदी
   विभाति मौलौ विदुषामगस्त्यः ॥
   [राजचूडामणिदीक्षितकृतरुक्मिणीकल्याणे 1. 18)
6. मधुराविजयम्
7. गङ्गादेवी
8. चतुःसप्ततिकाव्योक्तिव्यक्तवैदुष्यसम्पदे ।
   अगस्त्याय जगत्यस्मिन् स्पृहयेत्को न कोविदः ॥ [वीरकम्परायचरिते]
9. विद्यानाथः

காலம்.—கி. பி. 1292–1323 இல் ஆண்ட ப்ரதாபருத்ரனால் இக்கவி போற்றப்பட்டவராகலின் இவரது காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும்.

வாமனபட்டபாணன்.[1]—இவர் இயற்றிய நூல் நளாப்யுதயம்[2] என்பது. எளிய நடையில் இஃது உளது.[3] நளனுடைய சரிதம் வர்ணிக்கப்பட்டுளது. தற்போது எட்டு ஸர்க்கங்களும் ஒன்பதாம் ஸர்க்கத்தில் மூன்று ச்லோகங்களே அச்சில் உள்ளன.

காலம்.—இவர் வேமபூபாலனின் காலத்தவர் என்றும் அக்காரணம்பற்றிப் பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தார் என்றும் கூறுவர்.[4]

வித்யாரண்யர்.[5]—பதினான்காம் நூற்றாண்டில் வேதபாஷ்யங்கள் இயற்றிய இவர் சங்கரவிஜயம்[6] என்ற நூலை இயற்றியதாகக் கூறுவர். அத்வைதமதத்தைப் பாரதவர்ஷத்திற் பரவச்

1. वामनभट्टबाणः

2. नलाभ्युदयः

3 न चाश्विनौ नापि च पुष्पबाणं
न चापि साक्षादरविन्दनाभम् ।
सुजातमूर्तेर्निषधाधिपस्य
रूपप्रतिद्वन्द्वितया प्रतीमः ॥ (1, 14)
वाञ्छा यदि स्यान्मम जीविते ते
पत्युर्यतेथाः परिमार्गणाय ।
निवेदयेथा जनकाय मे त्वं
सञ्चिन्तयेदेष तदभ्युपायम् ॥ (8. 47)

4. Preface to Nalabhyudaya by T. Ganapati Sastriar.

5. विद्यारण्यः  6. शङ्करविजयः

செய்த சங்கராசாரியரின் சரிதத்தை இந்நூல் கூறுகின்றது. இதனுள் 16 சர்க்கங்கள் உள. இதன் நடை புராணச்சாயையில் உள்ளமையால் இதனைக் காவ்யம் எனக் கூறுதலும் பொருந்தாது. அவரது காலத்திற்கு முன் இருந்த தண்டி, பாணன் முதலியோருடனும்,[1] அவர்களுக்குப் பின்னர் இருந்த உதயனாசாரியர், அபிநவகுப்தர், கண்டனகாரராகிய ஹர்ஷர்,[2] நேரில் சங்கராசாரியர் நீலகண்டாசாரியர் முதலியோருடனும் வாதம் செய்ததாகக் கூறப்பட்டமையான் இந்நூலைச் சரிதநூல் அக்காரணம் பற்றியே இந்நூலை எனவும் கூறல் தகாது.

1 स कथाभिरवन्तिषु प्रसिद्धान्
विबुधान्बाणमयूरदण्डिमुख्यान् ।
शिथिलीकृतदुर्मताभिमानान्
निजभाष्यश्रवणोत्सुकांश्चकार ॥ (15 41)

2 अभिभूय मुरारिमिश्रवर्यं
सहसा चोदयनं विजित्य वादे । (15 62)
स हि खण्डनकारमूढदर्पं
बहुधा व्युच्य वशंवदं चकार । (15, 57)
तदनन्तरमेव कामरूपान्
अधिगत्याभिनवोपशब्दगुप्तम् ।
अजयत्किल शाक्तभाष्यकारं
स च भग्नो मनसेदमालुलोचे ॥ (15, 58)
हरदत्तसमाह्वयोऽधिगम्य
स्वगुरुं सङ्गिरते स्म नीलकण्ठम् ।
भगवानिह शङ्कराभिधानो
यतिरागत्य जिगीषुरार्यपादान् ॥ (15, 33-34)

வித்யாரண்யர் எழுதவில்லையோ என்ற ஐயம் உண்டாகின்றது. ஒருக்கால் அவரது நூலைச் சுருக்கிப் பின்னர் ஒருவர் இக் குறைகளோடு இயற்றினரோ என்ற ஐயத்தை முதல் ஸர்க்கத்து முதல் ச்லோகத்துள்ள வித்யாதீர்த்தரூபிணம் என்ற சொல் உண்டாக்குகின்றது.[1]

கங்காதேவி.[2]—இப்பெண்மணி புக்கராஜனின்[3] மூத்த மைந்தனாகிய கம்பனனின்[4] மனைவியருள் ஒருத்தி. காவ்யங்களை அவள் நன்கு படித்தவள் என்பது காளிதாஸன் முதலிய கவிகளைப் பற்றி அவள் கூறுதலால் விளங்கும். அவற்றுள் ஈடு பட்டமையால் தன் கணவனின் சரிதத்தைக் காவ்யமாக இயற்றினள் என்னலாம். அதற்கு மதுராவிஜயம்[5] எனப் பெயர்; வீரகம்பராயசரிதம்[6] என மற்றொரு பெயரும் உண்டு. தற்போது

1. प्रणम्य परमात्मानं श्रीविद्यातीर्थरूपिणम् ।
प्राचीनशङ्करजये सारः सङ्गृह्यते स्फुटम् ॥ (1, 1)
2. गङ्गादेवी
3. बुक्कराजः
4. कम्पनः
5. तन्मदीयमिदं काव्यं विबुधाः श्रोतुमर्हथ ।
मधुराविजयं नाम चरितं कम्पभूपतेः ॥ (1, 25)
6. वीरकम्परायचरितम् (வீரகம்பனராயசரிதம் என்பது வீரகம்பராய சரிதம் என வழங்கியது போலும்; ராஜ என்ற வடசொல் ப்ராக்ருதத்தில் ராய என வழங்கும்;
Cf. आकम्पयिष्यत्ययमेकवीरः
सङ्ग्रामरङ्गे सकलानरातीन् ।
इत्येव निश्चित्य स दीर्घदर्शी
नाम्ना सुतं कम्पन इत्यकार्षीत् ॥ (2, 34)

இராமன் மால்யவான்பர்வதத்தை வர்ணித்தலும் மனத்தைக் கவர்கின்றன. லோகோக்திகளுள் சில அழகாய்க் கூறப்பட்டன.[1] அங்கிச்சுவை வீரம்; அங்கச்சுவை விப்ரலம்ப சிருங்காரம். சொற்பிரயோகங்களும் நடையும் வெகு அழகாய் இருக்கின்றன

காலம்—மல்லிநாதர் பதினைந்தாம் நூற்றாண்டில் இருந்தாராகலின், இந்நூல் அந்நூற்றாண்டு நூல் எனக் கூறின் தவறாகாது.

ஸ்ரீவரன்[2].—இக்கவி கதாகௌதுகம்[3] என்ற காவ்யத்தை இயற்றினர். இந்நூல் முல்லா-ஜாமீ-நூருத்தீன்-அப்துர்-ரஹ்மான் இயற்றிய யூஸுப-ஜுலேகாவின் மொழிபெயர்ப்பு. இங்கு 15 கௌதுகங்கள் உள. 14 கௌதுகங்களில் சிருங்கார ரஸமும், பதினைந்தாவதில் சாந்தரஸமும் உணர்த்தப்பட்டன. காச்மீரதேசத்து கவிகளின் வாக்கைப்போல் இக்கவியின் வாக்கும் எளிய நடையில் உள்ளது.[4] இக்கவி இந்நூலை கி. பி. 1451-இல் இயற்றினர். இவரே ஜோனராஜருக்குப் பின்னர் ஜைனராஜதரங்கிணி இயற்றியுள்ளார்.

1. सहायवन्तं पुरुषं प्रकृत्या चलाप्युपास्ते नियमेन लक्ष्मीः । (6, 22)
अल्पेनापि निमित्तेन सौभ्रात्रं भिद्यते नृणाम् ।
पुनस्तत्प्रतिसन्धानं महतापि न लभ्यते ॥ (8, 86)
शीलव्यसनसाम्ये हि पुंसां सख्यं प्रशस्यते । (8, 112)
फलन्ति चेत् स्वामिगुणाः समस्ताः क्रिया विमूढा यदि भृत्यदोषः । (12, 26)

2. श्रीवरः

3. कथाकौतुकम्

4. सापि तं रमणं श्रेष्ठं प्राप्य भूपालनन्दिनी ।
अमन्यतैकमात्मानं लोके जन्मभृतां वरम् ॥ (14, 58)

பதிப்பிக்கப்பட்டதில் ஒன்பது ஸர்க்கங்கள் உள. முதல் மூன்று ஸர்க்கங்களில் புக்கராஜனின் சிறப்பு, அவனது மனைவி காம்பமாம்பிகை மகனைப் பெற்ற நிலை, கம்பனின் இளமைப்பருவம் முதல் யௌவனப்பருவம் முடிய கூறப்பட்டன. நான்கு, எட்டு, ஒன்பது இம்மூன்று ஸர்க்கங்களும் கம்பனனின் போர்ச் செயல்களைப் பற்றின. ஐந்து, ஆறு, ஏழு இவை ருதுக்கள், ஜலக்ரீடை, ஸூர்யாஸ்தமனமும் சந்த்ரோதயமும் இவற்றைப் பற்றின. சில சரிதப்பகுதிகளை வஸ்துவாகக் கொண்டு இக்காவ்யத்தைக் கங்காதேவி எழுதினள் என்பது வெளிப்படை. இங்கு வீரம், ச்ருங்காரம் இரண்டு சுவைகளும் வர்ணிக்கப்பட்டன. முன்னர் வீரம், பின்னர் ச்ருங்காரம், அதன் பின்னரும் வீரம் உணர்த்தப்பட்டமையால் வீரமே ஒருவாறு அங்கிச்சுவை என்னலாம். நடை எளிதாய் உள்ளது. இதனைச் சரிதகாவ்யம் என்பர

காலம்.—இங்கு வர்ணிக்கப்பட்ட புக்கராஜன் கி. பி. 1350–79இல் இருந்ததாகக் கூறப்பட்டமையால், இந்நூல் பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது ஆகும்

மல்லிநாதன் [1]—இவர் ரகுவீரசரிதம் [2] என ஒரு காவ்யத்தை பதினாறுகவடியில் மேனாட்டறிஞர் [3] ஒருவர் குறித்திருக்கின்றனர். திருவனந்தபுரத்தில் பதிப்பித்துள்ள ரகுவீரசரிதம் அம் மல்லிநாதரால் இயற்றப்பட்டிருக்கலாம் எனக் கணபதி சாஸ்திரியார் கூறினர். அதனுள் 17 ஸர்க்கங்கள் உள. இராமன் காட்டில் ரிஷிகளைக் காணுவது முதல் பட்டாபிஷேகம் முடிய அதனுள் வர்ணிக்கப்பட்டது. ரிஷிகள் பாலகாண்டகதையைச் சுருக்கமாய்க் கூறுவதும், ஹநுமான் பம்பைக்கரையில் இராமலக்ஷ்மணர்களின் ஸாமுத்ரிகாலக்ஷணங்களைக் கூறுவதும்,

1. मल्लिनाथः
2. रघुवीरचरितम्
3. Catalogus Catalagorum by Dr. Aufrecht.

அதர்வவேதத்திலிருந்தும் அவர் கொண்டனர். அதற்கு நாட்ய வேதம் எனப் பெயர். அதனை நடிக்கத் தேவர்களால் இயலாமையான், பரதமுனிவரைத் தன் நூறு புதல்வரைக் கொண்டு நடிக்கும்படி பிரும்மா ஏவினார். முதலில் அம்ருத பந்தனம்[1] பரதரால் பிரும்மாவின் முன்னர் நடிக்கப்பட்டது. பின்னர் த்ரிபுரதாகம்[2] சிவபிரானின் முன்னர் நடிக்கப்பட்டது. நாட்யத்தில் அபிநயங்கள் ஆங்கிகம், வாசிகம், ஆஹார்யம், ஸாத்விகம் என நால்வகைப்படும்.[3]

தர்மீ நாட்யதர்மீ, லோகதர்மீ என இருவகைப்படும்.[4] வ்ருத்தி பாரதீ, ஸாத்வதீ, கைசிகீ, ஆரபடீ என நால்வகைப்படும்[5] ரஸத்தின் ஸ்வரூபம் விபாகம் முதலியன விரிவாய்க் கூறப்பட்டன.[6] நாடகத்தில் வழங்கப்படும் அலங்காரங்கள் உபமை, ரூபகம், தீபகம், யமகம் என்பன.[7] காவ்யதோஷங்கள் பத்து[8]; காவ்யகுணங்கள் பத்து.[9] நாடகத்தில் ஸந்திகள் ஐந்து.[10] த்ருச்யகாவ்யம் நாடகம், ப்ரகரணம், அங்கம், வ்யாயோகம்,

1. ततोऽस्म्युक्तो भगवता योजयामृतबन्धनम् । (*ibid* 4, 2)
2 तथा त्रिपुरदाहस्य डिमसंज्ञः प्रयोजितः । (*ibid* 4, 10)
महादेवश्च सुप्रीतः पितामहमथाब्रवीत् । (*ibid* 4, 11)
3. *ibid* 6, 23.
4. *ibid*. 6, 24.
*Cf*. நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
..... ... . .. ...... (தொல்காப்பியம். அகத். 53)
5. *ibid*. 6, 24.
6. *ibid*. 6 and 7 அத்.
7. *ibid*. 17, 43.
8. *ibid*. 17, 88.
9. *ibid*. 17, 96.
10. *ibid*. 19, 37.

பாணம், ஸமவகாரம், வீதீ, ப்ரஹஸனம், டிமம், ஈஹாம்ருகம் என்பப் பத்து வகைப்படும்[1] நாயிகைகள் எட்டு வகைப்பட்டனர்[2] சருங்காரம், ஹாஸ்யம் இச்சுவைகளில் கைசிகீ வருத்தி, வீரம், ரௌத்ரம், அத்புதம் இச்சுவைகளில் ஸாத்வதீ வருத்தி, பயானகம், பீபத்ஸம் இவற்றில் ஆரபடீ வருத்தி, கருணம், அத்புதம் இவற்றில் பாரதீ வருத்தி[3] உலகம் வேதம் இவற்றால் ப்ரஸித்தமாயும், வியங்கியப்பொருளைக் கொண்டதாயும் எல்லா ஜனங்களாலும் அறியக்கூடியதாயும் உள்ள சொற்கள் நாடகங்களில் வழங்கப் படவேண்டும்[4]

இவற்றை நோக்கின் கி மு மூன்றும் நூற்றுண்டிற்கு முன்னரே பலவகைப்பட்ட த்ருச்யகாவ்யங்கள் இருந்திருத்தல் வேண்டும் கம்ஸவதம் நடிக்கப்பட்டதைப் பதஞ்சலி கண்டதாகக் குறிக்கின்றனர்[5]

இவற்றையெல்லாம் நோக்கின் வேதங்களுக்கும் நாடகங்களுக்கும் ஒரு ஸம்பந்தமும் இல்லை என்பது வெளிப்படை

1 नाटक सप्रकरणमङ्को व्यायोग एव च ।
भाण समवकारश्च वीथी प्रहसन डिम ॥
ईहामृगश्च विज्ञेय दशम नाट्यलक्षणम् । (नाट्य 20 2 3)

2 *ibid* 24 204

3 नाट्यशास्त्रे 22 65 66)

4 तस्माद्गम्भीरार्था शब्दा ये लोकवेदससिद्धा ।
सर्वजनेन ग्राह्या सयोज्या नाटके विधिवत् ॥ [नाट्य 27, 46]
இந்நூல் முதலில் நாடகங்கள் ப்ராக்ருதபாஷையில் எழுதப் பட்டன என்று லீவி (Levi) சொன்னதை ஆராய்ந்து குறிப்பது
(Sanskrit Drama by A B Keith p 45 6)

5 जघान कस किल वासुदेव under the question प्रयोक्तुर्दर्शन-विषये इति किमर्थम् (under III 2 111)

இவ்வாறிருக்க, ருக்வேதஸம்ஹிதையிற் காணப்படும் யமயமீ ஸம்வாதம், ஊர்வசி-புரூரவஸ்-ஸம்வாதம் முதலியன நாடகங்களின் உற்பத்திக்கு அடிப்படை என மேனாட்டறிஞர் கூறுவது[1] பொருந்தாது

நாட்யத்திலிருந்து நாடகம் வந்ததாக ஹில்லேப்ராண்ட்[2], ஸ்டேன் கோனோ[3] இருவருங் கூறினர்[4]; பொம்மலாட்டத்திலிருந்து வந்தது என்றனர் பிஷல்[5]; நிழலாட்டத்திலிருந்து வந்தது என்றனர் லீடர்ஸ்[6]. இக்கொள்கைகளுக்கெல்லாம் தக்க சான்று இல்லை என்றனர் கீத்

நாடகத்தில் உதவும் திரையைக் குறிக்க யவனிகா என்ற சொல் இருப்பதாலும், நாடகத்தை அங்கங்களாக கிரேக் நாடகங்களிற்போல் பிரித்திருப்பதாலும், ஸம்ஸ்கிருத நாடிகையைப்போல் கிரேக்கில் இருப்பதாலும், ஸூத்ரதாரனைப்போல கிரேக்நாடகங்களிலும் ஒருவன் இருப்பதாலும், ஸம்ஸ்கிருத நாடகங்களுக்கு மூலம் கிரேக்நாடகம் என்பர் விண்டிஷ்.[7] கிரேக்நாடகத்தில் திரை வழங்கப்படாமையாலும், ஏனைய ஒற்றுமைகள் இயற்கையாய் ஒன்றிலிருந்து ஒன்று கடன் வாங்காமல் வந்திருத்தல் கூடுமாகலானும் விண்டிஷ்ஷின் கொள்கை ஏற்றுக்கொள்ளத் தக்கது அன்று எனக் கீத் கூறினர்.[8]

1 A History of Sanskrit literature by A. A. Mac Donell p 346
  The Sanskrit Drama by A B. Keith p. 15-16
2. Professor Hillebrandt
3. Sten Konow
4. The Sanskrit Drama by A B Keith p. 49.
5. Pischel; The Sanskrit Drama by A. B Keith p. 52.
6 Lüders; The Sanskrit Drama by A. B Keith p. 53
7. Windisch
8. The Sanskrit Drama by A. B Keith p. 57-68

ஸம்ஸ்கிருதநாடகங்கள் இயற்றியதற்குச் சகா காரணம் என்பர் லேவி. அச்வகோஷரின் நூல்களிலிருந்து அவரது காலத்திற்கு வெகுநாள் முன்னரே நாடகங்கள் இருந்திருக்க வேண்டும் என அறியப்படுதலாலும், கனிஷ்கரது காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டாகையாலும், அவரது கூற்று பொருந்தாது என்றனர் கீத்[1].

நான்கு புருஷார்த்தங்களைப் பொதுமக்களுக்கு எளிதில் உணர்த்த ராமாயணம் மஹாபாரதம் இவற்றிலுள்ள பகுதிகள் நடிக்கப்படலாம் என்ற எண்ணமே நாடகத்தின் உற்பத்திக்குக் காரணம் என்னலாம்.

வகை.—ரூபகம் பத்துவகைப்படும் என முன்னரே கூறப் பட்டது. நாடிகை, த்ரோடகம் முதலிய பதினான்கு அல்லது பதினெட்டு உபரூபகங்களும் உள. அவற்றின் இலக்கணம் சுருக்கமாய்க் கூறுதல் தகும்.

நாடகம்.—நாடகத்துள் ஐந்துமுதல் பத்துவரை அங்கங்கள் உள.[2] ஸந்திகள் ஐந்தும் உள[3]; ச்ருங்காரமோ வீரமோ அங்கிரஸமாக இருக்கும்; ஏனைய அங்கமாய் இருக்கும். தேவதைகள், ருஷிகள், உதாத்தநாயகர்கள் இவர்களைப்பற்றிய சரிதம் வஸ்து ஆகும்.[4]

1. *ibid.* p. 69–70.
2. पञ्चावरा दशपरा ह्यङ्का स्युर्नाटके प्रकरणे च ।
3. मुखं प्रतिमुखं गर्भो विमर्शस्तथा हि ।
   तथा निर्वहणं चैव सन्धयो नाटके स्मृताः ॥ (*ibid* 2, 1, 37)
   तथाहि என்பதற்குப் பிரதியாக तदनन्तरम् என்ற பாடம் இருந்திருக்கலாம்.
4. महारसं महाभोगमुदात्तवचनान्वितम् । (*ibid* 21, 110)
   देवतानामृषीणां च राज्ञां लोकस्य चैव हि ।
   पूर्ववृत्तानुचरितं नाटकं नाम तद्भवेत् ॥ (*ibid* 21, 124)

ப்ரகரணம்.—இதனுள்ளும் ஐந்து முதல் பத்துவரை அங்கங்கள் உள.[1] ஸந்திகள் ஐந்தும் உள; வஸ்து உத்பாத்யம் ஆக இருக்கும்.[2] இது விப்ரன், வ்யாபாரி, ஸசிவன் இவர்களுடைய சரித்தைப்பற்றி இருத்தல்வேண்டும்.[3] குலஸ்த்ரீ, வேசி அல்லது இருவரும், இவருடைய சரிதமும் அங்கு இருக்கும்.[4] அங்கிச்சுவை ச்ருங்காரம்.

அங்கம்—இங்கு அங்கிச்சுவை கருணம். பெண்டிரின் அழுகை நிரம்பி இருக்கும். நன்கு அறியப்பட்டவஸ்துவைக் கொண்டிருக்கும்.[5] இங்கு இரண்டு ஸந்திகளே உள. வ்ருத்தி பாரதி ஆகும்.[6]

1. See footnote 2 in p 540
2 तत्प्रकरणेऽपि योज्यं केवलमुत्पाद्यवस्तु स्यात् । (ibid 20, 51)
3 विप्रवणिक्सचिवानां पुरोहितामात्यसार्थवाहानाम् ।
चरितं यदनेकविधं तज्ज्ञेयं प्रकरणं नाम ॥ (ibid 20, 52)
4. दासविटश्रेष्ठियुतं वेशस्त्र्युपचारकारणोपेतम् ।
मन्दकुलस्त्रीचरितं कार्यं काव्यं प्रकरणे तु ॥ (ibid 20, 54)
5 वक्ष्याम्यतः परमहं लक्षणमुत्सृष्टिकाङ्कस्य ।
प्रख्यातवस्तुविषयस्त्वप्रख्यातः कदाचिदेव स्यात् ॥
... ... ...
करुणरसप्रायकृतो निवृत्तयुद्धोद्धतप्रहारश्च ।
स्त्रीपरिदेवनबहुलो निर्वेदभाषितश्चैव ॥ (ibid 20, 96-9)
6 द्विसन्धि तु प्रहसनं वीथ्यङ्को भाण एव च ।
मुखनिर्वहणे स्यातां तेषां वृत्तिश्च भारती ॥ (ibid 21, 47)

வியாயோகம் — இங்கு அங்கம் ஒன்றே[1], ஸந்திகள் மூன்று அவை முகம், ப்ரதிமுகம், நிர்வஹணம் என்பன, கைசிகிவ்ருத்தி ஈண்டு இல்லை[2] நாயகன் உதாத்தபுருஷன்[3] பாத்திரங்கள் பெரும்பாலும் புருஷரே.[4] இங்கு அங்கிச்சுவை ஹாஸ்யம், ச்ருங்காரம், சாந்தம் இவை ஒழிந்த சுவையே ஆகும் என்பர்

பாணம் — இங்கு அங்கம் ஒன்றே[5] இங்கு ஒரே தூர்த்தன் விடன் பிறர் வார்த்தைகளைத் தானே ஆகாசபாஷிதமாகக் கூறி விடை கூறுவான்[6] இங்கு முகம், நிர்வஹணம் என்ற ஸந்திகளே உள வ்ருத்தி பாரதி ஆகும்[7]

ஸமவகாரம் — இங்கு மூன்று அங்கங்கள்[8], அவமர்சம் நீங்கிய நான்கு ஸந்திகள்[9], தேவாஸுரரைச்சேர்ந்த நாயகர்

1 & 3 व्यायोगस्तु विधिज्ञै कर्तव्य स्यातनायकशरीर (*ibid* 20 94)

2 व्यायोगेहामृगौ चापि निसन्धी परिकीर्तितौ ।
गर्भावमर्शो न स्याता न च वृत्तिस्तु कैशिकी ॥ (*ibid* 21, 45)

4. अल्पस्त्रीजनयुक्तस्त्वेकाहकृतस्तथा चैव ।
बहवस्तत्र च पुरुषा कविभि कार्या यथा समवकारे ॥
(*ibid* 20 94-5)

5 एकाङ्को बहुचेष्ट सतत कार्यो बुधैर्भाण (*ibid* 20 114)

6 आकाशपुरुषकथितैरङ्गविकारैरभिनयेत्तत् ।
धूर्तविटसम्प्रयोज्यो नानावस्थान्तरात्मकश्चैव ॥ (*ibid* 20 113-114)

7. द्विसन्धि तु प्रहसन वीथ्यङ्को भाण एव च ।
मुखनिर्वहणे स्याता तेषा वृत्तिश्च भारती ॥ (*ibid* 21, 47)

8 त्र्यङ्क . . (*ibid* 20 66)

9 डिम समवकारश्च चतु सन्धी प्रकीर्तितौ ।
न तयोरवमर्शस्तु कर्तव्य कविभि सदा ॥ (*ibid* 21, 46)

கள்; அவை பதின்மா; பதினெட்டு நாழிகையில் நடிக்கக் கூடியது தாமம், ஆரதம், காமம் இவற்றைக் காரணமாகக் கொண்ட மூவகைச்சிருங்காரம் உள.[1]

வீதீ.—இங்கு ஒரே அங்கம்; ஒன்றிரண்டு பாத்ரங்களை உடையது; எல்லா ரஸங்களின் லக்ஷணத்தைக் கொண்டது[2]; முகம நிர்வஹணம் என்ற இரண்டு ஸந்திகளை உடையது.[3]

ப்ரஹஸநம்.—இங்கு முகம நிர்வஹணம் இரண்டு ஸந்திகள் உள.[4] அங்கிச்சுவை ஹாஸ்யம். அது சுத்தம் ஸங்கீர்ணம் என இருவகைப்படும்.[5]

டிமம் —இங்கு அங்கங்கள் நான்கு. ச்ருங்காரம் ஹாஸ்யம் சாந்தம் இவை ஒழிந்த ஆறு ரஸங்களும் உண்டு; ஆனல் ரௌத்ரம் தான் அங்கிச்சுவை.[6] தேவா, அஸுரா, ராக்ஷஸா,

1. देवासुरबीजकृतं प्रख्यातोदात्तनायकश्चैव ।
त्र्यङ्कस्तथा त्रिकपटस्त्रिविद्रवः स्यात् त्रिशृङ्गारः ॥
द्वादशनायकबहुलो ह्यष्टादशनाडिकाप्रमाणश्च ॥ (*ibid* 20, 66-7)
2 वीथी स्यादेकाङ्का द्विपात्रहार्या तथैकहार्या वा ।
सर्वरसलक्षणाढ्या .... (*ibid* 20, 116, 7)
3. *ibid* 21, 47.
4. द्विसन्धि तु प्रहसनं वीथ्यङ्को भाण एव च ।
मुखनिर्वहणे स्यातां तेषां वृत्तिश्च भारती ॥ (*ibid* 21, 47)
5. प्रहसनमपि विज्ञेयं द्विविधं शुद्धं तथैव सङ्कीर्णम् । (*ibid* 20, 106)
6. षड्रसलक्षणयुक्तश्चतुरङ्को वै डिमः कार्यः ।
शृङ्गारहास्यवर्जः शेषैरन्यैः समायुक्तः ।
दीप्तरसकाव्ययोनिर्नानाभावान्वितश्चैव ॥ (*ibid* 20, 88-9)

யகஷா, நாகா இவாகளைப பாததிரமாக உடையது[1] அவமாசம நீஙகின நானகு ஸநதிகளை உடையது[2]

ஈஹாமருகம —இது தேவஸதிரீகாரணமாகத தேவாகளுக குள வரும சேஷாபததை வாணிககும காவயம ஆகும.[3] காபபம அவமாசம இவறறை நீககி ஏனைய மூனறு ஸநதிகள இஙகு உள.[4]

நாடிகை —இஙகு நாலு அஙககஙகள உள அஙகிசசுவை ஸமபோகசருஙகாரம நாயகனுககும நாயகிககும இடையூ றுகப படடமஹிஷி முனபு இருநது பினனா அவளே இருவரும மகிழுமாறு செயவள[5]

தரோடகம.—இஙகு ஐநது, ஏழு, எடடு அலலது ஒனபது அஙககஙகள உள அஙகிசசுவை சருஙகாரம. ஒவவொரு அஙகததிலும விதூஷகன வருவான.

1 देवासुरराक्षसमूतयक्षनागाश्च पुरुषा स्यु । (ibid 20, 91)

2 डिम समवकारश्च चतु चन्धी प्रकीर्तितौ । (ibid 21, 46)

3 दिव्यपुरुषाश्रयकृतो दिव्यस्त्रीकारणोपगतयुद्ध- ।
.. ... ...
उद्धतपुरुषप्राय स्त्रीरोषप्रथितकाव्यबन्धश्च ॥ (ibid 20, 82-3)

4 व्यायोगेहामृगौ चापि त्रिसन्धी परिकीर्तितौ । (ibid 21, 45)

5. स्त्रीप्राया चतुरङ्का ललिताभिनयात्मिका विहितार्था ।
प्रनृत्तगीतपाट्या रतिसम्भोगात्मिका चैव ॥
यामोपचारयुक्ता प्रसाधनक्रोधसयुता चापि ।
नायकनृतीं चापि देवीसम्बन्धा नाटिका ज्ञेया ॥ (ibid 20, 62-3)

## அத்தியாயம் 56

தற்போதுள்ள ரூபகங்களுள் மிகப் பழையது யாது? இக்கேள்விக்கு விடை, காளிதாஸன் அச்வகோஷன் இருவருள் முற்காலத்தவா யார் என்ற கேள்விக்கும், தற்போது திருவனந்தபுரத்தில் பதிப்பித்துள்ள ஸ்வப்னவாஸதத்தம் முதலியவற்றை இயற்றியவர் காளிதாஸனாற் குறிக்கப்பட்ட பாஸனா, வேறு பிற்காலததில் இருந்த ஒருவரா என்ற கேள்விக்கும் விடை அளிததபிறகே, அளிக்கமுடையும். காளிதாஸன் அச்வகோஷற்கு முறபட்டவர் என முனனரே உணாததப்பட்டது.

பாஸசக்ரம் காளிதாஸனாற் குறிக்கப்பட்ட பாஸனாலே இயற்றப்பட்டது என்பதறகு மஹாமஹோபாதயாய-கணபதி சாஸ்திரிகள் கூறும் காரணங்களாவன:

1. ஏனைய நாடகங்களில் உள்ள ப்ரஸ்தாவனை ஈண்டு ஸ்தாபனை என்ற பெயராற் குறிக்கப்பட்டுளது.

2. நூலின் பெயரும் கவியின் பெயரும் ஏனைய நூல்களிற் போல் ஈண்டு ஸ்தாபனையிற் குறிக்கப்படவில்லை.

3. இந்நாடகங்களின் பரதவாக்கியததில் பேரரசன் பூமியை ஆளட்டும் என்றே உளது.[1]

4. ஆரம்பததிலுள்ள ச்லோகங்களில் முக்கிய பாததிரங்களைக் குறிக்கும் முத்ராலங்காரம் உளது.

5. இவற்றுள் ஒன்றை ராஜசேகரன் பாஸனுடையது எனக் கூறினமையானும்[2], எல்லாவறறிற்கும் ஒற்றுமை இருப்பதானும் இவையெல்லாம் பாஸனுடையன.

1. महीमेकातपत्राङ्का राजसिंहः प्रशास्तु नः ।
(स्वप्नवा. दूतवा. बालच.)
इमामपि महीं कृत्स्नां राजसिंहः प्रशास्तु नः ।
(प्रतिज्ञायौ. अविमा. अभिषेक. पञ्चरा.)

2. भासनाटकचक्रेऽपि छेकैः क्षिप्ते परीक्षितुम् ।
स्वप्नवासवदत्तस्य दाहकोऽभून्न पावकः ॥ (कविविमर्शे.)

6 பல ஆலஙகாரிகாகள பாஸனைக குறிககினறனா [1]

7 நாநதிசலோகஙகள இநநாடகஙகளிற கூறபபடவிலலை [2]

8 நாடயசாஸதிரததில உணாததபபடட விதிகடகு விரோதமாக மரணம முதலியன ஈணடு வாணிககபபடடன [3]

9 அபாணினீயபரயோகஙகள ஈணடுக காணபபடு கினறன [4]

இககாரணஙகளை எறறுககொணடு பாஸசகரததுளள நூலகளெலலாம காளிதாஸனுககு காலததிறகு முறபடடன எனறும, அவறறை கி பி மூனறும நூறறுணடு நூலகளாகக கொளளலாம எனறும கீத கூறுவா [5]

கி ராமபிஷாரடி மஹாமஹோபாதயாய குபபுஸவாமி சாஸதிரிகள, தேவதா முதலியோா, முறகூறபபடட காரணங களை மறுதது, அநநாடகஙகள மலையாளததில இயறறப

1 शरच्छशाङ्कगौरेण वाताविद्धेन भामिनि ।
काशपुष्पलवेनेदं साश्रुपातं मुखं मम ॥
(स्वप्नवा IV 8 काव्यालङ्कारसू IV 3)
क्वचित्क्रीडा यथा स्वप्नवासवदत्तायाम् (अभिनवभारती)

2 नान्द्यन्ते ततः प्रविशति सूत्रधारः

3 ऊरुभङ्गे दुर्योधनस्य मरणम्

4 धरते खलु वासवदत्ता (स्वप्न ' 7)
कथमिन्द्राणीं सायन्तमिव मा हस्यते (पञ्चरा 2 48)
गाढं परिष्वजन गमे [अविमा 6 1]

5 The Sanskrit Drama by A B Keith 11 93 95

பட்டிருக்கவேண்டும் என்பர். அவர்கள் கூறும் காரணங்கள் ஆவன :—[1]

1. ஸ்தாபனம் என்ற பெயரும், நாந்தீச்லோகங்கள் இல்லாமையும், மரணம் முதலியன வர்ணிக்கப்பட்டமையும் சுமார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் மலையாளதேசத்தில் சக்திபத்ரரால் இயற்றப்பட்ட ஆச்சர்யசூடாமணியிலும் உள்ளன ஆகவின் முற்கூறப்பட்ட காரணங்கள் 1, 7, 8 நில்லா.

2. நூலின் பெயரும் கவியின் பெயரும் ஸ்தாபனத்தில் குறிக்கப்படாமையே அந்நூல்கள் உண்மையான பாஸனால் இயற்றப்படவில்லை என்பதை வலியுறுத்தும் ஆகவின் முற்கூறப்பட்ட இரண்டாம் காரணமும் நில்லாது.

3. பாஸனின் ச்லோகமாக அபிநவகுப்தரால் கூறப்பட்ட ச்லோகங்கள் ஈண்டு இல்லை.[2]

4. ப்ரதிஜ்ஞாயௌகந்தராயணத்திலிருந்து அர்த்தசாஸ்திரத்தில் ஒரு ச்லோகம்[3] கூறப்பட்டது என்று கூறும்

1. Introduction in the Aścaryacūḍāmaṇi by Professor Mm. S. Kuppuswami Sastri and Preface to Bhāsa-nāṭaka-cakram by C R. Devadhar.

2. महाकविना भासेनापि स्वप्रवन्धे उक्त. —

त्रेतायुगं तद्धि न मैथिली सा
रामस्य रागपदवी मृदु चास्य चेत ।
लब्धा जनस्तु यदि रावणमस्य कायं
प्रोत्कृत्य तत्तिलशो न वितृप्तिगामी ॥
(अभिनवभारती)

सञ्चिनपक्ष्मकपाटं नयनद्वारं स्वरूपताडेन ।
उद्घाट्य सा प्रविष्टा हृदयगृहं मे नृपतनूजा ॥ [लोचनम्]

3 वनं शरावं .... [प्रतिज्ञा. IV 2]

பொருந்தாது; அந்த ச்லோகம் ஒரு புராணத்தில் இருப்பதாக அர்த்தசாஸ்த்ரவுரையாகிய நயசந்த்ரிகையிற் கூறப்பட்டுளது.

5. பாணினிஸூத்ரங்களுக்கு முரண்பாடாக இருக்கும் சொற்கள் அந்நாடகங்களை நடித்துக்காட்டிய சாக்கியர்களின் தவறாக இருக்கலாம். பிற்காலத்து நூல்களில் அவ்வாறான சொற்கள் உண்டு என்று விண்டர்நீட்ஸும் கூறுவர்.

6. அன்றியும் ஸம்பந்தம் விசாரிதம் என்ற சொற்கள் மலையாளவழக்கிலுள்ள பொருளில் ப்ரதிஜ்ஞாயௌகந்தராயணத்திலும் வழங்கப்பட்டுளது.[1]

மலையாளநாட்டிலே இவை இயற்றப்பட்டிருக்கலாம் என்பதற்கு வேறு சில காரணங்களும் கூறலாம்.

i. கீழூரமெ என்ற பொருளில் யாழூரமெ என ஸ்வப்நவாஸவதத்தில் வழங்கப்பட்டுளது.

ii. இட்டலிபோன்ற பொருளைக்குறிக்க கண்ணிலட்டுகா என்ற சொல் ப்ரதிஜ்ஞாயௌகந்தராயணத்திற் காணப்படுகின்றது.

iii. அவிமாரகன் மாலையில் ஸ்நானஞ் செய்தலையும் தாய் மாமனது பெண்ணை மணந்ததையும் அவிமாரகம் கூறுகின்றது.

iv. வறுமையுற்றோர் காதில் தாளிபத்ரம் அணிந்ததாகச் சாருதத்தம் கூறுகின்றது.

v. ராமன், லக்ஷ்மணன், பரதன், துர்யோதனன், வஸுதேவர், கம்ஸன் இவர்கள் கௌஸல்யாமாத:, ஸுமித்ராமாத:, கைகேயீமாத:, காந்தாரீமாத:, யாதவீமாத:, சௌரஸேனீமாத: என ப்ரதிமாநாடகம் பாலசரிதம் இவற்றுள் அழைக்கப்படுகிறார்கள்.

1. देवी - किं सम्बन्धो णिच्चिदो (प्रति II. 2. 13-)
बहुभिरार्यैर्विचारितम् (अवि. II, 4-)

vi. *கார்த்திகை நக்ஷத்திரம் சென்றவுடன் நகரத்திற்கு வரலாம் என ப்ரதிமாநாடகம் கூறுகின்றது.*

vii. *ஜந்மநக்ஷத்திரத்தில் சடங்கு செய்தலைப் பஞ்சராத்ரம் கூறுகின்றது.*

*இவற்றை விரிவாய் இந்த ரூபகங்களைப்பற்றிக் கூறிய இடத்திற் காண்க.*

காளிதாஸன்.—*இவர் இயற்றிய ரூபகங்கள் மூன்று. அவை* மாளவிகாக்நிமித்ரம்[1], விக்ரமோர்வசீயம்[2], அபிஜ்ஞானசாகுந்தளம்[3] *என்பன. மூன்றாவது* சாகுந்தளம் *எனவும் கூறப்படும். இவற்றுள் அங்கிச்சுவை முறையே* ஸம்போகச்ருங்காரம், விப்ரலம்பச்ருங்காரம், சாந்தம் *ஆகலானும், மற்ற காரணங்களானும் இம்முறையிலேயே அவை இயற்றப்பட்டிருத்தல்வேண்டும் என முன்னரே உணர்த்தப்பட்டது.*

மாளவிகாக்நிமித்ரம்.—*இதனுள் ஐந்து அங்கங்களும் ஐந்து* ஸந்திகளும் *உள. ஆகலின் இது ஒரு* நாடகம். *கி. மு 170-க்குப் பின்னர் ஆண்ட அக்னிமித்ரன் இந்நாடகத்தில் நாயகன்.[4] இங்கு இவனுடைய தகப்பனாகிய புஷ்பமித்திரனின் அச்வமேதம் குறிக்கப்படுவதையும்,[5] புஷ்பமித்ரனுக்கு[6] யாகம் செய்வித்*

1. मालविकाग्निमित्रम्
2. विक्रमोर्वशीयम्
3. अभिज्ञानशाकुन्तलम्
4. सम्पत्स्यते न खलु गोप्तरि नाग्निमित्रे (V 20)
5. पुष्पमित्रो वैदेशस्थं पुत्रमायुष्मन्तमग्निमित्रं स्नेहात्परिष्वज्यानुदर्शयति ... सोऽहमिदानीमंशुमतेव सगर. पौत्रेण प्रत्याहृताश्वो यक्ष्ये ॥ (V)
6. पुष्यमित्रं याजयामः (M B. under III, 2, 123)

போம் என்ற மஹாபாஷ்யகாரரின் வாக்யத்தையும் நோக்கின, அக்னிமித்ரன் யுவராஜாவாக இருக்குங்காலத்தில் இந்நாடகம் எழுதப்பட்டிருக்கலாம். அக்காலத்தில் காளிதாஸன் வஸித்தான் என்பது வர்த்தமானகவே:[1] என்ற சொல் அறிவிக்கின்றது. அவனுக்கு முன்னர் ப்ரஸித்தர்களாக பாஸன், ஸௌமில்லன் முதலிய மஹாகவிகள் இருந்தனர் என்பதையும், தனது நூலாகிய மாளவிகாக்னிமித்ரம் மிகுதியாய்ப் போறறப் படவில்லை என்பதையும் அவரே அறிவிக்கின்றார்.[2] இந்நாடகத்திலிருந்து காளிதாஸனுக்கு நாட்யத்தில் இருந்த பேரறிவு உணரப் படுகின்றது. கணவனுக்கும் மனைவிக்கும் ஒத்த அன்பு வேண்டும் என வாயார இந்நூலில்தான் அவர் அறிவிக்கின்றார்.[3] பழமொழிகள்போன்ற வாக்யங்களை உணர்த்துவதாலும்,[4] தனது அறிவை மிகுதியாயப் போற்றிக் கூறுதலாலும் இந்நூல் முதலில் எழுதப்பட்டது என்றுங் கூறலாம்.

1. वर्तमानकवेः
2. पुराणमित्येव न साधु सर्वम् ... என்ற ச்லோகத்தால் இதனை அறிவிக்கின்றார்.
3 अनातुरोत्कण्ठितयोः प्रसिध्यता
   समागमेनापि रतिर्न मा प्रति ।
   परस्परप्राप्तिनिराशयोर्वरं
   शरीरनाशोऽपि समानरागयोः ॥ (III 15)
4. अत्रभवत्यो .. समुद्रपल्वलयोरिवान्तरम् (I 12-)
   पत्तने सति ग्रामे रत्नपरीक्षा (I, 14)
   भवानपि सूनोपरिचरो गृध्र इवामिषलोलुपो भीरुकश्च (II, 13-)
   अविश्वासनीयाः पुरुषाः (III, 19-)
   कुम्भीलकैः कामुकैश्च परिहरणीया चन्द्रिका (IV, 6-)

விக்ரமோர்வசீயம்.—இதனுள் ஐந்து அங்கங்கள் உள. இந்நூலுக்கு வடநாட்டுப்பாடம் தென்னாட்டுப்பாடம் என இரண்டு பாடங்கள் உள. வடநாட்டுப்பாடத்தில் இதனை த்ரோடகம் ஆகக் கூறப்பட்டுள்ளது[1] தென்னாட்டுப்பாடத்தில் நாடகம் ஆகக் கூறப்பட்டது என்பர்.[2] த்ரோடகத்தில் ஒவ்வொரு அங்கத்திலும் விதூஷகனின் ப்ரவேசம் வேண்டும் என்ற இலக்கணம் இங்குப் பொருந்தவில்லை. முதல் மூன்று அங்கங்களிலும் உணர்த்தப்பட்ட ஸம்போகச்ருங்காரம் நாலாவது அங்கத்தில் உணர்த்தப்பட்ட விப்ரலம்பத்திற்கு அங்கம் எனவே கூறலாம். ஐந்தாவது அங்கத்தின் இறுதியிற் கூறப்பட்ட 'இருவரும் பிரிவுறாது இருங்கள்' என்ற நாரதவசனம் புரூரவஸ் காட்டிற்குப் போவதைத் தடுத்தமையால் ஸம்போக சருங்காரத்தை வளர்க்கவில்லை எனவே கூறலாம்.

புரூரவஸ் ஊர்வசி இவரைப்பற்றிச் சிறிது ருக்வேத ஸம்ஹிதை, சதபதப்பிராம்மணம் இவற்றில் கூறப்பட்டிருப்பினும்[3], கதையைச் சிறிது மாற்றி ஊர்வசியைக் கொடியாய் மாற்றி, புரூரவஸ்ஸைப் புலம்புமாறு செய்தது காளிதாஸனின் கவிதாவன்மையைக் காட்டுகின்றது. ஊர்வசி கொடியாய் மாறியதை மத்ஸ்யபுராணமுங் கூறும். இராமாயணத்தில் ஸீதையைக் காணாது ராமன் பரிதபித்ததை மனத்திற் கொண்டிருத்தல் கூடும். பூர்ஜபத்திரத்தில் ஊர்வசி தனது காதலை எழுதுவதும் அது பட்டமஹிஷியிடம் அகப்படுவதும் அவள் அரசனிடம் கோபித்துப் பின்னர் அரசனை ப்ரஸாதனம் செய்து அவர் ஊர்வசியுடன் இருக்க அனுமதிப்பதும்[4], பின்னர்

1. कालिदासग्रथितवस्तुना नवेन त्रोटकेनोपस्थास्ये [I प्रस्तावना]
2. The Sanskrit Drama by A. B. Keith p 151.
3. शतपथब्राह्मणे (XI 5, 1, 1-12)
4. अद्यप्रभृति आर्यपुत्रो यां स्त्रियं कामयते, या आर्यपुत्रसमागमप्रणयिनी तया मयाऽप्रतिबन्धेन वर्तितव्यम् ॥ (III, 13-)

நாடகத்தின் வரவும் இல்லாதிருப்பின் யாது குற்றம் என ஆராய்தற்குரியது. இந்நூலிலிருந்து நான்கு சுலோகங்களை அலங்காரங்கு உதாரணமாக ஆனந்தவர்த்தனர் தவன்யாலோகத்தில் காட்டுகின்றனர்.[1]

சாகுந்தலம் —இதனுள் ஏழு அங்கங்கள் உள. இந்நூல் நாடகம் என்ற பகுதியின்பாற் படும். முதல் மூன்று அங்கங்களிலும் உணரப்பட்ட சிருங்காரச்சுவை ஏனைய அங்கங்களில் உணரப்படும் சாந்தச்சுவைக்கு அங்கமாகும்.

இந்நாடகத்துள் நான்காவது அங்கமே சிறந்தது எனவும் அங்கும் நான்கு சுலோகங்கள் சிறந்தன எனவும் பெரியோர் கூறுவர்.[2]

இங்குள்ள வஸ்து மஹாபாரதத்திலிருந்து[3] கொள்ளப்பட்டது. ஆயினும் சுவை சொரியுமாறு சில மாறுபாடுகள் செய்யப்பட்டன —

1 तिष्ठेत् (IV 9)
अयमेकपदे (IV, 10)
तरङ्गभ्रूभङ्गा (IV, 52)
तन्वी मेघजलार्द्रपल्लवतया (IV 66)

2 काव्येषु नाटकं रम्यं तत्रापि च शकुन्तला ।
तत्रापि च चतुर्थोऽङ्कस्तत्र च श्लोकचतुष्टयम् ॥
அந்நான்கு சுலோகங்கள் ஆவன —
यास्यत्यद्य शकुन्तलेति (IV, 6)
पातुं न प्रथमं व्यवस्यति जलम् (ibid 9)
अस्मान्साधु विचिन्त्य संयमधनान् (ibid 17)
शुश्रूषस्व गुरून् ibid 18)

3 மஹா பாரதம் ஆதி பர்வம் அத்தியாயங்கள் 89 100

1. சகுந்தலை தனிமையாய் இல்லாது இந்நாடகத்தில் ப்ரியம்வதை அநஸூயை என்ற இரண்டு தோழிகளுடன் இருக்கிருள். ஆகலின் துஷ்யந்தன் 'நீர் யார்' எனச் சகுந்தலை கேட்காது, அநஸூயை அதனைக் கேட்கிருள். அவ்வாறே 'சகுந்தலை கண்வரின் மகள் எனக் கூறுதல் எவ்வாறு' என்ற கேள்வியை துஷ்யந்தன் சகுந்தலையைக் கேட்காது தோழிகளைக் கேட்கிருன்.

2. துஷ்யந்தன் சகுந்தலையை மணக்க விரும்பி, அவளைக் கேட்க[1], கண்வர் தன்னை மணஞ்செய்விக்க வேண்டும் என முதலில் அவள் கூற[2], பின்னர் தானே அவள் மணஞ்செய்து கொள்ளலாம் எனத் துஷ்யந்தன் கூறியதைக் கேட்டு[3], தனக்குப் பிறக்கும் பிள்ளைக்கு ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டும் என்ற நிபந்தனையோடு[4] அவள் அவனை மணந்ததாக மஹாபாரதம் கூறும். துஷ்யந்தனைக் கண்டவுடன் அவளிடம் அவளது மனம் சென்றதையும்[5], அவனிடம் ஈடுபட்டு அவனுக்குக் காமவேலை எழுதியதும்[6] நாடகம் கூறும்.

1. भार्या मे भव सुश्रोणि ब्रूहि किं करवाणि ते ।
[म. भा. आदि. 94, 1]
2. यस्मै मा दास्यति पिता स मे भर्ता भविष्यति (*ibid* 94, 6)
3. आत्मनैवात्मनो दानं कर्तुमर्हसि धर्मतः (*ibid* 94, 13)
4. सत्यं मे प्रतिजानीहि यथा वक्ष्याम्यहं रहः ।
मयि जायेत यः पुत्रः स भवेत्त्वदनन्तरः ॥
युवराजो महाराज सत्यमेतद्ब्रवीमि ते ।
यद्येतदेवं दुष्यन्त अस्तु मे सङ्गमस्त्वया ॥ (*ibid* 94, 22-23)
5. किं नु खल्विमं प्रेक्ष्य तपोवनविरोधिनो विकारस्य
गमनीयास्मि संवृत्ता [शाकु. I, 22-]
6. तुज्झ ण आणे हिअअं मम उण कामो दिवावि रत्तिम्मि ।
णिग्घिण तवइ बलीअं तुइ वुत्तमणोरहाइं अङ्गाइं ॥
(*ibid* III, 14)

3. கண்வரிடத்தில் பயந்து துஷ்யந்தன் சிறிது காலம் சகுந்தலையைத் தனது நகரத்திற்கு வரவழைக்காமல் இருந்து பின்னர் அவளை மறந்தனன் என மஹாபாரதம் கூறும்[1]. துர்வாஸரது சாபத்தால் நேரில் கூறியும் துஷ்யந்தன் அறியவில்லை என நாடகம் கூறும்[2].

4. சகுந்தலையின் புத்ரன் வேதாத்யயனம் முதலியவற்றைச் செய்து யௌவராஜ்யத்திற்குத் தகுதியை அடைந்த பின்னர் கண்வர், சகுந்தலையையும் ஸர்வதமனனையும் துஷ்யந்தனிடம் அனுப்புவதாக மஹாபாரதம் கூறும்[3], அங்கு துஷ்யந்தன், சகுந்தலையிடம் மோதிரம் கொடுத்துப்போனதாகக் கூறப்படவில்லை. நாடகத்திலோ சகுந்தலை கர்ப்பிணியாய் இருக்கும்போதே அனுப்பப்படுகிறாள் என்பதும், போகும்போது மோதிரம் துர்வாஸஸின் சாபத்தால் சசீதீர்த்தத்தில் நழுவி விழுந்தது என்பதும் கூறப்பட்டன.[4]

1. ऋषेर्भयात्तु दुष्यन्त स्मरन्नैवाह्वयत्तदा ।
गते काले तु महति न सस्मार तपोधनाम् ॥
[म भा. आदि. 95, 20-1]

2 स्मरिष्यति त्वा न स बोधितोऽपि सन्
कथा प्रमत्त प्रथम कृतामिव ॥ [शाकु IV 1]

3 शास्त्राणि सर्ववेदाश्च द्वादशाब्दस्य चाभवन्
(म. भा. आदि. 95, 30)
गत्वाभिवाद्य राजानं योवराज्यमवाप्स्यसि (ibid 96, 12)

4. तदितोऽभिज्ञानमङ्गुलीयक तस्य विसृजाव । [शाकु. IV, 3-]
दुष्यन्तेनाहित तेजो दधाना भूतये भुव (ibid IV 4-)
अङ्गुलीयकशून्या मेऽङ्गुलि (ibid V, 21-)
शचीतीर्थसलिल वन्दमानाया प्रभ्रष्टमङ्गुलीयकम् (ibid V, 21-)

அன்றியும் நான்காம் அங்கத்தில் கூறப்பட்ட அரிதான கருத்துக்களெல்லாம் மஹாபாரதத்தில் இல்லை.[1]

5. நகரம் வந்தவுடன் ருஷிகுமாரர்கள் சகுந்தலையையும் குழந்தையையும் தனிமையாய் விட்டுவிட்டு காடு சென்றனர் என்றும்[2], சகுந்தலை குழந்தையுடன் துஷ்யந்தன் ஆஸ்தான மண்டபஞ் சென்று தன்னை அறிவிக்க, அவன் தன்னிடம் உலகம் சங்கிக்கும் என நினைத்து மனஸ்ஸாக்ஷிக்கு விரோதமாய்த் தான் அவளை மணக்கவில்லை என மறுக்க[3], சகுந்தலை பலமுறையால் அவன் கூறுவது தவறு என்று கூற, அவற்றை அவன் மதியாதிருந்ததைக் கண்டு குழந்தையுடன் காட்டிற்கு அவள் புறப்பட,

1. अस्मान्साधु विचिन्त्य संयमधनान् ... (*ibid* IV 17)
   अर्थो हि कन्या परकीय एव ... (*ibid* IV 22) என்ற இரண்டு ச்லோகங்களும் பிறரது பெண்ணை வளர்த்த போஷகபிதாவின் மனோபாவத்தைக் குறிக்கின்றனவேயன்றி, பெற்ற தகப்பனின் மனோபாவத்தைக் குறிக்கவில்லை என்பது திண்ணம்.
2. पुरप्रवेशनं नात्र कर्तव्यमिति शासनम् । (*ibid* 96, 80)
   ... ... ...
   एवमुक्त्वा मुनिगणाः प्रतिजग्मुर्यथागतम् (*ibid* 96, 82)
3. सोऽथ श्रुत्वापि तद्वाक्यं तस्या राजा स्मरन्नपि ।
   अब्रवीन्न स्मरामीति त्वया भद्रे समागमम् ॥ (*ibid* 97, 30)
   यद्यहं वचनादस्या गृह्णीयामिममात्मजम् ।
   भवेद्धि शङ्का लोकस्य नैवं शुद्धो भवेदयम् ॥ (*ibid* 100, 17)
4. मत्प्रियस्यात्मनोऽङ्गेषु तन. स्रोपामिमात्मजम् ।
   प्रस्थितैवानवद्याङ्गी सह पुत्रेण वै वनम् ॥ (*ibid* 99, 47)

அப்போது அவள் கூறுவது உண்மையே என அசரீரி கூற[1], அவ்விருவரையும் துஷ்யந்தன் ஏற்றுக்கொண்டனன் எனவும்[2] மஹாபாரதங் கூறும். ருஷிகுமாரர்கள் கௌதமியுடன் அவ்விருவரையுந் துஷ்யந்தனிடம் கூட்டிப்போகத் தூர்வாஸனின் சாபத்தால் அவன் அவளை மணந்ததை மறக்க, மோதிரமின்மையால் சகுந்தலை அதனை ருஜூப்படுத்த இயலாமல் இருக்க, அவள் ஆகாசத்திற் செல்ல, பிறகு செம்படவன்மூலம் மோதிரத்தை அரசன் அடைந்து தன் செயல்களுக்குத் தன்னை வெறுக்க, இந்திரனுக்கு உதவி செய்து வரும் வழியில் குழந்தை மூலம் சகுந்தலையை அடைந்தான் என நாடகங் கூறும். ஆகலின் ஐந்தாம் அங்கத்தின் சில கருத்துக்களும் ஆறு ஏழு அங்கங்களும் காளிதாஸனின் கற்பனைகளே ஆகும்.

முதல் அங்கத்து இரண்டாம் ச்லோகத்தாலும் பரதவாக்கியத்தாலும் அந்நிலையில் காளிதாஸன் ஒரு ஜீவன்முக்தனாய் இருந்தான் என்பது அறியப்படும்[3].

1 अथान्तरिक्षे दुष्यन्त वागुवाचाशरीरिणी ।
भरस्व पुत्रं दौष्यन्तिं सत्यमाह शकुन्तला ॥ (*ibid* 100 1 2)

2 ता विशोध्य तदा राजा देवैः सह महर्षिभिः ।
हृष्टः प्रमुदितश्चापि प्रतिजग्राह तं सुतम् ॥ (*ibid* 100 18)

3 आ परितोषाद्विदुषा न साधु मन्ये प्रयोगविज्ञानम् [शाकु I 2]
विदुषा என்ற சொல்லின் பாகிருதியாலும் பரதவாக்கியத்தாலும் வையோர்கள் அனைவரையும் வித்வான்கள் என அவன் நினைக்கின்றமைபற்றி எல்லோரையும் பரப்பிரும்மத்தின் உருவே என அவன் நினைத்தான் எனக் கூறல் தகும்.
ममापि च क्षपयतु नीललोहितः
पुनर्भवं परिगतशक्तिरात्मभूः ॥ (*ibid* VII 35)

காளிதாஸனின் சிறப்பு.—இயற்கையில் உள்ள பொருள்களின் அழகைத் தான் அனுபவித்து பிறரும் அவ்வாறு அனுபவிக்குமாறு வர்ணித்தல்[1]; பல்வகைப்பட்ட நிலையில் மக்களின் மனோநிலையை நன்கு அறிந்து வர்ணித்தல்[2], வ்யங்கியப் பொருள் சிறந்து விளங்குமாறு கவி இயற்றல்; முதிர்ந்த நிலையில மக்கள் தர்மத்தில் ஈடுபடவேண்டும் எனக் கூறல்; உவமை வ்யங்கியமாய்த் தோன்றுமாறு பல்வகையாக வர்ணித்தல்[3]; உலகம்

இதனால் தனக்கு மறுபிறப்பு வேண்டாம் என அர்த்தநாரீச்வரரை வேண்டுவது தோகதத் தக்கது. नीललोहितः என்ற சொல் அர்த்தநாரீச்வரரையே குறிக்கின்றது என்பது பார்வதியின் வர்ணம் நீலமாயும், சிவபிரானின் வர்ணம் உருக்கின பொன் போல் லோஹிதமாயும் இருத்தலால் அறியப்படும்

இக்காரணம்பற்றியே காளிதாஸன் எழுதிய நூல்களுள் சாகுந்தலம் இறுதியில உள்ளது என்பதை அறியலாம்

1. ग्रीवाभङ्गाभिरामं मुहुरनुपतति स्यन्दने दत्तदृष्टिः ... [शाकु. I, 7]
2. இளமைப்பருவத்தில் தாமே எல்லாம் அறிந்தவர் என்றும் முதுமைப்பருவத்தில் தன் அறிவு நிறைந்தே என்றும மனிதன் நினைக்கிறான் என்பதை மாளவிகாக்னிமித்ரத்திலும் சாகுந்தலத்திலும் உணர்த்தினர்; இளமைப்பருவத்தில் தக்க மனையாளோடு மனமொத்து இன்பம் துய்க்கவேண்டும் என நினைக்கும் நிலையும், நடுநிலையில் சிறு குற்றம் கண்ட போதுதத்தால் ஒரும் வேசியிடத்தில் ஈடுபட்டு உண்மைத்தன்மை திரியும் நிலை, முதுமைப்பருவத்தில் தர்மத்திலேயே நீடாத இன்பத்தையே துய்க்கவேண்டும் என நினைக்கின்ற நிலையும் மூன்று நாடகங்களிலிருந்தும் அறியலாம்.
3. शुद्धान्तदुर्लभमिदं वपुराश्रमवासिनो यदि जनस्य ।
दूरीकृताः खलु गुणैरुद्यानलता वनलताभिः ॥ (ibid I 16)
इदं किलाव्याजमनोहरं वपुः
तपःक्षमं साधयितुं य इच्छति ।
ध्रुवं स नीलोत्पलपत्रधारया
शमीलतां छेत्तुमृषिर्व्यवस्यति ॥ (ibid I, 17)

அன்பமின்றி வாழ்தற்குச் சிறந்த காரணம் கணவனும் மனைவியும் மனமொத்து வாழவேண்டும் என்பதைக் குறிப்பாய் அடிக்கடி தோற்றுவித்தல்; சங்கீதம் சித்திரமெழுதல், நாட்டியம் முதலிய கலைகளில் ஈடுபட்டு பிறரும் அவற்றில் ஈடுபடுமாறு வாணித்தல் முதலியவற்றைக் காளிதாஸனது நூல்களிற் காணலாம்.

அச்வகோஷன்.—இவர் இன்னமாய இயற்றிய ரூபகம் சாரத்வதீபுத்ரப்ரகரணம்[1] என்பது இது ஒன்பது அங்கங்களைக் கொண்ட ஒரு ப்ரகரணம் என்பர். இதற்குச் சாரீபுத்ர ப்ரகரணம்[2] என மற்றொரு பெயரும் உண்டு.

சூத்ரகன்[3].—இவர் இயற்றியது ம்ருச்சகடிகை[4]. இது பத்து அங்கங்களைக் கொண்ட ஒரு ப்ரகரணநூல். இதனுள் ஔதார்யத்தால் வறுமையுற்ற சாருதத்தன் என்ற ப்ராம்மண வியாபாரியை வஸந்தஸேனை என்ற வேசி காமுற, அரசனின் மைத்துனன் ஆகிய சகாரன் என்பான் அவளைக் காமுற்று அவளையும் அவனையும் துன்பத்திற்கு ஆளாக்க, இறுதியில் வஸந்தஸேனை சாருதத்தனை மணந்தனள் இதுகுச் சிருங்காரபாஸமும் வஸந்தஸேனையின் துணிவும் அவள் படும் துன்பமும் படிப்போரின் மனத்தையும், நடித்தலைப் பார்ப்போரின் மனத்தையுங் கவரும். அங்கிச்சுவை சிருங்காரம் எனக் கூறினும், எல்லா நாடகங்களில் அங்கிச்சுவை இருக்குமாறு ஈண்டு இல்லை என்றே கூறல் வேண்டும்.

சூத்ரகன் என ஓர் அரசன் இல்லை என்றும் அவனைப் பற்றி முகத்திற் கூறப்பட்டது பின்னர்ச் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் சிலர்களில் தோன்றி பெற்ற அப்பெயர் கொண்ட அரசன் ஒருவன் இருந்தான் என்றும், அவன் இந் நூலை எழுதாது பாஸனை வருணவேதத்தால் என்றும், அவன் ஆசிரியனாகவே நின்றான் என்றும் பலவாறு அறிஞர்

1. शारद्वतीपुत्रप्रकरणम्
2. शारिपुत्रप्रकरणम्
3. शूद्रकः
4. मृच्छकटिका

கூறுவர். திண்ணமாய் ஒருவாறும் கூற இயலவில்லை. அக்காரணம் பற்றியே இந்நூலின் காலமும் நிர்ணயிக்க முடியவில்லை.[1] பாஸனுடைய சாருதத்தத்தை இந்நூல் முதனூலாகக் கொண்டது எனக் கீத் கூறினர்; ஆனால் அக்கொள்கையைப் பலருங் கொள்ளவில்லை.

வாமனர் காவ்யாலங்காரஸூத்ரவ்ருத்தியில் சூத்ரகா செய்த ப்ரபந்தம் எனவும்[2] ம்ருச்சகடியில் உள்ள ஒரு ச்லோகத்தையுங் கூறுதலால் அவரது காலத்திற்கு முன்னரே சூத்ரகன் ம்ருச்சகடிகையை இயற்றினன்[3] என்ற வழக்கு இருந்தது என அறியப்படுகின்றது.

ஸ்ரீஹர்ஷன்.[4]—இவர் கான்யகுப்ஜத்தில் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசராய் இருந்தார். இவருடைய ஸபையில் தான் பாணன் இருந்தனன். இவர் இயற்றிய ரூபகங்கள் ப்ரியதர்சிகை[5] ரத்னாவளி[6] நாகாநந்தம்[7] என்பன ஆகும். இம்மூன்று நூல்களிலும் தொடக்கத்தில் ஒரே ச்லோகமும் ஒரே தொடரும் உளது.[8] ப்ரியதர்சிகை, நாகாநந்தம்

1. The Sanskrit Drama by A. B. Keith pp. 128-131.
2. शूद्रकादिरचितेषु प्रबन्धेषु [वाम. का. III 2, 4]
3. यासां बलि सपदि मद्गृहदेहलीनाम् [मृ. I, 9]
4. श्रीहर्षः
5. प्रियदर्शिका
6. रत्नावली
7. नागानन्दम्
8. श्रीहर्षो निपुणः कविः परिषदप्येषा गुणग्राहिणी
लोके हारि च वत्सराजचरितं नाट्ये च दक्षा वयम् ।
वस्त्वेकैकमपीह वाञ्छितफलप्राप्तेः पदं किं पुनः
मद्भाग्योपचयादयं समुदितः सर्वो गुणाना गणः ॥ (I, 3)
नानादिग्देशागतेन राज्ञः श्रीहर्षदेवस्य
पादपद्मोपजीविना राजसमूहेनोक्तः (I, 2-)

இவ்விரண்டிலும் ஒரு சுலோகம் ஒரே வகையாய் இருக்கின்றது[1]. பிரியதர்சிகை, ரத்நாவளி இரண்டும் நான்கு அங்கங்கள் கொண்ட நாடிகைகள். இரண்டும் அமைப்பில் காளிதாஸனின் மாளவிகாக்னிமித்ரத்தை ஒத்தன. இரண்டிலும் உதயனன் கதையே சில மாறுபாடுகளுடன் இணைக்கப்பட்டது. இரண்டையும் படிப்பின், பிரியதர்சிகையே முதலில் இயற்றப்பட்டது என்பது திண்ணம். பிரியதர்சிகையில் கவிவாக்கு இளமைப்பருவத்தில் உளது; ரத்நாவளியில் முதுமைப்பருவத்தில் உளது[2]. முகம், பிரதிமுகம், கர்ப்பம், அவமர்சம், நிர்வஹணம் என்ற நாடகச்சந்திகளையும் அவற்றின் அங்கமான உபக்ஷேபம் முதலியவற்றையும் சுவைக்குத் தக்கவாறு ரத்நாவளியில் இணைக்கப்பட்டிருக்கின்றது என ஆநந்தவர்த்தனர் த்வன்யாலோகத்தில் மூன்றாம் உத்யோதத்தில் இந்நூலைப்போற்றிக் கூறுவர்[3].

1 व्यक्तिर्व्यञ्जनधातुना दशविधेनाप्यत्र लब्धाधुना
विस्पष्टो द्रुतमध्यलम्बितपरिच्छिन्नास्त्रिधायं लयः ।
.. [प्रिय III, 10 नागा. I, 15]

2 வாஸவதத்தையின் கோபத்தை இரண்டு நூல்களிலும் வாணித்
திலேயே நோக்கின் அது வெளிப்படும் —

स्निग्धं यद्यपि वीक्षितं नयनयोस्ताम्रा तथापि द्युतिः
माधुर्येऽपि सति स्खलत्यनुपदं ते गद्गदा वागियम् ।
निश्वासा नियता अपि स्तनभरोत्कम्पेन संलक्षिताः
कोपस्ते प्रकटप्रयत्नविधृतोऽप्येष स्फुटं लक्ष्यते ॥ [प्रि III, 13]
भ्रूभङ्गे सहसोद्गतेऽपि वदनं नीतं परां नम्रताम्
ईषन्मां प्रति भेदकारि हसितं नोक्तं वचो निष्ठुरम् ।
अन्तर्बाष्पजडीकृतं प्रभुनया चक्षुर्न विस्फारितं
कोपश्च प्रकटीकृतो दयितया मुक्तश्च न प्रश्रयः ॥ [र II, 21]

3 रसादिमयस्यैव प्रबन्धस्य चेदमन्यन्मुख्यं निबन्धनं यत्सन्धीनां

நாகாநந்தம் ஐந்து அங்கங்கள் கொண்ட ஒரு நாடகம் இதனுள் முதலில் சிருங்காரச்சுவையும் பின்னர்ச் சாந்தச்சுவையும் உணர்த்தப்பட்டன. அவை ஒன்றுக்கொன்று முரணாக இருப்பினும், இடையில் அத்புதச்சுவையை உணர்த்தி அழகு குன்றாது நூலை இயற்றினர் என ஆநந்தவர்த்தனர் விரோதச் சுவைப்ரகணத்திற் கூறுவர்.[1] இங்குச் சிருங்காரம் சாந்தச் சுவைக்கு அங்கம் ஆகும். சாந்தச்சுவை அங்கியாகலான் இந்நூல் இறுதியில் இயற்றப்பட்டது என்னலாம்.

இம்மூன்று ரூபகங்களும் பாணனாலோ தாவகனாலோ இயற்றப்பட்டு ஹர்ஷன் இயற்றியதாக வெளியிடப்பட்டது எனக் காவ்யப்ரகாசத்தின் உரைகாரர்களுள் சிலர் கூறுவர். இட்ஸிங் என்ற சீனயாத்ரிகர் ஹர்ஷரின் நாகாநந்தம் நடிக்கப் பட்டது எனக் கூறுகின்றமையாலும், காதம்பரி, ஹர்ஷசரிதம் இவற்றிலுள்ள நடைக்கும் இங்குள்ள நடைக்கும் மாறுபாடு இருத்தலாலும் ஹர்ஷரே இயற்றினர் எனக் கூறுதலே பொருந்தும்.[2]

ப்ரியதர்சிகை ரத்னாவளி இரண்டிலும் நாந்தீச்லோகங் களில் பார்வதி பரமசிவன் இருவரையும் கவி வழிபட்டிருக்க, நாகாநந்தத்தில் ஜினரை வழிபடுகின்றனர். இக்காரணம் பற்றி அவர் பரமமாஹேச்வரராய் இருந்து பௌத்தமதத்தை யும் போற்றினர் எனச் சிலரும், பௌத்தராய் இருந்து வைதிக மதத்தைப் போற்றினர் எனப் பலரும் கூறுவர்.[3]

1. मुखप्रतिमुखगर्भविमर्शनिर्वहणाख्यानां चोपक्षेपादीनां घटनं रसाभिव्यक्त्यपेक्षया, यथा रत्नवल्याम् ॥
यथा शान्तशृङ्गारौ नागानन्दे निवेशितौ ॥
2. *Cf.* The Sanskrit Drama by A B. Keith p. 171.
3. Priyadarśikā—Bhūmikā by Pandit R. V. Krishnamachariar—Vani Vilas Edition
A. History of Sanskrit Literature by A A. Mac Donell p. 362.

விசாகதத்தன்[1].—இவர்க்கு விசாகதேவன்[2] என்ற பெயரும் உண்டு. இவரின் பிதாமஹர் ஸாமந்தவடேச்வரதத்தர்[3], தகப்பனர் மஹாராஜபாஸ்கரதத்தர்.[4] இவர் எழுதிய நாடகம் முத்ராராக்ஷஸம்[5] என்பது. இங்கு முத்ரையால் ராக்ஷஸன் வசப்பட்டமை வர்ணிக்கப்பட்டதால் இந்நாடகம் இப்பெயர் பெற்றது. இதனுள் ஏழு அங்கங்கள் உள. தன்னை அவமதித்த நந்தர்களை அழித்து சந்த்ரகுப்தனை அரசனாக்கி, அவனது ஆட்சி நிலைபெற்றிருக்க நந்தர்களுக்கு உற்ற மந்திரியாய் இருந்த ராக்ஷஸனை அவனுக்கு மந்திரியாகச் செய்விக்கச்[6] சாணக்யன் செய்த உபாயங்கள் இங்கு வாணிக்கப்பட்டன.

முதல் அங்கத்தில் ராக்ஷஸன் அறிவு, பராக்ரமம் ஸ்வாமி பக்தி இவற்றிற் சிறந்தவன் என்றும்[7], யஜமானன் இறந்த பிறகும் அவனிடத்தில் ராக்ஷஸனைப் போல் பக்தியைக் காட்டும் மனிதர் அரிது என்றும்[8] கூறி, சாணக்யன் அவனைத் தன் வசப்படுத்த ஜீவஸித்திமூலமாய் ராக்ஷஸனின் அங்குளி

1. विशाखदत्तः
2. विशाखदेवः
3. सामन्तवटेश्वरदत्तः
4. महाराजभास्करदत्तः
5 मुद्राराक्षसम्
6. अथ वा अगृहीते राक्षसे किमुत्खातं नन्दवंशस्य किं वा स्थैर्यमुत्पादितं चन्द्रगुप्तलक्ष्म्याः [मुद्रा. I, 13–]
7. प्रज्ञाविक्रमभक्तयः समुदिता येषां गुणा भूतये ते भृत्या नृपतेः ... (*ibid* I, 15)
8. भर्तुर्ये प्रलयेऽपि पूर्वसुकृतासङ्गेन निःसङ्गया भक्त्या कार्यधुरं वहन्ति बहवस्ते दुर्लभास्त्वादृशाः । (*ibid* I, 14)

மஹேந்த்ர-விக்ரமவர்மன்[1].—இவர் ஆரும் நூற்றுண்டில் தக்ஷிணத்தில் ஆண்ட ஸிம்ம-விஷ்ணுவர்மன் என்ற பல்லவவரசரின் மகன். இவர்க்கு அவனிபாஜனன்[2], குணபரன்[3], மத்தவிலாஸன்[4] என்ற பட்டங்கள் உள. இவர் ஒரு ப்ரஹஸனம் இயற்றினர். அதற்கு மத்தவிலாஸப்ரஹஸனம்[5] எனப் பெயர். காஞ்சிபுரத்தில் ஒரு காபாலிகன் தன் மனைவியுடன் சாராயக் கடைக்குச் சென்று கள் குடித்த பிறகு தன் கபாலத்தை மறந்து அங்கு வைத்துவிட, ஒரு நாய் அதனை எடுத்துச் சென்றது. வெளியில் வந்து அதனைப் பாராது காபாலிகன் பின்னர்க் கடைக்குள் செல்ல அங்கு அதனைக் காணவில்லை. பின்னர் எதிரில் துனியால் தன் கபாலத்தை எடுத்துவரும் பிக்ஷுவைப் பார்த்து அவன் தான் அதனை எடுத்தான் என்று கூறிப் பின்னர் வந்த பாசுபதனிடம் அக்குறையைக் கூறினன். அவன் பிக்ஷுவைத் தன் கபாலத்தைக் காட்டச் சொல்ல அதன் நிறம் மாறியிருக்க, நிறத்தை அவன் மாற்றிவிட்டான் எனக் காபாலிகன் அவன் மேல் குற்றஞ் சாட்டினன். அப்போது நாயினிடமிருந்து கபாலத்தை ஒரு உன்மத்தகன் பிடுங்கிக்கொண்டு ஓடிவந்தனன். அதனைப் பார்த்து காபாலிகன் தன் குற்றத்தை உணர்ந்தனன். இங்குள்ள பேச்சாலும், நடிப்பாலும், வேஷத்தாலும் சபையோர் சிரிக்காமலிருக்கமுடியாது.

இக்கவி ந்யாயசாஸ்த்ரம் படித்தவர் என்பதை நன்கு காட்டுகின்றனர்[6]. இவரது காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும்.

1. महेन्द्रविक्रमवर्मा
2. अवनिभाजनम्
3. गुणभरः
4. मत्तविलासः
5. मत्तविलासप्रहसनम्
6. न हि प्रतिज्ञामात्रेण हेतुवादिनः सिद्धिरस्ति
   अन्यथा हेतुवचनं निरर्थकम्

விசாகதத்தன்[1].—இவர்க்கு விசாகதேவன்[2] என்ற பெயரும் உண்டு. இவரின் பிதாமஹர் ஸாமந்தவடேச்வரதத்தர்[3], தகப்பனார் மஹாராஜபாஸ்கரதத்தர்.[4] இவர் எழுதிய நாடகம் முத்ராராக்ஷஸம்[5] என்பது. இங்கு முத்ரையால் ராக்ஷஸன் வசப்பட்டமை வர்ணிக்கப்பட்டதால் இந்நாடகம் இப்பெயர் பெற்றது. இதனுள் ஏழு அங்கங்கள் உள. தன்னை அவமதித்த நந்தர்களை அழித்து சந்த்ரகுப்தனை அரசனாக்கி, அவனது ஆட்சி நிலைபெற்றிருக்க நந்தர்களுக்கு உற்ற மந்திரியாய் இருந்த ராக்ஷஸனை அவனுக்கு மந்திரியாகச் செய்விக்கச்[6] சாணக்யன் செய்த உபாயங்கள் இங்கு வர்ணிக்கப்பட்டன.

முதல் அங்கத்தில் ராக்ஷஸன் அறிவு, பராக்ரமம் ஸ்வாமிபக்தி இவற்றிற் சிறந்தவன் என்றும்[7], யஜமானன் இறந்த பிறகும் அவனிடத்தில் ராக்ஷஸனைப் போல் பக்தியைக் காட்டும் மனிதர் அரிது என்றுங்[8] கூறி, சாணக்யன் அவனைத் தன் வசப்படுத்த ஜீவிதஸித்திமூலமாய் ராக்ஷஸனின் அங்குளி

1. विशाखदत्तः
2. विशाखदेवः
3. सामन्तवटेश्वरदत्तः
4. महाराजभास्करदत्त.
5. मुद्राराक्षसम्
6. अथ वा अगृहीते राक्षसे किमुत्खातं नन्दवंशस्य किं वा स्थैर्यमुत्पादितं
   चन्द्रगुप्तलक्ष्म्याः [मुद्रा. I, 13-]
7. प्रज्ञाविक्रमभक्तयः समुदिता येषा गुणा भूतये ते भृत्या नृपतेः ... (*ibid* I, 15)
8. भर्तुर्ये प्रलयेऽपि पूर्वसुकृतासङ्गेन नि सङ्गया
   भक्त्या कार्यधुरं वहन्ति वहवस्ते दुर्लभास्त्वादृशाः । (*ibid* I, 14)

(2) சந்த்ரகுப்தனைக் கொல்ல ப்ரயோகிக்கப்பட்ட விஷ கன்னிகையால் பர்வதேச்வரன்[1] கொல்லப்பட்டான் (3) சந்த்ர குப்தனைக் கொல்ல தாருவர்மா[2] செய்த யந்த்ரதோரணத்தால் சாணக்யனின் தந்த்ரத்தால் வர்வரகன்[3] கொல்லப்பட, தாரு வர்மா வைரோசகனைச்[4] சந்த்ரகுப்தன் என நினைத்து யானையில் இருந்தவாறே கொன்றனன். அதைக் கண்டு வைரோசகனின் பின் வந்துள்ளோர் தாருவர்மாவைக் கொன்றனர். (4) அபய தத்தன்[5] என்ற வைத்யன் விஷங்கலந்த மருந்தைச் சந்த்ரகுப் தனுக்குக் கொடுக்க, அஃது அவ்வாறு எனச் சாணக்யன் ஸங்கேதித்து அவனையே அதனை உண்பிக்க, அவன் இறந்தனன். (5) படுக்கையறையில் சந்த்ரகுப்தனைக் கொல்லத் தங்களால் ஏவப்பட்ட ப்ரமோதகன்[6] பணத்திமிறினால் கண்ணுந் தலையும் தெரியாமல் இருக்க, அதற்குத தாங்களே காரணமாயிருக்கலாம் எனச் சாணக்யன் நினைத்து அவனைச் சித்ரவதைக்கு உள்ளாக் கினன். (6) சந்த்ரகுப்தன் தூங்கும்போது அவனைக் கொல்ல ஏவப்பட்ட பீபத்ஸகன்[7] முதலியோர் சுவரினுள்ள சுரங்கத்தில் இருந்தனர். அப்போது சோற்றுப்பருக்கையுடன் எறும்புகள் சுவரிலிருந்து வெளிவந்தன; அதனைக் கண்டு சாணக்யன் அவ் வறையைத் தீயிட்டனன்; அவர்கள் கொளுத்தப்பட்டனர்.

அப்போது சகடதாஸன் ஸித்தார்த்தகனோடு அங்கு வந்து, கொலையாளிகளிடமிருந்து தன்னை ஸித்தார்த்தகன் விடுவித் தான் எனக் கூற, அவ்விருவரும் ராக்ஷஸனோடு இருந்தனர். அப்போது ராக்ஷஸனின் முத்திரையிட்ட கடிதத்தைப் பத்திர மாக அங்கே இருக்கவேண்டும் என ஸித்தார்த்தகன் சொல்ல,

1. पर्वतेश्वरः
2. दारुवर्मा
3. वर्वरकः
4. वैरोचकः
5. अभयदत्तः
6. प्रमोदकः
7. बीभत्सकः

அமமுததிரையைக கணடு அஃது எவவாறு அவறுககுக கிடைத தது எனக கேடக, சநதனதாஸன வீடடுவாசலிற கிடநததைத தான எடுததேன எனக கூறி அவனிடம கொடுததுவிடடனன

மூனறும அஙகததில சநதரகுபதன குஸுமபுரததில கௌமுதீமஹோதஸவம செயயவேணடும எனறு ஆணையிட, அதனைச சாணககியன செயயவேணடாம என மறுததனன் இதனால இருவாககும போலிசசணடை நடநதது இதறகுக காரணம சநதரகுபதன சாணககியனோடு மாறுபட, ராக்ஷஸன மலயகேதுவை விடடு, சநதரகுபதனுடன சேர விததனனிருக கினறான என மலயகேது எணணவேணடும எனபது

நானகாம அஙகததில மலயகேது பாகுராயணனோடு ராக்ஷஸனைப பாரகக வர, அபபோது கரபகன குஸுமபுரததில சாணககியன வேலையை விடடு நீககபபடடான எனபதையும அது போனறவறறையும ராக்ஷஸனிடம கூற, அதனை அவவிரு வரும வெளியிலே மறைநதிருநது கேடக, அபபோது தகக சமயஙகளில பாகுராயணன ராக்ஷஸன மலயகேதுவின நனமையைக கருதவிலலை என மலயகேது நினைககுமாறு அவனது மனததை மாறறினன

ஐநதாம அஙகததில ராக்ஷஸனைப பறறி ஸநதேஹிததுக கொணடு மலயகேது பாகுராயணனிடம வர அபபோது ஜீவ ஸிததி முததிரை வாஙக வருவதுபோல பாசாஙகு செயது பாவ தேசவரன விஷகனனிகையை உபயோகிதது ராக்ஷஸனால கொலலபபடடான எனறனன[1] அபபோது ஸிததாாததகன கடிதம, மூனறு அணிகலனகள கொணட பெடடி இவறறுடன அஙகு வர, அவனைப பிடிதது பாகுராயணன உதைககுமாறு ஆணையிட, அவனிடமிருநது கடிததததையும பெடடியையும மலய கேது வாஙகினன கடிதததிலிருநது ராக்ஷஸன சநதரகுப

1 ग्रथ राक्षसेन घातितम्नातो न चाणक्येन (ibid V, 5-)

தனைச் சேர விரும்புகின்றான் என அறிந்தனன். நகைகள் தகப்பனா அணிந்தனவே என அறிந்தான். வாசிகமாய் ஸித்தார்த்தகன் கூறியதையுங் கேட்டான். பின்னா ராக்ஷஸனை வரவழைத்து அவற்றைப் பற்றிக் கேட்க, அவன் ஒன்றற்கும் விடை கூற இயலாது, தன்னுடன் இருந்தவரெல்லாம் சாணக்யனின் மனிதர் என நினைத்து விதியை வெறுத்து நின்றனன்.

ஆறும் அங்கத்தில் மலயகேது சிறையிடப்பட்டான்; ராக்ஷஸன் பாடலிபுரத்தின் வனத்தில் இருந்தனன். அப்போது ஸித்தார்த்தகனும் ஸமித்தார்த்தகனும் சந்தனதாஸனைக் கொல்லப் போகிறார்கள் எனக் கேட்டு அவனது தோழன் விஷ்ணுதாஸன் தீயில் விழப் போக, அதனைக் கண்டு ராக்ஷஸன் அதற்குக் காரணத்தைக் கேட்க அவனிடமிருந்து அதனைத் தெரிந்து தான் அதைத் தடுத்துவிடுவதாகக் கூறி அவனைத் தீயில் விழுவதினின்றுந் தடுத்தான்.

ஏழாம் அங்கத்தில் சந்தனதாஸனை ஸித்தார்த்தகன் ஸமித்தார்த்தகன் இருவரும் கொலைக்களத்திற்குக் கூட்டிப்போக அப்போது அவன் மனைவியும் மகனும் வருந்த, அவ்விடத்திற்கு ராக்ஷஸன் வந்து தன்னை அவனுக்குப் பிரதியாகக் கொல்ல விரும்ப, சாணக்யன் அதற்கு இணங்காது, ராக்ஷஸன் சந்திரகுப்தனுக்கு மந்திரியாக ஆனாலன்றிச் சந்தனதாஸன் கொல்லப்படுவான் என்று கூற, ராக்ஷஸன் இணங்கினன். தனது எண்ணம் முழுமையும் நிறைவேறிற்று எனச் சாணக்யன் மகிழ்ந்து ராக்ஷஸனை நமஸ்கரித்தனன்.

முத்ராராக்ஷஸத்தின் சிறப்பு. — நாடகபாத்திரங்களின் ப்ரவேசம் உரிய காலத்தில் உளது. இரண்டாம் அங்கத்தில் விராதகுப்தன் ராக்ஷஸனுக்குக் குஸுமபுரச்செய்திகளைக் கூறியவுடன் சகடதாஸன் ஸித்தார்த்தகனோடு ராக்ஷஸனைப் பார்க்க வருகின்றான். நான்காம் அங்கத்தில் பாடலிபுரத்தில் நடந்ததைச் சொல்ல ஆரம்பித்தவுடன் மலயகேது பாகுராயணனோடு அவர்கள் இருக்குமிடத்திற்கு வெளிப்புறத்தில் வருகின்றனர். பாத்திரங்களின் மனோபாவத்தை அவர் கூறுஞ் சொற்கள்

நன்கு குறிக்கின்றன. யார் விளக்குப்பூச்சிபோல் நாசத்தை அடையப் போகின்றனர்[1] என்ற தொடர் சாணக்யரின் கோபத்தையும், அமாத்ய ராக்ஷஸரே, விஷ்ணுகுப்தன் நமஸ்கரிக்கிறேன்[2] என்னுமிடத்து அவனது விநயமும், சந்தனதாஸனின் உயிரை உண்மையாக விரும்பினால் சஸ்த்ரம் கையில் எடுக்கப்படட்டும்[3] என்னுமிடத்து அவனது தீர்மானமும் நன்கு உணரப்படுகின்றன. அவ்வாறே தூர்த்தர்கள் போலிமுத்திரையைச் செய்வார்கள்[4] என்னுமிடத்து ராக்ஷஸனின் கோபமும், விராதகுப்தன் குஸுமபுரம் ஸேனைகளால் சூழப்பட்டது எனக் கூறும்போது யான் உயிரோடிருக்க எவன் குஸுமபுரத்தைத் துன்புறுத்துகின்றான், ப்ரவீரக யாருக்குக் கீர்த்தி வேண்டுமோ அவர் வருக[5] என்னுமிடத்து ராக்ஷஸனின் வீரமும், சந்த்ரகுப்தனைக் கொல்ல யார் எந்த ஸாதனத்தால் ஏவப்பட்டனரோ, அவர் அவற்றாலே கொல்லப்பட்டார்[6] என்னுமிடத்து ராக்ஷஸனின் சோகமும் நிர்வேதமும்,

1. उल्लङ्घयन्मम समुज्ज्वलतः प्रतापं
   कोपस्य नन्दकुलकाननधूमकेतोः ।
   सद्यः परात्मपरिमाणविवेकमूढः
   कः शालभेन विधिना लभतां विनाशम् ॥ (मुद्रा. I, 10)
2. भो अमात्यराक्षस विष्णुगुप्तोऽहमभिवादये (*ibid* VII, 8)
3. यदि सत्यमेव चन्दनदासस्य जीवितमिष्यते
   ततो गृह्यतामिदं शस्त्रम् (*ibid* VII. 14-)
4. कपटमुद्रामुत्पादयितुं शक्नुवन्ति धूर्ताः (*ibid* V, 13)
5. अयि मयि स्थिते कः कुसुमपुरमुपरोत्स्यति ; प्रवीरक प्रवीरक, क्षिप्रमिदानीं ....
   ते निर्यान्तु मया सहैकमनसो येषामभीष्टं यशः. (*ibid* II, 13)
6. ये शस्त्रेषु रसेषु च प्रणिहितास्तैरेव ते घातिताः (*ibid* II, 16)

சகடதாஸன் மேலுள்ள ஸந்தேகம் நல்ல வேளையாய் நீங்கிற்று[1] என்றவிடத்து அவனது மனமகிழ்ச்சியும் காணலாம். தக்கவிடத்து வாய்ப்பேச்சைக் கவி வழங்குதல் போற்றத் தக்கது. உதாரணமாக, இக்கடிதத்தால் ராக்ஷஸன் ஜயிக்கப்படவேண்டும் எனச் சாணக்யன் சொல்லிமுடிக்க ஜயிக்கட்டும் யஜமான் என்று கூறிக்கொண்டு ப்ரதீஹாரி வருதலும்[2], ராக்ஷஸன் க்ருஹிக்கப்படுவானு எனச் சாணக்யன் கூற க்ருஹிக்கப்பட்டது என வித்தார்த்தகன் கூறுதலும்[3], அந்த துராத்மா சாணக்யவடு என ராக்ஷஸன் கூற ஜேது எனத் தௌவாரிகன் கூறுதலும், வஞ்சிக்கப்படுவானு எனக் கூற அமச்சன் எனக் கூறுதலுமாகும்.[4] வித்தார்த்தகன் மலயகேது ராக்ஷஸன் இவருடைய முன்னிலையில் கடிதத்தைப் பார்த்து மகிழாதார் யார்? சந்தனதாஸன் கொலைக்களத்தில் மனைவி மகன் இவரோடு பேசுதலைக் கேட்டு மனமுருகாதார் யார்? இவ்வாறு இந்நாடகம் எழுதுதற்கு இக்கவி பெருமுயற்சி எடுத்துக்கொண்டனர் எனக் குறிப்பாய்க் கூறினர்[5].

அன்றியும் இந்நாடகத்துள் நாயகன் யார் என்பதற்கும் ஆங்கிச்சுவை யாது என்பதற்கும் எளிதாக விடை கூற

1. दिष्ट्या शकटदासं प्रत्यपनीतो विकल्प (*ibid* VII, 8-)
2. चाणक्यः — अनेन खलु लेखेन राक्षसो जेतव्यः
   प्रतीहारी—जेदु अज्जो (*ibid* I, 19-)
3. चाणक्यः — अपि नाम दुरात्मा राक्षसो गृह्येत
   सिद्धार्थकः — अज्ज गहीदो (*ibid* I, 20-)
4. राक्षसः — अपि नाम दुरात्मा चाणक्यवटुः
   दौवारिकः—जेदु ।
   राक्षसः — अतिसन्धातुं शक्यः स्यात्
   दौवारिकः — अमच्चो (*ibid* IV, 3-)
5. कर्ता वा नाटकानामिमनुभवति क्लेशमस्मद्विधो वा (*ibid* IV, 3)

இவலாது அரசன் சந்த்ரகுப்தனே நாயகன் எனின், ப்ரதி நாயகன் யார்? ராக்ஷஸனைப் ப்ரதிநாயகனாகக் கொள்ளின், அவனுக்கு ஸமமான நிலையில் இருப்பவன் சந்த்ரகுப்தனா சாணக்யனா? சாணக்யன் சந்த்ரகுப்தனின் மந்திரியாக இருந்தாலும், இந்நாடகத்துள் சாணக்யனுக்குச் சிறப்பேயன்றிச் சந்த்ரகுப்தனுக்கு இல்லை. ஆகலின் ஸேவகனின் கல்யாணத்தில் அரசன் பின்வரினும் ஆங்குச் சிறப்பு ஸேவகனுக்கே இருப்பது போன்று, ஈண்டுஞ் சிறப்பு சாணக்யனுக்கே ஆகும். ஆகலின் சாணக்கியனையே நாயகன் எனக் கூறவேண்டி வரும்.

வீரமே இங்கு அங்கிச்சுவை எனின், சாணக்கியனிடத்தில் என்ன வீரச்செயல்கள் இருக்கின்றன என்ற கேள்வி வரும். சந்திரகுப்தனைக் கொல்ல ராக்ஷஸன் செய்த ப்ரயோகங்களை எல்லாம் விலக்கி, அவனிடம் உள்ள நற்குணங்களைக் கண்டு மெச்சி அவனே சந்திரகுப்தனுக்கு மந்திரியாகும்படிப் புத்திசக்தியால் பலவற்றைச் செய்த சாணக்யனை வீரனாகக் கூறுதல் மிகை ஆகுமா? ஆகலின் வீரமே ஈண்டு அங்கிச்சுவை. என்னெனில் விராதகுப்தன் பாடலிபுத்ர வ்ருத்தாந்தம் கூறும் போது ராக்ஷஸன் வருந்துமிடத்து சோகம் ததும்புகிறது. சாணக்யனுக்கும் சந்த்ரகுப்தனுக்கும் கலகம் போலிச் சண்டையைக் கேட்கும்போது ஹாஸ்யமும் அத்புதமும் உண்டாகின்றன. மலயகேது ராக்ஷஸனிடம் குற்றங் கூறும்போதும் சாணக்யன் ராக்ஷஸனைச் சஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ளும்படி கூறும்போதும் நிர்வேதம் ததும்புகிறது.

இந்நூலினுள்ள பாத்திரங்களுள் சாணக்யன் மிகச் சிறந்தவன் என்பது வெளிப்படை. அவன் ச்ரோத்ரியன்[1], தினம் மாணவர்களுக்கு அத்யாபனம் செய்து வந்தான்[2], தினம் அக்னிஹோத்ரம் செய்தான். சந்த்ரகுப்தனுக்கு மந்திரியாய்

1. श्रोत्रियाक्षराणि ... अस्फुटानि भवन्ति (ibid I, 20-)

2. अस्मादुपाध्यायस्य गृहीतानाम् आर्यचाणक्यस्य (ibid, I 18-)

இருப்பினும், நாட்டின் செல்வத்தை சுபாலத்திற்கு உபயோகிக்காமல் நாட்டின் நன்மைக்கே வழங்கினான். இவையெல்லாம் அவனது இடிசுவர்வீட்டை வழங்குமிடத்து கூறப்பட்டன.[1] அவன் ஆசையற்றவன்[2]. சந்த்ரகுப்தனைக் கொல்ல ராக்ஷஸன் செய்த உபாயங்களை யெல்லாம் தன் கூர்மையான அறிவால் அறிந்து அவற்றை அவனுக்கே நீக்குவிக்கும்படி செய்த தீரன். தன்னைப் பகைத்த ராக்ஷஸனின் நற்குணங்களை மெச்சத்தக்க தூய்மையான மனத்தை உடையவன். ராக்ஷஸனை வசப்படுத்திச் சந்த்ரகுப்தனுக்கு அவன் மந்திரியாகும்படிப் பல உபாயங்களைக் கண்ட பேரறிஞன்[3]. சந்த்ரகுப்தனுக்கு வந்த ஆபத்துக்களைப் போக்கப் பிறர்க்குக் கெடுதி இழைத்தவனே யன்றி, தானாக ஒருவருக்கும் தீங்கு இழைக்கவில்லை. ராஜதந்த்ரத்தில் ஈடுபட்டவர் இறுதியில் பெரிய நன்மையைக் குறித்து இடையில் சிறிய தீச்செயல்கள் போன்றவற்றைச் செயினும் குற்றமில்லை. உலகத்தில் அரசர் செல்வச் செருக்கால தவத்தைச் செய்யும் ப்ராம்மணர்களை அவமதித்தால், அவர்களை அடக்க அவர்க்கு ஆற்றல் உண்டு என்பதையும், செல்வம் கிடைத்தபோது அதனை தாம் சுகாலத்திற்கு வழங்க மாட்டார் என்பதையும், அதனை நாட்டின் நன்மைக்கே பயன்

1. उपलशकलमेतद्भेदकं गोमयानां
   वटुभिरुपहृतानां बर्हिषां स्तोममेतत् ।
   शरणमपि समिद्भिः शुष्यमाणाभिराभिः
   विनमितपटलान्तं दृश्यते जीर्णकुड्यम् ॥ (*ibid* III, 15)
2. निरीहाणामीशस्तृणमिव तिरस्कारविषयः (*ibid* III, 16)
3. मुहुर्लक्ष्योद्भेदा मुहुरधिगमाभावगहना
   मुहुः सम्पूर्णाङ्गी मुहुरतिकृशा कार्यवशतः ।
   मुहुर्नश्यद्बीजा मुहुरपि बहुप्रापितफले-
   त्यहो चित्राकारा नियतिरिव नीतिर्नयविदः ॥ (*ibid* V, 3)

படுமாறு செய்வர் என்பதையும், அந்தணமைக்குக் கேடு செய்ய யாரேனும் வலிமையுற்றவர் இருப்பின், அவரைத் தம் வசப்படுத்தி அவரைக் கொண்டே அந்தணமைகள் நிலைத்து நடக்குமாறுச் செய்ய ஆற்றல் கொண்டவர் என்பதையும், தாம் எப்பொழுதும் தமக்கு விதிக்கப்பட்ட தர்மங்களைச் செய்வதில் தவறார் என்பதையும் சாணக்யன் முகமாக விசாகதத்தர் இந் நாடகத்தில் விளக்கியுள்ளனர்.

காலம்—விசாகதத்தரின் காலம் இதுதான் எனத் தெளிவாய்க் கூற இயலவில்லை. தசரூபகத்தில் இரண்டிடத்தில் முத்ராராக்ஷஸம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆகலின் கி. பி. பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னர் இந்நூல் இயற்றப்பட்டது என்பது வெளிப்படை. பரதவாக்யத்தில் சந்த்ரகுப்தன் என்பதற்குப் பிரதியாக அவந்திவர்மா எனச் சில ஏடுகளில் இருக்கின்றது. அவந்திவர்மா மகததேசத்தில் ஆண்ட மௌகரி அரசனை க்ரஹவர்மாவின் தகப்பனைக் குறிப்பின், அவனது காலத்தை ஒட்டி இக்கவி ஏழாம் நூற்றாண்டில் இருந்திருக்கலாம் என்பர்.[1]

இந்நூல் வழங்கப்படும் பாடலிபுத்ரம் நன்னிலையில் இருந்ததாகச் சீனயாத்ரிகன் பாஹியனும், அழிந்த நிலையில் இருந்ததாக யுவான்சுவாங்கும் கூறுதலின் இந்நூல் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம் என்பர் சிலர்.[2]

நந்தர்களைக் கொன்று சாணக்யன் சந்த்ரகுப்தனை அரசன் ஆக்குவான் என விஷ்ணுபுராணத்திலும், அரசன் ஆக்கினான் என ப்ருஹத்கதையிலும்[3] இருப்பதாகக் கூறுவர். நந்தர்

1 Introduction to Mudrarakṣasa by K. T Telang p 21
2 Classical Sanskrit Literature by M Krishnamachariar p 606
3 बृहत्कथा

களுக்குப் பின்னர் சந்த்ரகுப்தன் பரதக்கண்டத்தை ஆண்ட படியால், சரித்திரப்பகுதியையே மூலமாகக் கொண்ட விசாக தத்தர் இந்நூலை எழுதினர் எனக் கூறல் தகும்.

பட்டநாராயணன்[1]. — இவர் எழுதிய நாடகம் வேணீ ஸம்ஹாரம்[2] என்பது திரௌபதியின் வேணீ முடியப் படுதலையோ திரௌபதியின் வேணீமூலமாக துரியோதனாதிகள் அழிக்கப்பட்டதையோ இந்நூல் கூறுதலால் இதற்கு இப் பெயர் வந்தது. இங்கு ஆறு அங்கங்கள் உள. குருக்ஷேத்திரப் போருக்குக் கௌரவரும் பாண்டவரும் புறப்படுவதுமுதல் போர் முடியுமவரை உள்ள மஹாபாரதக்கதையுள் சிறசிலப் பகுதியை இந்நூல் மூலமாகக் கொண்டது. இந்நூலை நன்கு படிப்பின் இக்கவி மஹாபாரதத்தை எழுத்தெழுத்தாய்ப் படித்திருந்தனர் என்பது விளங்கும். ஆயினும் அக்கதையையே முழுவதும் இங்குக் கொண்டனர் எனக் கூறுதல் இயலாது.

பல்லிடங்களில் மஹாபாரதத்தினின்று மாறுபட்டனர். அவை ஆவன:—மஹாபாரதம் சாந்தத்தை அங்கிச்சுவையாகக் கொண்டிருக்க, இந்நூல் வீரத்தை அங்கிச்சுவையாகக் கொண்டது ஆகலின் மஹாபாரதத்தின் பரதா நசிக்கவேண்டாம், தாம் துரியோதனனுக்கு ஊழியராகவும் இருப்போம் எனப் பீமன் கூறியிருக்க, இங்கு முதல் அங்கத்தில் தான் உயிரோடு இருக்கத் தார்த்தராஷ்டர பிழைத்திருப்பாரா என்கின்றான்[3] விஷக்கலந்த

1. भट्टनारायण.
2. वेणीसंहारम्
3. अपि दुर्योधनं कृष्ण सर्वे वयमधश्चराः ।
नीचैर्भूत्वाऽनुयास्यामो मा स्म नो भरता नशन् ॥
(म. भा. उद्यो. 73, 20)
सर्वांस्तितिक्षे सङ्क्लेशान्मा स्म नो भरता नशन् ॥ (*ibid* 75, 18)
स्वस्था भवन्ति मयि जीवति धार्तराष्ट्राः? (वेणी. I, 8)

சோறு அரக்குமாளிகைக்குத் தீ, சூதாட்டம் இவற்றை நினைத்தால் பாண்டவர் போருக்கு வாரார் என அங்குக் கர்ணன் கூறியிருத்தலை, இங்குப் பீமனின் கோபத்தை அதிகமாக்குவதற்காகப் பீமன் கூறுகின்றான். பீமனின் கோபம் அதிகரிப்பதற்காகத் துரியோதனனின் மனைவி பானுமதி த்ரௌபதியைப் பரிஹஸித்ததாக இங்குச் சேர்க்கப்பட்டது.

இரண்டாம் அங்கத்தில் துரியோதனன் வ்ரதத்தை அனுஷ்டித்துக்கொண்டிருந்த மனைவியுடன் உல்லாஸமாய் இருக்க வருதலும், அப்போது அவன் ஸகோதரி மாமியுடன் அர்ஜுனனது சபதத்தைக் கூற வருதலும்[1] மஹாபாரதத்துள் இல்லை. அர்ஜுனன் கையில் அகப்பட்ட ஜயத்ரதன் தொலைந்தான்[2] என மஹாபாரதத்துள் துரியோதனன் கூற, இங்கு ஜயத்ரதனின் எதிரில் நிற்கப் பாண்டவருள் ஒருவராலும் இயலாது என்கின்றான்.[3] விலாஸம் என்ற பகுதி நாடகத்துள் இருக்கவேண்டுமென்று இக்கவி இதனை எழுதினரேனும் அது வீரச்சுவையைக் கெடுக்கின்றது என்பர் ஆநந்தவர்த்தனர்.[4]

1. सत्यं वः प्रतिजानामि श्वोऽस्मि हन्ता जयद्रथम् ।
(म. भा. द्रो. 73, 27)
2. नार्जुनस्य वशं प्राप्तो मुच्येताजौ जयद्रथः (ibid 94, 14)
3. धर्मात्मजं प्रति यमौ च कथैव नास्ति
मध्ये वृकोदरकिरीटभृतोर्बलेन ।
एकोऽपि विस्फुरितमण्डलचापचक्रं
कः सिन्धुराजमभिषेणयितुं समर्थः ॥ (वेणी. II, 26)
4. यथा वेणीसंहारे विलासाख्यस्य प्रतिमुखसन्ध्यङ्गस्य प्रकृतरसनिबन्धाननुगुणमपि द्वितीयेऽङ्के भरतमतानुसरणमात्रेच्छया घटनम्
[ध्वन्या. 3, 15]

ப்ரதிநாயகனைப்பற்றிக் குறைவுபடுத்தற்காக அது சேர்க்கப் பட்டமையின், அது வீரச்சுவையின் சிறப்பிற்குக் குறைகளில்லை என்பர் ஏனையோர். அன்றியும் பானுமதி ஸ்வப்னத்தைக் கூற, துரியோதனன் வெளியிலிருந்து அவளறியாது அதைக் கேட்க, கிரி என்ற பொருளில் நகுலன் என்ற சொல்லை அவள் வழங்க, பாண்டவருள் நாலாவனைக் குறிக்கின்றது எனத் துரியோதனன் கொண்டு மனைவியின் சீலத்தைச் சந்தேகித்தல் சபையோரின் மனத்தில் ஒருபக்கம் ஹாஸ்யத்தையும் மற்றொரு பக்கம் வெறுப்பையும் உண்டாக்குகின்றது.

மூன்றாம் அங்கத்தில் துரோணனின் வதத்தைக் குறித்து அச்வத்தாமன் வருந்துதல்[1] எவர் மனத்தையும் உருகச்செய்யும். பின்னர் கர்ணனுக்கும் அச்வத்தாமனுக்கும் உள்ள வாய்ச் சண்டை, மஹாபாரதத்துள் துரோணன் இறப்பதற்குமுன் க்ருபருக்கும் கர்ணனுக்கும் நடந்ததாகக் கூறப்பட்டுள்ளது[2] அன்றியும் மஹாபாரதத்துள் கர்ணனை ஸேனாபதியாகச் செய்ய அச்வத்தாமனே துரியோதனனிடம் கூறுகின்றான்.[3] கர்ணன்

1. श्रुत्वा वधं मम मृषा सुतवत्सलेन
   तात त्वया सह शरैरसवो विमुक्ताः ।
   जीवाम्यहं पुनरहो भवता विनापि
   क्रूरेऽपि तन्मयि मुधा तव पक्षपातः ॥ [वेणी. III, 12]
   आजन्मनो न वितथं भवता किलोक्तं
   न द्वेक्षि यज्जनमतस्त्वमजातशत्रुः ।
   ताते गुरौ द्विजवरे मम भाग्यदोषात्
   सर्वं तदेकपद एव कथं निरस्तम् ॥ (ibid III, 15)
2. म. भा. द्रो 159 & 160.
3. ते वयं प्रवरं नृणां सर्वैर्योधगणैर्युतम् ।
   कर्णमेवाभिषेक्ष्यामः सैनापत्येन भारत ॥ (म. भा. कर्ण. 7, 13-7)

அச்வத்தாமன் இவ்விருவரின் வாய்ப்போரை நடிக்கும்போது, ஸபையோர் மெய்ம்மறந்து பார்ப்பினும், நாடகவஸ்துவின் வளர்ச்சிக்கு அது பயன்படவில்லை. ஈண்டு ஒரு ச்லோகம்[1] மஹாபாரதத்தில் உள்ளவாறே கூறப்பட்டது.

நான்காம் அங்கத்தில் துச்சாஸனின் வதத்தைப்பற்றி ஸூதன்மூலமாகவும், குமாரவ்ருஷஸேனனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த போரைப்பற்றி விரிவாய் ஸுந்தரகன்மூலமாகவும் துர்யோதனன் கேட்டுக் கர்ணனைப் பார்க்கப் போர்க்குப் போகப் புறப்படுந்தறுவாயில் த்ருதராஷ்ட்ரரும் காந்தாரியும் துர்யோதனனைப் பார்க்க வருகின்றனர். இந்த அங்கம் நடித்தற்கு உரியது அன்று. இவ்வங்கத்தின் பொருளை அடுத்த அங்கத்தின் தொடக்கத்திற் கூறி, இதனை ஒரு தனியங்கமாக இக்கவி செய்யாதிருப்பின் இந்நாடகம் நடித்தற்குத் தக்கதன்று என்ற அபவாதம் நீங்கியிருக்கும்; வ்ருஷஸேனன் அர்ஜுனன் இவ்விருவரின்போர் மஹாபாரதத்துள் இவ்வளவு விரிவாய் இல்லை.

ஐந்தாம் அங்கத்தில் த்ருதராஷ்ட்ரரும் காந்தாரியும் துர்யோதனனைப் போருக்குப் போகாது தாமபுத்ரரோடு ஸமாதானஞ் செய்யச் சொல்ல, தனது தம்பிமார்கள், நண்பர்கள், ஆசிரியர்கள் எல்லோரும் இறந்தபின்னர் தான் ஜீவிக்க விரும்பவில்லை என்றும் தான் பாண்டவர்களை அழிக்க வேண்டும் என்றும் துர்யோதனன் கூறினன். இங்கு, தான் ஒரு ஸுக்ஷத்ரியன் என்பதை நன்கு விளக்குகின்றான். பின்னர்க் கர்ணன் இறந்தான் எனக் கேட்க, அவன் வருந்துவதும், போர்க்குப் போகவேண்டும் என்ற நிச்சயமும், அவன் ஒரு பெரிய செய்ந்நன்றிகொண்ட நண்பன் என்பதை விளக்குகின்றன. அப்போது அச்வத்தாமன் தான் போருக்குவருவதாகக் கூறமிடத்து, கர்ணன் இறந்தபிறகு அவன் போருக்கு

1. मयि जीवति यत्तात: केशग्रहमवाप्तवान् ।
कथमन्ये करिष्यन्ति पुत्रेभ्य: पुत्रिण: स्पृहाम् ॥ (म. भ. द्रो. 196, 9)

மஹாதேவன்.[1]—இவர் கி. பி பதினேழாம் நூற்றுண்டில் தஞ்சாவூர ஜில்லா பழமார்னேரி கிராமததிற் பிறந்து தஞ்சாவூர்அரசனுற் போற்றப்பெற்றவர். இவரது தகப்பனூ கிருஷ்ண ஸூரி[2] என்பவர் இவர் எழுதிய நாடகம் அத்புததர்ப்பணம்[3] என்பது. சண்டையில் நிகழ்ந்ததைக் காட்டக்கூடிய அத்புத மணிதாப்பணத்தால் ராமனும் லக்ஷ்மணனும் போரில் நடக்த வற்றை அறிந்தமையால், இந்நாடகததிறகு இப்பெயர் வந்தது. ராமராவணப்போரே இங்குக் கதாவஸ்து. இங்குப் பத்து அங்கங்கள் உள. இக்கவியின் வாக்கு எளிய நடையில் உள்ளது.

நல்லாதீக்ஷிதா.[4]—இவர் கி. பி. பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் கண்டரமாணிக்யகிராமத்தில் இருந்தவர். இவரது தகப்பனுர் பாலசந்த்ரதீக்ஷிதர்[5] நண்பர் வைத்யநாததீக்ஷிதரின்[6] விருப்பப் படி ச்ருங்காரஸர்வஸ்வபாணத்தை[7] இயற்றியவர். ஸுபத்ரா பரிணயநாடகமும்[8] இவரால் இயற்றப்பட்டது. மத்யார்ஜுனத்தில் மஹாலிங்கப்பெருமானின் வஸந்தோத்ஸவத்தில் ச்ருங்காரஸர்வஸ்வபாணம் நடிக்கப்பட்டது.

அநந்ததேவன்.[9]—இவர் கி பி. பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இருந்தவர். பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸை இவற்றைப் பல மாணவாகளுக்குப் போதித்தவர். இவர் ஹரி பக்தியில் ஈடுபட்டவா. இவரது தகப்பனூ ஆபதேவர்.[10] இவர் எழுதிய நாடகம் மனோனுரஞ்சனம்[11] என்பது. இதனுன் ஐந்து

1. महादेवः
2. कृष्णसूरिः
3. अद्भुतदर्पणम्
4. नल्लादीक्षितः
5. बालचन्द्रदीक्षितः
6. वैद्यनाथदीक्षितः
7. शृङ्गारसर्वस्वभाणः
8. सुभद्रापरिणयनाटकम्
9. अनन्तदेवः
10. आपदेवः
11. मनोनुरञ्जनम्

அங்கங்கள் உள. இங்குப் பக்தியே பிரதானரஸம் ஆகும். இந்திரனுக்குச் செய்யவேண்டிய பூஜையைக் கோக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் கோவர்த்தன மலைக்கும் செய்ததை இங்கு இக்கவி உணர்த்துகின்றார். ஒவ்வொரு சுலோகமும் பாடுவதற்குத் தக்கதாக இருத்தலைப் பார்த்தால் கிருஷ்ணனிடத்தில் ஈடுபட்டு இவற்றைப் பாடிப்பாடிக் குதித்துக்கொண்டு இக்கவி இருந்திருக்கவேண்டும் என்பது விளங்கும். இதற்கு மனோனுரஞ்சனம் என்ற பெயர் மிகப் பொருந்தும்.

கோகுலநாதன்[1]—இவர் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் இருந்தவர். இவர் எழுதிய நாடகம் அம்ருதோதயம்[2] என்பது. இதனுள் ஐந்து அங்கங்கள் உள. பிரபோதசந்திரோதயத்தைப் போல அத்வைதக்கொள்கைகளை ஸாதாரணமக்கள் அறியுமாறு நாடகமாக இக்கவி இயற்றினார். ஐந்து அங்கங்களில் ச்ரவணம்[3] மனனம்[4], நிதித்யாஸனம்[5], ஆத்மதர்சனம்[6], அபவர்க்கப்ரதிஷ்டை[7] உணர்த்தப்பட்டன.

ஆநந்தராயமகி[8]—இவர் கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் தஞ்சாவூர் அரசனாகிய சரபோஜியால் போற்றப்பட்டவர். வித்யாபரிணயம்[9] என்ற நூலை வேதகவி[10] என்ற புலவர் இயற்றி அவர் தன்னைப் போற்றிய ஆநந்தராயர் என்ற மந்திரி அதனை இயற்றியதாகக் கூறினார் என்று கூறுவர்.[11]

1 गोकुलनाथ
2 अमृतोदयम्
3 श्रवणम्
4 मननम्
5 निदिध्यासनम्
6 आत्मदर्शनम्
7 अपवर्गप्रतिष्ठा
8 आनन्दरायमखी
9 विद्यापरिणयनम्
10 वेदकवि
11 Classical Sanskrit Literature by M Krishnamachariar

இது பரபோதசந்திரோதயம் போன்ற ஒரு நாடகம். இது தஞ்சாவூரில் நடிக்கப்பட்டது. இதனுள் ஏழு அங்கங்கள் உள. இங்குச் சிவபக்தியின் உதவியால் ஜீவனுக்கும் உபநிஷத்வித்யைக்கும் மணம் நிகழ்கின்றது. கர்த்தாவனது அத்வைதக்கொள்கைகள் ஆயினும், சுவை ச்ருங்காரம் எனக் கவியே கூறினர்.[1] இவர்க்கு முன்னர் இம்முறையில் பரபோதசந்த்ரோதயம் ஸங்கல்பஸூர்யோதயம் பாவனபுருஷோத்தமம்[2] என்ற நூல்கள் இருந்தன எனக் குறிப்பிடுகின்றனர். பாவனபுருஷோத்தமம் என்பது அப்பய்யதீக்ஷிதர்காலத்தில் இருந்த ஸ்ரீநிவாஸதீக்ஷிதரால் இயற்றப்பட்டது என்பர். வேதாரண்யத்தைக்[3] குறிப்பிடுதலால், இவர் அங்குப் பிறந்தவரோ எனத் தோன்றுகின்றது. இவர் ஜீவாநந்தனம்[4] என்ற நாடகத்தையும் இயற்றியவர் என்பர்.

விச்வநாதன்[5]—இவர் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் கோதாவரிதீரத்தில் தாராஸுரநகரத்திற் பிறந்து காசிக்குச் சென்று வஸித்தவர். இவரது தகப்பனார் த்ரிமல்லதேவர்.[6] இவர் இயற்றிய நாடிகை ம்ருகாங்கலேகை.[7] இங்குக் கர்ப்பூரதிலகன்[8] நாயகன், ம்ருகாங்கலேகை நாயிகை. நாயிகையைச்

1 अद्वैत वस्तु, शृङ्गारो रस [विद्या 1, 13]

2 भावनापुरुषोत्तम

3 दर्पणवदभिमुखाना दर्शयदात्मस्वरूपमखिलानाम् ।
विस्मयशेवधिरास्ते वेदारण्याभिध शिवक्षेत्रम् ॥ (विद्या 1 40)

4 जीवानन्दनम्

5 विश्वनाथ

6 त्रिमल्लदेव

7 मृगाङ्कलेखा

8 कर्पूरतिलक

சங்கபாலன் என்ற பிசாசன் எடுத்துச் செல்ல நாயகன் அவனைக் கொன்று நாயிகையை அடைகின்றான். இங்கு அங்கிச் சுவை ச்ருங்காரம், அங்கச்சுவை வீரம்.[1] ச்லோகங்களின் நடை எளிதாயுள்ளது

தேவராஜன் [2]—இவர் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் திருவிதாங்கூர் ஸமஸ்தானத்து ஆச்ராமம் என்ற கிராமத்தில் பாலமார்த்தாண்டகுலசேகரவர்மராஜரால் போற்றப்பெற்றவர். இவர் எழுதியது பாலமார்த்தாண்டவிஜயம்[3] என்ற நாடகம். இதற்கு ஐந்து அங்கங்கள் உள. பத்மநாபரின் ஆணையால் பாலமார்த்தாண்டவர்மா திக்விஜயஞ் செய்து திருவிதாங்கூரில் இருக்கும் பத்மநாபஸ்வாமிகோயிலைப் புதுப்பித்ததை இந்நூல் கூறுகின்றது.

யுவராஜன் [4]—இவர் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கோளதேசத்தில் கோடிலிங்கபுரத்தில்[5] இருந்தவர். காளியின் கிருபையால் அறிவை அடைந்து ரஸஸதநம்[6] என்ற பாணத்தை எழுதினார். சில வர்ணனைகள் புதிதாய் இருக்கின்றன.[7]

1. यद्रामो जनकात्मजापहरणे भीमोऽपि यत्क्रोधनः
   पाञ्चालीकचकर्षणे रचितवान् तत्किं न ते विश्रुतम् ।
   क्रोधोन्माथितकण्ठपीठरुधिरैरभ्यर्च्य शंभो प्रियां
   तत्तत्कर्म करोति येन भवतो नामापि न श्रूयते ॥ (मृगा. 3, 29)

2. देवराजः
3. बालमार्ताण्डविजय.
4. युवराज
5. कोटिलिङ्गपुरम्
6. रससदनम्

7. राका मुखेन, दशमीं च कपोलकान्त्या
   फालेन पञ्चमतिथि., प्रतिपन्नखाङ्कै. ।
   एषा कुहूरपि कचप्रकरेण धत्ते
   प्राय समस्ततिथिसङ्ग्रहभाजनत्वम् ॥ [रस. 45]

நீலகண்டன்.[1]—இவர் எக்காலத்தில் இருந்தவர் என்பதைத் திண்ணமாய்க் கூறவில்லை. இவர் எழுதிய வ்யாயோகம் கல்யாணஸௌகந்திகம்[2] என்பது. பீமன் ஸௌகந்திகபுஷ்பங்களைத் திரௌபதிக்குக் கொண்டுவரும் வழியில் ஹநுமானோடு சண்டையிட நேரிட, அப்போது கல்யாணன் என்ற வித்யாதரன் அவ்விருவரும் வாயுவின் பிள்ளைகள் எனக் கூறினன். அக்காரணம் பற்றி இந்நூலிற்கு இப்பெயர் வந்தது என்னலாம். இங்குப் பீமனை ஹநுமான் குந்தீமாத:[3] எனக் கூப்பிடுதலால், இவர் மலையாளதேசத்தினரோ என ஐயம் உண்டாகின்றது. நூலின் இறுதியில் காளிதாஸனைப் போல் தனக்கு நீலகண்டன் மறுபிறப்பைப் போக்கட்டும்[4] என இக்கவி கூறுகின்றது நோக்கத் தக்கது.

பாஸ்கரன்.—இவர் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கொச்சியரசராலும் கள்ளிக்கோட்டை ஸாமொரினாலும் போற்றப்பட்டு ச்ருங்காரலீலாதிலகம் என்ற பாணத்தைச் சிறுவயதிலே எழுதினார்.

---

1. नीलकण्ठः
2. कल्याणसौगन्धिकम्
3. कुन्तीमातः (कल्या. பக். 18)
4. भूयोभवं क्षपयतान्मम नीलकण्ठः (ibid)

## அத்யாயம் 57

### அலங்காரசாஸ்த்ரம்

பொ.—அலங்காரசாஸ்த்ரத்திற்குப் பல பெயர்கள் வழங்கப்பட்டன. அவை க்ரியாகல்பம்,[1] காவ்யாலங்காரம்,[2] அலங்காரம்,[3] காவ்யலக்ஷ்ம,[4] காவ்யலக்ஷணம்,[5] ஸாஹித்யம்[6] என

1. क्रियाकल्प इति काव्यकरणविधि, काव्यालङ्कार इत्यर्थः ।
   (वात्स्यायनकामसूत्रजयमङ्गलाव्याख्याने)
   क्रियाकल्पविदश्चैव तथा कल्पविदो जनान् ॥
   (वाल्मीकिरामायणे उत्तरकाण्डे)
2. काव्यालङ्कार इत्येष यथाबुद्धि विधास्यते
   (भामहे 1, 1)
   काव्यालङ्कारसूत्राणां स्वेषां वृत्तिर्विधीयते
   (वामनकाव्यालङ्कारसूत्रवृत्तौ)
3. शास्त्रमपि अलङ्कारनाम्ना व्यपदिश्यते
   [वामने कामधेनुव्याख्यानम्]
   उपकारकत्वात् अलङ्कारः सप्तममङ्गम्
   (राजशेखरीयकाव्यमीमांसायाम्)
4. अवगम्य स्वधिया काव्यलक्ष्म
   (भामहे 6, 64)
5. यथासामर्थ्यमस्माभिः क्रियते काव्यलक्षणम्
   (दण्डिनः काव्यादर्शे 1 2)
6. पञ्चमी साहित्यविद्या
   (काव्यमीमांसायाम्)
   साहित्यश्रीमुरारेः (उद्भटालङ्कारवृत्तौ)

பன ஆகும். க்ரியாகல்பம என்பது காவ்பக்ரியாகலபம் என் பதன் ஏகதேசம் என்னலாம்.[1]

உதபத்தி—உபமாலங்காரம், நிருக்தம்[2] அஷ்டாதயாயீ[3] இவற்றின முன்னரே வழங்கப்பட்டது என்பதும், உபமை ரூபகம்[4] இரண்டும் வ்யாஸரால் அறியப்பட்டன எனபதும், ஔபமயததை ஔபகாயனரும் ரூபகத்தைப் பாதரும் கண் டனா என ராஜசேகரா கூறினா என்பதும், அந்தந்த நூல்களால் அறியப்படும் ருதாதாமனின் சாஸனததில் கதயம், பத்யம் எனற சொற்கள் காணப்படுகின்றமையால், கி. பி. 150க்கு முன்னரே காவ்யம், கத்யம் பதயம் எனப் பிரிககப்பட்டது என்னலாம்.

சரிதம்.—தறபோது காணப்படும அலங்காரசாஸ்த்ர நூல் களுள் நாட்யசாஸ்திரம் பழமையானது எனனலாம்

தமிழிலககணமாகிய தொல்காப்பியத்தின் மெய்ப்பாட் டியலில உள்ள எழு ஸூத்ரஙகள் நாட்யசாஸ்த்ரப்பகுதியின்

1 *Cf* वाचां विचित्रमार्गाणा निबबन्धु. क्रियाविधिम्
(काव्यादर्शे 1, 9)

2 लुप्तोमान्यर्थोपमानि इत्याचक्षते (निरुक्ते 3, 18)

3. उपमानानि सामान्यवचनैः (अष्टा. 2, 1, 55)
उपमितं व्याघ्रादिभि. .... (*ibid* 2, 1, 56)

4. अत एव चोपमा सूर्यकादिवत् (वेदान्तसूत्रे 3, 2, 18)
... शरीररूपकविन्यस्ते. ... (*ibid* 1, 4, 1)

உரை 6000 சலோகஙகளிலும 12000 சலோகஙகளிலும[1] எழுதபபடடது எனப பாவபரகாசனததிலும கூறபபடும

இதனுள 37 அதயாயஙகள உள. அவறறுள 6, 7, 17, 18, 20, 22 இவவாறும ரஸம, குணம, தோஷம இவறறைப பறறியன இஙகு ரஸததின தனமையும,[2] வகையும,[3] ஸதாயி பாவஙகளும[4] ஸாதவிகபாவஙகளும,[5] பாரதயாதிவருததிகளும,[6]

1 नाट्यवेदाच्च भरता सारमुद्धृत्य सर्वत ।
सङ्गह सम्प्रयोगार्हं मनुना प्रार्थित व्यधु ॥
एकं द्वादशसाहस्रै श्लोकैरेक तदर्धत ।
षड्भि श्लोकसाहस्रैर्यो नाट्यवेदस सम्भव ॥
(भावप्रकाशने 10, 34-35)

2 विभावानुभावव्यभिचारिसंयोगाद्रसनिष्पत्ति (नाट्य 6, 31-)

3 शृङ्गारहास्यकरुणा रौद्रवीरभयानका ।
बीभत्साद्भुतसञ्ज्ञौ चेत्यष्टौ नाट्ये रसा स्मृता ॥ (ibid 6, 15)

4 रतिर्हासश्च शोकश्च क्रोधोत्साहौ भय तथा ।
जुगुप्सा विस्मयश्चेति स्थायिभावा प्रकीर्तिता ॥ (ibid 6, 17)

5 स्तम्भ स्वेदोऽथ रोमाञ्च स्वरसादोऽथ वेपथु ।
वैवर्ण्यमश्रुप्रलय इत्यष्टौ सात्त्विका स्मृता ॥ (ibid 6, 22)

6 भारती सात्त्वती चैव कैशिक्यारभटी तथा ।
चतस्रो वृत्तयो ह्येता यासु नाट्य प्रतिष्ठितम् ॥ (ibid 6, 24-5)

பத்து குணங்களும்,[1] பத்து தோஷங்களும்,[2] உபமை ரூபகம், தீபகம், யமகம்[3] என்ற நான்கு அலங்காரங்களும் கூறப்பட்டன.

காய்ந்த கட்டைக்குள் அக்னி வ்யாபித்திருப்பது போல் காவ்யத்துள் ரஸம் வ்யாபித்திருக்கின்றது என்றும்,[4] அது பாவங்களால் அபிவ்யக்தம் ஆகின்றது என்றும்[5], நாட்ய சாஸ்த்ரம் கூறுவதால், காவ்யத்தின் ஆத்மா ரஸம் என்பதும், அது அபிவ்யக்தமாகுமே யன்றி சொல்லாற் கூறப்படாது என்பதும், அநுராவ-சிரீபாது கொள்கைகள் என்பது வெளிப்பட்ட.

1 श्लेष प्रसाद समता समाधि-
माधुर्यमोज पदसौकुमार्यम् ।
अर्थस्य च व्यक्तिरुदारता च
कान्तिश्च काव्यस्य गुणा दशैते ॥ (*ibid* 17 96)

2. अगूढमर्थान्तरमर्थहीनं
भिन्नार्थमेकार्थमभिप्लुतार्थम् ।
न्यायादपेत विषम विसन्धि
शब्दच्युत वै दश काव्यदोषा ॥ (*ibid* 17, 88)

3 उपमा रूपक चैव दीपक यमक तथा ।
अलङ्कारास्तु विज्ञेयाश्चत्वारो नाटकाश्रया ॥ (*ibid* 17, 43)

4 सोऽर्थो हृदयसंवादी तस्य भावो रसोद्भव ।
शरीर व्याप्यते तेन शुष्ककाष्ठमिवाग्निना ॥ (*ibid* 7, 7)

5. काव्यरसाभिव्यक्तिहेतव एकोनपञ्चाशद्भावा (*ibid* 7, 6)

பாமஹரின் காவ்யாலங்காரம்.[1]—இங்கு ஆறு பரிச்சேதங்கள் உள. ஒன்றில் காவ்யசரீரம், இரண்டு மூன்றுகளில் அலங்காரம், நான்கில் தோஷம், ஐந்தில் ந்யாயங்கள், ஆறில் சப்த சுத்தி இவை கூறப்பட்டன.

இவர்க்கும் நாட்யசாஸ்த்ரவாசிரியர்க்கும் இடையில பல ஆலங்காரிகர்கள் இருந்தனா என்பதும்,[2] அவருள் ஒருவா மேதாவி என்பதும், இந்நூலிலுள்ள வாக்யங்களால் அறியப் படுகின்றன. அவருள் சிலா அநுப்ராஸத்தையும் சேர்த்து அணிகள் ஐந்து என்றனா.[3]

ப்ரதயக்ஷதநின இலக்கணத்தைக் கூறும்போது பாமஹா திங்நாகரின் இலக்கணத்தைக் கொண்டதாகவும் தாமகீாத்தியின் இலக்கணததைக கொள்ளாததாகவும் தோன்றுகின்றமையால்,[4] அவா திங்நாகர்க்குப் பின்னரும் தாமகீாத்திக்கு முன்னரும் இருந்திருததல் வேண்டும். அன்றியும் ஆனந்தவாத்தனா த்வன்யாலோகத்தின நான்காம் உத்யோதத்தில் பாமஹா

1. भामहीयकाव्यालङ्कारः
2. रूपकादिमलङ्कारं बाह्यमाचक्षते परे (भाम. 1, 14)
   उक्तं तदभिनेयार्थम् उक्तोऽन्यैस्तस्य विस्तरः । (*ibid* 1, 24)
   त एव उपमादोषाः सप्त मेधाविनोदिताः (*ibid* 2, 40)
   (மேதாவியும் மேதாவிருத்ரரும் ஒருவரே எனபது நமிஸாது வாக்யததால விளஙகும்).
3. अनुप्रासः सयमको रूपकं दीपकोपमे ।
   इति वाचामलङ्काराः पञ्चैवान्यैरुदाहृताः ॥ (*ibid* 2, 4)
4. प्रत्यक्षं कल्पनापोढं ततोऽर्थादिति केचन । (*ibid* 5. 6)
   प्रत्यक्षं कल्पनापोढमभ्रान्तम् (धर्मकीर्तेः न्यायबिन्दौ)

கூறியதை வேறுபடுத்திப் பாணன் ஹர்ஷசரிதத்தில் கூறுவதாகக் கூறுதலால்,[1] பாமஹர் பாணனுக்கு முற்பட்டவர் என்பது திண்ணம். பாமஹர் கூறிய ந்யாஸகாரர்[2] ஜிநேந்த்ரபுத்தி என நினைத்து பாமஹர் கி. பி. 700க்குப் பிற்பட்டவர் என்பர் கீத். ந்யாஸ: என்ற சொல் பலவிடங்களில் ஸூத்ரம் என்ற பொருளில் பதஞ்சலி-மஹாபாஷ்யத்தில் வழங்கிவருகின்றமையால்,[3] ந்யாஸகாரர் என்ற சொல்லால் ஸூத்ரகாரராகிய பாணினியைக் குறித்தனர் என்று கூறுவதே பொருந்தும். அன்றியும் சப்தவகையுள் பதஞ்சலிபோன்று யத்ருச்சா சப்தத்தையுங் கூறுகின்றனர்.[4] இவற்றையெல்லாம் நோக்கின் பாமஹர் கி. பி. 600க்கு முன்னர் இருந்தனர் என்னலாம்.

**பாமஹர் முன்னரா தண்டி முன்னரா?**

தண்டி பாமஹர்க்கு முன்னர் இருந்தனர் என்பதற்குக் கூறப்படுங் காரணங்கள் ஆவன :—

(1) ருத்ரடரின்[5] காவ்யாலங்காரத்திற்கு உரை எழுதிய நமிஸாது[6] ஆலங்காரிகர்களைக் குறிக்குமிடத்து தண்டியை முன்னரும் பாமஹரைப் பின்னருங் கூறுகின்றனர்.[7]

1. यथा 'धरणीधारणायाधुना त्वं शेषः (हर्षचरिते), शेषो हिमगिरिस्त्वं च महान्तो गुरवः स्मृताः ... (भाम. 3, 28) इत्यादिषु सत्स्वपि (ध्वन्या. 4, 4-)
2. शिष्टप्रयोगमात्रेण न्यासकारमतेन वा (भाम. 5, 36)
3. क्रियते एतन्न्यास एव (महाभा. 1, 1, 2 ; एओङ्) अपाणिनीयं तु भवति, यथान्यासमेवास्तु (*ibid* 1, 1, 1)
4. यदृच्छाशब्दमप्यन्ये डित्थादि प्रतिजानते (भाम. 5)
5. रुद्रटः
6. नमिसाधुः
7. दण्डिमेधाविरुद्रभामहादिकृतानि सन्त्येव अलङ्कारशास्त्राणि ।

(2) பாமஹா குறிககும நயாஸகாரா ஜிநேநதரபுததி, அவா தணடிகாலததிறகுப பிறபடடவா

(3) ஒரு சலோகததின பாதி[1] தணடியின நூலிலிருநது பாமஹா கூறினா எனச சிலா கூறுகினறனா

(4) நாடயசாஸதரததிற கூறபபடட பதது குணங களும தணடியாற கூறபபடடனவே யனறிப பாமஹாாற கூறபபடவிலலை

(5) ஸவபாவோககி, ஹேது, ஸூக்ஷமம, லேசம, ஆசிஸ இவறறையும, மூவகைபபடட உவமையையும, வைதாபபம, கௌடீயம இவை ஒனறலல எனபதையும, பாமஹா மறுக கினறனா[2] இவறறை யெலலாம தணடி கொளளுகினறமை யான, பாமஹா தணடியையே மறுததிருததல வேணடும

இவறறிறகுப பினவருமாறு விடை அளிககலாம —

1 குதாடா தணடியின கொளகையைக கொணடவ ராகலின, அவரது நூலின உரைகாரா தணடியை முதலிற கூறினா

2 நயாஸகாரா எனபது பாணினியைக குறிககும எனறு முனனரே கூறபபடடது

1 हिमापहामित्रधरैर्व्याप्त व्योमेत्यवाचकम्

2 स्वभावोक्तिरलङ्कार इति केचित्प्रचक्षते (भाम 2, 93)
हेतुश्च सूक्ष्मो लेशोऽथ नालङ्कारतया मत (ibid 2, 86)
आशीरपि केपाचिदलङ्कारतया मता (ibid 3 55)
यदुक्त त्रिप्रकारत्व तस्या कैश्चिन्महात्मभि
मालोपमादिस्सर्वोऽपि न ज्यायान्विस्तरो मुधा ॥ (ibid 2 38)
वैदर्भमन्यदस्तीति मन्यन्ते सुधियोऽपरे (ibid 1 31)

Cf. काव्यादर्शे 2, 5-8 2 30-32 1, 40

3 பாமஹர் கூறும் இலக்கணங்கட்கு உதாரணம் தாமாகவே கூறுகின்றார் எனக் கூறுவர்.

4. குணங்களைத் தவிர்த்து நாட்யசாஸ்திரத்திற் கூறப்பட்டுள்ளவெல்லாம் பாமஹரால் கூறப்பட்டிருந்தால், குணங்கள் கூறாமையால் அவர் பிற்பட்டவர் என்னலாம். சில வேறு நூல்களில் விஸ்தாரமாய் உரைக்கப்பட்டிருத்தலின், தாம் அவற்றைத் தம் நூலிற் கூறவில்லை என அவரே கூறுகின்றனர்.

5 ஸ்வபாவோக்தி முதலியவற்றைப் பாமஹர்க்கு முன்னோர் கூறியிருப்பின், அவர்களை அவர் மறுத்திருத்தல் கூடும்.

இவற்றால் பாமஹர் தண்டிக்குப் பிற்பட்டவர் அல்லர் என்பது விளங்கும். அவர் அவர்க்கு முற்பட்டவரே என்பதற்குச் சில காரணங்கள் கூறலாம். அவை ஆவன —

1 தனக்கு முன்னோரால் ஐந்து அலங்காரங்களே கூறப்பட்டன என்பர் பாமஹர், பல அலங்காரங்கள் கூறப்பட்டன என்பர் தண்டி, அவை எல்லாம் பாமஹரது நூலிற் காணப்படுகின்றன [1]

2. பாமஹரின் பல வாக்கியங்கள் [2] தண்டியால் அநுவதிக்கப்பட்டன எனத் தோன்றுகின்றது

1 अनुप्रास सयमको रूपक दीपकोपमे ।
इति वाचामलङ्कारा पञ्चैवान्यैरुदाहृता ॥ (भाम 2, 4)
स्वभावाख्यानमुपमा रूपक दीपकावृती ।
इति वाचामलङ्कारा दर्शिता पूर्वसूरिभि ॥ (दण्डी. 2, 4-7)

2 किञ्च आक्षेपोऽर्थान्तरन्यासो व्यतिरेको विभावना
(भाम 2, 66, दण्डी 2, 4)
प्रेयो रसवदूर्जस्वि पर्यायोक्त समाहित । (भाम 3, 1, दण्डी 2, 5)

. . . . .

3. பாமஹர் காவ்யததைப் பத்யம், கத்யம் என இரு வகையாகப் பிரிததனர்: தண்டி மிச்ரத்தைக் கூட்டி மூவகை யாக்கினா.[1]

4. பாமஹா சப்ததததை ஸம்ஸ்க்ருதம், ப்ராக்ருதம், அபப் பிரம்சம் என மூவகையாகப் பிரிததனர்; தண்டி மிச்ரம் என்பதைக் கூட்டி நால்வகை ஆக்கினா.[2]

5. ப்ரதாபருத்ரீயத்தில் பாமஹரை ப்ராசீனராகக கூறப் பட்டுளது.[3]

காவயததில் அலங்காரததிற்குத தான் சிறப்பு என்பது பாமஹரது கொள்கை என அலங்காரஸாவஸ்வததிற் கூறப் பட்டது. அது ச்ரவயகாவ்யததில் தான்; தரச்யகாவ்யத்தில் ரஸமே சிறந்தது என்பதே அவரது கொள்கை என விவ்ருதி யோடு கூடிய உத்படரின் காவ்யாலங்காரஸாரஸங்க்ரஹததின் ப்ரஸ்தாவனையிற் கூறப்பட்டது.

தண்டி.[4]—கி. பி. 650—700 இவா தாக்ஷிணுத்யா.[5] இவா எழுதிய நூல் காவ்யாதாசம் எனபது. ஸ்வபாவோக்தியே சிறந்தது என்ற கொள்கையைக கொண்டனா. ரீதி வைதர்ப்பீ, கௌடீயா என இருவகைபபடும் என்பதும், அலங்காரங்கள் காவயத்திறகு அழகினை ஊட்டும் தர்மங்கள் என்பதும்

1. (भाम. 1, 16; दण्डी 1, 11 & 1, 31)

2. (भाम. 1, 16; दण्डी 1, 32)

3. पूर्वेभ्यो भामहादिभ्यो सादरं विहिताञ्जलिः

4. दण्डी

5. *Cf.* अतो नैवमनुप्रासं दाक्षिणात्याः प्रयुञ्जते (काव्य. 1, 60)
चोलाः कालागुरुश्यामकावेरीतीरभूमयः ।
इति देशविरोधिन्या वाच· प्रस्थानमीदृशम् (*ibid* 3, 166)

இவரால் உணர்த்தப்பட்டன. இவர்க்குமுன் பல ஆலங்காரிகள் இருந்தனர் என்பதைக் குறிக்கின்றனர்.[1] இந்த நூலிற் கூறப்பட்ட இலக்கணங்களெல்லாம் தமிழ்மொழி தண்டியலங்காரத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. பல உதாரணச்லோகங்களும் அங்குள்ளனவற்றை ஒத்திருக்கின்றன. இவரே தமிழிலும் எழுதினரோ என்ற ஐயம் உண்டாகின்றது.

காலம்.—இரண்டாம் வேற்றுமைப்பொருளாகிய கர்மத்தைப்பற்றிக் கூறும் ஒரு ச்லோகம் பர்த்ருஹரியின் வாக்யபதீய காரிகையை ஒத்திருக்கின்றது.[2] ஆகலின் பர்த்ருஹரிக்கு இவர் பிற்பட்டவர் என்னலாம். வாமனர்க்கு முற்பட்டவர். வாமனன் ஜயாபீடனது காலத்தில் (கி. பி. 879—813) இருந்தாராகலின், பாணன் கி. பி. 650–700 இல் இருந்தனர் என்னலாம். தற்போது பதிப்பில் இருக்கிற அவந்திஸுந்தரீகதை பாணன் இயற்றியதாயிருந்தால், தண்டி பாரவியின் ப்ரபௌத்ரர் என்பதும் பாணர்க்குப் பிற்பட்டவர் என்பதும் காஞ்சீபுரத்தில் வசித்தனர் என்பதும் வெளிப்படை.

வாமனன்.[3]—கி பி. 730—850. இவர் காச்மீரதேசீயர் அன்று என்பதில் கொள்கைவேறுபாடுகள் உள. ரீதியே காவ்யத்தின் ஆத்மா என இவர் கூறுகின்றனர்; அக்கொள்கைக்கு

1. पूर्वाचार्यैः प्रदर्शितम् (*ibid* 2, 2)
दर्शिताः पूर्वसूरिभिः (*ibid* 2, 7)

2. निर्वर्त्ये च विकार्ये च हेतुत्वं तदपेक्षया ।
प्राप्ये तु कर्मणि प्रायः क्रियापेक्षैव हेतुता ॥ (*ibid* 2, 240)
निर्वर्त्यं च विकार्यं च प्राप्यं च त्रिविधं मतम् ।
तत्रेप्सिततमं कर्म ... ॥ (वाक्य. 3, 45)

3 वामनः

மூலம் தண்டியின் காவ்யாதர்சத்தில் இருக்கின்றது, தண்டி தாக்ஷிணாத்யர் ஆகலின் இவர் காச்மீரதேசியர் அல்லர் என்பர் சிலர். அலங்காரஸர்வஸ்வத்தில் காச்மீரதேசியரான ஆலங்காரிகர்களுடன் வாமனர் படிக்கப்படுகின்றமையாலும்[1], அவர்களுள் தண்டி கூறப்படாமையாலும், இவர் காச்மீர தேசியராய் இருக்கலாம் என்பர் சிலர்.

சிறந்த பதரசனையே ரீதி என்றும், ரீதியே காவ்யத்தின் ஆத்மா என்றும், காவ்யசோபையைச் செய்வன குணங்கள் என்றும் த்வனிபேதங்களுள் சில அலங்காரமே என்றும் குணங்களும் அலங்காரங்களும் பெரும்பான்மையும் ஒத்தன என்றும், இவர் கூறுகின்றமையால் காவ்யத்துள் அலங்காரமே சிறந்தது என்ற கொள்கையையே இவர் கொண்டனர் என்னலாம்.

இவரே காவ்யாலங்காரஸூத்ரங்களையும் அவற்றின் வ்ருத்தியையும் எழுதினர். இந்நூலுள் ஐந்து அதிகரணங்கள் உள. ஐந்தாம் அதிகரணம் பாமஹர் நூலின் ஆறும் பரிச்சேதத்தை ஒத்தது.

காலம் —ஜயாபீடனின் ஸபையில் உத்படரோடு இவர் இருந்தனர் என ராஜதரங்கிணீ[2] கூறுகின்றது. ஜயாபீடரின் காலம் கி. பி. 779—813. ஆகலின் இவரது காலம் கி. பி. 730 முதல் 850க்கு உட்பட்டது என்னலாம்.

உத்படர் [3]—காலம் கி. பி. 775—800. இவர் காச்மீரத்தில் ஜயாபீடன் ஸபையில் ஸபாபதியாய் இருந்தனர்[4]. இவர்

1 भामह उद्भट रुद्रट वामन भट्टनायक आनन्दवर्धन

2 राजतरङ्गिणी 4 495 7

3 उद्भट

4 राजतरङ्गिणी 4 495)

எழுதிய நூல் காவ்யாலங்காரஸாரம்.[1] பாமஹவிவரணமும் குமாரஸம்பவம் என்ற காவ்யமும் இவரால் எழுதப்பட்டன எனப் ப்ரதீஹாரேந்துராஜர்[2] (950—990 கி. பி.) தன் உரையிற் கூறினர். சாந்தத்தை ரஸமாக முதன்முதலிற் கூறியவர் இவரே. இவர் பாமஹரைப் பின்பற்றினும ஸ்வபாவோக்தியை ஒத்துக்கொள்ளுகின்றனர். ஸ்தாயிபாவம் வாச்யம் என்கின்றனர். இவரது கொள்கையிலும் வ்யங்கப் பொருள் வாச்யப்பொருளிற்கே அழகு ஊட்டுகின்றமையின், அது அலங்காரத்தின்பாற் படும்.

ருத்ரடன்[3].—காலம்: கி. பி. 825—850. இவரும் காச்மீர தேசியர். இவர் எழுதிய நூல் காவ்யாலங்காரம்.[4] இதற்கு உரை நமிஸாது (கி. பி. 1120) என்ற ச்வேதாம்பரஜைனர் எழுதினர். இவர் சாந்தம் ப்ரேயஸ்[5] முதலியவற்றையும் ரஸமாகக் கொண்டனர். வ்ருத்தி மதுரா, ப்ரௌடா, பருஷா, லலிதா, பத்ரா[6] என ஐவகைப்படும் என்றும், ரீதி வைதர்ப்பீ, பாஞ்சாலீ, லாடீயா, கௌடீயா[7] என நால்வகைப்படும் என்றும் அர்த்தாலங்காரம் வாஸ்தவம், ஔபம்யம், அதிசயம், ச்லேஷம்[8] இவை நான்கே சிறந்தன என்றும் ஏனைய எல்லாம் இவற்றின் விசேஷமே என்றுங் கூறுவர்.

1. काव्यालङ्कारसार:
2. प्रतीहारेन्दुराजः
3. रुद्रटः
4. काव्यालङ्कारः
5. शान्त:, प्रेयम्, निर्वेद:, (काव्या. 12, 3-4)
6. मधुरा, प्रौढा, परुषा, ललिता, भद्रा.
7. वैदर्भी, पाञ्चाली, लाटीया, गौडीया.
8. अर्थस्यालङ्कारा वास्तवमौपम्यमतिशयः श्लेषः ।
एषामेव विशेषा अन्ये तु भवन्ति निश्शेषाः ॥ (काव्य. 7, 9)

இவர் ராஜசேகரனுக்கு ப்ராசீனர் என்பது இவரது பெயரை அவர் கூறுவதால்[1] அறியப்படுகின்றது

பட்டலோல்லடர் — சுமார் கி பி 800 இவர் ரஸோத்பத்தியைப் பற்றிக் கூறினார்

ஆனந்தவர்த்தனர்[3] — சுமார் கி பி 850–900 இவர் எழுதிய நூல் த்வந்யாலோகம்[4] என்பது அது மிகவும் சிறந்த நூல்[5] அதனுள் கூறப்பட்ட கொள்கைகள் உலகத்து மொழிகள் எல்லாவற்றிலும் உள்ள இலக்கியங்களை ஆய்ந்து சுவைத்துப் படிக்கப் பயன்படும் அங்கு, த்வனியே காவ்யத்தின் ஆன்மா என்பதும், அத்தொனி வஸ்துத்வனி, அலங்காரத்வனி, ரஸத்வனி என மூவகைப்படும் என்பதும், அவற்றுள் ரஸத்வனியே மிகச் சிறந்தது என்பதும், அத்தொனிக்கு ஔசித்யமே சிறந்த ஸாதனம் என்பதும், காவ்யம் தொனிகாவ்யம், குணீபூத வ்யங்கியம், சித்ரம் என மூவகைப்படும் என்பதும், விருத்த ரஸங்களை ஒரு காவ்யத்தில் அழகு குன்றாது எவ்வாறு உணர்த்த வேண்டும் என்பதும், ராமாயண மஹாபாரதங்கட்கு அங்கிச் சுவை முறையே கருணம் சாந்தம் என்பதும் உணர்த்தப்பட

1 शार्ङ्गशोत्तिर्नाम शब्दालङ्कारोऽयमिति रुद्रट (का मी प० 31)

2 विभावैरुत्पादित , अनुभावै प्रत्यायित सञ्चारिभि उपचित रामादिगतो रस तदभेदभावनया नटे प्रतीयते इति उत्पत्तिवादिनो भट्टलोल्लटादय (एकावल्या तरलीका प० 85)

3 आनन्दवर्धन

4 ध्वन्यालोक

5 [illegible] அதற்குத் தொனிவிளக்கு எனப்பெயர்

டன் இவர் ஆலங்காரிகர் மாத்திரம் அல்லர், பெரிய கவியும் ஆவர், அவர் செய்த நூல்கள் விஷமபாணலீலை முதலியன ஆகலின் கவிஞர்களுள் இவர் சிறந்தவர் இந்நூலுள் நான்கு உத்யோதங்கள் உள

நூலுள் காரிகைகளும் அவற்றிற்கு விசேடவுரையான வ்ருத்தியும் உள இவ்விரண்டையும் இயற்றியவர் ஒருவரல்லர், காரிகையை இயற்றியவர் ஸஹ்ருதயர், வ்ருத்தியை இயற்றியவர் ஆனந்தவர்த்தனர் எனச் சிலர் கூறுவர்[1] அது தவறு எனக் கூறுவர் பலர்[2]

1 அபிநவகுப்தர் இயற்றிய லோசனத்தில் (பம்பாய்ப் பதிப்பு பக் 60) सहृदयालोकलोचने என்றவிடத்தும் முகுளபட்டர் இயற்றிய அபிதாவ்ருத்திமாத்ருகையில் लक्षणामार्गावगाहित्व तु ध्वने सहृदयैर्नूतनतयोपवर्णितस्य विद्यते என்றவிடத்தும் ப்ரதிஹாரேந்துராஜர் லகுவ்ருத்தியில் (பக் 79) कैश्चित्सहृदयैर्ध्वनिर्नाम अभिहित என்றவிடத்தும் सहृदय என்ற சொல் இருத்தலே அவருடைய கொள்கைக்குக் காரணம் ஆகும்

2 இங்ஙனம் கூறியது எனது ஆசிரியரான மஹாமஹோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரியார் அதற்குக் காரணங்கள் ஆவன —

यथा ध्वनिकारेण व्यङ्ग्यव्यञ्जकभावोऽत्र सुतरा समर्थित

[वक्रोक्तिजीविते பக் 70]

तच्च ध्वनिकारेणैवोक्तम् 'यत्रार्थ शब्दो वा   कथित'

[व्यक्तिविवेके பக் 1]

तथा चाह ध्वनिकार: (ibid ப 11)

मया वृत्तिकारेण सतेति भाव, न चैतन्मयोक्तम् अपि तु कारिकाकाराभिप्रायेण [लोचने ப 60]

இவர் கி. பி. 855 முதல் 883 வரை ஆண்ட அவந்திவர்மனின் ஸபையில் இருந்தனர் என ராஜதரங்கிணி[1] கூறுதலால், இவரது காலம் சுமார் கி. பி. 850 முதல் 900 வரை இருக்கலாம்.

ருத்ரபட்டன்[2].—கி. பி. 900. இவர் ச்ருங்காரதிலகம்[3] என்ற நூலை இயற்றினர். நாட்யாதிகளில் ரஸஸ்திதி நாட்யசாஸ்திரத்தில் எவ்வாறு கூறப்பட்டதோ, அவ்வாறு காவ்யத்தில் ரஸஸ்திதியைத் தான் கூறுகின்றேன் என்கின்றனர்.[4] இவர் ச்ருங்காரம் முதல் சாந்தம் முடிய ஒன்பது ரஸங்களைக் கொள்ளுகின்றனர். இவரும் ருத்ரடரும் ஒருவர் என்பர் சிலர்.[5] காவ்யாலங்காரம் ச்ருங்காரதிலகம் இவற்றுள் கூறப்பட்ட விஷயங்கள் வேறுபட்டிருத்தலால் இருவரும் ஒருவரல்லர் என்பர் ஏனையோர்.

இவர் ருத்ரடருக்குப் பிற்பட்டவர். அக்னிபுராணத்தில் அலங்காரத்தைப் பற்றிக் கூறிய இடத்தை ஆய்ந்து பார்த்தால், இவர் ஆனந்தவர்த்தனர்க்குப் பிற்பட்டவர் எனத் தோன்றுகின்றது.

एवं कारिकां व्याख्याय तदसद्गृहीतमलक्ष्यक्रमव्यङ्ग्यं प्रपञ्चयितुमाह यस्त्विति (ibid பக். 130)

ध्वनिकारेणाप्युक्तं न हि कवेरितिवृत्तमात्रनिर्वाहेण आत्मलाभः इतिहासादेरेव तत्सिद्धेः [साहित्यदर्पणे பக். 5]

1. राजतरङ्गिण्याम् (5, 34)

2. रुद्रभट्टः

3. शृङ्गारतिलकम्

4. प्रायो नाट्यं प्रति प्रोक्ता भरताद्यैः रसस्थितिः ।
यथामति मयाप्येषा काव्यं प्रति निगद्यते ॥ (शृ. 1, 5)

5. *Cf.* भावप्रकाशनम् (Introduction p p. 69-70)

சங்குகன்.[1] — சுமார் கி. பி. 850. இவர் ரஸம் அனுமானத்தால் தோன்றுவது என்ற கொள்கையைக் கொண்டனர்.[2]

ராஜசேகரன்.[3] — கி. பி. 880–920. இவர் கான்யகுப்ஜ-அரசனுகிய மஹேந்த்ரபாலனுக்கு ஆசிரியர். இவர் எழுதிய நூல் காவ்யமீமாம்ஸை.[4] அதனுள் சாஸ்த்ர ஸங்க்ரஹம் முதலாக சப்தஹரணம் இறுதியாகப் பதினெட்டு அத்தியாயங்கள் உள. இவர் பல நாடகங்களை இயற்றினர் என்று முன்னரே கூறப்பட்டது

பட்டதௌதன்.[5] — கி. பி. 960–990. இவர் அபிநவ குப்தரின் ஆசிரியர்; காவ்யகௌதுகம்[6] என்ற நூலை இயற்றியவர். சாந்தரஸத்தைச் சிறப்பித்துக் கூறினர். கவி, நாயகன், ஸாமாஜிகன் எல்லோருக்கும் ரஸாநுபவம்[7] ஒருவகைப்பட்டது என்ற கொள்கையை இவர் கொண்டனர்.

முகுளன்[8] — கி. பி. 855–883. இவர் அவந்திவர்மாவின் ஸபையில் இருந்தவர். இவரது தகப்பனர் பட்டகல்லடர்.[9] இவர் ப்ரதிஹாரேந்துராஜாவிற்கு ஆசிரியர். இவர் எழுதிய நூல் அபிதாவ்ருத்திமாத்ருகை.[10]

1. शङ्कुकः
2. रामाद्यभेदभावितेन नटे तत्प्रकाशितैरेव विभावादिभिरनुमितः स्थायी सामाजिकैश्चर्व्यमाणो रस इति अनुमितिवादी श्रीशङ्कुकः । (एकावल्यां तरलटीका ப. 85)
3. राजशेखरः
4. काव्यमीमांसा
5. भट्टतौतः
6. काव्यकौतुकम्
7. रसानुभवः
8. मुकुलः
9. भट्टकल्लटः
10. अभिधावृत्तिमातृका

பரதீஹாரேநதுராஜன[1] — கி பி 930 இவா கொஙகண தேசததவா உதபடரின காவயாலஙகாரஸாரததின உரைகாராகளுள இவரும ஒருவா தவனியை அலஙகாரததுள அடககலாம எனக கூறி ஆநநதவாததனாககு எதிாககடசியில இருநதவா

படடநாயகன[2] — சுமாா கி பி 900 இவா ஆநநதவாததனாககுப பிறபடடவா, அபிநவகுபதாககு முறபடடவா இவா ஹருதயதாபபணம[3] எனற நூலை இயறறினா தவனிதவமஸம[4] எனற நூலையும இயறறினா என வயகதிவிவேகவுரைகாரா ராஜானகருயயகா கூறுவா இவா வயஞசனா வருததியை ஒததுககொளளாது, சொலலிறகு அபிதை,[5] பாவககதவம,[6] போகம[7] எனற மூனறு வயாபாரததை ஒததுககொணடவா[8] ரஸததைக காவயததிறகு ஆதமாவாக இவா ஒததுககொளளினும, அது சொலலிறகு எடடாததால அதனை தவனியாக ஒததுககொளளவிலலை இவரைப பலவிடஙகளில அபிநவகுபதா லோசனததில மறுககினறனா

1 प्रतीहारेन्दुराज
2 भट्टनायक
3 हृदयदर्पणम्
4 ध्वनिध्वंस
5 अभिधा
6 भावकत्वम्
7 भोग
8 काव्यनाम्नशब्दव्यापारसहकृतेन साधारणीकृतेन विभावादिकेन भावकव्यापारेण नगादिगतत्वपरिहारेण साधारणतयानुसन्धीयमान स्थायी सत्त्वोद्रेकप्रकाशानन्दसंविन्मयेन भोगापरनाम्ना भावनाख्यव्यापारेण भुज्यते इति भुक्तिवादी भट्टनायक ।

[एकावल्या तरलीका பக 85]

தனஞ்சயன்[1] — கி. பி. 974-995. இவர் மாளவதேசத்து முஞ்சராஜனின் அவையில் இருந்தவர். இவர் எழுதிய நூல் தசரூபகம்[2] என்பது. வஸ்துபேதத்தாலும், நாயகபேதத்தாலும், ரஸபேதத்தாலும் நூல்கள் ஒன்றுக்கொன்று மாறுபடும் என்றார். இவர் பட்டநாயகரின் கொள்கையைப் பின்பற்றுபவர்.

தனிகன்[3] — இவர் தனஞ்சயரின் தம்பி, தசரூபகத்திற்கு உரை எழுதியவர்.

அபிநவகுப்தன்[4] — கி. பி. 990-1020. இவர் காச்மீர தேசத்தவர். பட்டதௌதன், பட்டேந்துராஜன்,[5] லக்ஷ்மணகுப்தன்[6] இம்மூவரும் இவருடைய ஆசிரியர்கள். பட்டோத்பலர்[7] பரமகுரு. சங்குகன், பட்டலோல்லடன், பட்டநாயகன் இவர்களுடைய கூற்றுக்களை மறுத்து, த்வனிப்ரஸ்தானத்தை நிலைநாட்டியவர்.[8] இவரது கொள்கைகளையே பின்னர் வந்த மம்மடன், விச்வநாதன், வைத்யநாதன் முதலியோர் பின்பற்றினர். ஆகலின் ஆநந்தவர்த்தனரிடத்திற் காட்டிலும்

1 धनञ्जय
2 दशरूपकम्
3 धनिक
4 अभिनवगुप्त
5 भट्टेन्दुराज
6 लक्ष्मणगुप्त
7 भट्टोत्पल
8 लोकप्रसिद्धैः कार्यकारणसहकारिभिरेव काव्ये गुणालङ्कारमहिम्ना नाट्ये चतुर्विधाभिनयमहिम्ना च अलौकिकविभावादिशब्दव्यपदेश्यैः साधारण्येन अनुसन्धीयमानैः स्वगत एव सामाजिकानां स्वानुभवजनितवासनात्मतया स्थितः रत्यादिकः स्थायी विभावादिभिः आस्वादनागमितः चिदात्मानन्दमयो रसो व्यज्यते इति व्यक्तिवादिनो अभिनवगुप्तादयः [एकावल्या तरलटीका p. 85]

இவரிடத்தில் உலகிலுள்ள மக்கள் நன்றியோடு இருத்தல் வேண்டும். இவர் நாட்டியசாஸ்த்ரத்திற்கு அபிநவபாரதி[1] என்ற உரையும் த்வந்யாலோகத்திற்கு லோசனம்[2] என்ற உரையும் எழுதினர். பரமசைவராகலின் இவர் காச்மீர சைவத்தைப் பற்றி எழுதிய நூல்கள் பல ஆகும்.

ராஜானககுந்தகன்.[3] — சுமார் கி. பி. 1000. இவரது பெயர் குந்தகனு, குந்தளனு[4] என்பது தீர்மானிக்க முடியவில்லை இவர் எழுதிய நூல் வக்ரோக்திஜீவிதம்[5] என்பது. அதனுள் ஸ்வபாவோக்தி ஒரு அலங்காரமாகாது எனவும் வக்ரோக்தியே காவ்யத்திற்கு ஜீவிதம் எனவுங் கூறியுள்ளார் இவர் பாமஹரைப் பின்பற்றியவர் என்பது வெளிப்படை. இதனுள் இருக்கும் விஷயங்களைப்பற்றி லோசனத்தில் ஆராய்ச்சி யின்மையால் இவரும் அபிநவகுப்தரும் ஸமகாலத்தவராய் இருக்கலாம் எனப் பலர் நினைக்கின்றனர்.

ராஜசேகரனின் பாலராமாயணச்லோகங்களை இவர் உதாரணமாகக் கூறுதலாலும், இவர் கூறிய காவ்யலக்ஷணத்தை மஹிமபட்டர் மறுக்கின்றமையாலும், இவர் ராஜசேகரர்க்குப் பின்னரும் மஹிமபட்டருக்கு முன்னரும் இருந்திருத்தல் வேண்டும்.

ராஜாநகமஹிமபட்டன்.[6] — கி. பி. 1000—1035. இவர் காச்மீரதேசத்தவர்; இவரது தகப்பனர் ஸ்ரீதைர்யா[7]. இவரது ஆசிரியர் ச்யாமளர்.[8] இவர் எழுதிய நூல் வ்யக்திவிவேகம்[9].

1. अभिनवभारती
2. लोचनम्
3. राजानककुन्तकः
4. कुन्तलः
5. वक्रोक्तिजीवितम्
6. राजानकमहिमभट्टः
7. श्रीधैर्यः
8. श्यामलः
9. व्यक्तिविवेकः

அதனந்தரர் சங்குகரின் கொள்கையைப் பின்பற்றி, த்வனி அபிவ்யக்தமாகின்றது என்ற கொள்கையினை மறுக்கின்றனர். தத்வோக்திகோசம்[1] என்ற மற்றொரு அலங்கார நூலும் அவர் செய்ததாகக் கூறப்பட்டது. ராஜானகருய்யகர் வ்யக்தி விவேகத்திற்கு உரை எழுதத் தொடங்கி, அதனைப் பதம்பதமாக மறுக்கின்றனர்.

போஜன்[2] — கி. பி. 1018—1054. இவர் மாளவதேசத்து அரசர். இவர் ஸரஸ்வதீகண்டாபரணம்,[3] சிருங்காரப்ரகாசம்[4] என்ற இரண்டு நூல்களை இயற்றினர். இரண்டு நூல்களிலும் முன்னோரது கொள்கைகளுடன் அவற்றிற்கு உதாரணமாக முன்னோர் நூல்களிலிருந்து உதாரணங்களும் உரைத்தப் பட்டன. சிருங்காரமே ரஸம் எனக் கூறப்படவேண்டும் என்பதும், ரஸம் குற்றமற்ற குணங்கள் அலங்காரங்கள் இவற்றோடு கூடி காவ்யசரீரத்திற்கு அழகு ஊட்டுகின்றது என்பதும் இவரது கொள்கை. இவற்றைப் பின்னோர் ஆதரிக்கவில்லை.

க்ஷேமேந்த்ரன்.[6] — கி பி. 1030—1070. இவர் காச்மீர தேசத்தவர்; இவரது ஆசிரியர் அபிநவகுப்தர் அநந்தராஜன்,[7] கலசன்[8] இவர்களுடைய அவையில் இருந்தவர். இவர் அலங்காரத்தில் மூன்று நூல்கள் இயற்றினர். அவை ஔசித்ய

1. तत्त्वोक्तिकोशः    3 सरस्वतीकण्ठाभरणम्
2. भोजः    4. शृङ्गारप्रकाशः
5. निर्दोषस्य गुणवतोऽलंकृतस्य च काव्यशरीरस्य रसानिर्भरस्येव शोभातिशयनिष्पत्तौ रसाभियोग एव प्रष्ठोपयोगी (शृङ्गारप्रकाशे Vol 2, அ. 11, ப. 352.)
6. क्षेमेन्द्रः    8 कलशः
7. अनन्तराजः

விசாரசர்சசை,[1] ஸுவ்ருத்ததிலகம்,[2] கவிகண்டாபரணம்[3] என்பன. ஔசித்யவிசாரசாச்சையில் ஔசிதயமே காவயத்திறகு ஜீவிதம் என்கின்றா. ஆனந்தவாததனா ஔசிதயததை ரஸததிறகு அஙகமாகக் கூற, இவா அதனை அங்கியாகக் கூறுகின்றனா.

ஸுவருத்ததிலகததில் வருததங்கள் எவ்வாறு ரஸததிற்கு அபிவ்யஞசமாக ஆகின்றன என்பது உணாததப்பட்டது கவிகண்டாபரணததில் கவியின அதிகாரசமபபத உணாததப் பட்டது

மம்மடபட்டா[4] — கி. பி. 1100. இவரும் காச்மீர தேசததினா; இவா ஜையடரின் மகன்; கையடரின் தமையன. இவா எழுதிய நூல் காவ்யப்ரகாசம்[5] அதனுள் பதது உல்லாஸஙகள் உள. அவற்றுள் முன்னோரின் கொள்கைகளைத தொகுதது ஆராய்கின்றனா. ஆனந்தவாததனரது கொள்கைகளை நிலைநாட்டுகின்றனா. அலஙகாரசாஸ்தரததில் உணாததப் படவேண்டிய அனைததும் இந்நூனுள் இருககின்றமையால் இஃது எல்லோராலும் படிககப்படுகின்றது. இதறகு இப்போது முப்பது உரைகள் உள.

ராஜானகருய்யகன்.[6] — கி. பி. 1100—1150. இவா தவனிகாரரின் கொள்கையைப் பின்பறறியவா அலங்காரஸாவஸவம்[7] என்ற நூலை இயற்றினா என்பா வடநாட்டறிஞா அதனுள் உள்ள ஸூத்ரஙகளை மாததிரம அவா இயறற, வருததியை அவரது சிஷ்யா மஙகுகா இயறறினா எனபா தெனனாட்டறிஞா. இதனுள் சப்தாலங்காரங்களும அாததாலஙகாரங்களும் கூறப் பட்டன. இவரே அலஙகாராநுஸாரிணி,[8] காவயப்ரகாச

1. औचित्यविचारचर्चा
2. सुवृत्ततिलकम्
3. कविकण्ठाभरणम्
4. मम्मटभट्टः
5 काव्यप्रकाश
6 राजानकरुय्यकः
7. अलङ्कारसर्वस्वम्
8. अलङ्कारानुसारिणी

ஸஙகேதம்,[1] நாடகமீமாம்ஸை,[2] வயகதிவிவேகவிசாரம்,[3] ஸாஹிதய மீமாமஸை,[4] ஸஹருதயலீலை,[5] முதலியவறறை இயறறினா எனபா.

ஹேமசநதரன [6] — கி பி 1088-1172 இவா ஜைனா. தவனிபரஸதானததைப பினபறறியவா இவா எழுதிய நூல காவயாநுசாஸனமும [7] அதன உரையாகிய அலஙகாரசூடா மணியும.[8] பெருமபானமையும முனனோரது கொளகை களையே கூறினா

சாரதாதனயன [9] — இவா சுமாா 12-ஆம நூறறாணடில இருநதனா எனனலாம ஆாயாவாததததில மாடரபிஜயம எனற கிராமததில அவருடைய முனனோா இருநதனா பதினெடடு கலைகளிலும புலமை வாயநத படடகோபாலா இவரது தகபபனா. திவாகராிடமிருநது நாடயசாஸதரம இவா கறறனா இவா படடநாயகாின கொளகையைப பினபறறியவா இவா எழுதிய நூல பாவபரகாசனம[10] எனபது இஙகு நாடயசாஸதரம முதல காவயபரகாசம இறுதியாக உளள நூலகளில ரஸததைபபறறிச சொலலபபடடவை எலலாம ஆராயபபடடன சாநதரஸாநுபவம சரவயகாவயத தினினறு உணடாகுமே யனறி தருசயகாவயததினினறு உணடாகாது எனபது இவருடைய கொளகை

1 काव्यप्रकाशसङ्केन

2 नाटकमीमासा

3 व्यक्तिविवेकविचार

4 साहित्यमीमासा

5 सहृदयलीला

6 हेमचन्द्र

7 काव्यानुशासनम्

8 अलङ्कारचूडामणि

9 शारदातनय

10 भावप्रकाशनम्

ராமசந்தரரும்[1] குணசந்தரரும்[2] — கி பி 1100—1175 இவவிருவரும் ஹேமசசந்தரரின சிஷயாகள இவா வருததி யுடன நாடயதாபபணம்[3] இயறறியவா இஙகுப பனனிரணடு ரூபகஙகளின விசாரம உளளது

வாகபடா[4] — கி பி 1110—1140 இவரது தகபபனா ஸோமன இவா அணஹிலவபாடகபுரததில கலசன எனற ஜயஸிமமனுககு மஹாமாதயனுய இருநதனா இவா எழுதிய நூல வாகபடாலஙகாரம்[5] இதனுள ஐநது பரிசசேதஙகளில கவிதாதிகாரம, தோஷம, குணம, அலஙகாரம ரஸம இவை கூறபபடடன இதறகு ஐநது உரைகள உள

விதயாதரன[6] — கி பி 1282—1327 இவா உதகல தேசததவா இவா எழுதிய நூல ஏகாவளீ[7] எனபது விஷய விபாகததில பெருமபாலும மமமடரை அநுஸரிககினருா தவனிபரஸதானததைக கைபபறறியவா அலஙகாரலக்ஷணங களில அலஙகாரஸாவஸவகாரரைப பினபறறுகிறுா ஈணடு உதாஹரணசலோகஙகளெலலாம உதகலவரசனுகிய நர ஸிமமனைப பறறியன இநநூல அபபையதீக்ஷிதா, ஜகநாதன, விசவேசவரன இவாகளுடைய நூலகளிற குறிககபபடடது மலலிநாதா இதறகு உரை எழுதியுளளாா

ஜயதேவன்[8] — கி பி 1200—1300 இவா சநதராா லோகம்[9] இயறறியவா

1 रामचन्द्र
2 गुणचन्द्र
3 नाट्यदर्पणम्
4 वाग्भट
5 वाग्भटालंकार
6 विद्याधर
7 एकावली
8 जयदेव
9 चन्द्रालोक

பாநுதத்தன்[1] — கி. பி. 1300-1400. இவர் விதேக தேசத்தவர். இவரால் ரஸமஞ்சரீ[2] இயற்றப்பட்டது. இங்கு நாயிகை ஸ்வீயை, பரகீயை, ஸாமாந்யவநிதை என்றும், நாயகன் பதி, உபபதி, வைசேஷிகன் என்றும் பகுக்கப்பட்டனர். இதற்கு வ்யங்க்யார்த்தகௌமுதீ[3] என்ற உரையை அநந்த பண்டிதரும், ப்ரகாசம்[4] என்ற உரையை நாகேசபட்டரும் இயற்றினர். பாநுதத்தரே ரஸதரங்கிணீ[5] என்ற மற்றொரு நூலையும் இயற்றினர். அங்கு உபாதிபேதத்தால் நிர்வேதாதிகள் ஸ்தாயிபாகவும் வ்யபிசாரியாகவும் இருக்கும் என்பதை விளக்கியுள்ளார்.

வித்யாநாதன்[6]. — கி. பி 1250—1350 இவர் ப்ரதாபருத்ர யசோபூஷணம்[7] என்ற பெயர் கொண்ட ப்ரதாபருத்ரீயத்தை[8] இயற்றினர். உதாஹரணச்லோகங்களெல்லாம் த்ரிலிங்காதிபதியாகிய ப்ரதாபருத்ரனைப்பற்றியவை. இந்நூல் பெரும்பாலும் காவ்யப்ரகாசத்தின் முறையைக் கொண்டது. இருப்பினும் காவ்யப்ரகரணத்தில் த்வந்யாலோகத்தையும், நாடகப்ரகரணத்தில் தசரூபகத்தையும், அலங்காரப்ரகரணங்களில் அலங்காரஸர்வஸ்வத்தையும் இந்நூல் பின்பற்றியது.

குமாரஸ்வாமீ[9]. — இவர் மல்லிநாதரின் இரண்டாவது மகன். ப்ரதாபருத்ரீயத்திற்கு ரத்நாபணம்[10] என்ற உரை இயற்றினர்.

1. भानुदत्तः
2. रसमञ्जरी
3. व्यङ्ग्यार्थकौमुदी
4. प्रकाशः
5. रसतरङ्गिणी
6. विद्यानाथः
7. प्रतापरुद्रयशोभूषणम्
8. प्रतापरुद्रीयम्
9. कुमारस्वामी
10. रत्नापणम्

வாக்படர்[1] — கி. பி. 1300-1400. இவரது தகப்பனர் நேமிகுமாரர்[2] இவர் காவ்யாநுசாஸனம்[3] இயற்றியவர் பெரும்பாலும் காவ்யமீமாம்ஸை, காவ்யப்ரகாசம் இவற்றிலிருந்து விஷயங்கள் எடுக்கப்பட்டன

விச்வநாதன[4].—கி. பி. 1300 - 1384 —அலாவுதீன் என்ற துருஷ்கசக்ரவர்த்தியின் காலத்தில் உத்கலதேசத்தில் இவர் ஸந்திவிக்ரஹிகமஹாபாத்ரர் ஆக இருந்தனர். இவரது தகப்பனர் சந்த்ரசேகரமஹாகவி. இவர் எழுதிய நூல் ஸாஹித்ய தர்ப்பணம்[5]. இதனுள் பத்து பரிச்சேதங்களில் அலங்காரசாஸ்த்ர விஷயங்கள் எளிய நடையில் விசாரிக்கப்பட்டன. இவர் காவ்யப்ரகாசதர்ப்பணம்[6] என்ற நூலையும் இயற்றினர் என்பர்.

சிங்கபூபாலன[7]. — கி பி. 1339. இவர் விந்த்யமலை, ஸ்ரீசைலம் இரண்டிற்கும் இடையிலுள்ள நாட்டிற்கு அரசராய் இருந்தவர். இவரது தகப்பனர் அநபோதன்[8]; தாயார் அந்நமாம்பா[9]. இவர் ரஸார்ணவஸுதாகரம்[10] என்ற நாட்ய லங்காரத்தை இயற்றியவர். தசரூபகவிஷயங்கள் இங்குத் தெளிவாய் உணர்த்தப்பட்டன. உதாஹரணச்லோகங்கள் காளிதாஸநாடகங்கள், ரத்நாவளீ, மாலதீமாதவம், பாலராமாயணம் இவற்றிலிருந்து எடுக்கப்பட்டன.

கேசவமிச்ரன்[11] — கி. பி 16-ஆம் நூற்றுண்டில் இவர் இருந்தனர் இவர் அலங்காரசேகரம்[12] இயற்றியவர்.

| | |
|---|---|
| 1. वाग्भटः | 7. शिङ्गभूपालः |
| 2. नेमिकुमार. | 8. अनपोत. |
| 3. काव्यानुशासनम् | 9 अन्नमाम्बा |
| 4. विश्वनाथ· | 10 रसार्णवसुधाकरः |
| 5. साहित्यदर्पणम् | 11. केशवमिश्रः |
| 6 काव्यप्रकाशदर्पणम् | 12. अलंकारशेखर |

அப்பையதீக்ஷிதர்[1]. — கி. பி 1520–1593. இவர் அலங்காரசாஸ்த்ரத்தில் சித்ரமீமாம்ஸை[2], குவலயானந்தம்[3] இவற்றை இயற்றினர். சித்ரமீமாம்ஸையில் முன்னோரது கொள்கைகளின் ஆராய்ச்சியையும், குவலயானந்தத்தில் அர்த்தாலங்கார விளக்கத்தையும் செய்தனர்.

ஸ்ரீகோவிந்தன்[4]. — கி. பி. 1600 இவர்க்கு டக்குரா[5] என்ற பெயரும் உண்டு இவர் மிதிலையில் ஸ்ரீரவிகரவம்சத்திற் பிறந்தவர். காவ்யப்ரதீபம்[6] இயற்றியவர். இதற்கு நாகேசன் உத்யோதம்[7] என்ற உரையும், வைத்யநாதன் ப்ரபை[8] என்ற உரையும் எழுதினர்

ஜகந்நாதன்[9]. — கி. பி. 1620–1660 இவர் தைலங்க தேசப்ப்ராம்மணன்; யவனகன்னிகையை மணந்தவன். ஷாஜஹான் என்ற டில்லி சக்ரவர்த்தியிடம் பண்டிதராஜன்[10] என்ற பட்டம் அடைந்தவன். இவரது தகப்பனார் பேருபட்டர்.[11] அவர் சேஷரிடம் மஹாபாஷ்யமும், கண்டதேவரிடம் பூர்வமீமாம்ஸையும், மஹேந்த்ரரிடம் ந்யாயவைசேஷிகமும், ஞானேந்த்ரபிக்ஷுவிடம் வேதாந்தமும் படித்தவர். அவரே தன் மகனுக்கு எல்லாசாஸ்த்ரங்களையுங் கற்பித்தவர். அலங்கார சாஸ்த்ரத்தில் ரஸகங்காதரம்,[12] சித்ரமீமாம்ஸாகண்டனம்[13] இவ்விரண்டையும் ஜகந்நாதன் இயற்றினார். ரஸகங்காதரம் ஒரு

1. अप्पय्यदीक्षितः
2. चित्रमीमांसा
3. कुवलयानन्दः
4. श्रीगोविन्दः
5. टक्कुरः
6. काव्यप्रदीपः
7. उद्योतः
8. प्रभा
9. जगन्नाथः
10. पण्डितराजः
11. पेरुभट्टः
12. रसगङ्गाधरः
13. चित्रमीमांसाखण्डनम्

சிறந்த நூல். இங்குச் சுவைப்பொருளைக் கொடுக்கும் சப்தமே காவ்யம் என்றும், அக்காவயம் உத்தமோத்தமம், உததமம், மத்திமம, அதமம் என நால்வகைப்படும் என்றுங கூறுவா. இங்குள்ள உதாஹரணச்லோகங்கள் எல்லாம் இவரே இயற்றியவை.

யஞ்ஞநாராயணதீக்ஷிதா [1]. — கி பி. 1600—1650. இவா தஞ்சாவூரில் ரகுநாதநாயகரின் ஆஸ்தானபண்டிதராய் இருந்தனா. இவா எழுதிய நூல் அலங்காரரத்நாகரம் [2]. இது பிரதாபருதரீயததை ஒட்டியது. உதாஹரணச்லோகங்கள் எல்லாம் ரகுநாதநாயகரைப் பற்றியன.

ராஜசூடாமணிதீக்ஷிதா [3]. — கி. பி 1600 இவர் காவய தாப்பணம் [4] இயற்றினா

ரூபதேவன். [5] — இவா உஜ்வலநீலமணி [6] இயற்றியவா. உதாஹரணச்லோககளெல்லாம கிருஷ்ணபரமாதமாவைப்பற்றியன. இதற்கு விச்வநாதசக்ரவாததி இயற்றிய சந்த்ரிகை [7] என்ற உரையும், ஸ்ரீஜீவகோஸ்வாமி இயற்றிய லோசனரோசினி [8] என்ற உரையும் உள.

நரஸிம்மகவி [9] — கி. பி 1760 இவா மஹீசூரியா இவரது தகப்பனா சிவராமஸுதி [10]. இவரது ஆசிரியா யோகாநந்த யதீந்த்ரா [11] இவர் இயற்றிய நூல் நஞ்சராஜயசோபூஷணம் [12]

1. यज्ञनारायणदीक्षितः
2. अलंकाररत्नाकरः
3. राजचूडामणिदीक्षितः
4. काव्यदर्पणम्
5. रूपदेवः
6. उज्ज्वलनीलमणिः
7. चन्द्रिका
8. लोचनरोचिनी
9. नरसिंहकवि
10. दिवरामसुधी
11. योगानन्दयतीन्द्रः
12. नञ्जराजयशोभूषणम्

இது பரதாபருதரீயததைப பினபறறியது. இவாககு அபிநவ காளிதாஸன [1] எனப பெயா உணடு

அசயுதராயன [2] — இவா கி. பி 19-ஆம நூறறுணடினா இவாககு மோடகன [3] எனற பெயரும உணடு இவரது ஆசிரியா நாராயணசாஸதிரி இவா எழுதிய நூல ஸாஹிதய ஸாரம [4] இதறகு உரையும இவரே இயறறினா

ஸ்ரீகிருஷணபிருமதநதரபரகாலஸவாமி [5] — இவரும கி பி 19-ஆம நூறறுணடினா இவா எழுதிய நூல அலஙகார மணிஹாரம [6] எனபது லக்ஷயம முழுமையும ஹரிகுணஙகளைப பறறியது

காநதிசநதரவிதயாரதனன [7] — இவரும கி பி 19-ஆம நூறறுணடினா பாலாகள எளிதில அலஙகாரசாஸதரப பொருளை அறியுமாறு இவா ஒரு நூல இயறறினா அதன பெயா காவயதீபிகை [8]

1 अभिनवकालिदास
2 अच्युतराय
3 मोडक
4 साहित्यसार
5 श्रीकृष्णब्रह्मतन्त्रपरकालस्वामी
6 अलङ्कारमणिहार
7 कान्तिचन्द्रविद्यारत्न
8 काव्यदीपिका



# சிறப்புசசொலலகராதி

எண பககததைக குறிககும

அ

ஆ

இ



ஈ



உ, ஊ

## எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ

கா

## கி & கீ

## கை, கொ, கோ & கௌ

ச்

## ந்



## ந & நா

பா

## பி & பீ

## ம & ம

## மா

மி & மீ



மு, மூ, மே, மை, மோ & மௌ

## ய & யா

ர



ரா

## ரி & ரு

ரூ, ரே, ரோ & ரௌ



ல் & ல



லா, லி, லீ, லெ, லே, லை, லோ & லௌ

## வ்



## வ

வீ, வெ & வே



வை & வோ

## ஜ், ஜ, ஜா & ஜி



## ஜீ, ஜு, ஜெ, ஜை & ஜோ

## ஸு, ஸூ, ஸெ & ஸே



## ஸோ & ஸௌ

PAREEKSHIT TAMPURAN, Prince of Cochin,
Palace No 16, Tripunittura
25—11—1944

Dear Vice Chancellor,

...May I request you to be good enough to convey my high appreciation of this interesting work (Patanjali's Mahabhasya) to the author, Vidyaratna Professor P S. Subrahmanya Sastri

Yours sincerely
(Sd) **Rama Varma.**

---

VIDHUSHEKARA BATTACHARAYA
Harishchandrapur, Malda,
Bengal, 8—1—1945

..Undoubtedly it will prove very helpful to those for whom it is meant University students with your book in their hands will certainly bless you very much. Let me hope that it will soon be complete

---

DR S MUKHERJEE, M A,
Docteur es, Lettres (Paris), Vedantatirtha Sastri etc,
Mayurbhanj Professor of Sanskrit, and Head of the Department of Sanskrit, Benares Hindu Univerity,
Benares, 12th April, 1945

The present volume of LXV-306 pages is the first volume of Dr. Subrahmanya Sastri's Lectures on Patañjali's Mahābhāsya, the great commentary of Panini's celebrated Sanskrit Grammar, the Astadhyayī In it the author has considered only the first three *āhnikas* of the Mahābhāsya consisting of the introductory bhasya and the first two sūtras of the First pada of the First Adhyāya. The text of the Mahābhāsya is quoted in original and explained in English In the course of the explanation all matters and discussions which arise out of the text have been considered and lucidly dealt with, the opinions of Kaiyata and Nāgeśabhatta being copiously drawn upon for the purpose A knowledge of

# OPINIONS ON OTHER WORKS OF THE SAME AUTHOR

1. *Lectures on Patanjali's Mahābhasya Vol I*

SACHIVOTTAMA SIR C P RAMASWAMI AYYAR,
Bhaktivilas, Trivandrum
9th November, 1944

I have perused with intense interest your 'Lectures on Patanjali's Mahabhashya'

The developments of Sanskrit Grammar, not only as a branch of the Science of words and sounds, but of the philosophical concepts underlying all languages, have attracted my attention during many years I am very grateful to you for the scholarly and at the same time lucid exposition of the basic ideas of the Mahabhashya which will be of special value to persons like myself who have no professional competence adequately to explore the originals dealing with such a complicated subject

P K ACHARYA M A, PH D, D LITT I E S,
Head of the Sanskrit Department,
Allahabad University
Allahabad—November 17, 1944

I congratulate you upon your industry and scientific manner of scholarship exhibited in this publication

M HIRIYANNA, Rtd Professor of Sanskrit, Mysore
Lakshmipuram, Mysore City
18—11—1944

I have read several portions of it The Preface is quite interesting and informative, and your exposition of the first three *āhnikas*, the portion included in the present volume, is full and illuminating The book will be of great value to students of higher *Vyākaraṇa* and I trust that it will help to extend the study of this subject in our Universities

PAREEKSHIT TAMPURAN, Prince of Cochin,
Palace No 16, Tripunittura
25—11—1944

Dear Vice-Chancellor,

...May I request you to be good enough to convey my high appreciation of this interesting work (Patanjali's Mahabhasya) to the author, Vidyaratna Professor P. S. Subrahmanya Sastri

Yours sincerely
(Sd) **Rama Varma.**

---

VIDHUSHEKARA BATTACHARAYA
Harishchandrapur, Malda,
Bengal, 8—1—1945

...Undoubtedly it will prove very helpful to those for whom it is meant University students with your book in their hands will certainly bless you very much. Let me hope that it will soon be complete

---

DR S MUKHERJEE, M A,
Docteur es, Lettres (Paris), Vedantatirtha Sastri etc,
Mayurbhanj Professor of Sanskrit, and Head of the Department of Sanskrit, Benares Hindu University,
Benares, 12th April, 1945

The present volume of LXV 306 pages is the first volume of Dr. Subrahmanya Sastri's Lectures on Patañjali's Mahabhasya, the great commentary of Pāṇini's celebrated Sanskrit Grammar, the Astadhyāyī In it the author has considered only the first three *āhnikas* of the Mahābhāsya consisting of the introductory bhasya and the first two sūtras of the First pāda of the First Adhyāya. The text of the Mahabhāsya is quoted in original and explained in English In the course of the explanation all matters and discussions which arise out of the text have been considered and lucidly dealt with, the opinions of Kaiyata and Nāgeśabhatta being copiously drawn upon for the purpose A knowledge of

the Mahabhasya is like the acquisition of a kingdom and the learned author has certainly made the road very smooth The results of researches on the historical data concerning Panini Katyayana and Patanjali have been embodied in an excellent introduction which students will find very useful If the learned author pushes his lectures on the conclusion of the Mahabhasya he will have done a great service to Sanskrit scholarship His grasp of the subject is masterly his style is good and his explanations lucid The unequal quality of the paper and the get up of the book bear testimony to the difficulty of paper and binding materials due to the war

---

THE VISVA-BHARATI Shantiniketan
May—July 1945

The book under review is the mellowed fruit of laborious research and scholarly analysis by a Professor who has had evidently the advantage of drawing upon the accumulated research work of scholars Eastern as well as Western In achieving his end the author has furnished in the book unmistakable evidences of his independent critical understanding avoiding alike undue submissiveness to the verdict of accredited Western authorities and unhealthy conservatism in sticking to the good old indigenous tradition In the face of conflicting interpreta tions our author has maintained his own ground in and through his incisive analysis and exposition

The present volume has had its value heightened by the inclusion of a Foreward from no less an authority in this line than Mahamahopadhyaya Sri S Kuppuswami Sastriar whose sponsoring of it is a sufficient testimony to its intrinsic work

---

ADYAR LIBRARY BULLETIN—1945

The author is a teacher of many years experience and a great authority both in Sanskrit and Tamil His contributions to scholarship through his many publications have established a name for him among Orientalists The present volume is meant primarily for the use of advanced students of Universities

Yet it has a far wider appeal Through this work Prof Subrahmanya Sastri has opened up the gates of a vast region to the modern world that has till now been denied access to it through the difficulty of the language We heartily congratulate the Professor on his accomplishing this great task we welcome this publication and we eagerly await the completion of the work

---

ii *Historical Tamil Reader*

P K ACHARYA M A, DH D D LITT I E S

Allahabad—May 2 1945

Your scholarly work written on the philological lines as suggested by Dr S K Chatterjee will make it easy for non Tamil students to make an acquaintance with Tamil language and literature Your introduction and the vocabulary will be very helpful to the readers The brief history of the Tamil literature is interesting I congratulate you upon your success

---

DR LAKSHMAN SARUP, M.A D PHIL (OXON)

Officer D Acadamie (France)

Principal, University Oriental College

Lahore 4—5—1945

I heartily welcome this publication It supplies a long felt need Philologists all over the world will be glad to have such a trustworthy guide as far as Tamil is concerned

---

The weekly Mail, Madras 4—11—45

Philologists outside Madras are in bad need of translations and transliterated editions of Tamil classics for purposes of their study of Indian Languages Dr P S Subrahmanya Sastri deserves congratulations and thanks for the compilation of this very valuable book

---

The Indian Express, Madras, 26—11—1945

Historical Tamil Reader by Dr P. S Subrahmanya Sastri who is Professor of Sanskrit prepared according to the canons and requirements of modern language studies is bound to be a very useful and valuable guide to students of Tamil language and literature who may be eager to secure some control over the language units and the language mechanism based on philological investigation and allied lines of linguistic studies

---

The Adayar Library Bulletin, 1st December, 1945

This is very useful publication

---

iii *Tolkāppiyam Collatikaram*

WILLIAM A CRAIGIE, Ridgehurst, Christmas Common, Wathington, Oxon, 29th May, 1946.

Any one interested in grammar must admire the amount of study given to the subject by the Sanskrit grammarians and evidently Tamil was treated in the same thorough fashion I am sure that your commentary will be of great service to all students of the language

---

PROF. JULES BLOCH, Paris, 1—6—1946

I have just got your Śolladigaram, for which please accept both congratulations and thanks I shall study that during summer holidays

---